**அடிமண்டி** யோடே கலங்கிற்று 2934/4. அடிச்சேறு, அடியிலே மண்டியிருப்பது, தேங்கியிருப்பது. **அடிவண்டி** என்பது அடிவண்டல்.

**அடிமை** - கைங்கர்யம் 1373/2. மின் ... யருளெனக்கு *.

**அடிமை** - அடியாள். "ஸ்தன அடிமை" (வா. மா 271.) ஸ்ரீதனமாக வந்த அடிமை.

**அடிமைக் குற்றேவல்** 3793/1. ... செய்து *. அடிமைத் தொழிலுக்குண்டான. குற்றேவல் - சிறு தொழில், அந்தரங்கமான செயல்.

**அடிமைத் திறத்** தாழியார் 3593/4. அடிமை விஷயத்தில் ஆழ்ந்தவர்கள்.

**அடிமைத் திறம்** 462/2. ... நேர்பட விண்ணப்பம் செய்*. அடிமை விஷயம்.

**அடிமைத் தொழில்** 1048/4. இன்று ... பூண்டாயே.* கைங்கர்யம்.

**அடிமைப் பணி** 3861/2. ... செய்யப் புகுந்தேன்*. கைங்கர்யம்.

**அடிமைப் பயன்** 945/4. ஆட்புக்க காதல் ... *.

**அடிமையறக்கொண்டா(ய்)ன்** 3324/3. அற அடிமை கொண்டான். அற - பூர்ணமாக, முழுமையாக, அசங்யார்த்தமாக.

**அடிமையின்றித்** திரிவார் 370/2. நிலை பெயர்ந்து திரிவார், அநர்த்தப்படுவார்.

**அடியர்** 3989/2. அந்தமில் பேரின்பத்து ... ரோடு. அடியவர்.

**அடியரோர்க்கு** 3793/2 ... அருளி *. அடியோர்க்கு, அடியரான எங்களுக்கு.

**அடியவர்கள்** 1107/2. அடிகளடியே நினையும் ... *. சேஷ பூதர்கள்.

**அடியளப்புண்டது** 2697/2. அடியால் அளப்புண்டது - அளக்கப்பட்டது.

**அடியற்ற த்வநி** 3010/2. ஆதாரமில்லாத பேச்சு. அடி - மகஸ்ஸமனமற்ற பேச்சு, அஸ்ந்தயமான பேச்சு.

**அடியற்றால் வாடும்** 3231/4. அடி - திருவடியும் வேரும். ஈச்வரனுடைய திருவடியில்லாவிடில் வாடும், வேரில்லாவிடில் வாடும்—என்று இரண்டு அர்த்தம்.

**அடியற்றிருப்பன.** அடி - முதல் அற்றிருப்பன - உண்டாயிருப்பன. "முடிவு காணுதிருக்கச் செய்தேயும் ... சில உண்டிறே" 3376/1. முடிவில்லாத போனாலும் அடியுள்ளவை சில உண்டு — என்று பொருள்.

**அடியற்று** - முதலற்று. "தம்மடைவிலேயாய் அடியற்றிருக்கையன்றிக்கே என் குடிக்கு நாயகனானவன்."(?) தான் கைம் முதலில்லாதவனாயிருப்பதோடு என்குடிக்கு நாயகனுமாயிருக்கிறவன். தம்மடைவிலேயாய் - தன் வரையில், தன் கையில், தன் மட்டில். அடியற்றிருக்கை - கைம் முதலற்றிருக்கை.

**அடியறியாதார்** - திருவடி யறியாதார், வழியறியாதார். அடி - திருவடியும் வழியும். "அடியறியாதாரிறே உபாயாந்தரங்களான விலக் கடிகளிலே போகிறவர்கள்." 3231/ப்ர. விலக்கடி - துர்மார்க்கம். விலக் கின, அடி - வழி.

**அடியறிவார்** - காரணம் அறிவார். 2906/3.

**அடியறுக்க** - நிர்மூலமாக்க. பூண்டறுக்க, அடியோடு அழிக்க. "ஸம்ஸாரம் மறுவலிடாதபடி ..." (அர்ச்சி. ப்ர. 1.)

**அடியறுப் புண்ட பின்பு** - த்வம்ஸம் செய்யப்பட்ட பின்பு, நிர்மூல மாக்கப்பட்ட பின்பு. "ஜகஸ்தாகம் ..." 3041/1.

**அடியனேன்** 1420/4. ...னும் வந்து அடியிணையடைந்தேன் *. அடி யேனான நான்.

**அடியாட்டி** - அடியானுக்குப் பெண்பால். "கூனி சொன்னது கேட்க வேண்டா ; அவள் ... யாகையாலே." 2063/4.

**அடியார்கள்** 658/3. மெய் ... தமீட்டம் *. அடியவர்.

**அடியார்கள் குழாங்கள்** 3040/4. மாயப்பிரான் ... *. ததியரின் திரள்கள்.

**அடியார் தம்மடியனேன்** 3946/1. அருள்பெறுவார் ...*. அடியார்க் கடியனான நான்.

**அடியார் தம்மடியார்** 3195/4. ... எம்மடிகளே.* அடியார்க்கடியார்

**அடியார்ந்த ஆயிரம்** 3197/3. ... த் துளிவை பத்து *. அடிகள் நிறைந்த ஆயிரம் பாட்டான திருவாய் மொழி.

**அடியார்ந்த வையம்** 3196/1 ... உண்டு ஆலிலை *. திருவடிக்கு அளவான பூமி.

**அடியார்** நிலாநின்ற வைகுந்தம் 2552/3. நித்ய ஸூரிகள் நித்ய வாஸம் பண்ணுகிற ஸ்ரீ வைகுண்டம்.

**அடியாரடியார்** தம்மடியாரடியார் 3196/3,4. அடிமையின் எல்லை.

**அடியாவி** 2562/4. அடியேன் ... *. அடிமையான, ஆவி - ஆத்மா.

**அடியிட்டபடி** - உத்யோகித்தபடி, அடிகோலினபடி. "முன்பே ... யிறே இது." 3196/1.

**அடியிட்டுப்** போந்த ராஜ்யம் 2861/2. "மஹாபலி தான் ..." அநுபந்தம் பார்.

**அடியிடுவது** 90/2 பெயர்ந்து ... போல் *. அடியிட்டுச் செல்வது, தொடர்ந்தோடுவது.

**அடியிணை** 984/3. அக்கரத்தமரர்கள் ... வணங்க *. இணை சேர்ந்த திருவடி, இரண்டு திருவடி.

**அடியில் ராகமிறே இவனை இப்படியாக்கிற்று.** 3244/3 ஆரம்பத்தி லுண்டான காதல், திருவடியிலுண்டான பக்தி. ராகம் - காதலும் பக்தியும்.

**அடியில்லை** - ஸம்பந்தமில்லை. "சொல்லுக்கும் செயலுக்கும் ..." 704/4.

**அடியிலே தலையாக வாழ அடியிடுகிறார்** 3187/3. அடியிலே முதலிலே, தலையாக - நன்றாக, அடியிடுகிறார் - ஆரம்பிக்கிறார். திருவடியிலே தலைவைத்து வாழ ஆரம்பிக்கிறார். இரு பொருள்.

**அடியிலே** நாய் அடியிட்டு நலியத் தொடங்கிற்று. 3232/4. நாய் காலிலே பிடித்து, ஆரம்பத்திலே பிடித்து நலியத் தொடங்கிற்று. இரு பொருள்.

**அடியிலே பச்சையிட்டாள்** 3242/3. பச்சை - காணிக்கை. முதலிலேயே காணிக்கை ஸமர்ப்பித்தாள். பாதத்திலே, பச்சை - துளஸி ஸமர்ப்பித்தாள்.

**அடியிலே** பிறந்துடைய கந்தம் 3264/1. அடி - ஆதியும் திருவடியும், பிறந்துடைய கந்தம் - பிறந்த போதே உண்டான மணம். பூமிக்கு ஆதியிலேயே, அதாவது — எம்பெருமான் திருவடியில் அது உண்டான போதே உண்டான மணம். பத்ப்யாம் பூமி:, — என்ற சாஸ்த்ரத்தின்படி பூமி எம்பெருமான் திருவடியில் உண்டாயிற்று; அப்போதே அதற்கு மணம் ஏற்பட்டது.

**அடியிறை** 357/3. எம்பிரானுக்கு ... *. பாத காணிக்கை. அடி - பாதம். இறை - காணிக்கை.

**அடியினன்** 1096/1. தொண்டாயார் தாம் பரவும் ... *. திருவடிகளையுடையவன். **அடியீர்காள்!** 1804/2. அடைமின் ...*. அடியவர்களே!

**அடியுடைமையிறே** எல்லாரும் சிரஸா வஹிக்கிறது 3378/4. "**அடியுடைய** பேராகையாலே ஸர்வர்க்கும் தாரகமாயிருக்குமே" 3378/4. அடியுடைமை - பாக்கியமுடைமை.

**அடியுடையார்** 3241/3. மூலமும் எம்பெருமான் திருவடியும் உடையவர். "**அடியுடையார்க்**கெல்லாம் சாதித்துக்கொள்ளலாமே" 3470/அவ. இசுவர்யமுடையவர், திருவடிகளையுடையவர்.

**அடியுற்றுன** எம்பெருமான் (வா. மா. 313.) அநுபந்தம் பார்.

**அடியெடுப்பதன்றே** அழகு 2614/4. சடக்கெனக் கால் வாங்குவது புறப்படுவதுதான் அழகு.

**அடியே பிடித்து** ஜீவிக்கப்போந்த நான் 3207/3. முதலிலே பிடித்து, திருவடிகளையே பற்றி ...

**அடியேன் நான்** 438/1. காரண காரியாய் ...*. அடியேனான நான். **அடியேன்** நான் 2028/1 ... பின்னுமுன் சேவடியன்றி *.

**அடியேன்பட்ட கடை** 2191/4. நான்பட்ட பொல்லாங்கு. கடைப் பட்டேன் - என்பதோடு ஒத்துப் பார்.

**அடியேனான்** 2440/3. கேடின்றி ஆள்வாய்க்கு ... *. அடியேன், நான், ஆள். அடியேனான நான் ஆள் - அடிமைப்பட்ட ஆள்.

**அடியேனுக் கின்பாவாய்** 2440/1. ஆரமுதமானாய் ... *. அடியே னுக்கு இன்பம் தந்தவனுவாய்.

**அடியேனுள்ளத் தின்னுயிர்** 929/4. என்னுடைய நற்சீவன். என் னுடைய உள்ளத்தில் வர்த்திக்கிற, இன்னுயிர் – ஹ்ருதயம்.

**அடியேனுள்ளான்** 3748/4, ... 9/1. அடியேனுன என்னுடைய, உள்ளான் – அகவாயிலே பிரகாசியா நின்றுன்.

**அடியொத்திப் போய்** – அநுஸரித்துப் போய். 948/அரு. அவ.

**அடியொத்திஞர்** – தேடிஞர் (?)

**அடியொற்றி** – அடி பிடித்துக் கொண்டு பின்னே சென்று 3038/4. "**அடியொற்றிக்** கொண்டு திரியா நிற்கும்" 1911/3. தகர றகரங்களால் பொருள் வேறுபாடில்லை.

**அடியோங்க** ளடிக்குடில் 10/2. அடியரான எங்களுடைய அடிமைக் குடும்பம்.

**அடியோங்கு** நூற்றுவர் 3197/1. ராஜ்யத்திலே வேருன்றின துர் யோதநாதியர் நூறு பேர். **அடிவட்டம்** 2294/2. ... த் தாளைப்ப *. 'பாத வலயம்.'

**அடிவாய்** 267/2. ... புறங் கையிட்டு *. அடிப் புறம்.

**அடி விடாதே** கொள்ளுங்கோள் 3232/4. "அவன் முடியைத் தரிலும் திருவடியைச் சேருங்கோள்; நீங்கள் உங்கள் ...." அடி – ஸ்வ ரூபம், நிலை.

**அடிவிடார்** – திருவடியை விடார். "எல்லா அவஸ்தையிலும் அவனை ..." 3207/2.

**அடி வீழ்கின்றேன்** 602/2. நடம் பயின்றுடுகின்றீர்க்கு...*. காலிலே விழுகின்றேன்.

**அடி வீழ்ச்சி** விண்ணப்பம் 583/2. திருவடிகளிலே வீழ்ந்து செய் யும் விண்ணப்பம்.

**அடுக்க** 2194/2. அன்று இடர் ... *. அடர்க்க, வந்து மேல் விழ.

**அடுக்கல்** (வடுக்கலிட்டு வில் பார்.)

**அடுக்கும்** – தகும், இருக்கலாம், இருக்கக்கூடும். "ஸர்வேசுவர னுகிருன் பிரம்மாவாக ... ஜகத் ஸ்ருஷ்டிக்ஷமனுகையாலே." (?) "நமக்கு பகவத் ஸம்பந்தமுண்டென்று இருக்க ..." (?) "நீர் போக ..." 1940/அரு.

**அடுகலே** 62/3. ... யாலே நெருக்கிய *. அடுகிற கலே, கொலை யம்பு.

**அடுகளம்** 2162/1... த்துளஞ்ஞான்று *. முடிப்பதான போர்க்களம்

**அடுகுவளம்** – போனகப் பெட்டி. "அடுகுவளம் தடைப்படும் போலே காணும்" 3926/3. அடுகு – அடுக்கு பெட்டிமேல் பெட்டியாய், வளம் – போஜ்ய வஸ்துவாய், போனகப் பெட்டி. சாப்பாடு கொண்டு

வரும் அடுக்கு. டிபன் செட்டு என்று சொல்லும் அடுக்கு முற்காலத்திலும் உண்டு போலும்! அடுகுவளம் – முழுச் சொல்லாய் போஜனம் என்றே பொருள். அடை குவளம் அடுகுவளத்தின் கொச்சை.

**அடுசரம்** 1414/3 ... துரந்து *. அடுகிற சரம். கொலையம்பு.

**அடுசிலை** 1821/1. கடுசரம் ... துரந்து *. முடிக்கவற்றான சிலை-வில்.

**அடுசிறு சோறு** 3470/3. யாம் ... *. அடுகிற கொஞ்சமான சோறு. சமைக்கிறவருக்கு மட்டுமேயாய் புறம் பொருத்தருக்கு புஜிக்க வொண்ணாத சோறு. அல்லது சாதரணமான சோறு.

**அடுஞ் சக்கரம்** 2480/3. அழல்போல் ... *. சத்ருக்களை கலியும் திருவாழி.

**அடுஞ் செக்கு** 3565/1. ... லிலிட்டு *. நெருக்குகிற செக்கு.

**அடுத்த கடும் பகைஞன்** 2161/1 ... ற் காற்றேன் *. இயற்கையிலேயே கொடிய சத்ரு. ஸஹஜ விரோதி.

**அடுத்த சீர்** நலங்கொள் மால் 864/3. கல்யாண குணங்களால் நலமுடைய திருமால். தகுந்த சீர், இயற்கைக்குச் சேர்ந்த சீர்.

**அடுத் தடுத்து** – மேல் மேல் (?)

**அடுத்தணித்தாக** – மிகவும் ஸமீபமாக. "பிரம்மாதிகளின் குரல் கேட்கும்படி ... திருப்பாற் கடலிலே கண் வளர்ந்தருளினான்." 1341/2.

**அடுத் தணித்தாய்** – அடுத்தாற் போலே. அடுத்ததாய், அணித்து அண்மையிலுள்ளது. "பரமபதத்துக்கும் ... மிறே திருமலை இருப்பது." 1666/1.

**அடுத்த தோருரு** 3673/4. ... வாயின்று நீ வாராய் *. தகுந்த தோருரு.

**அடுத்துக் கட்டி** – சேர்த்துக் கட்டி. "தாம்பாலே ஒருரலோடே ..." 2921/3.

**அடுத்தூணாக வுடையவன்** – இலக்கைக்கு விட்ட ஸீமையாக உடையவன். ஆஸக்த ஜீவனமாக உடையவன். "வாய்க்கரைப் பற்றை ..." 3315/4. நெடுக் தூரம் போக வேண்டியிராதே அருகிலேயே உண்ணா ஊணுடையவன். இலக்கை – மாஸச் சம்பளம். அதற்காக விட்ட பூமியை உடையவன்.

**அடுத்தேறுக** – அதிகமாக. அடுத்து ஏறினதாக. "... வந்த கரத்தைக் கழித்து" 3206/4.

**அடு திறல்** 920/4. ... அயோத்தி *. அடும் திறல். சத்ரு பக்ஷம் மண்ணுண்ணும்படியான மிடுக்கு.

**அடுந் தீவினை** 3569/1 குல முதல் ... *. முடிக்கவற்றான பாபம்.

**அடுந்துனி** 1575/1. ... வைத் தீர்த்து *. கலிகிற கர்ம பந்தம்.

**அடுந் தொண்டை** 2487/4. ஆயோ ... யோ *. காமுகர்களை ஹிம்ஸிக்கும் தொண்டை – கோவைப் பழம், அதுபோன்ற உதடு.

**அடுப்படைக்கல்** - அடுப்புக்கு அடைக்கும் கல். "பிரம்மாதிகளைக் கண்டால் ... லாக நினைத்திருக்குமத்தனை.* வியவேன் திருமாலையல்லது தெய்வமென்று ஏத்தேன்.* 2145/2. அடுப்படைக்கல் பிறிதொன்றுக்கும் பயனில்லை; அதுபோல பிரம்மாதிகளான பிற தெய்வங்கள்.

**அடுப்பது** - தருவது. "செய்ய ... தென் ?" 3295/3.

**அடுப்பிடு கல்** – அடுப்புக்கு இடும் கல். "தேவதாந்தரங்களை ... லோபாதியாக நினைத்திருக்குமத்தனை." 3330/ப்ர. அலக்ஷியமாக நினைத்திருக்குமென்றபடி. அடுப்புக்கு உபயோகமாயிருப்பது அந்த ஸமயத்துக்கு மட்டுமே; மற்றைக் காரியத்துக்கு அலக்ஷியமாகும்.

**அடுப்பு** 206/1. பாலைக் கறந்து ... ஏற வைத்து *.

**அடுப்புக் கிடை** – அடுப்பங் கரை. அடுப்பின் இடை – இடம். அட்ட தொழியவிலே பார்.

**அடுபகல் மாலை** 3874/2. ... யும் நெஞ்சும் காணேன் *. பகலை அடுகிற, முடிக்கப்பட்ட பகலையுடைய, மாலை.

**அடுபடை** 3674/3. ... யவித்த அம்மானே *. கொல்ல வந்த சேனை.

**அடுபுள்** 2963/3 ... ஞயர்த்த வடிவார் மாதவன் *. சத்துருக்களைக் கொல்லும் கருடன்.

**அடுமாலை** 3870/2. பகல் ... *. பகலை அடுகிற மாலை.

**அடுவாளமர்** 1080/2. ... கில் பல மன்னர் *. அடு ஆள் அமர். ஆட்களை அடுகின்ற பூசல். அடுகிற, வாள் - ஒளி, மதிப்புடைய, அமர் பூசல்.

**அடைக்கலத்** தோங்கு கமலத்தலரயன் 2563/1. அடைக்கலமாய், ஓங்கு – வளர்கின்ற, கமலத்தலரில் பிறந்த, அயன் – பிரம்மா.

**அடைக்கலம்** 843/4. ... புகுந்த என்னை *. நிக்ஷிப்த ரக்ஷணீயம். ரக்ஷணீயமாக நிக்ஷேபிக்கப்பட்டது. அடைந்த கலம் – பாத்திரம். அடைக்கலம் புகுகையாவது — என்னுடைய ரக்ஷணம் உன்னுடையதென்று எளியவன் பற்றினால், உயர்ந்தவன் அவனை அடைத்து வைத்து, மறைத்து வைத்து, விரோதிகள் அணுகாதபடி செய்த கலமாவான்.

**அடைக்காய்** ?/2 கை ... *. அடை – வெற்றிலை. காய் - பாக்கு. "அடைக்காயமுது நீட்டுவான்" — என்று தாம்பூலம் எடுத்து நீட்ட கோயிலில் அருள்பாடு உண்டு. அடைக்காயான அமுது–திவ்யதாம்பூலம்.

**அடைகட்ட** 938/1. "அண்ட கடாஹம் வெடித்து ... வேண்டும்படியாயிறே அபேக்ஷிதம்பெற்று வளர்ந்தபடி." அடைத்துக்கட்ட–சிதறிப் போகாதபடி பிடித்துக்கட்ட. அடி பிடிக்க வேண்டும்படி. **அடை குவளம்**– அடுகுவளம் பார்.

**அடைகொடுபாழ் கொடுமவன்** 3880/ப்ர. அடை கொடுப்பதாகக் கைக் கொண்டு பாழாக்கிவிட்டவன். பாணுஸ்ரனை ரக்ஷிப்பதாக வந்து பாழாக்கினவன், "அடைகொடுபாழ் போக்குமவன்" 3444/2. அடை-

**அடுப்படைக்கல்** - அடுப்புக்கு அடைக்கும் கல். "பிரம்மாதிகளைக் கண்டால் ... லாக நினைத்திருக்குமத்தனே.* வியவேன் திருமாலையல்லது தெய்வமென்று ஏத்தேன்.* 2145/2. அடுப்படைக்கல் பிறிதொன்றுக்கும் பயனில்லை; அதுபோல பிரம்மாதிகளான பிற தெய்வங்கள்.

**அடுப்பது** - தருவது. "செய்ய ... தென்?" 3295/3.

**அடுப்பிடு கல்** - அடுப்புக்கு இடும் கல். "தேவதாந்தரங்களை ... லோபாதியாக நினைத்திருக்குமத்தனே." 3330/ப்ர. அலக்ஷியமாக நினைத்திருக்குமென்றபடி. அடுப்புக்கு உபயோகமாயிருப்பது அந்த ஸமயத்துக்கு மட்டுமே; மற்றைக் காரியத்துக்கு அலக்ஷியமாகும்.

**அடுப்பு** 206/1. பாலைக் கறந்து ... ஏற வைத்து *.

**அடுப்புக் கிடை** - அடுப்பங் கரை. அடுப்பின் இடை - இடம். அட்ட தொழியவிலே பார்.

**அடுபகல் மாலை** 3874/2. ... யும் நெஞ்சம் காணேன் *. பகலை அடுகிற, முடிக்கப்பட்ட பகலையுடைய, மாலை.

**அடுபடை** 3674/3. ... யவித்த அம்மானே *. கொல்ல வந்த சேனை.

**அடுபுள்** 2963/3 ... ளுயர்த்த வடிவார் மாதவன் *. சத்துருக்களைக் கொல்லும் கருடன்.

**அடுமாலை** 3870/2. பகல் ... *. பகலை அடுகிற மாலை.

**அடுவாளமர்** 1080/2. ... கில் பல மன்னர் *. அடு ஆள் அமர். ஆட்களை அடுகின்ற பூசல். அடுகிற, வாள் - ஒளி, மதிப்புடைய, அமர் பூசல்.

**அடைக்கலத்** தோங்கு கமலத்தலரயன் 2563/1. அடைக்கலமாய், ஓங்கு - வளர்கின்ற, கமலத்தலரில் பிறந்த, அயன் - பிரம்மா.

**அடைக்கலம்** 843/4. ... புகுந்த என்னை *. நிக்ஷிப்த ரக்ஷணீயம். ரக்ஷணீயமாக நிக்ஷேபிக்கப்பட்டது. அடைத்த கலம் - பாத்திரம். அடைக்கலம் புகுகையாவது — என்னுடைய ரக்ஷணம் உன்னுடைய தென்று எளியவன் பற்றினால், உயர்ந்தவன் அவனை அடைத்து வைத்து, மறைத்து வைத்து, விரோதிகள் அணுகாதபடி செய்த கலமாவான்.

**அடைக்காய்** ८/2 கை ... *. அடை - வெற்றிலை. காய் - பாக்கு. "அடைக்காயமுது நீட்டுவான்" — என்று தாம்பூலம் எடுத்து நீட்ட கோயிலில் அருள்பாடு உண்டு. அடைக்காயான அமுது-திவ்யதாம்பூலம்.

**அடைகட்ட** 938/1. "அண்ட கடாஹம் வெடித்து ... வேண்டும்படியாயிறே அபேக்ஷிதம்பெற்று வளர்ந்தபடி." அடைத்துக்கட்ட-சிதறிப் போகாதபடி பிடித்துக்கட்ட. அடி பிடிக்க வேண்டும்படி. **அடை குவளம்**- அடுகுவளம் பார்.

**அடைகொடுபாழ் கொடுமவன்** 3880/ப்ர. அடை கொடுப்பதாக கைக் கொண்டு பாழாக்கிவிட்டவன். பாணாஸுரனை ரக்ஷிப்பதாக வந்து பாழாக்கினவன். "அடைகொடுபாழ் போக்குமவன்" 3444/2. அடை-

**அடையுமாகில்** - 879/3. குறிப்பெனக்கு ... *. வாய்க்கு மாகில், கிடைக்குமாகில், கிட்டுமாகில்.

**அடைவு** - தருதி, ஸம்பந்தம், ப்ராப்தி, "வேதாந்த யாத்துக்கு ... இல்லாத அவைதிகர்." 2899. மு. ஸ்ரீ.

அடைவு கெடப் பரிமாறினர்(?) முறைகெட, இஷ்டம் போலே, ஒரு நியதியின்றிக்கே பரிமாறினர்.

**அண்டக்குலம்** - அண்டங்களின் திரள் 5/1. ... த்துக் கதிபதி யாகி*. அண்டம் - உலகம், குலம் - திரள்.

**அண்டத் தகத்தான்** - அண்டர்களுக்கெல்லாம் நிர்வாஹகன்; அண்டங்களின் அகவாயிலுள்ளவன், எல்லாவற்றுக்கும் அந்தராத்மா. ... புறத்துள்ளான் *. 3749/1.

**அண்டத்திரு சுடர்** - அண்டத்திலுள்ள இரண்டு சோதிகள், சந்திர சூரியர்கள். ... நாய இறை *. 2319/3.

**அண்டத் தும்பரில் நெடியான்** 3198/3. பரமபத வாஸிகளான ஸூரிகளுக்கு நிர்வாஹகனான பெரியான்.

**அண்டத்தின் முகடு** 2010/1. ... அழுந்த *. அண்டபித்தி, அண்டச் சுவர், அண்டத்தின் ஓரம்.

**அண்டநாறும் பொழில்** 1380/4 அண்டம் - ஆகாசம் முழுதும், நாறும் - மணம் வீசுகிற, பொழில். அண்டம் - நாவி, புழுகுப் பூனை, அல்லது கஸ்தூரி மானுடைய பீஜம். அது மணம் வீசுகிற பொழில்.

**அண்ட பகிரண்டம்** 932/3. அண்டர் ... *. இந்த அண்டமும், இதற்கப்பாலுள்ள அண்டமும்.

**அண்டம் திருமாலகைப்பு** 2418/4. உலகம் திருமாலின் எழுச்சி - பிரயத்தனத்தாலானது.

**அண்டர்** 17/4. ... மிண்டிப் புகுந்து. * தேவ ஜாதியும் இடையரும். இங்கே இடையரைச் சொல்லுகிறது.

**அண்டர்கோன்** 936/3. ... அணியரங்கன் *. அண்டாந்தர்வர்த்திகளுக்கு, அண்டத்துக்குள்ளிருக்கும் யாவருக்கும் நிர்வாஹகன்.

**அண்டரண்ட பகிரண்டம்** 932/3. அண்டர் - அண்டத்துக் குள்ளிருப்பவர், அவர்களுடைய அண்டம் அண்டரண்டம், அதற்கப்பாலுள்ளது பகிரண்டம். அண்டரண்டமும் அப்பாலுள்ள அண்டமும் - இவ்வுலகமும் இதற்கப்பாலுள்ள உலகமும்.

**அண்டவாணர்** 1860/4. ... உகப்பதே செய்தாய் *. தேவர்கள்.

**அண்டவாண னரங்கன்** 671/3. அண்டர்களுக்கு அண்டத்திலுள்ளார்க்கு, வாணன் - நிர்வாஹகனான அரங்கன். ஸாமர்த்தியம் என்னும் அர்த்தத்திலுள்ளது அண்டவாணன். [ வண்டவாளம் என்பது இதன் கொச்சையாகலாம். உன்னுடைய வண்டவாளம் தெரிந்ததே!—என்ற வழக்குச் சொல் காண்க. ]

**அண்டன்** 2002/4. ... னையே ஏத்தினகளே *. அண்டம் – உலகம். பிரம்மாண்டமான இவ்வுலகத்தை யுடையவன், ஸர்வேசுவரன்.

**அண்டை கொண்ட** - ஆ ஸ்ரயி த் த. "திருநாமத்தை ... பலத் தாலே" (?) "ராஜ்யம் ஆனவாறே ராஜாவை ... சிறையிலே வைப்பது" (?)

**அண்ணல்** - ஸ்வாமி. ஸர்வேசுவரன். புருடோத்தமத்துள் ... *. 1267/2. **அண்ணல்** செய்து 1449/1. ... அலைகடல் கடந்து.* ஸ்வாமித்வத்தை நிர்வஹித்து, ஔதார்யம் செய்து.

**அண்ணல் மலை** 1978/4. ... பு மரங்களும் *. ஸ்வாமியின் மலை. அவனுடைய ஸ்தாநமான திருமலை.

**அண்ணலார்** 3242/2. ... தாளிணைமேல் *. அண்ணல், ஸ்வாமி.

**அண்ணற் கண்ணான்** 202/4. இவை செய்யவல்ல ... *. அண்ணனான பல ராமனுக்கு அணியனாகாதவன், அடங்காத கண்ணன்; அண்ணல் ஸ்வாமியாய் ஸ்வாமித்வத்துக் கேற்ற கண்ணழகுடையன்.

**அண்ணா** - அண்ணன் என்பதன் விளி. "அண்ணா எங்கே"— என்று விளியையே முதல் வேற்றுமையாகச் சொல்லுகிறோம். "சிரியார் சேஷ பூதர்களையும் (குழந்தைகளையும் வசப்பட்டவர்களையும்) "அண்ணா ஆச்சி – என்னு கிற்பர்."(?) ஏண்டா அண்ணா, ஏண்டீ அம்மா – என்பர்.

**அண்ணாந்து நிற்கும்** 268/4. கூனற்பிறை வேண்டி ... *. மேலே பார்த்து நில்லா நிற்கும். **அண்ணாறும்** அநுபந்தம் பார்.

**அண்ணிக்கும்** - தித்திக்கும். * ... அமுதூறும் 937/4. [பண்ணும்."

**அண்ணிமை**-ஸாமீப்யம். 917/2. "கால ... யாலே பூக்கள் ஸ்மிதம்

**அண்ணியார்** - கிட்டின உறவினர் 1458/1. அண்ணிய உறவு – கிட்டின உறவு (?)

**அண்ணுமை** - ஸாமீப்யம் 1265/4. அண்மை அண்ணிமை அண்ணுமை — மூன்றும் ஒன்றே.

**அண்மை விளி:** நெஞ்சமே நெஞ்சே என்றில்லாமல் நெஞ்சம் நெஞ்சு என்று முதல் வேற்றுமையிலேயே விளி தோற்றுவது அண்மை விளி.

**அணங்கமரர்** 3076/3. சீர் ... *. அணங்கான திவ்யரான, அமரர்கள். அணங்கு தெய்வப் பெண். தேவலோக வாஸிகளான அமரர். அணங்கு என்று தனித்து வந்தால் பெண். இங்கு ஆண் பெண் இருபாலரையும் குறிக்கிறது.

**அணங்காடுதல்** 3290/1. ... அன்றங்தோ *. அணங்கேறியாடுதல், ஆவேசம் வந்து ஆடுகை.

**அணங்காடுதல் கீழ்மையே** 3293/4. ... சாலத் தன்னிது. இழுக்கு. க்ஷுத்ர தெய்வங்களை உபாஸித்து அவை ஆவேசம் வந்ததாகக் கூத்தாடுவது மிகத் தண்ணிது.

**அணங்காடுதிர்** 3291/1. நீர் ...*. நீங்கள் தெய்வா வேசம் வந்தாற் போல ஆடா நின்றிகோள். [ வீண் வேலை.

**அணங்காடும் பொய்** 3294/2. ... காண்கிலேன் *. அணங்காடும்

**அணங்காடு** மிளக்தெய்வம் 3287/2. ஆடுகின்ற க்ஷுத்ர தெய்வம்.

**அணங்காய சோதி** 1165/3. ...த்தேவாதிதேவன்*. திவ்யதேஜஸ்.

**அணங்கு** - விருப்பம். சீர் ...மறையாளர்.* 1147/2. வார் ... முலை.* அழகு. 1147/3 *. ...ம் பல பல வாகி. 2573/3. தெய்வம். [விஷ்டமாகி.

**அணங் கெழுந்து** 1822/2. ... அவன் தன் கவந்தம். * தைவா

**அணங்கெழு மாமலை** 1173/3. தைவா விஷ்டமான மலை.

**அணர்** 276/1. இட ...*. மேலுதடு. மீசை முளைக்கும் இடம். **அணர்** 1791/1. காரிமிலேற்று ... *. ஸாஸ்நா. மாட்டின் தாடை.

**அணவி** 3430/2. புது மாதவி மீது ...*. அணைந்து. **அணவும்** 1842/4. திங்கள்தான் ...திருக்கோட்டியூர்.* ஸ்பர்சியா நிற்கும், தொடும்.

**அணார்** 271/3. கடுவே சென்று ... சொறிய.* கழுத்து.

**அணாவாய்த்துக்** காலம் கழிக்கிறார் 2945/அவ. விநோதமாய், ஸம்சயித்து. **அணாவாய்த்துத்** திரியும் 999/1. அநுவே போது போக்காகத் திரியும்.

**அணாறு** 1791/1. "அணாறிலே தாழ ஸஞ்சரிக்கிற மணி" மாட்டுக் கழுத்தில் தொங்கியாடும் மணி. அணாரே அணாறு. ரகரம் வல்லினமாய் உகர ஈறுயிருக்கிறது.

**அணி** - வ்யூஹம். "தூசியும் அணியும் பேரணியுமாக வகுத்து விட்டார்" 3376/4.

**அணிக்கொள் நால் தடந்தோள்** 3890/3. வேறு ஆபரணம் வேண்டாமல் தானே ஆபரணமாயுள்ள நாலு பெரிய தோள்.

**அணிகலத்தன்** 3393/3. உலப்பில். ... *. அணியப்பட்ட, கலன் - ஆபரணங்களையுடையவன்.

**அணிகலன்** 3254/2. தேசமான ...னும்*.அணியத்தகுந்த ஆபரணம்

**அணிகுருகூர்** 3593/2.... ச் சடகோபன்.* உலகுக்கு அலங்காரமான, குருகூர் - ஆழ்வார் திருநகரி.

**அணிகெழு தாமரை** 1764/3. ...யன்ன கண் *. அழகியதாய், கெழுமிய - நெருங்கின தாமரை. **அணிகெழு மாகில்** 1764/4. [உதடு.

**அணிகொள் செஞ்சிறுவாய்** 714/3. அழகிய சிவந்த திருப்பவளம்,

**அணிகோட்டியர் கோன்** 11/1. ஸம்ஸாரத்துக்கு, உலகுக்கு அலங்காரமான திருக்கோட்டியூர். அதிலுள்ளவர்க்கு நிர்வாஹகன்.

**அணிசேர் மார்வம்** 735/1. ஆபரணங்கள் அணிந்த மார்பு.

**அணித்தாக** - ஸமீபமாக 3265/1.

**அணித் தொத்து** 1855/1 பான்மணியை ... தை.* அணியான, அழகான மாலை. மணித் தொத்தாகில் மணி மாலை,

[அணி திகழும் சோலை, அணி திருவரங்கம் என்று அணி முதலாயுள்ள தொடர்கள் நூற்றுக்கணக்காயுள்ளன. இவையெல்லாம் தொடரகராதி என்னும் தனிப் புஸ்தகத்தில் வெளியாகும்.]

**அணியன்** 1045/1, 2452/1. சேயன் ... *. ஆஸக்தன், கையாள், ஸுலபன். அண்மையி லிருப்பவன். "ஆபத்ஸகனும் ... னுகையாலும் இவனே ஈசுவரன்." 3025/4.

**அணியிடாத அநுஷ்டானம்** - ஸங்கேதஹியாத ... (தேசிகர்).

**அணில்** 898/2. சலமிலா ... லும் போலே. *

**அணில்கள்** 1185/2. ... தாவ கெட்டிலைய கருங்கமுகு. *

**அணுக்கடித்துத்** திரியா நின்றார் 3586/1. அணுக் கடிக்கை. அந்தரங்கமாகை. "... த்துப் போன நெஞ்சினர்" 2489/3.

**அணுக்கம்** - அந்தரங்கதை. "அவன் பக்கல் ... த்தைக் கொண்டு இத்தலையை உதறிப்போனபடி" 1780/2.

**அணுக்கர்** 576/4. ஏத்த வல்லாரவரும் ... ரே *.

**அணுக்கர்கள்** 473/4. பாடவல்லார் தாமும் ... ளே*. அண்ணியர். * ... களாய்ச் சார்க் தொழிந்தார் 2591/2. [யான்.

**அணுக்கன்** 238/1. பெண்டிர்க்கு ... னுப் *. அந்த ரங்கனான அடி

**அணுக்கன்** - குடை. "... னிட்டாற் போலே நிழல் செய்யும்படி" 3153/2. "எனக்கு ... னிடவேணும்." 3287/ "... க்கனைக்கவிழ்த்து" 3401/1.

**அணுக்கன் வாசல்** - திருவணுக்கன் திருவாசல் (கோயிலொழுகு). கர்ப்ப க்ருஹத்துக்கு ஸமீபமான வாசல், ஸ்ரீரங்கத்தில் ஸந்நிதி வாசல்; ஜய விஜயர்களான த்வார பாலர்களுக் கருகில் மணிக் கதவுள்ள வாசல். அணுக்கன் - குடை என்ற பொருளிலும் இந்த வாசலுக்கு இந்தப் பெயர் பொருந்துகிறது; பெருமாள் வெளியே புறப்படும் போது உள்ளே எழுந்தருளும் போது இந்த வாசலி லிருந்தும் இந்த வாசலளவாயும் குடை பிடிப்பதால். **அணுகப்பெறு** நாள் 3859/4. அடியேன் ... *.

**அணுகிற்பன்** 3136/4. உன்னையெங்கு வந்து ... *. கிட்டுவேன்.

**அணுமை** - ஸாமீப்யம். "உரியவப்பனை உரியவென்று ... சொல்லுகிறது." 3681/2.

**அணைகில்லாது** 3708/2. என்னுவியமர்ந்து ... *. அணையாது.

**அத்தகு சீரயோத்தி** 325/3. ... யர்கோன் *. அந்த நிலைக்குத் தகுதியான ...

**அத்தத்தின் பத்தா நாள்** - திருவோணம் 28/3. அத்தம் - ஹஸ்தம். அதிலிருந்து பத்தாவது நாள்.

**அத்தவாளத்தலை** - அத்தவாளம் - உத்தரீயம், மேலாக்கு. அதனுடைய தலை-முந்தானை. "மேல்கட்டிக்கு ... தையும் கொள்." 499/7. பந்தலின் மேல்கட்டிக்கு தனியாகத் துணி இல்லாதபோது மேல் உத்த

ரீயத்தையும் கட்டவேண்டியது — என்று பொருள். "அத்தவாளத் தலை யிட்டு மறைத்து" 3880/ப்ர.

**அத்தன்** - ஸ்வாமி 973/3. ... எத்தை யாதி மூர்த்தி *.

**அத்தனைபோது** 1898/3. ... அங்காந்தவன் *.

**அத்தாணி** 190/1 ... புள்ளங்கிருந்தாய் *. அருகிருப்பு.

**அத்தாணிச் சேவகம்** 8/1. நியதமும் ... *. பிரியாத சேவை. அருகிருந்து செய்யும் சேவை. அத்தாணி ... பிரியாமை.

**அத்தாளத் தளிகை** - வானமாமலை திருக்குறுங்குடி முதலான தெற்குத் திருப்பதிகளில் இந்தப் பெயரால் ஒரு நைவேத்யம் உண்டு. இந்த சொல்லடைவில் பொருள் அறியத் தக்கது. அத்தாளநல்லூர் என்று அவ்விடத்தில் ஒரு ஊர் உண்டு.

**அத்திக் காயில் அறுமான்** 2899 / மு. ஸ்ரீ. 2991/4. அறுமான். கொசுகு, பூச்சி. அத்திப் பழத்தில் புழு பூச்சி நிறைந்திருப்பது.

**அத்தியாயம் படிப்பர்** 1053/அரு. படித்தவர்களாக வேஷம் போடுகிறவர்கள். "வைராக்ய ஸூசக வேஷம் கொண்டு ..."

**அத்தியூர்**/ரான் 2276/4. ஆழியான் ... *. ஹஸ்திகிரி, அத்திகிரி, அத்தியூர், காஞ்சிபுரம், அதில் நிற்கிற வரதராஜப் பெருமாள்.

**அத்திரம்** 323/2. ... மே கொண்டெறிய.* அஸ்த்ரம்.

*அத்து* - அத்துச்சாரியை 177/1. ஆலத்திலையான்*. 1304/2. மாத்தமர்பாகன்*. அத்து - அசை 2054/3. ஒரு வடிவத்தோருரு *.

**அத்துணைக்கண்** 2859/2. ... மின்னூர் மணிமுடி *. அப்போதே.

**அதக்கி** - அடக்கி, நெருக்கி 418/1. மாவலியைக் குறும்பு ... *. 445/1. வன்புலச் சேவை ... *.

**அதக்குவார்** - நெருக்குவார். 877/1. சே ... வார் போலப் புகுந்து.

**அதகன்** 126/4. ... வந்தப் பூச்சி *. மிடுக்கன்.

**அதர்** - வழி 1701/4. மல்லை முந்நீர் அதர்பட *. 1936/2. அருவழி வானமதர்பட **அதர்வாய்** - வழியில். 1016/3. ... ச் சில்லி *.

**அதரிடை** 239/3. கான் ... *. வழிகள் தோறும்.

**அதவி** 2270/2. ... ப் போர் யானையொசித்து *. அடர்த்து.

**அதள்** - தோல் 1798/1. அக்கும் புலியின் ... ளும் *. 1935/1. மானுரி ... ளும் *.

**அதன்றி** 791/1. ... ஆயர்பிள்ளையாய் *. அதுக்குமேலே. **அதன்றியும்** 770/1. ஒதிலுய் ... *.

**அதாகிறது** - அதாவது(?) அதாவது-வார்த்தைப் பாடு. 3198/ப்ர.

**அதிபதி** 2899/3. அமரர்கள் ... *.

**அதிர் சங்கம்** 1125/2. அப்பால்...*. அதிரும்படி முழங்கும் சங்கம்.

**அதிர்தலில்** - கோஷிக்கையில் 917/4. பிடியொடு முரசும் ... *.

**அதிர்ந்த அட்டஹாஸம்** 3314/2. அதிரச் செய்கிற பெருஞ்சிரிப்பு

**அதிர்முகமுடைய** வலம்புரி 393/1. அதிர்கிற வாயையுடைய சங்கு

**அதிரச் சொன்ஞய் (?)** கடுங்கும்படி சொன்ஞய்.

**அதிருங் கடல்** 31/1; **அதிருங் கருங்கடல்** 2539/2. **அதிருங் கழல்** 328/3. கழல் - காலணி. **அதிலுங் கடையாயிற்று** 3658/1.

**அதுக்கதுக்** காக்கினது 1966/அரு.

**அதுகிடக் கிடாய்** - அது கிடக்கட்டுமடா 3411/1.

**அது கிடக்கிடீர்** - அது கிடக்கிட்டுங்கள். கிடாய் ஒருமை, கிடீர் பன்மை. **அது கிடக்கிடு** வேணுமாகில் 3410/2. அது இருக்கட்டும்.

**அதுவன்றியும்** - அதுக்கு மேலே 1079/2. முளிந்ததுவும் ... *.

**அதுவுமது** 2524/2. சொரிகின்றது ... *. அதுவுமப்படியே.

**அந்தகன் சிறுவன்** 1073/1. ... அரசர் தமரசற்கு *. குருடன் பெற்ற மகன்.

**அந்த காலம்** 373/2. ... அடைவதன் முன்னம் *. முடிவு காலம். அந்தக் காலம் என்பது வேறு.

**அந்தண் கழனி** 1062/3. செய்தல் ... *. அழகிய குளிர்ந்த கழனி.

**அந்தண்ணந்துழாய்** 2482/2. அம் - தர்சநீயமாய், தண், அந் துழாய் - திருத் துழாய், பசு மருந்து - பச்சை மருந்து. புது மருந்து, ஸாரமான மருந்து. **அந்தண் துழாய்** 3768/1. இவள் ... *.

**அந்தண் பணை** 1210/4. வஞ்சி ... *. அழகிய குளிர்ந்த மூங்கில்.

**அந்தணமை** 896/1. குறிகொள் ... *. பிராம்மண்யம்.

**அந்தணர் கற்பு** 1643/3. ஆழி யேந்திய கையனை ... பினை *. பிராம்மணர்களாலே அத்யயநம் பண்ணப்படுகிறவன். கற்பு - கல்வி. பிராம்மண வித்தை, பிரம்ம வித்தை — என்றும் பொருள்.

**அந்தணர் மாட்டந்தி** வைத்த மந்திரம் 2055/3. மாடு - தநம். அந்தணர் மாடு - வேதம். "ப்ராஹ்மணாநாம் தநம் வேத:" — அந்தி - அந்தம். அந்தணர் மாட்டந்தி - வேதாந்தம். அதில் வைத்த மந்திரம் - வேதாந்த ரஹஸ்யம், ரஹஸ்யார்த்தம், பகவாந்.

**அந்தணன்** - சுத்தன் 2055/3. தேவர்க்குமறியலாகா ... னை *.

**அந்தணன் தோட்டம்** 1940/4. கன்றுப் பரிபாலியாத தோட்டம்.

**அந்தணாளன் பிள்ளை** 1494/2. பிராம்மண னுடைய மகன்.

**அந்தது** 3992/4. உம்பர் ... *. அந்த அது. அப்படிப்பட்ட அது. அதது, அந்த அந்த என்பது அந்தந்த என்னுவது போல.

**அந்தம்** 1306/2 ... மாய் ஆதியாகி *. முடிவு, நாசம்.

**அந்தம் - இடம்** 1409/4. பல்லுயிர்க் கெல்லாம் ... *. அந்தம் நாநார்த்த சப்தம், இங்கே இடப் பொருளாகிறது.

**அந்தமில் சீர்** 693/4. **அந்தமில் புகழினார்** 3911/4.

**அந்தமில் பேரின்பம்** 3989/2. **அந்தமில்லதோர்** காடு 3091/2. நலம் ... *. முடிவில்லாதது. **அந்தமில்** வரை 1071/4. **அந்தமிலடிமை** 3068/2. **அந்தமிலாதியம்** பகவன் 2925/2.

**அந்தமிழ் இன்பப் பா** 650/2. அழகிய தமிழாலான இன்பப் பா.

**அந்த முதல்வன்** 1698/2. ... அமரர்கள் தம் பெருமான் *. அந்தத்தையும் ஆதியையும் நிர்வஹிக்கிறவன். ஸர்வ ஸம்ஹர்த்தாவாயும் ஸர்வஸ்ரஷ்டாவுமானவன்.

**அந்தரத் தமரர்** 984/3. ... அடியிணை வணங்க *. ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்கள்.

**அந்தரத்தார்** 2314/4. வானம்தம் ... க்கு *. ஆகாசத்தே நிற்கிறவர்கள். **அந்தரப்பட்டாள்** 3049/4, 3561/ப்ர. அகர்த்தாப்பட்டாள்.

**அந்தரம்** 1140/2. ... மே வரத்தோன்றி *. ஆகாசம். **அந்தரம்** 69/3. ... மின்றியிழித்தாடிய *. இடைவெளி, அபாயம்.

**அந்தர முழவ** 259/2. ... த் தண் தழைக்காவின் *. ஆகாசமெல்லாம் வாத்ய கோஷத்தாலே முழங்க முழவம் – மத்தளம்; அதினுடைய முழக்கம் அத்யாஹாரமாய்க் கிடக்கிறது.

**அந்தர மேழு** 1818/2, ... ம் அலைகடலும் *. ஸப்த த்வீபங்கள், அந்தரமேழு 1614/2. ... முனும் *. மேலுலகங்கள் ஏழு.

**அந்தரமேற் செம்பட்டு** 3621/3. அந்தரம் – நடுவு, இடுப்பு. அதில் சாத்தின பீதாம்பரம்.

**அந்தர மொன்றில்லையடை** 2139/4. அவகாசம் ஏக தேசமும் இல்லை; கடுகச் சென்று கிட்டு; ஒரு க்ஷணமாத்ரம் போதே. ஒருப்படு. (போது ஒரு க்ஷணமாத்ரமே).

**அந்தரி** 558/4. ... சூட்டக் கணு *. அந்தரத்திலே ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற துர்க்கை.

**அந்த வந்த ஆகுலங்கள்** 821/4. அந்தந்த துன்பங்கள்.

**அந்தளிர்** 1188/3. ... அணியா ரசோகு.

**அந்தாதி** 2382/3. ... மேவிட்டு *. அந்தாதித் தொடையான பாடல்.

**அந்தாதியாகப் பிறந்து** 3071/அவ. பூர்வ தேஹத்தினுடைய அந்தம் உத்தர தேஹத்துக்கு ஆதியாம்படி பிறந்து.

**அந்தாதி யாயிரம்** 2942/3. அந்தாதித் தொடையாய் அமைந்த ஆயிரம் பாட்டான திருவாய்மொழி.

**அந்தாமத் தண்டுழாய்** 3017/4. அழகிய மாலையாய் அமைந்த திருத்துழாய். அந்தாமம் – அழகிய மாலை.

**அந்தாமத் தன்பு** 3053/1. தாமம் ஸ்தாகம். அந்தாமம் – பரமபதம். அங்குள்ளார் பக்கல் பண்ணக் கடவ, அன்பு – ஸ்நேஹம்.

**அந்தாமரைக் கண்** 713/1. தண் ...

**அந்தாமரைப் பேதை மாமணவாளன்** 672/3. விஷ்ணு.

**அந்தாமரையடி** 1632/4. செவ்விப்பூப் போலே யிருக்கிற திருவடி.

**அந்தாம** வாண் (வாழ்) முடி 3053/2.

**அந்தி** 1378/4. ... போலும் நிறத்தார் வயல் *. ஸந்த்யை, சந்தி.

**அந்திகாவலன்** 1688/3. ...அமுதுறு பசுங்கதிர்*. சந்திரன்.[சொல்.

**அந்திதொழுஞ் சொல்** 3974/2. முடிவிலே தொழும் நம: — என்ற

**அந்திப்பலி** 346/2. ... கொடுத்து *. ஸந்த்யா கால ஆராதநம்.

**அந்திப்பொழுதத்து** 2346/1. ... மங்கவிரணியன் *. ... அரியாய் *. 2376/1. அந்திப் பொழுதம் – அந்திப்போது. பொழுதத்து – பொழுதில்.

**அந்திப் போது** 193/3. மன்றில் நில்லேல் ... *. 3576/3 ... அவுண னுடலிடந்தான் *. **அந்தி போல் நிறத்தாடை** 929/3. ஸந்த்யா ராகம் போலே யிருந்துள்ள பீதாம்பரம்.

**அந்திபோலும்** நிறத்தார் வயல் 1378/4. கருவடைந்த பயிராகை யாலே வயல் எங்குமொக்க இருண்டு தோன்றும். ஸந்த்யா காலம் போல கரு கரு என்றுள்ள வயல். ஸந்த்யா காலத்தின் சிவப்பைச் சொல்லு வதாகில், நுனி நெல் பழுத்திருப்பதால் சிவந்த வயல்.

**அந்தி மூன்று** 1588/4. ... மனலோம்பும்*. மூன்று ஸந்தி. த்ரிஸந்தி- காலை, நடுப்பகல், மாலை; முச்சந்தி. நாற்சந்தியாவது நாலு திக்குப்பாதை யும் சந்திக்கும் இடம். நடுச்சந்தியும் நாற்சந்தியே.

**அந்தியம்போது** 6/3. ... திலரியுருவாகி *. 192/4. ... இறுவாகும் *. 1885/4. ... அங்கு நில்லேல் *. ஸந்த்யா காலம்.

**அந்திவான்** 2368/4. ... காட்டுவது *. ஸந்தியா ராகத்தாலே சிவந்த மேகம். **அந்தியாலாம் பயனென் கொல்** 2114/4. அந்தி - ஸந்த்யா வந்தநம். எம்பெருமானுக்குடலல்லாத ஷேவல ஸந்த்யய வ்யர்த்தம்.

**அந்தியீன்ற கோலவிளம்பிறை** 1792/2. ஸந்த்யா தேவி பெற்றெ டுத்த அழகான பால சந்திரன்.

**அந்தி விளக்கும் அணி விளக்காம்** 2297/2. அந்தியை விளக்கு கின்ற-பிரகாசிப்பிக்கிற, அணி விளக்கு - மங்கள தீபம்.

**அந்துகில்** 1781/4. ... லும் நில்லாவே. அழகிதான துகில்.

**அந்துழாய்** (?) அழகிய திருத்துழாய். அத்துழாய் அந்துழாயின் திரிபு.

**அந்தூபம்** 2498/2. ... தாரா நிற்கவே. பரிமளம் மிக்க தூபம்.

**அந்தேன்** 1218/3. ... இசைபாட *. அழகான வண்டு,

**அந்தொண்டை** வாயமுது 36/2. **அந்தோ கேசவா** 709/4. அந்தோ பிறவியுட் பிணங்குமாறே 875/4. ஐயோ! என்ற இரங்கல்.

**அந்தோழி!** 2533/2. அஞ்சல் ... *. என்னுடைய பேறே உனக்குப் பேறுயிருக்குமவளே! என்னோடுஸமமான ஸுகதுக்கங்களை உடையவளே.

**அந்தோள்** 1938/2. பாழி ... னுடைப் பற்பநாபன். அழகியதோள்.

**அந்நான்று** 1494/2. அந்தணனொன் பிள்ளையை ...*. அஞ்ஞான்றின் பாட பேதம். அக்காலத்திலே அந்த நாளிலே.

**அநாள்** 835/2. அன்புறைக்க வைத்த நாள் *. அந்நாள் என்பது அநாள் என்று கடைக் குறைத்தலாயிற்று.

**அநியாயம்** 204/3. ... செய்வதுதான் வழக்கோ *. [றுண்டி.

**அப்பம்** 143/3. பெரியன ... தருவன் *. 156/1. ... கலந்த சிற்

**அப்பர்** 969/3. இதுவென் ... *. பெரியவர். அப்பர் 1145/2. " அவனை ... ராக சேமம் சாத்தி வைத்து". பூஜ்யராக.

**அப்பன்** 104/1. என் ... அறிந்திலன் *. தகப்பன்.

**அப்பன் மலை** 346/2. ஆவர்த்தனம் செய் ... *. ஸர்வ காரணபூதன் வர்த்திக்கும் மலை. தகப்பன் மகனை உத்பத்தி செய்வதால் காரண பூதனாகிறான். அப்படியே ஈசுவரன் ஸ்ருஷ்டிகர்த்தா வாகையால் காரண பூதனாகிறான்.

**அப்பா** 1032/4. என் ... வந்தடைந்தேன் *. உபகாரகனே !

**அப்பா! அம்மே!** 1560/1. அப்பனையும் அம்மாவையும் விளிக்கிறது.

**அப்பாலது** எப்பாலைக்கும் சேமத்ததே 2503/4. அப்பாலுள்ளதாகிலும் எல்லா நிலைகளிலும் க்ஷேமகரமாயிருக்கும்.

**அப்பாலவன்** 2966/4. அவ்வருகானவன், அப்பாற்பட்டவன்.

**அப்பாவி** 702/4. " ... உன்னை அறியாதவனாகையாலே மெய் யென்றிருக்கிறவன்." அந்தப்பாவி என்றுபொருளல்ல. கபடமில்லாதவன். " அவனொரு ... ; அவளொரு ... " என்ற வழக்குக் காண்க.

**அப்பி** 565/1. குங்குமம் ... *. பூசி, தடவி.

**அப்பிலருபொருள்** 2384/3. ... லையானறிந்தவாறு *. ஜலத்தில் கண் வளர்ந்தருளுகிறவன்.

**அப்புத்தட்டியிருந்தான்** 3380/1. தொடை தட்டியிருந்தான்.

**அப்பு நீண்முடியான்** 1034/3. அப்பு – ஜலம். கங்கையை நீண்ட ஜடையிலே தரிக்கும் ருத்ரன்.

**அப்புறத்தும்** 759/1. அண்டமாய ... *. பரம பதத்தில்.

**அப்பூச்சி** காட்டுகின்றான் 118/4. பாலர்கள் எதிர்த் தலைக்கு பயங்கரமாகக் காட்டுவன சில சேஷ்டிதங்கள்.

**அப்பூச்சி பாடல்** 127/2. அப்பூச்சி விஷயமான பாடல்.

**அப்பொழுது.** 3056/4. ... தென்னாராவமுதம் *. **அப்பொழுதைக்கு** ... அவ்வோ காலங்களிலே.

**அப்பொழுதைத் தாமரை** 3056/4. அப்போ தலர்ந்த செவ்வித் தாமரை. **அப்பொழுதையில்** 1507/2. அரு. துமேல் ஐயும் இல்லும் இருப்பது காண்க. **அப்போது** 194/2. ... நான் உரப்பப் போய் *.

**அபிமானதுங்கன்** 11/1. அணிகோட்டியர் கோன் ... *. அபிமானத்தாலே உயர்ந்தவன். களிர்ந்த சிலன் யோசலன் ... *. 367/1.

**அபிமானபங்கம்** 49‾/1. ... *மாய் வந்து* *. *அபிமான குங்யம். ஆசை யில்லாமை.* **அம்பகவன்** 2925/2. *அந்த மிலாதி* ... *. *அவகுணங் களுக் கெதிர்த்தட்டான பகவான்.*

**அம்பரதலம்** - *ஆகாசம்.* 924/4. ... *த் தினின்று அகல்கின்றது* *.

**அம்பரம்** - *ஆகாசம்* 280/3. ... *திரியும் காந்தப்பர்* *.

**அம்பரம்** - *புடவை, வஸ்திரம்* 490/1. ... *மே தண்ணீரே* *.

**அம்பராவும்** *கண் மடவார்* 1590/4. *அம்பை அரைக்கிற, இளைப் பிக்கிற கண்களையுடையவர்கள்.* **அம்பலம்** 1278/4. *திருத்தெற்றி* ... *.

**அம்பலம்** 2067/2. "*எல்லாரும் திரள விருக்குமிடம்.*"

**அம்பறுத் தெய்யவேண்டும்** 2916/அவ. *அம்பைத் தூணியிலிருந்து வாங்கி - எடுத்து, எய்யவேண்டும்.*

**அம்பன்ன** *கண்ணன்* 1523/3. *அம்பு போலப் பாயும் கண்ணை யுடையவன்.* **அம்பார் களிறு** 2499/2. *அம்பு, ஆர்ந்த - தைத்த, ஆனே.*

**அம்பாரம்** (?) *கெற்குவியல்.* **அம்பிள்ளை** 2554/1. *திங்கள்* ... *. *அழகிய பிள்ளை.* **அம்பு** 1450/2. *அழல் கிற* ... *.

**அம்புதம்** 1120/4. *இருண்ட* ... *. *மேகம்.*

**அம்பு பாடரைப் போல** *உழைப்பர் (அர்ச்சி 2.) அநுபந்தம் பார்.*

**அம்புருடன்** 3157/3. *ஆழி* ... *. **அம்புருவம்** 1579/1. ... *வ வரி கெடுங்கண்* *. [*வும் மீன்.*

**அம்புலாவுமீன்** 786/1. ... *னுமாகி* *. *அம்பு - ஜலம், அதிலே உலா*

**அம்புலி** 56/4. ... *லீ கடிதோடிவா* *. *சந்திரன். நடுவிலிருக்கிற கறை அழகான புலி போலிருப்பதைப் பற்ற.* [ 3253/ப்ர.

**அம்புலியம்மான்** - *சந்திரன்.* "... *ளைப் பிடித்துத் தரவேணும்.*"

**அம்புள்** 3278/2. *தூவி* ... *. *அழகிய பறவை, கருடன்.* 3872/3. *தூவி* ... *ளுடைத் தெய்வ வண்டு* *.

[*அம்பூ அம்பூங்கழனி முதலான அம்தொடர் பல; தனிப் புஸ்தகத் தில் காண்க.*] [*பந்தம் பார்.*

**அம்புறத் தூணி** 2072/*பட்டர் அவ.* **அம்புறப் பொதி** (?) *அநு*

**அம்பெரி** 3249/2. ... *யுய்த்தவர்* *. *அம்பாகிற தீ, சராக்நி.*

**அம்பொற்கலே** 686/2. ... *யல்குல்* *. *அழகிய பொற்கலே, பொன் னுடை.* **அம்பொனுருலகம்** 1435/1. *அழகிய பொன்போல் பிரகாசிக்கிய மான உலகம்.* **அம்போரேறு** 3059/4. *அழகான போர்க் காளை.*

**அம்ம** *என்று அப்புத்தட்டியிருந்தவன்* 3380/1. *அம்ம அம்மே-விளி.*

**அம்ம ஓ (வோ)** *கொடியவாறே!* 908/4. *ஐயோ! மிகக் கொடி யது. அம்ம அம்ம என்பது விஷாத த்யோதகம்; துக்கக் குரல்.*

**அம்மணம்** - *அம்மணீ பார்.* **அம்மணி** 77/4. ...*மேல் கொட்டாய்* *. *அம்மணி, அம்மணம் - அரை இடுப்பு துடை முதலியவற்றுக்குப் பெயர். அம்மணியம்மா என்ற பெயர் அங்கத்தின முகால் உண்டானதென்னலாம்.*

**அம்மம்** 233/2. ... தாரேனென்ற மாற்றம் *. உணவு.

**அம்மம் சேமம்** 1878/4. என் ... உண்ணுயே *. ராஜாக்களுக்குக் காவலோடே வருகிற சோறுயிற்று சேமமாகிறது. அம்ம மாகிற சேமம். சேம மாகிற அம்மம் என்றும் சொல்லலாம். சேமம் தளிகை — என்று கோயில் வார்த்தை.

**அம்ம வம்ம** 3877/4. யாது மொன்றறிகிலம் ... *. அம்மே அம்மே அம்மம்ம — என்று உளைந்து சொல்லுகிற வார்த்தை.

**அம்மஞய்** 483/1. கோற்றச் சுவர்க்கம் புகுகின்ற ... *. அம்மனை என்பதன் விளி. அம்மை அன்னை – இரண்டும் சேர்ந்து அம்மனையாகக் குறைந்தது. **அம்மனே** 118/4. ... அப் பூச்சி *. பயப்பட்டுச் சொல்லு கிற வார்த்தை. அம்மனுக்கு விளி.

**அம்மனே ! அம்மனே !** 607/4. நோக்காரால் ... *. அந்தோ ! அந்தோ ! பயத்தில் சொல்லும் வார்த்தை.

**அம்மனை** 2725/2. கேட்டெங்கள் ... யும் *. அன்னை.

**அம்மனைமார்** 530/3. ... காணி லொட்டார் *. தாய்மார். அம் மனைமீர் 1390/4. ... அறிகிலேனே *. அன்னைமீர்.

**அம்மனோ** 2513/3. துன்பத்த ளென்றிரங்கார் ... *. அச்சத்தில் சொல்லும் வார்த்தை. அம்மன் மேல் ஓ அசை.

**அம்மா** 225/4. ... உன்னையறிந்து கொண்டேன் *. ஸ்வாமீ என்று விளி. 917/4. அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தருளாயே *.

**அம் மாவிளை வயல்** 1718/3. அழகியதாய் மா-பரந்த, விளைவயல்.

**அம்மான்** 1418/4. திருவரங்கத்து ...னே *. ஸ்வாமி. அம்மான் – தகப்பன். 1244/2. ... கருதுமிடம் *. ஸ்வாமீ. அம்மான் திருமலை 3963/3. ஸ்வாமியினுடைய மலை.

**அம்மான் பொடி** 482/6. "அம்மான் அம்மான் என்று கொண்டு பின் தொடரும்படியான சுக்குப் பொடி." 517/2. மாயமந்திரம் *. என் னுமிடத்தில் சொக்குப் பொடி என்று காண்கிறது. "வாகம்ருதமான ... டியை இட்டுக்கொண்டு போனபடி." 1209/2. "அவற்றிலொரு ... யை சொல்லிக் காணும்." 3145/1. "வசீகரண ஸாதகமான மூலிகா சூர்ணம். அதாவது — கள்ளர்கள் பாலர்களை வசீகரிக்கைக்காக, அம்மான் என்று சொல்லி ஒரு பொடியைத் தூவினால் அவர்கள் " அம்மான் ! அம்மான் !" —என்று சொல்லிக் கொண்டே கள்ளர்களின் பின்னே போவார்கள்."

**அம்மா னிடம்** 1010/2. வன்ளுகிரால் வகிர்ந்த ... *. ஸ்வாமி யினுடைய இடம். [வேகவரன்.

**அம்மானுர்** 1544/2. ஒழியா வண்ண மெண்ணி நின்ற ... *. ஸர்

**அம்மானு மம்மனையும்** 1560/2. ... அடியேனுக்காகி *. அம்மான்– தந்தை, அம்மனை – தாய்.

**அம்மி** 299/3. (வ்யா) அரைக்கிற கல். **அம்மி** 563/4. ... மிதிக்க*.

**அம்மே** 1560/1. அம்மாவுக்கு விளி. **அம்மை** 77/3. நின் ... தன் னம்மனி *. தாய்.

**அம்மொழி** 1307/3. ... வாய்க்கலிகன்றி *. அப்படிப்பட்ட பேச்சு.

**அமணக் கூத்தடிக்கும் தேசம்** 3/அரு. நிர்வாணமாயிருந்து கூத் தாடும் நாடு. **அமணக் கூத்தடியாதே** 2033/1. **அமணக் கூத்தெல் லாம் ஆடிற்று** 905/3. அம்மணம் அமணமாயிற்று. அம்மணம் ஆண் பெண் குறி. அதை மறைக்காமல் தெரிய விட்டு ஆடும் விபரீதச் செயல்.

**அமணர்** 1582/1. ஜைநர்களில் நிர்வாணமாயுள்ள திகம்பரர்.

**அமணன்** – நிர்வாணமாயிருப்பவன், திகம்பர ஜைநன். ச்ரமணன் என்ற வடமொழியின் திரிபு அமணன். அவன் உடையில்லாமல் திரிவ தால் அமணக்கூத்து முதலான தொடர்கள் உண்டாயின். [ஆலயம்.

**அமணன் பாழி** 3291/3. ஜைந தேவாலயம். பாழி – இடம், இங்கு

**அமணுணைப்பட்டு** 2492/அவ. "பிடியை இழந்ததொரு களிறு தன் னுற்றுமையாலே ... திரியுமாப் போலே." ஆனை அமண்பட்டுத் திரியு மாப் போலே என்று பொருள். அமண் படுகையாவது – மன்மத விகா ரத்தாலே ஆண் குறி தெரியும்படி காலவிட்டுத் திரிகை.

**அமம்** 2379/2. ... சூழ்ந்தற விளங்கி *. எல்லாவற்றையும் சூழ்ந்து.

**அமர்க்களம்** 1873/2. ... த்து வெல்ல இல்லாது *. போர்க் களம்.

**அமர் காதல்** 3848/2. ... குருகினங்காள்! *. அமர்ந்த, பொருந் தின, காதல். **அமர் கொளாழி** 3778/2. யுத்தோந் முகமான திருவாழி.

**அமர்சுவையாயிரம்** 2931/3. ரஸ கநமான ஆயிரம் திருவாய் மொழி. அம்ருத ருசியான ஆயிரம். [தகுந்த துணை.

**அமர்துணை** 3705/4. யாவர் மற்றென் ... யே *. சேர்ந்த துணை,

**அமர்ந்த நிலம்** 3183/2. "வழிபறிக்கும் நிலத்தில் போவார் சிரிய தனங்களை விழுங்கி, பின்னை ... த்திலே புக்கால் புறப்படவிட்டுப் பார்க் குமாபோலே." பயமில்லாத இடம்.

**அமர்ந்து வந்து** 132/4. ... என் முலையுணுயே *. மெள்ள வந்து.

**அமர்ந்தேன்** 3713/4. முக் கணம்மானை நான் முகனை ... னே *. கிட்டப் பெற்றேன், அடைந்தேன்.

**அமர் பெருமான்** 3706/1. என் ... *. அமர்ந்த ஸ்வாமி.

**அமர் பொழில் வளம் குருகூர்** 2931/2. பொழில் வளம் அமர்ந்த குருகூர். **அமர்வு** 398/2. அரி புருடோத்தமன் ... *. அமரும் இடம்.

**அமரத் தழுவிற்று** 2973/4. ... இனியகலுமோ *. பொருந்தக் கலந் தது. **அமர நினைந்து** 3173/4. ... எழுந்தாடி *. நெஞ்சிலே பொருந்தும் படி நினைத்து. [அமர நாயகன் அமரர்க் கதிபதி என்று அமரர் தொடர் அநேகம்; தனிப் புஸ்தகத்தில் காணலாம்.]

**அமர வழும்பத் துழாவி** 2973/3. அமர – அமர்ந்து, கெட்டி, அழும்ப- நெருங்கி, துழாவி – அநுபவித்து.

**அமரிய புனிதர்** 1711/2. போது செய்து ...*. பூர்ணமான புண்ணியன்.

**அமலங்களாக** விழிக்கும் 2995/2. பார்த்த பார்வையிலே பாபங்க ளெல்லாம் அமலங்களாம்படி விழிக்கும். [சுரமான தெய்வம்.

**அமலத் தெய்வம்** 2995/4. ... த்தோடு உலக மாக்கி *. ஸத்வ ப்ர

**அமலனுதிபிரான்** 927/1. இந்தத் தொடரை முதலில் கொண்ட பாடல்; திருப்பாணாழ்வார் அருளிச் செய்தது. அமலன் – சுத்தன்.

**அமளி** 452/1. அரவத் ...*. 960/3. நறு மலர் ...*. படுக்கை.

**அமறி** 1093/1. இளர் பொறி ...*. மான் குட்டி.

**அமா** 852/1. ஏமரீர் கிறத்து ...*. அம்மா என்பது அமா வாயிற்று. அமா – உறவு, நிருபாதிக பந்து.

**அமுக்கி** 79/2. அட்டி ... *. 1187/2. அரட்டு ... *. **அமுக்கிக் கட்டீரோ** 633/4. அணைய ...*. அமுக்கிக் கட்டுங்கள்.

**அமுத கீத வலை** 280/3. ... யால் சுருக்குண்டு *. அம்ருதம் போல இனிதான கீத வலை.

[அமுதங்கொண்ட பெருமான் அமுதங்கொண் டுகந்த காலை – என்று அமுதத் தொடர் அநேகம்; நவீப் புஸ்தகத்தில் காணலாம்.]

**அமுதப் பொதி** யின்சுவைக் கரும்பு 1638/3. அமுதத்தை நீராகப் பாய்ச்சி வளர்த்தாப்போல் நிரதிசய போக்ய பூதமான கரும்பு போலே இனியனா யிருக்கிறவன். **அமுதன்ன தேவகி** 23/1. சீதக் கடலுள் ...*.

**அமுதில் வரும்** பெண்ணமுது 1449/2. லக்ஷ்மி.

**அமுது செய்** – சாப்பிடு. சாப்பிட்டு அம்ருதமாக்கு. அமுது செய் கிறார் என்றால் சாப்பிட்டு அம்ருதமாக்குகிறார் — என்று பொருள். பெரு மாள் அமுது செய்கிறார் — நாம் ஸமர்ப்பிக்கும் போஜ்ய வஸ்துக்களை உகந்து உண்டு, அம்ருதமாக்குகிறார் — என்று அர்த்தம்.

**அமுதுண்ட** வாயான் 2014/2. **அமுதுண்டு** 1246/1. வெண் ணெய் ...*. அமுதாம்படி உண்டு. **அமுது கீர்** 995/3. இலங்கு ...*.

**அமுதுறு** பசுங்கதிர் 1688/3. அந்தி காவலன் ...*. அம்ருதத்தால் பசுமையான கிரணங்கள்.

**அமேனி** 3280/1. கரிய மேனி மிசை ...*. கரிய அம் மேனி – அழ கிய மேனி என்பது அமேனியாகக் குறைந்தது.

**அமை** – பொருந்து 2621/4. அன்பால் ...*.

**அமைக்கும்** பொழுதுண்டே 2622/1. ஆறியிருக்கப் போதுண்டோ.

**அமைத்திருந்தோம்** 2632/2. உச்சமதாம் வீட்டை ...*. அமைவு – சமைவாய் பாரித்திருந்தோம்; அமைவு – அமையு மென்றும் வேண்டா என்றிருந்தோம்.

**அமைத்து** வந்து பிறப்பது 3088/3. "சக்ரவர்த்தி ஸ்ரீ வாஸுதேவர் களாகவிலே ... ஸங்கோசித்து (தேவாதி தேவனை தன்னுடைய பெருமை யைக் குறுக்கிக்கொண்டு) வந்து மநுஷ்யனாய்ப் பிறப்பது."

**அமைத்து வைத்தேன்** 246/3. நீராட்டம் ...*. சமைத்து வைத்தேன் – சித்தமாய் வைத்தேன்.

**அமைதி** 1935/2. கர தலத்து ... யின் கருத்தோ *. மிடுக்கு.

**அமைப்பான்** 2608/3. பார் கீழ் மேலாம் மீண்டு ...*. ரக்ஷிப்பான்.

**அமைப் பொலிந்த** மென் தோளி 2632/3. வேய் போலே விளங்கியிருதுவான தோளையுடையவள். அமை - மூங்கில். அநுபந்தம் பார்.

**அமையா** 1988/2. ஒருருவாய் மானை ...*. நிரஸித்து, கொன்று. அமையா – அமைத்து, சமைத்து, முடித்து.

**அமையாப் பொறி** புலன்கள் 2113/2. ... ஐந்தும் *. திரிய விடுக்கவொண்ணாத பொறியும் புலன்களும். திருப்ப முடியாத பொறி ...

**அமைவார்கள்** 3692/4. இங்கு மங்கு மெல்லாம் ... தாமே *. குறைவற்றிருப்பார்கள், பரிபூர்ணரா யிருப்பார்கள்.

**அமைவுடை** காரணன் 2923/4. தானும் ...*. எல்லாம் தானேயாம்படியாகச் சமை வுடையவன். [ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள்.

**அமைவுடை முதல்** கெடல் 2923/2. சமைகவை யுடைத்தான

**அமைவுடை யமரர்** 2923/3. விதேயராம்படி, உத்தரவுக்குக் கீழ்ப்பட்டிருக்கும்படி, சமைந்த பிரம்மாதிகள். கைவந்திருக்கும் அமைவுடைய பிரம்மாதிகள்.

**அமைவுடை யறநெறி** 2923/1. தப்பாமல் பலனளிக்கும் தர்ம மார்க்கம். வ்யவஸ்தையுடைய தர்ம மார்க்கம்.

**அய்யர் ஐயர்** – என்று இருவிதமாயும் பல இடங்களில் காண்கிறது. பெரியவர், தகப்பன், உபாத்தியாயர் என்று பொருள். அய்யர் செய்து வைத்த விவாஹம், அய்யர் தடுக்கு, நம்மையர் வந்தார் — என்று பல வாக்கியங்கள். அய்யர் தடுக்கு – உபாத்தியாயர் வீடு.

**அய்யன் பாழி** 2903/4. அய்யனார் கோயில். பாழி இடமாய் கோயிலாகிறது. **அய்யே நீ** எங்களுக்குப் பூவிட வல்லையே! 1422/2.

**அய்யோ**! இவ் வஸ்துவை நீ இழந்தாய் கிடாய் 1563/2. அந்தோ! ஐயோ!

**அயர்க்கின்றதே** 260/4. என் மகள் ...*. ஈடுபடுவதே.

**அயர்க்கின்றேன்** 898/4. அளியத்தேன் ... னே *. அநர்த்தப்பட்டுப் போகா நின்றேன்.

**அயர்த்தார்** பவுத்தர் 2387/1. அறிவு கெட்டிருப்பார்.

**அயர்ப்பாய்** அயராப்பாய் 2667/1. மறப்பாய், மறவாது மிருப்பாய்.

**அயர்ப்பிக்கின்றான்** 3272/4. அலற்றி ... னே *. மோஹிக்கும்படி பண்ணா நின்றான்.

**அயர்ப்பிலன்** 2930/4. ... அலற்றுவன் *. மறக்கக்கடவே னல்லேன்.

**அயர்வறு மமரர்கள்** 2899/3. அயர்வு – மறதி. அது இல்லாத நித்ய ஸூரிகள். **அயர்வி லமரர்கள்** 2968/3. ... ஆதிக் கொழுந்தை *.

**அயர்வென்ற தீர்க்குமவன்** 3183/4. *அஜ்ஞாந மென்று சொல்லப் படுவதை யெல்லாம் தீர்ப்பவன்.* **அயர்வென்ற தீர்ப்பான்** 2469/2.

**அயர்வொன்றில்லாச் சுகம்** 656/2. *துக்கமொன்றும் கலவாத சுகம்.*

**அயர வாங்கும் நமன்தமர்** 3183/3. *அறிவு கெடும்படி உயிரை வாங்கும் யம படர்.*

**அயராப்பாய்** 2667/1. *அயர்ப்பாய் ...*. மறவாதிருப்பாய். அயராப்பு – மறவாமை.*

**அயல் சதுப்பேதிமார்கள்** 910/1. *பகவத் கைங்கர்யத்துக்கு அப் பாற்பட்ட சதுர்வேதிகளான வெறும் வேதாத்யாயிகள்.*

**அயல் தையலார்** 3372/3. ... *காமடங்க *. பிறர் மனைவியர்.*

**அயல் நின்ற வல்வினை** 2138/1. *அருகே நிற்கின்ற கொடிய பாபம்.*

**அயல் வயல்** 1717/2. ... *அணி மங்கையர் *. அயல் வீடு போல அயல் வயல். அருகே யுண்டான வயல்.*

**அயலார்** 1330/4. ... *ரு மேசுகின்ற திதுவே *. புறம்புள்ளார்.*

**அயலிடத் துற்றார்** 1891/1. *போர்க்தங்கு ...*. கிட்டின உறவு முறையா யிருப்பர். அயலிடம் – கிட்டின இடம்.*

**அயலிடையார்** 2533/3. ... *ரு மறிந்திலர் *. அருகிலிருக்கிறவர்.*

**அயலோர்** 2492/2. ... *அறியிலும் *. அசலார்.* [*தார்.*

**அயற்சேரி யுள்ளார்** 3520/2. ... *ரு மெல்லே *. பக்கத்து கிராமத்*

**அயன்** 1270/2. *பங்கயத்து ...*. பிரம்மா.* [*மலை.*

**அயன் மலை** 3112/4. ... *யடைவது *. அருகின மலை, அருகிலுள்ள*

**அயன் மலை, புற மலை** 3110/*ப்ர. அருகிலுள்ளது, அப்பாலுள்ளது.*

**அயன் வாளி** 1082/3. *கால மிதுவென்று ...*. பிரம்மாஸ்த்ரம். அயன் – பிரம்மா. வாளி – அம்பு.*

**அயனனையார்** 1598/3. *செங்கமலத்து ...*. பிரம்மாவைப்போன்ற பிராம்மணர்கள்.* **அயிந்திரபுரம்** 1153/4. ... *தன் திரு ...*.*

**அயில் வாள்** 992/1. *அவள் மூக்கு ... ளால் *. கூரான வாள்.* [*கண்*

**அயில் வேற் கண்** 2682/2. ... *மடவார் *. கூரான வேல்போன்ற*

**அயீற்றுப்பரவி** (*தனிப்ரணு*) *அகரத்தின் ஈற்றுப் பொருளான அவ- ரக்ஷணே என்ற ரக்ஷணத்திலே பரவி யிருப்பவன். அகார வாச்யனுன ரக்ஷகன்.* [*ரகராதி காண்க.*

**அயோத்திக் கரசன்** 314/4. [*அயோத்தித் தொடர் பல. தொட*

**அர்ச்சிக்கின்று** 3907/2. *அமரர் கோன் ...*. மலையாள பாஷை; அர்ச்சிக்கிறுன்; அர்ச்சிக்கையில் – என்று அர்த்தம்.* [*கிரமாட்டா.*

**அரக்க நில்லா** 527/2. ... *க் கண்ணநீர்கள்.* அடக்கிஞலும்*

**அரக்கர் குடி** 1861/2. *கஞ்சுதான் ... க்கு *. ராக்ஷஸ குலம்.* [*அரக்கர் தொடர் பல. தொடரகராதியில் காண்க.*]

**அரக்க ராடழைப்பாரில்லை** 1858/4. ஆடு - வெற்றி. அரக்கரில் வெற்றி சொல்லக் கடவர் யாருமில்லை.

**அரக்காம்பல்** 1633/1. முழு நீலமும் ... அலராம்பலும் *. என்பதில் அலராம்பலின் பொருள். அரக்காம்பல் - சிவந்த ஆம்பல் 1180/3. அரக்குச் சிவப்பு, அரக்குப் பட்டு — என்பது போல.

**அரக்கியர்** 1937/1. ... ஆகம் புல்லென *. ராக்ஷஸிகள்.

**அரக்கிலச்சினை** செய்து 827/1. ... புன்புல வழியடைத்து *. அரக்கு முத்திரை யிட்டு அடைத்து.

**அரக்கும்** 1111/3. நுணை முலை ...*. அடக்கும்.

**அரக்கும் மெழுகு மொக்கும்** 3044/2. அரக்கும் மெழுகும் போல இருப்பாள். சிக்கென்ற அரக்கும் மெத்தென்ற மெழுகும் ஒக்க உருகும். சிக்கென்ற - கெட்டியான.

**அரக்கு வழித்த** தோர் கோல் 173/4. ... கொண்டு வா *. நிற முடைத்தாம்படி அரக்கு வழித்த கோல். அரக்கு வழிக்கையாவது-சாக்கு (ஜாதி)லிங்கத்தோடு அரக்கு இடிப்பித்து என்றபடி. வர்ணம் பூசின கோல். பழுக்காய்த் தடி என்பது போல.

**அரங்க** 406/2. உரு ... ப்பொருது *. கழிய, சின்னு பின்ன மாம் படி. **அரங்க** 783/2. அரக்கர் அங்கு ... *. அஞ்சும்படியாக. அரக்கல் - கரத்தல். அரக்க என்பது அரங்க என்று மெல்லொத்தாய் கிடக்கிறது. **அரங்க** 844/4. இரும்பு ...*. வெஞ்சரம் அழுந்தும்படி.

**அரங்கத்தணையான்** 52/4. [அரங்கம் தொடர் பல. தொடரகராதி காண்க.] [படி ஒட்டித் தெறித்து.

**அரங்க வோட்டி** 800/2. உண்டை கொண்டு ...*. உள்ளே புகும்

**அரங்கு** 844/1. கரும்பு ... தண்டுமாய் *. படிக்த.

**அரங்கு** 2411/1. அரங்கத்து ... இல் *. நாடக சாலை.

**அரங்கும் அறையும்** (?) "தென்னருகே ... வட வருகே ... மா யிருக்கு மாயிற்று." அரங்கு பெரிய கூடம். அறை - சிறிய உள்ளு. [வன்.

**அரசமர்ந்தான்** 747/4....அடிகுடு மரசு *. ராஜ்ய பாரம் பண்ணுகிற

**அரசர்தம் குரிசில்** 1426/1. ... தொண்டை மன்னவன் *. ராஜாக் களுக்கு ராஜா. ராஜாதி ராஜன். **அரசவை** (?) ராஜ ஸபை.

**அரசளித்த பெற்றி** 784/2. ... போய் *. தம்பியான பரதனுக்கு ராஜ்யம் கொடுத்த ஔதார்யம். **அரசன்** 1322/2. குரக்கு...னென்றும் *.

**அரசாணி** 299/3. ... யை வழிப்பட்டு *. அரைக்கிற சாணை - கல். அம்மி. அரைசாணை என்பதில் ஐகாரம் அகரமாயும் இகரமாயும் மாறி அரசாணி ஆயிற்று. ஜாத்யுசிதமாம்படி (ஜாதி வழக்கத்தின்படி) அலங் கார பீடத்துக்கு மேலே நாட்டின அசுவத்த தண்டம். அரசு ஆணி - அர சங்கால். [வுறி, கோபியா கின்ருய்.

**அரசிப்படுதி** 211/1. ... நங்காய் *. கோபம் தோன்றி விழுகையா

**அரசிலை** 83/2. மின்னல் துலங்கும் ...*. பொற்பின்னலில் (பொன்னரை நாணில்) கோவைப்பட்ட வெள்ளி அரசிலைப் பணி. அரச இலை போன்ற தொங்கட்டான். பெண் குழந்தைகளுக்கு அல்குலை மறைக்கக் கட்டும் அரசிலை யல்ல இது. இடுப்பில் கிண்கிணிகளோடு கூட அரச இலை போல ஒரு தொங்கல் உண்டு. அதைச் சொல்லுகிறது இந்த அரசிலை. [அரசாக எண்ணேன் மற்றரசு தானே *.

**அரசு** - ராஜ்யம் 747/4. அரசமர்ந்தா னடி சூடும் அரசையல்லால்

**அரசு களை கட்ட** : 318/3. அருந்தவத்தோன் ...*. அரசாகிற களை களை விரோதிகளை, கட்ட - நிரஸித்த பரசு ராமன்.

**அரசு செய்வார்** (2035/1. வன் குறும்பர்) என்பதன் பொருள், கைக் காயிரத்துக்குச் சேவிப்பார். (அரு.)

**அரசு நான் கண்டு** கொண்டேன் (?) அரசடியிலே காட்டிக் கொடுத்த காட்சி. அரசு - திருவரசு. (அரு.)

**அரசு போர்** 3594/1. "தோற்றத்திலே அரசு போராயிற்று"- ஆரம்பத்திலேயே ராஜ யுத்தமாயிற்று.

**அரட்டமுக்கி** 1187/2. அருள் மாரி ...*. சத்துருக்களைத் தலையெடாமல் அமுக்கினவர், திருமங்கை யாழ்வார். [கன்.

**அரட்டன்** 121/4. ... வந்தப் பூச்சி காட்டுகின்றான் *. தீம்பன், மிடுக்

**அரட்டு** 1187/2. ... அமுக்கி *. சத்துரு, தீம்பு, மிடுக்கு. "புலி அரட்டோடே நடந்தது, வ்ருஷபம் செருக்கோடே நடந்தது" (?) [அரட்டு - பயம்.] அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பயம் என்று வழக்கு, அரட்டையடிப்பது என்ற வழக்கச்சொல் அரட்டு - விரோதம் என்றதிலிருந்து வந்ததாகலாம்.]

**அரண்** தந்தருளாய் 1432/2. ... ஒ யன்ன பொன்னுகத்தானே *. புகல் தந்தருள வேணும். [மாம்படி சமைத்த மதிள்.

**அரண் அமைந்த மதிள்** 3864/3. ...சூழ் திருக்கண்ணபுரம்*. ரக்ஷக

**அரணமாவ** ரற்றகாலைக்கு 3784/1. அற்றகாலைக்கு - கைம் முதலற்ற காலத்தில், புகலிடமாவர்.

**அரணாய மூர்த்தி** 1984/4. ... அது நம்மை யாளுமரசே *. ரக்ஷித்த

**அரணியம்** 1860/1. தண்டகா ... புகுந்தன்று *. [திருமேனி.

**அரணியவான கவி** 3211/3. "மிகவும் நல்லவாய் ... கலைக் கொண்டு". -சொற் செறி வுடைத்தான கவிகள், கனத்த கவிகள்.

**அரத்தவடியிணை** 1654/2. அவ் ... யும் *. சிவந்த திருவடிகள்.

**அரத்தவுடையாடை** 1654/1. செவ் ...*. சிவந்த உடை யாடை.

**அரந்தை** 1343/1. ... யுறக் கடலரக்கர் *. துன்பம்.

அரந்தை 2672/12. ஒரு தனி வேழத்து *. துக்கம்.

**அரம்பன்** 228/4. ... பா வுன்னை யறிந்து கொண்டேன் *. தீம்பு, நச்சினதொன்று தலைக்கட்டவற்றுறிருக்கை,

**அரம்பை** 278/3 ... யுருப்பசியர் *. ரம்பை.

**அரம்பையர்** 652/1 ... ரும் மற்றும் *. ரம்பை முதலான அப்ஸரஸ்ஸுக்கள். **அரம்பையர்கள்** 678/1 ... தற்சூழ *. அப்ஸரஸ்ஸுக்கள்.

**அரயன்** - அரசன். "... வந்தானைப் அவ்வளவிலே அவர் கையில் இரத்தத்தை ஆழ்வான் தான் வாங்கிப் படித்துக் கொண்டிருந்தான்." 1589/2. அரையன் என்று வேறிடங்களில் காண்க.

**அரவணையான்** 128/1 ... யா யாயரேறே *. அரவத்தை, அணை - படுக்கையாகவுடையவன். **அரவணை** - ஸ்ரீரங்கத்தில் ராத்ரி கடைசியாக அமுது செய்விக்கும் சர்க்கரைப் பொங்கல். ஆதிசேஷனுக்கு அமுது செய்விக்கும் காரணமாய் அரவணைப் பிரஸாதம் அரவணை என்றாயிற்று.

**அரவத்தமளி** 452/1 ... யினோடும் *. பாம்பாகிற படுக்கை. அமளி- படுக்கை.

**அரவத்திரை யுலவு குரை கடல்** 1204/1. ஆரவாரத்தையுடைய திரைகளானவை, உலவு - ஸஞ்சரிப்பதாய், குரை-கோஷியாநின்றுள்ள கடல்.

**அரவதண்டம்** 373/4, 379/4. ... த்திலுய்யலுமாமே *. யமபடரால் வரும் இலேசம். அரவன் - யமன், ரவி - சூரியன், அவனுடைய மகன். ரவியன் மகன் அரவன். தண்டம் - சேனை, அல்லது இலேசம். யம பாதை, யமனுடைய தண்டம் தண்டனை. அபரதண்டம் என்ற வழக்குச் சொல் அரவதண்டத்தை மாறுடியதாகும். அரவம் ஓசையாய் அழுகைக் குரலாய் அது உண்டாம்படியான யம பாதை.

**அரவப்பகை யூர்தி** 274/1 ... யவனுடைய *. அரவம் - பாம்பு, அரவப்பகை - கருடன், அவனை வாஹநமாகவுடைய விஷ்ணு. ஊர்தி - வாஹநம்.

**அரவரசப் பெருஞ்சோதி** 647/2. **அரவரசு** 2580/6. களிர்கடற் பட ... *. திருவனந்தாழ்வான்.

**அரவாட்டி** 2414/1. அடிச்சகடம் சாடி...*. அரவமாகிற காளியனை ஆட்டி - நூர்த்தி. **அரவாரத்தார்** 2472/2. ஆடு ... *. அரவத்தை ஆரமாக வுடைய சிவன்.

**அரவிந்தத் தமளி** 1154/3. அன்ன மாமலர் ... *. அரவிந்தம் - தாமரை. அமளி - படுக்கை.

**அரவிந்தப் பாவை** 452/2. ... யும் தானும் *. தாமரைப் பூவைப் பிறப்பகமாகவுடைய பெரிய பிராட்டி.

[அரவிந்தத் தொடர்கள் தொடரகராதியில் காணலாம்.]

**அரவு** 2134/4. புல்கு மணியாம் திருமார்பு...*. பாம்பு. திருவனந் தாழ்வான். **அரவேரகலல்குல்** 1185/1. பட்டு ... *. அரவம் போல - அதன் தலைபோல, ஏர் அழகாய், அகல்-அகலமாயுள்ள, அல்குல்-பெண் மையிடம். **அரவேரல்குல்** 1248/2. பட ... *.

[அரவத் தொடர்கள் தொடரகராதியில் காண்க.]

1/அவ. அறிவின்மை. அறிவு கடையாத திர்யக்கு 3031/ப்ர. அறிவில்லாத மிருகம் பக்ஷி முதலிய விலங்கினம்.

அறிவு கைக் கொண்ட கன்னெஞ்சம் 2604/1. அறிவுக்கு வாய்த்தலையான நெஞ்சு. அறிவுற்று 496/2. ... த் திவிழித்து.* உணர்ந்து.

அறிவுறாய் 490/4. அசோதாய் ... *. 494/3. ஆற்றப் படைத்தான் மகனே ... *. எழுந்திராய்.

அறிவெளிய வெம்பெருமான் 2924/2. குரங்கு இடைச்சி வேடச்சி முதலானார்க்கும் அறிய எளிதாயிருப்பவன்.

அறிவென்னுந்தாள் 2293/1. ... கொளுவி *. ஞானமாகிற பூட்டு.

அறிவையென்னு மமுதவாறு 464/4. ... தலைப்பற்றி *. ஞானாம்ருதமாகிற நதி. அறிவொன்று மில்லாத ஆய்க்குலம் 501/2.

அறுக்க கிற்றிரே 820/4. பிறப்பென்னும் பிணக்கு...*. அறுத்துக் கொள்ளவல்லி கோனே! அறுக்கலறு - அரு பார். அறுகால வரிவண்டுகள் 345/3. அறுகால சிறு வண்டு 1199/2. அற - ஆறு. [சாதம்.

அறுகாதப் பயணத்துக்குப் பொதி சோறு. பொதி சோறு - கட்டுச்

அறுகாழி - சிறு மோதிரம். அல்லது மோதிரத்தோடு அணியும் சிறு வளையம். "ராஜ புத்ரன் கையில் அறுகாழிக்குத் தோற்றிருப்பார்." 546/1. அறுகாழி போலே ஆபரண கோடியிலுமிரா கின்றது 1648/1. "கையும் அறுகாழியுமாயிருக்கிற இருப்பு" 1649/2. முத்திரை மோதிரம்.

அறுசுவை யடிசில் 3158/3. ... என்கோ *. அறுசுவையுண்டி. கைப்பு, புளிப்பு, கார்ப்பு, தித்திப்பு, துவர்ப்பு, உவர்ப்பு—இப்படி ஆறு படிப்பட்ட ரஸத்தையுடைய போஜநம். அடிசில் சோறு மாத்ரமானாலும் அறுசுவை என்றதன் சேர்க்கையால் உணவு முழுதையும் குறிக்கிறது.

அறுதல் பிணைக்கிற உன்னைத் தொழுதேன் 2077/1. அறுந்ததைச் சேர்த்தல். பொத்தல் அடைத்தல் என்பது போல. அறுதல் 825/4. பற்றறுதல் *. போதல். [இறுதியாக

அறுதியாக 431/2. "அன்று முதல் இன்று ..." அளவாக,

அறுதியாகக் கேட்டுப் போருங்கோள் 3849/1. இறுதியாக ... ... முடிவாக. அறுதிப் பாடுடைத்தான வார்த்தை 1200/4.

அறுதொழிலந்தணர் 2672/5. படித்தல் படிப்பித்தல், பூஜை ஹோமம் செய்தல் செய்வித்தல், தாகம் வாங்குதல் கொடுத்தல்—இந்த ஆறுக்கும் கடவரான பிராம்மணர்கள்.

அறுபத முரலும் கூந்தல் 2622/3. அறுபதம் ஆறுகால் வண்டு. அது ரீங்காரம் செய்கிற கூந்தல். [ஹுன ஸுப்ரம்மண்யன்.

அறுமுகன் 922/2. மருவிய மயிலின் ... இவனோ *. ஆறுமுகத்த

அறுவகைச் சமயம் 2925/1. ஆறு விதமான, சமயம் - மதம். சாக்ய லௌக்ய, அக்ஷபாத, க்ஷபணக, கபில, பதஞ்சல — மதங்கள்.

அறுவர்–ஆறு பேர். மக்கள்...ரைக் கல்லிடை மோத*. 459/3.

**அறுவர்** 2931/4. தம் பிறவியஞ் சிறை*. விடுவிக்கப்படுவர்.

**அறுவறுக்கும்** 2689/1. "தேவதாந்தர மென்றால் ...குடி" அறவெறுக்கும் – அதிகமாய் வெறுக்கும் என்று பொருள். அருவருப்பு என்ற இடையினம் பிழை.

**அறுவித்தின்றிட** 1608/4. இடையினம் பார். வல்லினம் பிழை.

**அறை** 1347/3. வண்டு...சோலை*. த்வநிக்கிற. "தென்னருகே அரங்கும் வடவருகே அறையும்" 2886/1 பெரி. அறை – உள்ளு

**அறை கழல்** 2579/2 ... சுடர்ப்பூந்தாமரை*. த்வநிக்கின்ற கழல்-காலணி. **அறைகழல** சேவடியான் 2280/3 அறைகின்ற கழலை அணிந்த திருவடியுடையவன்.

**அறைகூய்** 2504/2. பண்டெல்லாம்...*. எதிரே விரோதித்து. **அறைகூவ** 3950/2 ஜயத்வநி பண்ண. அறை கூவுகிறது 872/2... 2940/அவ. யுத்தத்துக்கு அழைக்கிறது. [மேள வகை.

**அறைபறை** 489/5. ... மாயன்*. அறையும் பறை. அடிக்கும் பறை,

**அறைபுனல்** 2110/2. ...லும் செந்தியும்*. அலையெறிகிற ஜலம்.

**அறையத் தொடங்கும்** 1000/3. "ஸர்வாவயவங்களும் ஒடுங்கி சரீரந்தான்..."

**அறையா** 305/4. பண்...ப்பணி கொண்டு*. கெட, அறம்பாடி.

**அறையிடுங்காலம்** 2496/2. மாரிகையேறி...த்தும்*. அறை கூவும்

**அறையும் புனல்** 1630/2. ... ஒருபால்*. [காலம்.

**அறையோ இனிப்போனாலே** 3341/4. இனிப் போனாயாகில் அறையோ அறை.

**அறையோ அறையோ** 2487/4. பெரி. நாவலோ நாவல் என்றபடி; ஜயகோஷம். 3341/4 ஜயித்தவன் வார்த்தை. **அறையோ** எனநின்று 2539/2. **அறையோ** வந்து வாங்குமினே 268/1.

**அன்பளவி** 1078/1. மலர்மங்கையொடு...*. பாங்காக முனைவரொடு...*. 1081/3. விரும்பிக் கலந்து.

**அன்பன்** 947/2 ... தன்னை யடைந்தவர்கட் கெல்லாம்...*.

**அன்பில்** 2417/2. பேர் ... நாகத்தணை உத்தமனே*. அன்பில என்ற திவ்ய தேசம். **அன்பிலடியேன்** 3551/4. ஆரு...*. அன்புள்ளவான்.

**அன்பி லின்பீன்தேறல்** 1579/4. அன்பிலே ஓர் இனிமை. **அன்பினர்** 2471/3. வருமதி பார்த்து...*.

**அன்பு சூட்டிய சூழ் குழல்** 2479/4. அன்பாகிற மாலையைச் சூட்டின கருண்ட குழலையுடையவள்.

**அன்புடை மகளிர்** 710/1 ... மூந்தை நன்முறை*. **அன்பு புக்கிட்டு** 2036/2. அடிமை பூண்டு...*.

**அன்பே தகளி** 2182/1. ...யா ஆர்வமே செய்யாக*. அகல்.

**அன்றலர்** 1245/4. ... வாய் மது வுண்டு*. செவ்விப் பூ.

**அன்றன்று** (?) பிரதிதினம், தினந்தோறும்.

**அன்றுடம்** (?) அன்றுடு 3314/4. அன்றன்று, அன்றைக்கன்று.

**அன்றிக்கொண்டெய்தான்** 2410/4. ஒரு கணையால் ... *. சீறிக் கொண்டு எய்தான்.

**அன்றிப்பின் மற்றொருவர்க்கு** 258/2 தவிர வேறொருவருக்கு. அன்றி மற்றோருபாய மென் 3768/1.

**அன்றிய வாணன்** 1275/1 ... ஆயிரந்தோளும்*. தன் பேர னோடு பகைத்துக் கொண்ட பாணாஸுரன்.

**அன்றில் பேடைகள்** 3826/1. அன்றிலின் பெண் இனங்கள். **அன்றி லரிகுரல்** 1778/1 காவார் மடற் பெண்ணை ... லும் *. அன்றி லினுடைய தழ தழத்த குரல். அரி - இருள். அத்தாலே அவ்யக்தம், அஸ்பஷ்டம்.

**அன்றுதொட்டும்** 3499/3. ...மையாந்து*. அன்றுமுதல். அன்று முதலின் றுறுதியா 3236/2. அன்றுமுதல் இன்றுவரை. அன்றைக்கன்று 3649/2. ... என்னைத் தன்னுக்கி *. நாள்தோறும்.

**அன்ன** 1523/3 அம்பன்ன கண்ணாள் *. போல. **அன்ன கண்டும்** 2570/3. வையகம் பரவுவர் ... *. அப்படிக் கண்டும்.

**அன்னங்கள்** 2506/4. குடிச்சீர்மையில் ... *. **அன்ன செய்யும்** 2531/3. ... எம்மீசர் *. அப்படிப்பட்ட காரியம் செய்யும்.

**அன்ன பேசியும்** 2531/2. ... போவது *. அப்படிப் பேசியும்.

**அன்னஞ் செல்வீர்** 2507/1. ...ரும் வண்டானஞ் செல்வீரும். அன்னமாய்ச் செல்வீர். **அன்னதாகும்** 1423/4. எனக்கும் ...என்று *. அப்படியாகும். **அன்ன திருவுருவம்** 2829/1 ... நின்ற தறியாதே *. அப்படிப்பட்ட திருவுருவம். **அன்ன திறத்ததே** 2786/2. அப்படிப் பட்டதே. **அன்னதோர் தோற்றன்மை** 1940/2. அப்படிப்பட்ட தெளிவு. **அன்னதோர் பூதம்** 2889/1. ... மா யாயர் *. அப்படிப்பட்ட பயங்கரமான பூதம்.

**அன்ன நடை மடவாள்** 74/3. **அன்ன நடைய** வணங்கு 2756/2. அன்ன மன்ன நடையாள் 1216/3. அன்னம் போன்ற நடையுடை யவள். **அன்னலும் துன்னலுமான பூமி** 2672/6 கண்டதும் கடியது மான பூமி 3470/4. அன்னல் - வெய்யில், துன்னல் - சிறு திவலை, மழைத் தூறல். 3718/1 ... மாய்த்திரண்ட மேகம். அன்னல் புகை. துன்னல் – சிறு திவலை.

**அன்னவசஞ் செய்யும்** 3196/1 ஆலிலை ... *. தன் வசமாக அன்றிக்கே அக்கத்துக்கு வசமாக புக்தம் ஜரியாமல் (உண்ட தருமல்) அறுக்கிடாகச் செய்யும். அதாவது இடம் வலம் கொண்டு மாறி மாறிப் படுக்கும்.

**அன்னவர்** 1422/2. தோகை மாமயில் ... *. அப்படிப்பட்டவர். **அன்ன வறம்** 2786/1 ... த்தின் பயனுவது. அப்படிப்பட்ட தர்மம். அன்னனைய 682/4 ... பொற்குவடாம். அப்படிப்பட்ட.

**அன்னாய்** 1881/2 மதக்களிறு ... *. 2545/3. தனது வைகுந்தம் ... *. போன்றவனே! **அன்னார்** 1874/4. கூற்றம் ... *. போன்ற.

**அன்னாள்** 2532/3. வைகுந்தம் ... *. போன்றவள். **அன்னான்** 562/3 காய் சின மாகளிறு ... *. போன்றவள். **அன்னீரகண்** 2491/4. தெய்வம் ... *. அப்படி விலக்ஷணமான கண். அந்நீர கண் என்று தன்னகரமாயு மிருக்கத் தகும். **அன்னே** 223/4 ... உன்னை யறிந்து கொண்டேன் *. அம்மே போல அன்னைக்கு விளி. **அன்னைமீர்காள்** 3385/1. எங்ஙனேயோ ... *. **அன்னையர்காள்** 3584/1. ... அயற்சேரி யீர்காள்*. **அன** 1212/3 வேயனதோள். 3511/1 **கற்பகக்** காவன நற் பலதோள்*. போல.

**அனங்க தேவன்** 504/2. அழகினுக்கலங்கரித்து ... *. **அனங்க வேள்** 2437/1 ... தாதைக்கு*. அனங்கனுகிற வேள் - அழகன். **அனங்கன்ன** 1865/4. திண்டோளிராமற்கு *. மன்மதன் போன்ற. அனங்கன் அனங்கு - மன்மதன்.

**அனந்தசயன்** 87/3 ஆமைத்தாலி பூண்ட ...*. அனந்தன் மேல் சயனித்திருப்பவன். **அனந்தபுரத்தண்ணலார்** 3906/3. **அனந்தபுர நக ராதி** 3912/1. **அனந்தபுரநகரெந்தை** 3911/2. **அனந்தபுரம்** 3902/4.

**அனந்தல்** 482/5. ஊமையோ ... லோ*. 483/7 ஆற்ற ... லுடை யாய்*. சோம்பல், சோம்பலோடு கூடின உறக்கம்.

**அனந்த லன்றில்** 1696/4 ... வின் குரல்*. அனந்தலையுடைய அன்றில். **அனந்தலுடையாய்/ள்/ன்** 438/1. ஆற்ற ... *. சோம்பேறி.

**அனந்தன்** 647/2 அரவரசப் பெருஞ்சோதி ... *. எல்லாவற்றை யும் வியாபித்து நிற்கிற ஸர்வேசுவரனை விளாக்குலை கொள்கிற (வியாபிக்கிற) ஸ்வரூப ரூபகுணங்களையுடைய ஞுகையாலே அனந்தன். அந்த மில்லாதவன். **அனந்தனணை** 2296/3 ... க் கிடக்கு மம்மான். திருவநந்தாழ்வானுகிற படுக்கை.

**அனம்** 1708/3. கயமுடை நடை ... *. அன்னப் பறவை. **அன மேவு** நடை மடவார் 1622/4 ... பயிலும் செல்வத்து*. அன்னநடை நடக்கும் பெண்கள்.

**அனல் செங்கண்** 1920/3. அங்கு ... ணுடை*. நெருப்புப் போலே சிவந்த கண். **அனல்விழி** 1075/3 ... பேழ்வாய்*. அக்னி போலே யிருந்த கண். **அனல** 3579/2. ஆவி ... வெவ்வுயிர்க்கும்*. நெருப் பாம்படி. **அனலாழியர்** 933/1 கையினார் சுரிசங்கனல் ... *. நெருப்பை உமிழா நின்ற திருவாழியை யுடைய பெருமான்.

**அனலும் தறுகண்வேழம்** 1540/1. பூணுது ... *. நெருப்பை உமிழும்படியாய் ஜாதி ப்ரயுக்தமாக வட்டணித்த கண்ணையுடைய யானை. அனலுகை – ஜ்வலிக்கை. [சோதி.

அனலுருவில் திகழுஞ்சோதி 2052/3. அக்னி போலத் திகழும்

**அனலோன்** 3601/2. எரியும் ... *. அக்கிதேவன். **அனற்கங்கை** யேற்றன். 2178/3. அனற்கு – அக்கிக்கு, அங்கை – அழகான கையை, ஏற்றன் – ஏந்தின சிவன். **அனன்று** 2036/1, 2044/1. இரும்பு ... *. காய்ந்து.

**அஞ** 465/1. எம் ... என் குலதெய்வமே *. தாயாரைச் சொன்னபடி. அன்னை அன்னுப் அனுப் என்பது அஞவாகக் குறைந்தது. அன்னையே என்று பொருள்.

**அனர்** 490/3. கொம்பனுர்க்கெல்லாம் *. அன்னுர் (போன்றவர்) என்பதன் இடைக் குறைவு. 892/4 மணியனுர் கிடந்தவாற்றை *

**அஞழிகை** (வா.மா. 366) "முதுகிலேயான ... பைக்கூட்டி" அம்புருத் தூணி.

**அனிச்சம்** பூப்போலே யிருக்கிவர்கள் 3466/3 (24). மோப்பக் குழையும் பூ. நுகர்ந்தால் வாடும் பூ. தொட்டாச் சுருங்கித் தழைபோல இது மோந்தால் வாடும்.

**அனுக்கம்** 6/4. "கம்மலுல் வந்த ... தீர" குழந்தைகளுக்கு வரும் வியாதி, பயம். **அனுக்குப்** புகுராதபடி 3462/ப்ர. பயம் புகுராமல்.

**அனுகூலர்** 361/1. குருக்களுக்கு ... ராய் *. **அனுங்க** - பயப்படும் படி, "பிள்ளைகள் ... ஸஞ்சரிக்கும் புள்" 787/2. **அனுங்க** என்னைப் பிரிவுசெய்து*. 638/1 நடுங்க. - விநாசமாதல் நோவுபடாதல். **அனுங்க வொண்ணுது** 3442/1 "பிள்ளைகள் அனுங்கா மைக்காக 1352/1. அவன் வேற்றுருக் கண்டஞ்சி பிள்ளை நோய் வராமைக்காக. **அனுங்கி** 916/3. அதன் விடத்தினுக்கு ... *. நோவுபட்டு, அனுக்கம் – நோவு. **அனுமன்** 270/3. ... புகழ்பாடி *. ஹநுமாக். **அனுமான்** 326/3 ... என்று உச்சிமேல் *.

**அனுராகம்** 3755/3. பித்தேறி ... பொழியும் போது*. காதல்.

**அனேக தண்டம்** 424/2. என்னை ... செய்வதா கிற்பர்*. பலவிதமான தண்டம்.

**அனை** - அன்னை. இடைக்குறைவு 66/2. ஒருகால் நம் ... யானவனே*. எம்மாற்கும் எம் ... க்கும் 1405/3.

**அனைத்தில்லத்தாரும்** 485/8 ... மறிக்தேலோர்*. எல்லா வீட்டாரும். **அனைத்துப்பேர்** 2259/4. ... மொழிந்து*. **அனைத்துலகுக்கும்** பிரான் 3173/1 **அனைத்துலகுமுடையான்** 1348/1 ... அறிவதரியான் *. **அனைத்தோர்** 2578/2 **சிவனயனிந்திரன்** ... *. எல்லாரும்.

**அனையவர்கள்** – ஒப்பாம்படி யிருப்பவர்கள். 1247/2 அரன் செயும் ... *. **அனையவன்** 1301/2. அங்கு ... ற்கினேயவர் *. அப்படிப் பட்டவன். **அனைவர்** 146/2 ... க்குங் காட்டிற்றிலேயே *. எல்லாரும்.

# ஆ

**ஆக்க கிற்பீர்** 1162/2. தமக்கு ... *. ஆக்கிக்கொள்ள வேண்டி யிருப்பீர்.

**ஆக்கஞ் செய்து** 3793/1. குடிக் கிடந்து ... *. நன்மைகளை உண்டாக்கி. [தரும்.

**ஆக்கம் தரும்** 2961/4. அழிவின்றி ... *. ஸம்பத்து, மோக்ஷம்

**ஆக்கம்** 3757/3. அசைவும் ... மும் *. விருத்தி.

**ஆக்கம்** 3782/2. அணைய வந்த ... மூண்டேல் *. ப்ரயோஜநம். ஆக்கவல்ல 8/3 வெள்ளு யிராக்கவல்ல *.

**ஆக்கணுயிருப்பானொரு சாந்து** 8/3. ஆக்கப்பட்டதாய் ஆரோபித மான (மணமேற்றின) சாந்து (சந்தனம்). **ஆக்கரான** தேவர்கள் 3606/3. ஸ்ருஷ்டிக்கப்பட்ட தேவர்கள். **ஆக்கனுள** வொப்பனே (?) ஆக்கப்பட்ட அலங்காரம். இயற்கை அலங்காரமல்லாமல் செயற்கையா யிருப்பது.

**ஆக்கி வைத்தேன்** 252/2. கலத் தரிசியும் ... *. சமைத்து வைத் தேன். "சோறாக்கி வைத்தேன்"—என்பது.

**ஆக்கும்** – வார்த்தைப் பாடு. "விஷய ஸ்ப்ருஹைபோல் ... இப்படி யாய்த்து "வா. மா. 209. **ஆக்கும்** – அமுது செய்யப் பண்ணி யாக்கும் அடியேன் பிரஸாதப் படுவது வா. மா. 190.

**ஆக்கை** 2572/1. யாதானு மோர் ... *. சரீரம். **ஆக்கை நோய்** 848/3. ஐயிலாய ... *. சரீரமாகிற நோய். **ஆக்கை புகல்** 3340/2. முறை முறை ... *. சரீர ப்ரவேசம். **ஆக்கையின் வழி** யுழல்வேன் 3132/2. சரீரத்தின் வழியே ஒழுகி துக்கப்படுகிற நான். **ஆக்கையும் ஆவியும்** 3828/4 ... அந்தரம் நின்று *. உடலும் உயிரும். **ஆக்கை விடும் பொழு தெண்ணே** 2918/3. சரீரம் போந்தனையும் பார்த்திரு.

**ஆகங்கள்** 2509/3. நூந்தம் ... கோவ *. உடம்புகள். **ஆகஞ்சேர்** நரசிங்கம் 3809/1 ... அதாகி. நரமும் சிங்கமும் ஒரே ஆகத்தில் சேர்ந் தது. **ஆகத்தணைப்பார்** 2113/3 ... அணைவரே*. ஹ்ருதயத்தில் அவனை வைத்து அநுஸந்திக்கு மவர்கள். **ஆகத்தணைப்பார்க்** கருள் செய்யும் 3821/2. **ஆகத்தாள்** 2109/2 மலர் மகள் நின் ... *. உடம்பிலே யிருப்பவள். **ஆகத்து** வைத்துரைப்பான் 586/4 மனதில் வைத்துச் சொல்லுவான்.

**ஆக** முதலியாக விட்ட திருந்துமாய் 2331/1. இது வார்த்தைப் பாடு. அநுபந்தம் பார். "ஆக, மநோ வாக்காயங்கள் மூன்றும் ஒன்றுபட்டிருக்குமோ என்னில்" 3659/4. ஆக என்றது ஆனால் என்றபடி.

**ஆகமூர்த்தி** 768/4 .... யாய வண்ணம் *. ஆசிரிதர் உகந்த திரவியமாகிற அர்ச்சாவதாரம்.

**ஆகலாகும்** 831/4. அமரர் ... மே*. ஆகலாம் என்பது இதனுடைய குறைவு.

**ஆகலுமாம்** 1887/4. விண்ணவர் ... *. ஆகலாம். **ஆகவே** 1027/3 தஞ்சமது ... *. **ஆகவேண்டும்** 1422/4 பொன்னரு ளெனக்கும் ... *.

**ஆகள்** – பசுக்கள். 3463/4. ... போக விட்டு*.

**ஆகாக்கால்** 2600/2. பேர் வாமன் ...*. ஆகாவிடில்.

**ஆகாச மென்னும் விதானம்** 2752/1. ஆகாசமாகிற மேல் விரிகாத்தவன்.

**ஆகாச வாயர்** (?) – ஆகாசத்தைப் பார்த்து வாய் திறந்து ஆலோசிப்பவர்.

**ஆகாத்த கோவலனுர்** 2658/3. குன்று குடையாக ... *. பசுக்களைக்

**ஆகாதார்** – தகாதவர். "திருநாமம் சொல்லுகைக்கு ... இல்லை" 872/3. "அவனுக்கு ... நில்லை." 1798/1.

**ஆகாது** 621/1. என்னுயிதறிதல் ...*.

**ஆகாதே** 1778/4. ஓர் பான்மையே ...*. அன்றோ, ஆய்விட்டதே. "நான் பட்டது பட்டாயாகாதே நீயும்" 3011/3. பட்டா யன்றோ. "இவனை ... காம் குணஹீநன் என்றது" 3370/அவ. அன்றோ.

**ஆகாதோ** 2936/2. கல்கத்தான் ... *.

**ஆகாயம்** 2294/3 ... மூடறுத்து*. ஆகாசம், வடமொழி, ஆகாயம் அதன் திரிபு. ஆகாச மென்று கூட பாட்டுக்குப் பொருந்தும்.

**ஆகாரம்** 1285/1. இரு ... குலுங்க*. ஸந்நிவேசம், ஆகிருதி,

**ஆகாரன்** 113/4. பத்திராகாரன் என்னை *. வடிவை யுடையவன்.

**ஆகான்** 3062/2. காணலும் ... *. **ஆகி** 254/4. நுழைவனர் நிற்பனர் ... *. ஆகட்டும்.

**ஆகிடு காண்** 2593/3. எமக்கினி யாதானும் ... *. உண்டாகட்டும்,

**ஆகிற்கில்** 3754/2. யாதுமிலிகள் ... *. ஆகப் பெறில், ஆனால்.

**ஆகின்று** 3873/1. ஆபுகு மாலையும் ... ருலோ*. ஆகா நின்றது.

**ஆகுங் கொலோ** 3660/1. கைதொழும் நாள்களும் ... *. கூடுமோ, கூடவற்றோ, முடியுமோ, உண்டாமோ.

**ஆகுதி** 1624/4. அந்தணர்தம் ... *. ஹோமம்.

**ஆகும்படியாக** 3308/3. ... நிருமித்து*.

**ஆகும் பரிசு** 3661/2. ... நிமிர்ந்த திருக்குறளப்பன்*. ஆகும் விதம்.

**ஆகுலங்கள்** 3463/2. ... செய்ய அமிதற்கே நோற்றேமே *. துக்கம், வருத்தம், அலமாப்பு.

**ஆகுலஞ் செய்யும்** 551/2, *ஆவியை ... அங்குயில்**. வருத்தா நின்றது, வருத்திற்று. [ யிருக்கும் யிலே.

**ஆகுலம்** 821/4. *அந்த வந்த ... அமரரே யறிவரே* *. பரவசமா

**ஆகுவர்** 1527/4. *வானவர்க்குப் புத்தேளிர் ...* *. ஆகுவார் 3565/3. *ஆர் மருந்தினி ...* *. ஆவார். [ஆகையால்.

**ஆகையிறே** ஏக விஷயமே நித்ய ப்ராப்தமாகிறது 3020/ப்ர.

**ஆங் கடமையது** 3148/3 ... *சமந்தார்கட்கே**. அது கடமை யாகும்.

**ஆங்கது/தே** 3828/3. *வாக்கும் மனமும் கருமமும் நமக்கு ...* *. அது ஆங்கே யாயிற்று. அது அவன் பக்கலிலே யாயிற்று. [அந்த அவை.

**ஆங்கவை** 2564/3. ... *நின்வலம் புள்ளது**. அங்குள்ள அவை.

**ஆங்காரம்** 3966/4. *பிரகிருதி மானாங் ...* *. அஹங்காரம். 3967/1 *மானாங்கார மனம்**. 3967/4. *மானாங்காரத்திவை பத்து**.

**ஆங்கென வுரைத்தமால்** 2264/2. *மறை ...* *. வேதம், – "அது" என்று சொன்ன மால். அது—என்று போகிறதொழிய இதமித்தம் என்று சொல்லப் போகாத மால் – ஸர்வேசுவரன். ஆங்கு – அது.

**ஆங்கை** 2348/3. ... *த்திகிரி சுடர்**. அழகிய சுடர். அங்கை ஆங்கையாக நீண்டது.

**ஆங்கொலோ** 504/3. *உய்யவும் ...* *. ஆகுமோ! முடியுமோ

**ஆங்கோணைகள்** 3371/4. ... *செய்து குதிரியாய்**. ஆன மிறுக்கு

**ஆச்சிராமம்** 978/4. *வதரி ...* *. ஆச்சிரமம். [கள் எல்லாம்.

**ஆச்சி!** 3253/ப்ர. ஆச்சி அம்மா என்பதன் விளி.

**ஆசற்றார்** 893/2. ... *தங்கட் கல்லால்* *. குற்ற மிலாதார்.

**ஆசறு சீலன்** 3363/2. ... *னே ஆதிமூர்த்தியை* *. குற்றமில்லாத சீலத்தையுடையவன்.

**ஆசறுத்த** 1649/1. *செருவரை முன் ...* *. நிரஸித்த.

**ஆசறு தூவி** வெள்ளைக் குருகு 3535/2. பழிப்பற்ற சிறகை யுடைய வெண் பறவை.

**ஆசனம்** 742/4. *அணிமணி ... த்திருந்த**. ஸிம்ஹாஸநம்.

**ஆசிலே** கை வைத்தான் 704/3. "இவர்கள் வரவேண்டா என்றுதபடி ... ." 2068/4. "ஆசிலே கை வைக்கப் பார்க்கிறான்; ஆசிலே வைத்த கை". இரண்டு அர்த்தம், பாடுகையும் ஆயுதமும். ஆசு – ஆயுதத்தின் பிடி. 3562/4, 3899/4. **ஆசு** 893/2. *ஆசற்றார்**. குற்றம்.

ஆசு மாசு மற்றபடி (தனித்வ. உத்.) ஆசும் மாசும் அற்றபடி. [ஆசை.

**ஆசைப்பாடு** 657/2. "கண்டனுபவிக்க வேணு மென்னும் ..."

**ஆசையா மவர்** 831/4. ... *க்கலால்**. பிரேம முடையவர். **ஆசையாமவை** 846/1 ... *நுடக் கருத்து**. ஆசை யென்று சொல்லப்படு மவை யெல்லாம்.

**ஆசை யென்னுங் கடல்** 1330/3. உம்மைக் காணும் ... *.

**ஆசை யில்லாத** ஜகத்தை(யு)ம் தான் ஆசைப்படு மவனுயிற்று 1200/1. ஆசை நிக்கு. நிச்சில்லாத கறியில்லாத ஜகங்களைத் தானே விரும்புகிறவன்.

**ஆசையோ பெரிது** கொள்க 2048/4. ... அலைகடல் ... *.

**ஆசைவாய்ச் சென்ற** சிந்தை 371/1. ... பராஙி*. ஸ்நேஹ மிருந்த இடத்திலே கைகழிந்த மநஸ்ஸு*. [அடிமை கொண்ட.

**ஆட்கொண்ட மன்னன்** 162/3. எங்கள் குடி முழுதும் ...*.

**ஆட்கொள்வான்** 414/4. அடியவரை ... *. அடிமை கொள்ளுமவன்.

**ஆட்கொள்வான்** 866/2. பல் பிறப்பொழித்து நம்மை ...*. ஆட் கொள்ளுகைக்காக.

**ஆட்சி** 977/4. ஓர் ... அறியோமே*. ஆளுகை. "**ஆட்சியில்** தொடர்ச்சி நன்று என்றிருக்கிறான்" 2910/4.

**ஆட் செய்யுமீடு** 2955/4. அதுவே ...*. ஆட்செய்கைக்குத் தகுதி, ஆட்செய்கைக்கு அதிகாரம்.

**ஆட்டத்து வெளி** 3029/4. வையாளி விடுகிற வெளி; 3598/1.

**ஆட்டம்** 603/2. உம்மை நடம் ... காண. கூத்து. நடமாட்டம் - கூத்தாட்டம்.

**ஆட்டம்** 3915/2. உன்னஞ்சனமேனியை ... காணேன்*. நடை யாட்டம். நடம் நடை இரண்டும் வழக்கி லிருப்பது காண்க.

**ஆட்டி** 224/1. மஞ்சனம் ...*. **ஆட்டி** 2893/1. தென்னிலங்கை ...*.

**ஆட்டி** 2421/3. நூலாட்டி கேள்வனார்*. முதல் ஆட்டி வினை யெச்சம். மற்றை யிரண்டும் பெயர்ச் சொல். இலங்கை யாட்டி நூலாட்டி—என்று சேர்ந்து வருவது தவிர, ஆள் என்பது போல ஆட்டி தனியாக வருவதில்லை. ஆணுக்குப் பெண்பால் ஆட்டி.

**ஆட்டியும் தூற்றியும்** 3628/1. ... நின்று*. ஆட்டுதல் வரிதங்களைச் சொல்லி இருந்த இடத்தில் இராமல் செய்து அலைய வைத்தல். தூற்று தல் புறம் பேசிப் பழி சொல்லுதல். "ஆட்டித் தூற்றி அம்பலத்தில் வைக் கின்"—என்று பெண்கள் பேச்சு.

**ஆட்டு** 546/2. கூத்தாட்டு காணும்*. ஆட்டம்.

**ஆட்டுதி** 3327/2. ... நீ அரவணையாய் *. திரியப் பண்ணுதி, அலை மருவிப்புதி, அலைப்புதி. [நின்றி கோளோ.

**ஆட்டுதிரோ** 2007/4. மணே வெக்கீர் ... ரோ*. உபசரியா

**ஆட்டும்** 716/1. குரவை கோத்ததும் குடம் ... *. ஆட்டியதும்.

**ஆட்டுவ ணடியனேனே** 2046/4. ஆட்டுவேன்.

**ஆட்டு வாணியன்** (ஸ்ரீவபூ 179) ஆடு விற்பவன்.

**ஆட்டைக் கொரு** போஜகம் 3167/1. "இந்திரனுக்கு ... மாயிற்று

இடையர் இடுவர்". ஸம்வத்ஸரத்துக்கு. "ஆட்டைக் கொருவிருந்து 1076/1. வருஷத்துக்கு, ஆண்டுக்கு.

**ஆட்பட்ட எம்மே போல்** 3010/3. ... நீயும்*. அடிமையிலே அகப்பட்ட எங்களைப் போல்.

**ஆட்பலி** திரிவர் 2433/2. தலைக்கு ...*. நர பலி யிடுவர்.

**ஆட்பார்த்துழி தருவாய்** 2441/1. ... கண்டு கொள்*. ஆரோ நமக்கு அகப்படுவார் என்று காலமெல்லாம் தேடித் திரிகிறவனே!

**ஆட்புக்க காதல்** 945/4. ... அடிமைப் பயனன்றே*. அடிமை யாக வேணுமென்று பிறந்த ருசி.

**ஆடகக் கைமாதர்** 787/4. ... வாயமுதம்*. பொன் வளை களணிந்த பெண்கள். ஆடகம் - பொன். ஹாடகம் என்ற வடமொழி ஆடகமாயிற்று. [செய்த ஆபரணம்.

**ஆடகத்த பூண்** 787/1. ... முலைய சோதை*. பொன்னாலே

**ஆடகத்தி ளஞ் சிலம்பு** 1595/3. ... பிணர்ப்பு*. பொன்னாலான அழகிய தண்டைச் சிலம்பு. [அரவம் - பாம்பு.

**ஆடரவம்** 1929/1. புக்கு ... பிடித்தாட்டும்*. படமெடுத்தாடும்

**ஆடரவமளி** 2672/44. ... யி லறிதுயில்*. ஆடும் பாம்பாகிற படுக்கை. மூச்சுக் காற்றினால் மேலும் கீழும் ஆடுகிற ஆதிசேஷனாகிற அமளி - படுக்கை. [ஆபரணமாக வுடைய ருத்ரன்.

**ஆடரவாரத்தார்** 2472/2. ... க்கும் அமரர்கள்*. ஆடுகிற பாம்பை **ஆடரவு** - படமெடுத்து ஆடுவதையே ஸ்வபாவமாக உள்ள பாம்பு.

**ஆடல் கொடுக்கை** 1688/ப்ர. "அவற்றுக்கு ... த்து பதார்த்த தர்சநம் பண்ணிப் போது போக்க வொண்ணாதபடி....

1786/3. "யுத்த வ்யஸநங்களுக் கெல்லாம் ... க்க வல்ல தோள் மிடுக்கு ...". 1788/3. "இவளொரு அபலை யன்றோ! இதுக்கெல்லாம் ... க்க வல்லளோ!"

3869/ப்ர. "அத்தனை ஆடல் கொடுக்கைக்கு வேண்டும் ஆச்ரயம் போதாது." ஆடல் கொடுக்கை - வ்யஸநத்தை அநுபவிக்கை.

**ஆடல் நன்மா** 1168/2. ... வுடைத்து*. ஆவாலங் கொட்டி ஆடிக் கொண்டு வந்து தோன்றின குதிரை. ஆடலுடைத்தாய் நல்ல தான மா - மிருகம்—என்று சப்தார்த்தம். ஆவாலங் கொட்டுகை யாவது - குதிரையை நடை பழக்குகைக்குக் கொட்டுகை - தட்டிக் கொடுக்கை. ஆவாலம் - அநுபக்தம் பார். [கும் பறவை. ஆடுகை - பறக்கை

**ஆடல் பறவை** 1837/2. ... யனை யணியா யிழை காணும்*. பறக்

**ஆடல் பாடல்** 2 78/4. இவை மாறினர் தாமே*. ஆடலும் பாடலும்.

**ஆடல் மா வலவன்** 1427/2. ... கலிகன்றி *. ஆடா நின்றுள்ள - பாய்ந்தோடுகின்ற மாவுக்கு - குதிரைக்கு, வலவன் - வல்லவனான திரு மங்கை மன்னன். ஆழ்வாருடைய குதிரைக்கே ஆடல்மா என்று பெயராயிற்று. அதில் ஏறிச் செல்ல வல்ல ஆழ்வார்.

**ஆடலவரவத் தார்ப்பு** 1593/4. ... ஓவா வணியார் வீதி *. ஸ்த்ரீகள் ஆடுகிற போதை ஆரவாரத்தா லுண்டான ஆர்ப்பு – கோஷம்.

**ஆடலாட** 55/3. ... உறுதியேல் *. விளையாட்டு ஆட.

**ஆடலோசை** 1192/4. ... யரு அணியாலி *. ஆடுவதா லுண்டான ஓசை. [2787/2. அலரேச ... மேல் *.

**ஆடவர்** 1262/3. ... ரை மடமொழியார் *. ஆண்கள். ஆடவர்

**ஆடழைப்பார்** 1358/4. அரக்கர் ... *. ஆடு – வெற்றி. ஜயகோஷம் செய்ய, வெற்றி சொல்ல வல்லார். [கருடன்

**ஆடற் பறவை** 3685/4. ... யுயர்த்த *. ஆடா நின்றுள்ள பறவை,

**ஆடாவுலகம்** 633/1. கருளக் கொடி யான்தன் மீமீது ... *. எம்பெருமா னுடைய ஆணையை மீறிச் செல்ல மாட்டாத உலகம்.

**ஆடிய மா நெடுந்தேர்** 3530/3. ... ப் படை *. மா – குதிரை. ஆடும் குதிரை, பாயும் குதிரைகள் பூட்டிய நெடுந்தேர் – உயரமான தேர்.

**ஆடி யமுது செய்** 246/4. ... அப்பனு முண்டிலன் *. இளைப்பாலே சடக்கென அமுது செய்யப் புகுராதே நீராடிவிட்டு அமுதுசெய்ய வேணும். [நின்ற விடத்தில் நில்லாதே பல காலும் உலாவி.

**ஆடியாடி** 3042/1. ... அகங் கரைந்து *. தன்னுற்றாமையாலே

**ஆடிற்றின – ஆடின.** 2461/3. பாடின ஆடின *. 3979/2. கை யெடுத் தாடின *.—என்பதிலுள்ள ஆடினவுக்குப் பொருள் ஆடிற்றின.

**ஆடீர்கள்/ளே** 2010/4. தண் குடந்தை நகர்பாடி ... *. ஆடுங்கோள், ஆடுகிறீகோள் – ஆடுநீர் என்பதன் பொருள்.

**ஆடு தாமரையோன்** 1056/3. ... னு மீசனும் *. பிரம்மா. ஆடு - பெருமையாய் அலர்ந்த தாமரையை யுடையவன்; ஆடுகை – உண்டாகையாய் நாபியிலுண்டான கமலத்தில் இருப்பவன்.

**ஆடுதிர்** 3291/1. நீரணங்கு ... அன்னைமீர் *. ஆடா நின்றிகோள். **ஆடுதீர்** 3827/2. நீர் குடைந்து ... *. ஆடுகிறீகோள்.

**ஆடுதும்/மோ** 2070/2. அணியரங்கம் ... *. ஆடுவோம்.

**ஆடுதும் கூத்து** 3895/4. இங்கு ... *. கூத்தாடுவோம்.

**ஆடுந் தொழிலாகம்** 2213/3. ... சூழ்ந்து துணிந்து *. ஆடுகை (அசைகை) யாகிற தன்மையுடைய ஆகம் – சரீரம்.

**ஆடு பறவை** 3662/2. ... மிசைக் கண்டு *. ஆடு – வெற்றி. வெற்றியை யுடைய பறவை, கருடன். வெற்றிப்புள். ஆடும் பறவை, அழகாகப் பறக்கும் பறவை. [புஜியுங்கோள். நர்த்தநம் பண்ணுங்கோள்.

**ஆடுமின்/னே** 3041/4. கூடி நின்று ... *. அநுபவியுங்கோள்.

**ஆடுவான்** 499/4. மார்கழி நீர் ... *. ஆடுவதற்காக. **ஆடுவான் போந்தோம்** 524/1 குடைந்து நீர் ... *. ஆடுவதற்காக வந்தோம்.

**ஆடுறு தீங்கரும்பு** 3436/2. ... ம் விளை செக் செறும் *. ஆடு - ஆலையில் ஆடுவதற்கு உறு - உற்றிருக்கிற ஒருப்பட்டிருக்கிற தீங்கரும்பு. தித்திப்பான கரும்பு. [எறின - மிகுந்த மலர்.

**ஆடேறு மலர்** 1626/4. ... க்குமலார் *. ஆடு - பரிமளம். அது

**ஆடேறு வயலாலை** 1241/4. ... ப் புகை *. வயலில் கரும்பு ஆடுவதற்கான ஏற்றின ஆலை. **ஆடை** 500/6. ... யுடுப்போம் *. வஸ்திரம்.

**ஆடை யுடை** 3763/1. ... யும் புதுக்கணிப்பும் *. ஆடையாகிற

**ஆடோமே** 1979/2. பாடி நின்று ... *. ஆடோமோ. [உடை.

**ஆண்டங்கு நூற்றுவர்** 354/2. ... தம் பெண்டிர் *. ஆண்மை தங்குகிற துர்யோதநாதி நூற்றவர்.

**ஆண்டவர்** 1462/3. அரசாகி முன் ... *. 3231/1. ஒரு நாயகமாயோட வுலகுடன் ... *. ராஜ்ய ரக்ஷணம் பண்ணிப் போந்தவர்.

**ஆண்டளக்கு மையன்** 2879/1. ஆதலனார் ... *. காலத்துக்கு நிர்வாஹகனின ஸ்வாமி. ஆண்டு, வருஷம், காலம்.

**ஆண்டாறு மாஸத்துக்கு** "காமுமெல்லாரும் ... ஜீவநம் தேடுகிறப் போல." 2899/பா. ஆண்டுக்கும் ஆறு மாஸத்துக்கும்.

**ஆண்டு கழிந்தவர்** 3234/2. இவ்வுலகு ... *. ஆட்சி செய்து, கழிந்து போனவர்கள்.

**ஆண்டைக்கு** 3866/4. "பநிலை யாண்டைக்கு." ஆண்டுக்கு. அப்போதைக்கு அப்போது என்பது போல.

**ஆண்டையார்** 621/3. அரு. ஆசிரயித்த பழையார். பழைய அடியார். பழவடியார், பழவடியேன் போல. ஆண்டுக் கணக்காக பழகியவர்.

**ஆண்டையார்** 2308/1. துன்புற்றார் ... *. எங்குள்ளார்? யாண்டு, ஆண்டு - எங்கு.

**ஆண் திறல்** 3624/2. ... மீளி மொய்ம்பி லரக்கன் *. ஆண் பிள்ளைத் தனம். [ஆண் மணம் தோற்ற இருக்கிறான்.

**ஆண் நாறிற்று** 2487/அரு. பும்ஸ்த்வத்தை கநிக்கிறது. பெண் ஆண்பிள்ளைச் சோறுள்வி. 1098/2. (2 வது வ்யா) "... யை ஸ்த்ரீ என்று தொடர்ந்து திரிவாரைப் போலே" சோறுள்வி - சோற்றுக்கு நிர்வாஹகை. ஆண்பிள்ளைச் சோறுள்வி - ஸ்த்ரீ வேஷம் கொண்ட புருஷன் என்று அரும்பதம்.

பெரிய வாச்சான் பிள்ளை மட்டுமே பல இடங்களில் இந்த தொடரை உபயோகிக்கிறார். "ஸ்த்ரீ என்று தொடர்ந்து திரிவாரைப் போலே"— என்ற வாக்கியத்தால் ஆண்பிள்ளைச் சோறுள்வி என்பது பெண்ணுடை உடுத்த ஆண் என்று பொருளாகிறது. சோறுள்வி என்றால் சோற்றை

ஆணும் பெண்—என்ற அரும்பதத்துக்கு ஆதாரம் அறிய வேண்டும். ஆள்வி என்றால் ஆள்பவள்/ன் என்றாகி, சோறாள்வி சமையல் காரியாகி ஆண்பிள்ளைச் சோறாள்வி என்பது சமையல்காரி வேஷம் பூண்ட ஆண்—என்று பொருள். சொற்றாழ்வி என்றும் சொல்வதுண்டு. அப்போது ஆண் பிள்ளை என்ற சொல்லுக்கு தாழ்வி தாழ்ந்தவன், தகாதவன் என்று பொருள். சோராள்வி என்றும் உண்டு. ஆண் பிள்ளைத் தனத்தில் சோர்ந்தவன் என்று பொருள். பெருந் தமிழ்ப் புலவர் ஸ்ரீ மு. ராகவ அய்யங்கார் இந்த அர்த்தங்க ளெல்லாம் இந்த சொல்லுக்கு ஏறாது—என்றார். அம்ருத விபாகம் செய்யத் தோன்றின மோஹினியைக் காமுற்ற சிவனைச் சொல்லு வதற்காக பெரியவாச்சான் பிள்ளை ஸ்ருஷ்டித்த சொல் இது. ராமாயண தனி சுலோகத்திலும் இதே சொல் காண்கிறது. ஆண்பிள்ளைச் சோரள்வி, ... சொற்றாழ்வி —இரண்டுக்கும் நபும்ஸகன், அலி என்று பொருள். [டைய ..." 807/4.

**ஆண் பிள்ளைத்தனம்** - ஆண் திறல் பார். "சக்ரவர்த்தித் திருமகனு **ஆண் புலியானவன்** 807/2ல் வீரன் என்பதன் பொருள். **ஆண்மகன்** (?) புருஷ சிரேஷ்டன். **ஆண்மை** 1794/3. ஐங்கணை வில்லிதன் ...", **ஆண்மைகள்** 1920/1. தம்பரமல்லன ...*. வீரச்செயல்கள். **ஆணம்** - 920/3. ... மென்றடைந்து *. அரண், புகல். **ஆணல்லன்** 3061/4. ... பெண்ணல்லன் *. ஆணின்படியில்லாதவன். (**ஆணவம்** : ஆண்மை.)

**ஆணறுத்து** 2487/1. **ஆணறுகை** – புருஷவ்யா வ்ருத்தி. "... என்னும்படி ஸ்த்ரீவத்தின் அதிசயத்தைச் சொல்லுகிறது." புருஷ வ்யாவ்ருத்தியாவது - ஆணல்ல என்று தெளிவாக்குதல்.

**ஆணுட** 532/3. ... விட்டிட்டிருக்கும் *. தோன்றியபடி செய்ய. ஆண்மைக்குச் சேர்ந்த துஷ்டத்தனம் யாவற்றையும் செய்ய.

**ஆணுற்றம்** : ஆணுறும் பார்.

**ஆணுறு பெண்ணுறு** 3264/ப்ர. நதமும், நதியும். மேற்கு முகமாமகப் பாயும் ஆறு நதம், கிழக்கில் பாயும் ஆறு நதி.

**ஆணுறும்** 1212/3. ஆண் நாறும் - ஆண்மை மணம் வீசும். ஆண்மைத் தனமுள்ள பெண். "ஆரடாவன், கோயிலிலே ஆணுற்றம் பெண்ணுற்றம்" —என்ற வழக்குக் காண்க. யாருமறியாமல் கோயிலில் யாரோ புகுந்து ஒளிந்திருப்பது கண்டு ஆண் பெண் இருப்பதாக மணத்தாலே அறிந்து கேட்கும் கேள்வி இது. **ஆணி** - சரீரம். அக்காணி பார்.

**ஆணி செம்பொன்** 3300/2. ... மேனி யக்தாய்*. மாற்றற்ற பொன், உரையற்ற பொன், ஓட்டற்ற செம் பொன். அழுக்கு கலப்பு யாதும் ஓட்டாத பொன்.

**ஆணிப் பொன்** 44/2. ... ஞூற் செய்த வண்ணச் சிறு தொட்டில்*.

75/2. ... ஞற் செய்த ஆய் பொன்னுடை மணி*. ஷோடச வர்ணியான பொன. மாற்றெழும்பின பொன். நிறம் அதிகமான பொன். ஷோடசம்-பதினாறு. பத்தரை மாற்றுப் பொன் என்பது பதினாறைப் பத்தாறு—என்ற படி. பத்தாறு வேஷ்டி— என்பது போலல்லாமல் பத்தரை என்று குறைந்தது.

**ஆணினோடு** பெண்ணுமாகி 777/1. ஆணும் பெண்ணுமாய்.

**ஆணுடைச் சேனை** 3598/2. மன்னர் ...*. ஆண் பிள்ளைத்தன முடைய சேனை.

**ஆணை** 1067/4. அண்டமாள்வது ...*. நிச்சிதம், நிச்சயம். **ஆணை** 1876/3 உங்கள் கோமான் ... *. ஆஜ்ஞை. ஆணை மெய் பெற நடாய தெய்வம் *. 2580/3. ஆஜ்ஞையைப் பத்தும் பத்தாக நடத்தாநிற்கும் தெய்வம்.

**ஆணை யென்** 3371/3. ... தோழி*. உலகுதோறலர் தூற்றி*. தடையென்ன! **ஆணை** யோட்டினான் 2442/3. உலகையேழ் ...*. ஆஜ்ஞை செல்லும்படி நடத்தினான்.

**ஆணைப்பார்** 15/3. ... இவன் நேரில்லை காண் *. பும்ஸ்த்வ முடையவர்கள். ஆண் பிள்ளைகள். [ ... *. ஆப்தன், பரம பந்து.

**ஆத்தன்** 1063/2. ... நம்பி செங்கணம்பி *. 3896/4. திருமோகூர்

**ஆதர்** 1863/4. ... நின்று படுகின்ற தந்தோ *. இளிம்பர். **ஆதர்கான்** 382/2. மானிட சாதியின் பேர்*. ... அல்ப்பர்காள், அறிவு கேடர்காள். 820/3. ஆண மென்றடைந்து வாழும் ...*. குருடர்களே! அறிவு கேடர்களே. **ஆதீரம்** 1116/2. உன் மேல் ... பெரிது*. காமம்.

**ஆதரிக்கப் படுவாய்க்கு** 1562/1. அண்டா வென்று ... *. ஆதரிக்கப் படுகிற உனக்கு.

**ஆதரித்து** 3685/4. ஆழி வலவனை ... *. ஆசைப்பட்டு.

**ஆதல்** 1/அவ. இது வாதல் அது வாதல். இதுவாவது அதுவாவது. **ஆதல் வேண்டும்** 1469/4. ஒண் பொருளெனக்கும்... *. ஆகவேண்டும்.

**ஆதலால்** 874/4. ... பிறவி வேண்டேன்*. ஆகையால். **ஆதலில்** 921/3. அமரர்கள் புகுந்தனர் ... அம்மா *.**ஆதலின்** 3237/3. இடறுவர் ... *. **ஆதன்மையால்** 1086/2 காசமது செய்திடும் ... *. நின்திறத்தேன் ... *. 1468/4.

**ஆதனம்** 3167/3. தலையினோடு ... தட்ட *. தரை. ஆஸநம் ஆதனமாய்த் திரிந்து அது அமருமிடமாய் தரை என்று பொருளாகிறது.

**ஆதனூர்** 2679/1. ... ஆண்டளக்கு மையன் *.

**ஆதானும்** 2609/1. ஆரானும் ... செய்ய *. 2643/2. ... கைக்கோள்ள *. 2737/2. ஆரானும் ... அல்லளவன் *. ஏதேனும் ஏதாவது.

**ஆதி** 1808/3. ... க்குமாதி *. முதல். **ஆதிக்கண் நின்ற வறிவன்** 2257/3. ஸ்ருஷ்டிக்கு முன்காலத்திலிருந்த ஸர்வஜ்ஞன்.

**ஆதிக்குமாதி** 1808/3. ... யாயனுய் *. காரணவஸ்தமான சித சித்துக்கு நிர்வாஹகன்.

**ஆதிக்கொழுந்து** 2968/3. அயர்வி லமரர் ... *. ஆதி - ஹேது. கொழுந்து - போக்யமான வஸ்து. போக்கியமாயும் ஹேதுவாயுமிருப்பது.

**ஆதிகாலம்** 1436/2. மிக்க வேதியர் ... *. ஸ்ருஷ்டி காலம்.

**ஆதிசே ரனந்தபுரம்** 3907/1. ... த்தமரர் கோன் *. காரணபூதன் வர்த்திக்கிற திருவனந்தபுரம். [சூரியன்.

**ஆதித்தியன்** 495/6. திங்களும் ... னும் எழுந்தாற்போல் *.

**ஆதிதேவன்** 765/2. ஆழ்கடல் துயின்ற ... *. ஜகத்காரண பூதன். **ஆதி நடு வந்தி** 2254/1. ... யாய் வாய்ந்த மலர் *. எல்லாம் அடி நடு நுனி, அக்ரம் மத்யம் மூலம்—என்ற தொடர்கள் போல. **ஆதி நெடுமால்** 2417/3. பாற்கடல் கிடக்கும் ... *. [தவன்.

**ஆதிப்பிரான்** 934/2. அமரர்க்கரிய ... *. முற்கோலி உபகரித் ஆதி - முன், பிரான் - உபகரித்தவன். முதல் முதலே உபகரித்தவன்.

**ஆதிப்பெருமான்** 2445/2. பொன் மகரக் காதானே ... *. **ஆதிப்பெரு மூர்த்தி** 3426/2. அமரர் தலைவர் தலைவா ... *. **ஆதிப்பிரான்** 927/1 அமலன் ஆதிபூதன் ... *. 816/3. ... மாதவன் *. ஜகத்காரண பூதன்.

**ஆதிமன்னர்** 1060/3. ... க் காசிப் பெருநிலத்தார் *. முற்காலத்து மன்னர் என்று பொதுவான பொருள். இவ்விடத்தில் பிரதான மன்னர். **ஆதிமால்** 804/3. வாணனுயிரம் கரங்கழித்த ... *. **ஆதிமுதல்வன்** 2989/1. அமரர்கள் ... *. ஆதி - ஹேது. முதல்வன் - தலைவன். ஹேது பூதனும் பிரதானமா யிருக்குமவன்.

**ஆதிமுனேனம்** 1984/4. ... வளர் சேர் *. காரண வஸ்துவான ஸர்வேசுவரனும் முன் - முற்காலத்தில் கல்பாதியி லுண்டான, ஏனம் - வராஹாவதாரம். [அழகிய காலம்.

**ஆதியங் காலம்** 3247/2. ... த்தகவிடம் *. வராஹ கல்பமாகிய

**ஆதியஞ் சோதி** 431/2. ... மறந்தறியேன் *. ஸர்வ காரணமாய் விலக்ஷணமான தேஜஸ். **ஆதியஞ் சோதி யுரு** 3169/2 ... வை யங்கு வைத்து *. ஆதி - நித்யம். அஞ்சோதி - அப்ராக்ருத தேஜஸ். உரு - விக்ர ஹம். நித்யமாய் அப்ராக்ருத தேஜோரூபமான திவ்ய விக்ரஹம்.

**ஆதி யந்த மனந்த மற்புதம்** 663/1. ... மான வானவர் தம்பிரான் *. ஆதி- ஜகத் காரண பூதன். அந்தம் பிரளய காலத்திலும் ஸத்தாய் இருப் பவன். அநந்தம்- காரண வஸ்தை கார்ய வஸ்தை இரண்டிலும் ஒக்க வ்யாபித் திருக்குமவன். அற்புதன்- இப்படி வேறெரிடத்திலும் காண வொண்ணாத ஆச்சர்ய பூதன்.

**ஆதி யந்த மில்லவன்** 868/3. ... அனந்த கீர்த்தி *. ஆத்யந்த ரஹிதன். தான் இப்படியிருப்பது தவிர, ஆசிரித விஷயத்தில் செய்ய வினைத்திருக்கு மவற்றுக்கு முதலும் முடிவு மில்லாதவன்.

**ஆதி யம்பகவன்** 2923/2. அந்த மில் ...*. ஆதி- நித்யன். அம் - ஹேய ப்ரதிபடனான பகவான். நித்யனாய் விபரீதங்களுக்கு எதிர்த்தட்டாயுள்ள பகவான்.

**ஆதி யம்புருடன்** 3157/3. ... என்கோ *. ஆதி - ப்ரதாநன். அம்- ஆநந்தாதி குணங்கள், ப்ரதாந பூதனாய் ஆநந்தாதி குணங்களோடு கூடியுள்ள பரம புருஷன்.

**ஆதியாஞ் சோதி** 3019/1. எப்பொருட்கும் ...*. காரண பூதனாய் பரஞ்சோதி என்று பெயருடையவன்.

**ஆதி யாதி யாதி** 785/1. ...நீ ஓரண்டம் ...*. த்ரிவித காரணம். மஹத் அஹங்காரம் விசேஷம் என்ற ப்ராக்ருத ஸ்ருஷ்டிக்கு காரண பூதன். **ஆதியாய் வரு மந்தணாளர்** 1193/3. ...அரு அணியாலி *. பழமையாய்ப் போருகிற பிராம்மணர்.

**ஆதி வராகம்** 1611/4. ...முன்னாய் *. வராஹ கல்பத்தில் ஆதியில் உண்டான வராஹம்.

**ஆது கொலோ** 1794/2. ...என்று சொன்ன *. யாதோ. **ஆது மில் காலம்** 3157/4. ...த்தெய்வதை *. ஒன்று மில்லாத ஸம்ருதி காலம். **ஆது மிலன்** 1395/1. உறவு ...*. ஆது மோர் நிதிலர் 3692/4. **ஆது** மோர் பற்றில்லாத பாவனை *. 3163/3. சரீர தோஷங்களினால் பாதிக்கப்படாதிருக்கிற ஸ்வபாவம். **ஆந்தராளக் குடியிலே பிறந்தாளொருத்தி** 528/1. முக்தரும் பத்தருமல்லாத முமுக்ஷுக் குடும்பம். ஆந்தராளம் - நடு, அந்தராளத்தி லுள்ளது ஆந்தராளம். ஆந்தராளமான குடி-பத்தர் முமுக்ஷு முக்தர் —மூவரில் நடுவிலுள்ளது. நடுவாந்தரத்தி லுள்ளதென்று கொச்சையாகச் சொன்னால் பொருந்தும்.

**ஆந்தனையும்** 475/7. ஐயமும் பிச்சையும் ... *. ஆகுந்தனையும். முடிந்த வரையில், கூடிய வரையில். " அவர்களை ... பொருந்த விட்டுப் பார்த்தோம் " 3330/ப்ர. ஆனபடியெல்லாம். "... பார்த்து முடியாமை காணும் கை வாங்கிற்று " 3319/ப்ர. சக்யமான வளவும்.

**ஆநிரை** 1844/1. ... க்கழிவென்று *. **ஆநிரைகள்** 2332/1. **ஆநிரை யினம்** 236/2 பசு நிரையினுடைய திரள்.

**ஆநெய்** 791/2. ஆனை மேய்த்தி ...புண்டி *. பசு நெய்.

**ஆப்பவிழ்ந்து** 2372/2. ஆப்புண்டு மாப்பு ... *. கட்டு அவிழ்ந்தும். **ஆப்புண்டிருந்தான்** 217/4. ... னுலின்று முற்றும் *. கட்டுண்டிருந்தான்.

**ஆப்பூண்டு** 122/1. திருடி நெய்க்கு ... *. கட்டுண்டு. உகாரம் நீட்டிக் கிடக்கிறது. [பலவே ... *.

**ஆப்பைக்குறி :** அகப்பையில் பார். **ஆபரணம்** 3058/1. பல

**ஆபுகு மாலை** 3873/1. ... யு மாகின்றாலோ *. ஆக்கள் வந்து புகுரும்படியான மாலை, ஸந்தியா காலம். [ பிரயோஜநம் உண்டு?

**ஆம்பய னங்கென்** 2114/4. அந்தியால் ... *. அங்கே என்ன

**ஆம் பரி சறிந்கொண்டு** 909/2. ... ஆறும் பரிசுகளை அறிந்து கொண்டு. ஆம்பரிசு – கைங்கர்யம். "ஆத்மாவை உள்ளபடி யறிந்த தால் பின்னை யாம்பரிசாவது கைங்கர்ய மேயாய்த்து".

**ஆம்பல்** 1795/1. ஆயன் கை ... *. குழல். **ஆம்பல் வாய் கூம்பின** கான் 487/2. கருநெய்தல் பூ.

**ஆம்போது** 425/3. சொல்லல் ... *. ஆகிறபோது.

**ஆம் முதல்வன்** 3650/4. மூவுருவு ... *. ஆமுதல்வ னென்று பின்னால் வருகிறது. ஆம் முதல்வன்—என்றும் பிரிந்து இங்கே ஒரு தொடராக்கலாம். [3648/1.

**ஆம் வண்ணம்** 3643/1. மதி ... என்றருளாய்*. ... இன்னது*.

**ஆம் வண்ண** வொண் தமிழ் 3648/3. தகுதியா யிருந்துள்ள நல்ல தமிழ். ஒண்மை – தகுதி. வண்ணம் ஓசையாய் நல்ல ஓசை யுடைய தமிழ். வண்ணம் – ச்சந்தஸ் ஸுடைத்தான தமிழ்.

**ஆமகன்** 536/1. போற்றுதற்கு ... *. தகுதியான புருஷன்.

**ஆமமற்றுப் பசிக்குந்தனையும்** 2052/ப்ர. ஆமம் – அஜீர்ணம். "ஆமத்தில் போஜநம் போலே" (ஶ்ரீமுகஷ்ப்படி), ஆமம் – பச்சை. **ஆம சிராத்தம்** – சமையாத பச்சை வஸ்துக்களைக் கொண்டு செய்யும் சிராத்தம். [வினை பொருந்தியிருக்கிற நிரை – கூட்டம்

**ஆமருவின நிரை** 3913/3. ... மேய்க்க நீ போகு *. ஆ – பசு, மரு–

**ஆமவை யாயவை** 2902/4. ... யாய் நின்ற வவரே *. ஆகக் கடவனவும் பண்டே ஆனவையும்.

**ஆமளவு** 144/2. கொடி ... எய்தான் *. முடிந்தவளவு கூடுமான வரை—என்று பொதுவான பொருள். **ஆமள** வொன்று மறியேன் 3268/3. என்னை வினையுமென்று அறியேன். எவ்வளவா மென்று அறியேன். [மனார்கள்

**ஆமனத்து** மறையவர்கள் 1244/4. பரிசுத்த மனத்தரான பிராம

**ஆமாறறியும் பிரான்** 189/3. ...னே அணியரங்கத்தே *. ஆம் ஆறு – ஆகும் வழி. அறியும் பிரான் – அறிந்து செய்யும் உபகாரகன். மேல் நடப்பதை அறிந்து அதற்கேற்பச் செய்பவன். **ஆமாறறிவிலோமே** "ஞான மில்லை வண்டாயே ..." 3138/2. ஆமாறறிவுடையர் 2621/1.

**... ஆவதரிதன்றே** *. ஆம் வகையை அறிந்தவர்கள். **ஆமாறென்றறியேன்** 3320/3. முடியும் விதம் அறியேன்.

**ஆமிடத்தே யுன்னைச்** சொல்லி வைத்தேன் 424/3. கரணங்கள் என் வசமாயுள்ள போதே உன் பெயரைச் சொன்னேன். ஆமிடம் – கூடுமான இடம். [3236/4. ஆருங்கோள்.

**ஆமின்** 2195/4. நீர்த்தகரர் ... *. அண்ண லடியவர் ... ளே*.

**ஆமின் சுவை யவை** யாறு 3237/1. ஆன - ஏற்பட்ட, இன் சுவை ஆறு- அறு சுவைதான் உலகில் ஏற்பட்டது. ஏழாவது இல்லை. [மவன்.

**ஆமுதல்வன்** 3651/1. ... இவனென்று*. முதல்வனும்; முதலா

**ஆம்/மே** 401/4. குளித்திருந்த கணக்கு ... *. ஆகும். **ஆமே** 2126/1. ... அமரர்க்கறிய*. ஆகுமோ!

**ஆமேலும்** 2668/4. தங்கத்தான் ... தங்கு *. கூடுமாகில்.

**ஆமைத்தாலி** 87/3. அக்குவட முடுத்து ... பூண்ட *. ஜாத்யுசிதமாக கூர்மாகாரமான தாலி. இடைப் பெண்கள் இன்னும் ஆமைத் தாலி பூணுகிறார்கள். இது இடையர்களுக்கு மட்டுமே வழக்கமாயிருப்பதால் ஜாத்யுசிதமாக என்று சொல்லப்பட்டது. [எம்பெருமான்.

**ஆமையான திருமால்** 1983/4. ... நமக்கோ ரரணே *. வராஹ

**ஆமோ தர மறிய** 3086/2, 4. தரம் அறிய முடியுமோ!

**ஆய்க் கன்னிமார்** 263/2. இள ... காமுற்ற வண்ண *. இடைப்

**ஆய்க்குலம்** 501/2. அறி வொன்று மிலாத ... *. [பெண்கள்.

**ஆய் கொண்ட சீர்** 3217/2. ... வள்ளல் *. ஆய் கொண்ட - வேதாந்தங்களிலே ஆராய்ச்சி செய்த, சீர் – குணம்.

**ஆய்க்குழல்** - இலக்குழல். புலம் புரிமணி தென்றலாம் பலாவோ*. 3870/1. என்றதில் ஆம்பல் என்பதன் பொருள்.

**ஆய்ச்சி** 3217/1. "ஐயரையும் ... யையும் அநுவர்த்தித்துப் பெருமான் காடேற எழுந்தருளா நின்றார்". அம்மா.

**ஆய்ச்சி** 31/2. மதுர முலையூட்டி ... *. இடைச்சியும் தாயும். **ஆய்ச்சிமார்கள்** 537/1 ... ளு மாயருமஞ்சிட *. **ஆய்ச்சியர்** 1911/4. ... க்குப் பில்லை *. **ஆய்ச்சியர் சேரி** 217/1. இடைச்சிகள் தெரு.

**ஆய்ச்சியர் மக்கள்** 226/1 ஆய்ச்சியராகப் பிறந்தவர்கள். **ஆய்ச்சியோம்** 3417/4. இடைப் பெண்களான நாங்கள்.

**ஆய்த்தாய்** 2115/4. ...முலை தந்தவாறு *. இடைச்சியான அன்னை.

**ஆய்த்தாயர்** 1091/2. ...தயிர் வெண்ணெய் *.

**ஆய்த்தின** 1463/1. "எனக்கு உடல் ... வாவது" ஆயின.

**ஆய்த்து** 1331/1. எமக்கிங் கிழக்கு ... *. ஆயிற்று.

**ஆய்ந்த குணத்தான்** 2413/4. ... அடி *. பொறுக்கி யெடுத்த சுத்தமான- ஹேயப்ரத்யநீகமான, அசுத்தங்களுக்கு எதிர்த்தட்டான கல்யாண குணங்களை யுடையவன். **ஆய்ந்த தமிழ் மாலை** 3406/4. ... ஆயிரம்*. ஆராய்ந்து சொன்ன தமிழ்த் தொடை. **ஆய்ந்த மாலை** 3923/3. மங்கையாய்ச்சியர் ... *. சொன்ன பாமாலை. **ஆய்ந்த வருமறையோன்** 2358/1. ... நான் முகத்தோன் *. ஸர்வேசுவரனாலே ஓதுவிக்கப்பட்டு வேதார்த்த நிருபணம் பண்ண வல்லன். **ஆய்ந்து கொண்டு** 2460/1. ... ஆதிப்பெருமானை*. அநுஸந்தித்துக் கொண்டு. **ஆய்ந்துரைப்பன்** 2254/1. ... ஆயிரம் பேர் *. ஆராய்ந்து சொல்லுவன்.

**ஆய்நிரை** 3603/3. இன ... பாடி*. ஆநிரை யென்று பாடாந்தரம். ஆய்நிரையாகில் ஆயரும் பசு நிரையும் என்று 12000ப்படி.

**ஆய்ப்பாடி** 14/4. ஆடுவார்களுமாயிற்று ... *. இடைச்சேரி.

**ஆய்ப் பாலர் பெண்டுகள்** 139/4. ... எல்லாரும் *.

**ஆய்ப் பொன் னுடை மணி** 75/2. ... மருங்கின்மேல்*. ஆய்ந்த பழிப்பற்ற, பொன் - அழகான, உடை மணி - அரை வடம். ஆய - ஆயம். கடைக் குறைத்தலில் ஆய் என்றாயிற்று.

**ஆய் மகள்** 1884/3. நன்மகள் ... ளோடு *. இடைப்பெண் (நப்பின்னைப்பிராட்டி). **ஆய்மக னன்பன்** 3580/3 ... ளேயென்றும்*. நப்பின்னை நண்பன்.

**ஆய் மலர்** 2131/1. ... கொண்டு ஆர்வம் புரிய*. மயிர் தூசி புழு முதலியவை இல்லாமல் சோதித்த செவ்விப் பூ. [காதல்.

**ஆய் மிகு காதல்** 701/3. ... லோடு யானிருப்ப *. மிக அதிகமான

**ஆயக்கால்:** வாஹநத்தில் எழுந்தருளும் பெருமாள் ஸேவார்த்திகளுக்கு ஸேவை ஸாதித்துக் கொண்டு நிற்கும் போது வாஹநம் தூக்கிகள் சற்றே இளைப்பாறுகைக்காக ஆயக்காலைத் தரையில் நிறுத்தி வைத்து அதில் வாஹநத்தை வைப்பது வழக்கம். ஆயக்கால் - வாஹநம் தாங்கி. இது வியாக்கியான வார்த்தை யல்ல; கோயில் தமிழ்.

**ஆய கோலம்** 764/3. பின்னை ... *. ஸர்வ விஸஜாதீயமான லாவண்யத் தையுடைய, நிகரில்லாத விக்ரஹம்.

**ஆயங்காள்/ளோ** 3682/1. நங்கள் வரிவளை ... ளோ *. தோழிமார் தோழிமீர். **ஆயங்கூறும்** 1183/3 ... துடியிடையார் *. தோழமை சொல்லி யழைக்கிற.

**ஆய சீர் முடி** 891/3. ...யும் தேசும் *. பண்டேயாய் சீர்மையை யுடைத்தான முடி. ஸித்தமாய் ஐச்வர்ய ஸூசகமான கிரீடம். ஆய—ஆன, தகுந்த.

**ஆயது** 899/3. கம்பரம் ... உண்டே *. ஆனது. **ஆயது** 1068/1. பார். ... உண்டுமிழ்ந்த *.

**ஆய நின்னை** 792/2. ...யாவர் காண வல்லரே *. ஸர்வ சக்தியுக்தனை உன்னை. ஆய நீ..ஆய உன்னை. ஆய, ஆன-சக்தனை, தருநியாள.

**ஆயப் பின்னை** 259/3 அந்தமொன்றில்லாத ... *. இடைப்பின்னை.

**ஆய பெரும் புகழ்** 3216/2. ... எல்லையில்லாதன *. ஆயப்பட்ட சோதிக்கப்பட்ட, விபரீதத்துக்கு எதிர்த்தட்டான பெருங் கீர்த்தி.

**ஆய பொன் மாமதிள்** 1386/4. ...சூழ்க் தழகார் தென்னரங்கமே *. தருந்ததாய் பொன்போன்ற மாமதிள்.

**ஆயம்** 1391/1. தன்னுயத் தோடணையான் *. **ஆயம்** 2739/1 போராய மெல்லா மொழிய *. தோழிமார்.

**ஆய மறிந்து** பொருவான் 69/3. கூறறிந்து பொருகிறவன். ஆயம்-ப்ரகாரம், விகல்ப்பம், கூறு, விதம், வகை.

**ஆய மாயவன்** 3117/2. ...கோயில்*. ஆயனுய மாயன். **ஆய மாயன்** 753/4. ஆய வைந்தும் ... *. இடையனுப் வந்து பிறந்த ஆச்சர்ய பூதன்.

**ஆயர்க் கதிபதி** 3734/4. ... அற்புதன் தானே *.

**ஆயர்கள் சேரி** 306/4. ... யிலும் புக்கு*. **ஆயர்கள் நாயகன்** 74/1 ஆமையுமானவனே ...*. **ஆயர்களேறு** 110/4. ... என்புறம் புல்குவான் *. ஆயர் குலக்கொடி 1078/1. அன்று ...*. ஆயர் குலமகள் 2080/1. **ஆயர் குலமுதல்** 2948/2. மனே சேர் ... *. ஆயர் குலத்துக்கு மூல பூதன். **ஆயர் கூட்டம்** 131/3. ...த் தளவன்றுலோ *.

**ஆயர் கொழுந்து** 141/3. ஒண்சுடர் ... *. **ஆயர் கோ** 1514/2. ... வாய் நின்றன் *. **ஆயர் கோலக் கொழுந்து** 234/1. அஞ்சனவண்ணனை ...நினை *. ஆயர் கோலத்தை யுடையனுப் அவர்களுக்கு முன்னேடிக் காரியம் பார்க்கும் தலைவன். அன்றிக்கே, வேரிலே வெக்காயம் தட்டினுல் கொழுந்து முற்பட வாடுமாப்போலே அவர்களுக்கு நோவு வந்தால் முதலில் தான் வாடும் படியாயிருக்கையாலே கொழுந்து என்கிறது. **ஆயர் தம்மன்** 74/4. ... னரைமேல் *. ஆயர்களுக்கு மன்னன். ஆயர் தேவு 3922/4. 3923/1. எங்கள்...*. ஆயர்களின் தெய்வம், ஆயர் தேவு என்று கஞ்சியருடைய திருவாராதகப் பெருமாளுக்குத் திருநாமம், **ஆயர் பாடி** 132/4. ...க்கணி விளக்கு *.

**ஆயர் பாவை** 1072/2. ... நப்பின்னை *. இடைப் பெண். **ஆயர் பின்னை** 806/2 . ... தோள் மணம் புணர்ந்து *. இடைச் சாதியான நப்பின்னை.

**ஆயர் விழவு** 2889/1 ... வின் கண் *. இடையர்களின் உத்ஸவம்.

**ஆயரழகன்** 1889/3 எங்கள் தம் ... *. ஆயரில் அழகன்.

**ஆயவண்ண மென்கொல்** 784/4 எம்பிரானும் ...*. ஆன விதம் என்ன? **ஆயவன்** 1023/4. திண்டிறலரி ...*. ஆனவன்,

**ஆயவிடுகிற** *மீடற்றேரை* 2487/4. ஆயோ அடுந் தொண்டையோ*. – என்பதில் ஆயோவுக்குப் பொருள். குருவியோட்டும் குரல்.

**ஆயவெள்ளம்** 3368/2. "... *எல்லாம் திரண்டது" தோழிமார்திரள்.*

**ஆயவை** 2902/1. ... ஆமவையாய் *. ஆனவை. கடந்து போன

**ஆயவைந்து** 753/4. " *ஊறெடோசை* ... *. ஆக ஐந்து. [வை.

**ஆயன்** 1795/1. ... கையாம்பல் *. இடையன். 2058/1. "*திருக்கோவலூர்* ...". பெரியவன், உயர்ந்தவன். **ஆயனூர் கோயில்** – *உயர வளர்ந்த த்ரிவிக்ரமப் பெருமாள் கோயில்;* ஸ்ரீரங்கம் தெற்கு ராய கோபுரத்துக்கு வெளியே இருப்பது.

**ஆயார்** 1096/1. தொண்டு ... *தாம் பரவும்* *. 3129/4. தொழும்பு ... *க் களித்தால்**. ஆனர், ஆனவர்கள். [வரன்.

**ஆயான்** 2439/4 ... னுக் காக்கினேன்.*. பெரியவன், ஸர்வேச

**ஆயிட்டு** 3186/ப்ர. "... இவன் கோய் இது". ஆனபின்பு. " ... இவனை வேண்டா என்றன்றே கொடுப்பது." 3497/2. " ... விஷயங்களிலே ஓடித்திரிகிற மகஸ்ஸை மீட்டு" 3178/4. ஆகையாலே.

**ஆயிடில்** 601/4. கூடுவார் ... கூவி *. ஆகில்.

**ஆயிடுக** 488/4. *நானேதான்* ... *. ஆகட்டும். இருக்கட்டும். "*நான் ஆராயிடுக*" 3109/4. [ஆமோ ;

**ஆயிடுங்கொலோ** 298/4. ஓரேச்சுக் கொல் ... *. ஆயிடுமோ !

**ஆயிடும்** 1087/3. மேலுலகெளிது ... *. *பலபல ஊழிகள்* ... *. 2493/1. [இந்திரனூர் 1914/1.

**ஆயிரக்கண்** *மன்னவன்* 2849/1. இந்திரன். ஆயிரங்கண்ணுடை

**ஆயிரங்கள்** 647/1. அணி பணம் ... *. 2006/4. பேர்கள் ... ளுமே பேசிர்களே *.

**ஆயிரத்தாண்டு** 1/1 பல்லாண்டு பல்லாண்டு பல் ... *. நூற்றுண்டு போல ஒரு தொகுதி.

**ஆயிரத்தளி** 3171/4. *க்ருமி கண்டன்பட்டணம்.* " ... *யிலே ராஜா இருக்கச் செய்தே, பெரிய நம்பியையும் ஆழ்வானையும் கலிக்தானும்* ..." தளி – கோயில். ஆயிரம் லிங்கங்களுள்ள கோயில். பசுபதி கோயில், *சயிலடியுள்ள ஊர்—என்று சொல்லுவர்.* ஆயிரம்* பல்லாண்டு 2/1. பிரிவின்றி ... *. **ஆயிரம் பெயர்** 1413/3 ... *ராவமரர் சென்றிறைஞ்ச* *. **ஆயிரம் பேர்** செங்கண் *கரியான்* 2146/4. **ஆயிர மின்** *தமிழ் பாடினான்* 944/3. *ஸஹஸ்ரவர்த்மா ஸாமவேத:* என்கைபாலே ஸாமவேதம் ஸஹஸ்ர சாகையாயிருக்கும். திருவாய்மொழி ஸாம வேதஸ்தானமாகை பாலே ஓவ்வொரு சாகை ஒரு பாட்டு வீதம் ஸஹஸ்ர சாகையும் ஆயிரம் பாட்டு. **ஆயிரவா** 196/1. பல் ... இவ்வூரில் *. ஆயிரம்பேர்,

**ஆயிரத்தான்** 170/4. பேர் ... குழல் வாராய்*.

**ஆயிருக்க** 3209/1. "விரோதமாய்த் தலைக்கட்டுமிறே உங்களுக்கு ... சொல்லுகிறேன்." ஆனாலும் என்று பொருள்.

**ஆயிழை** 1830/4. என் ... பே*. ஆய்ந்து அணிந்த ஆபரணம், அதையுடையவள். **ஆயிழை** 1837/2. அணி ... *. ஆன இழை.

**ஆயிற்ற பின்பு** 2919/3. ஆன பின்பு. " இப்படி ஸம்பந்தம் காதா சித்க மாகை தவிர்ந்து ...". **ஆயிற்று** 1002/4. "நீ வந்து ஸந்நிஹிதன் ... எனக்கு உபகரிக்கைக்கன்றே." ஆனது.

**ஆயினாய்** 441/2. ஊழி ... ஆழி முன்னேந்தி*. **ஆயினான்** 1024/1. ஆகாயமு மிவை ... *. **ஆயினை** - ஆனாய். மதிட்கோவ லிடை கழி ... *.

**ஆயுமாய்** 754/1. அல்லவற்றுள் ... *. ஆகியும். எவ்வதெய்வத் துள் ... 3411/1.

**ஆயே** 3325/1. இவ்வுலகத்து ... *. ஆயே என்றது தாயே என்றதாய் தாய்போல் பரிவானவனே. **ஆயேவிடும்** 1546/4. ஆகியே தீரும். [ஒட்டும் சொல்.

**ஆயோ** 2487/4. ... அடுக்தொண்டையோ *. கிளி குருவிகளை

**ஆர்க்க** 120/2. த்வநிக்கும்படி. சிலம்பு ... ப் பாய்ந்தாடி *. ஆர்க்க - கதறக் கதற. செவியொடு மூக்கு ... அரிந்தான் *. 314/4. **ஆர்க்க** -இறுக்கிக் கட்ட. கோவ வாய்ச்சி புரலோடு ... *. 3487/1.

**ஆர்க் கடலாம்** 2653/4. ... செவ்வே படர்த்து *. யார் அடர்க்க முடியும். ஆர்க்கு அடர்க்கப் போகும். ஒருத்தர்க்கும் அடர்க்கப் போகா தென்றபடி.

**ஆர்க்கிடுகோ** 588/4 ... தோழீ! அவன்தார் செய்த பூசலையே *. யார்க்குச் சொல்வோம். [கூப்பிடுவோம். யாரைக் கூப்பிடுவோம்.

**ஆர்க்கிடுகோ இனிப் பூசல்** 3687/2. ஆர்க்கு இனிப் பூசலிடுகோ-

**ஆர்க்கு மெய்தாது** 612/3 எப்பொருட்கும் நின்று ...*. யாருக்கும் கிடைக்காது. [லே கூப்பிடுவேம்.

**ஆர்க்கோ இனி நாம் பூசலிடுவது** 597/3. இனி நாம் ஆர் வாசலி

**ஆர்கடல்** 1898/3. பொங்கு ...லும் பொருப்பும் *. பெரிய கடல் 3236/4. ஆழ்ந்து ... பள்ளி அண்ணல் *. அகன்ற கடல், பரந்த கடல்.

**ஆர்கலி நம்பி** 1615/1. கடி ... *. ஆர்கலி-கடல், அதிலே சாய்ந்த குளிர்ந்த நம்பி- கல்யாண குண பரிபூர்ணன்.

**ஆர்கழல்** 2366/1. கண் ...போய் *. அழகிய திருவடி. **ஆர் செல்வம்** 1624/4. ஆகுதியின் புகை ... *. ஆர்தல் - பொருந்துதலாற் அழகிய செல்வம்.

**ஆர்த்த தழும்பு** 2103/4. தாம்பே கொண்டு ...*. உறைக்கக்கட்டின தாலுண்டான தழும்பு. **ஆர்த்தது** 319/4. ... போரடையாளம் *. பங் நித்தது. **ஆர்த்தன** 3980/3. கடல்கள் நின்று ... *. கோஷித்தன,

**ஆர்த்தார்-ஆரத்தார்.** 2472/3 ஆடரவு ... *. ஆரமாகவுடையவர்.

**ஆர்த்துப் புடைக்க** 1888/2. ... ப்புடை யுண்டு*. கட்டியடிக்க.

**ஆர்த்தும்** 3353/2. தொழுது தொழுது நின்று ... *. ஹர்ஷ கோலாஹலம் பண்ணுவோம், ஆரவாரிப்போம். [யாக.

**ஆர்தரப் பாடிய பாடல்** 1267/3. பண்ணுவர் ... *. பொருந்தும் படி

**ஆர்ந்த ஞானச் சுடர்** 2952/3. ... ஆகி அகலம் கீழ் மேல் *. பரிபூர்ணமான ஸ்வயம் ப்ரகாசமான ப்ரபை. **ஆர்ந்த புகழ்** 3175/2. ... அச்சுதனை *. மிக்கிருந்துள்ள புகழ். **ஆர்ந்த வடி** 2261/2 ... க்கோலம் கண்டார்க்கு * அளக்க, ஆர்ந்த – பரிபூர்ணமான திருவடி.

**ஆர்ந்த வடிப்போது** 2358/4. ... நாங்கூரான் *. பரிபூர்ணமாய் அதாவது அபேக்ஷிதத்தைச் செய்யவற்றாய் போக்யமான திருவடி. போது என்பதால் போக்யதை. **ஆர்ந்தேன்** 2261/2 உன்சேவடிமேல் ... *. ஸ்நேஹித்தேன்.

**ஆர்ப்ப** 42/2. சதங்கை கலந்தெங்கும் ... *. தொனிக்க. **ஆர்ப்பதும்** 1966/2. மன்னு மறிகடல் ...*. கோஷிப்பதும்.

**ஆர்ப்பரவம்** 557/அவ." ... பண்ணி அவ்வார்ப்பரவத்திலே எதிரிகள் கெடும்படி இருப்பான்." கோஷம்.

**ஆர்ப்பு** 1595/4. ... ஓவா அணியார் வீதி *. ஆரவாரம்.

**ஆர்படுவான் நேமி** 3361/3. ... அரவணையான் *. ஆர் படுகை – கூர்மை புண்டாகை. ஆர்- கூரிக (கூர்ச்சு). வான் நேமி – பெரிய சக்கரம். கூர்மையுடைய பெரிய திருவாழி. **ஆர் மலியாழி** 1934/1. ... சங்கொடு பற்றி *. கூர்மை மிக்க திருவாழி. **ஆர் முலை** 1416/1. பேயின் ... *. நிறைந்த முலை. இங்கு பூதனை யானையாலே விஷம் நிறைந்த என்று பொருள். **ஆர் முழவு** 1260/3. கொண்டல் ...*. மிக்க கோஷம்.

**ஆர்வச் செற்றச் சுற்றம்** 1469/1. துறந்தேன் ... *. ஆர்வம்- ப்ரீதி. செற்றம்-விரோதம். இவற்றுக் குடலான பந்து வர்க்கம். **ஆர்வச் செற்றம்** – ப்ரீதியும் விரோதமும். **ஆர்வச் சொல்** 735/1. அம்மாவென் றுகந்தழைக்கும் ... *. ப்ரேமம் வழிந்து புறப்பட்ட சொல்.

**ஆர்வண்ணத்தாலுரைப்பார்** 335/4. ...அடிக் கீழ் *. வண்ணத்தால் ஆர் உரைப்பார். ஸ்வச்சத் தத்தால் ஆர் உரைக்கு மவர்கள். வண்ணத்தால் ஸாதரமாக பூர்ணமாக ஆர்தல் -பருகுதலாய் பருகுவாரைப்போல, அம்ருத பாகம் பண்ணுவாரைப் போல உரைப்பார்.

**ஆர்வம் புரிய பரிசு** 2131/2. ... சினால் புல்கில் *. ஸ்நேஹம் மிக்க ப்ரகாரம். [பிரான் *. ஆரேன், தருப்த னுவேனே

**ஆர்வனோ** 3655/4. சிந்தித்து ... *. 3656/1. ... ஆழியங்கை யெம்

**ஆர்வுற்ற என்னை** 3845/2. ··· பொழிய என்னில் *. மனோரதித்துக் கொண்டிருக்கிற. [யும்படி கற்கில்.

**ஆரக் கற்கில்** 3197/4. ... சன்மம் செய்யாமை *. நெஞ்சிலே படி

**ஆரத் தழுவாய்** 98/4. ... அந்தோ அந்தோ *. 102/4. ... வந்தச்சோ வச்சோ *. பூர்ணமாக அணைத்துக் கொள்ள வேணும். **ஆரத்தொழுது** 3201/4. கைகளால் ...*. மிகவும் தொழுது.

**ஆரதறியார்** 2233/2. அறம் பெரியன் ... *. ஆர் அதறியார்.

**ஆரது**–ஆருடையது. " ப்ரமேயமாண வஸ்து ... " " **ஆரதை** யாருக்குத் தந்தீர் " 3034/4.

**ஆரப் பருக** 3994/4. ... எனக்காரா வமுதம் *. பூர்ணமாகப் பாணம் பண்ண. **ஆரப் பெருகு** வானம் 643/3. அருந்நித் தாரா கணங்களால் ...*. மிகவும் நிறைந்துள்ள ஆகாசம்.

**ஆரமார்வன்** 664/2. ...அரங்கன் *. ஹாரத்தைத் திருமார்விலே உடையவன். **ஆரமுதம்** 1239/2. குருமணியென் ...*. த்ருப்தியை உண்டாக்கும் அம்ருதம். **ஆரமுதம் தந்த வள்ளல்** 1853/2. வானை ...லே *. த்ருப்தி யுண்டாக்கின அம்ருதம். தேவலோகம் க்ருத க்ருத்யமாம்படி அம்ருதத்தைத் தந்த உதாரன்.

**ஆரமுது** 3204/1. ஆவியே ... தே*. ஆர்ந்த வமுது. பூர்ணமான அமுது. தேவஜாதியின் அம்ருதத்தில் வேறுபாடு. அமுதிலுமாற்ற அமுதமிறே அவன். உள்ளுந்தோறும் தித்திக்கும் அமுது. நெஞ்சிலே வைத்து நினைக்குந்தோறும் ஆற்ற வினியன்.

**ஆரரவம்** 1799/1. துங்கு ... த்திரை வந்து *. பெரிய ஆரவாரம்.

**ஆரருள்** 2205/1 ... ளும் கேடும் அவன் கண்டாய் *. பூர்ணமான க்ருபை. [வகை.

**ஆரல்** 1352/3. செய்யார் ... இரை கருதி *. ஆரல் என்ற மீன்

**ஆரலங்கல்** 2459/1. ... ஆனமையால் *. வாடிப் போன மாலே.

**ஆரவாரம்** 2391/1 ஆங்கு ... அது கேட்டு *. சப்தம். **ஆரவாரிப்ப** 86/3. உடன் கூடிக் கிண்கிணி ... *. சப்திக்க.

**ஆர விழுங்கிய** 62/1. தடங்கை ... *. வயிறுர விழுங்கிய. **ஆரழலோம்பு மந்தணன்** 1940/4. அதிகமான அக்கி. அதைப் பரிசர்யை பண்ணவே காலம் போக்கிருக்கிற பிராம்மணன். **ஆரளாவும்** 1440/3. தன் பொன் வயிறு ... *. நிரம்புமளவும்.

**ஆரன்** 180/4/. மின்னிலங்கு ... ந்கோர் *. ஹாரம் தரித்தவன்.

**ஆரா (?)** ஆராது. நிரம்பாது, [சாதியாளுலும்.

**ஆராகி** 2663/3. ... எவ்விழி விற்றுளுலும் *. ஆராளுலும், எந்த

**ஆராட்சி தோற்றச்** செய்யும் செயலாயிற்று. 1922/1. விசாரணை, ஆராய்ச்சி என்று பொருள்.

**ஆராத காதல்** குருகூர்ச் சடகோபன் 3019/2. எம்பெருமானிடத்தில் ஒருகாலும் திருப்தி பிறவாத அபிநிவேசத்தையுடைய ஆழ்வார்.

**ஆராத தன்மையன்** 2700/1. ... ஞையாங் கொரு நாள்*. திருப்தி பிறவாத ஸ்வபாவத்தை யுடையவன். **ஆராத போர்** 2719/1. ... நில சுரர்களும்*. ஆர்தல் – நிறைதலாய் அசுரர்க்குக் கார்ய கரமாகாத போர். **ஆராத வந்தாதி** 151/4. ... பன்னிரண்டும்*. ஒருகால் அநுபவித்து திருப்தி பிறவாதே மேல் மேலும் அபேக்ஷிக்கும்படி நிரதிசய போக்யமான அந்தாதி. **ஆராதாய்** 3105/4. ... எனக்கென்று மெக்காலே*. போதும் என்று சொல்லும்படி திருப்தி யுண்டாக்காமல் மேலும் மேலும் ஆசையை விருத்தி செய்பவனே.

**ஆராமஞ் சூழ்ந்த அரங்கம்** 2743/2. ஆராமம் – தோட்டம், புறச் சோலை, உத்யான வநம். புறச்சோலைகளான உகந்தருளின நிலங்களால், மற்றைய கோயில்களால் சூழப்பட்ட அரங்கம் – ஸ்ரீரங்கம்.

**ஆராமை** 3995/2. மனக்கு ... மன்னி*. திருப்தி பிறவாமை. “தான் தன்னை அநுபவிக்கும்போதும் கூட்டுத் தேட வேண்டும்படி யாயிற்று ... இருக்கும்படி”. 3418/1.

**ஆராய்ச்சி** – விசாரணை. “தனியிடத்திலே செய்ததுக்கு ... இல்லை” 531/1. “ ... ப்படும் செயல்கள்” (?) கேள்வி. விசாரணை பிறக்கும் செயல்கள். “இவளாரென்று ... ப்படுமிறே” 3442/1. “ ... இல்லாத இடத்தே செய்யுமவற்றைச் செய்யாதே” 3467/1. அராஜகமான தேசம். “ ... ப்படும்படியான செயல்” 3927/1. ப்ரஸித்த மாம்படியான.

**ஆராய்ந்தருள்** 481/8. ஆவாவென்று ... *. தம்முடைய குறைகளை விசாரித்து கிருபை பண்ணும். இங்கே அருளும் — என்பதன் விகாரம்

**ஆராயா** 2073/1. நைவள மொன்று ... *. ஆராய்ந்து. [அருள்.

**ஆராயிடுக** 3109/4. “நான் ... ; உன்னை அநுபவித்து மகிழும் படி பண்ணியருள வேணும்”. ஆராணுலும் ஆகட்டும். ஆராணுலும் ஆயிடுக.

**ஆரார்** 997/3. ... உலகத் தறிவுடையார்*. ஆர்? ஆர்? [டார்.

**ஆரார்** 1981/1. பெற்று ... ஆயிரம் பேரானை *. இருப்தராக மாட்

**ஆராவமுதம்** 630/3. ... அனையான் தனமுத வாயில் *. ஆராத– திருப்தி பிறப்பிக்காத, அமுதம் –அமிர்தம். **ஆராவமுதன்** 316/4. ... னைப் பாடிப்பற *. அம்ருதம் போலே அநுபவிப்பார்க்கு நிரதிசய போக்யன்.

**ஆராவமு தாழ்வார்** ... ரமித்து வர்த்திக்கிற தேசம். 949/3. கும்ப கோணம் பெரிய பெருமாள்; உத்ஸவர் சார்ங்க பாணிப் பெருமாள். ஆழ்வார் என்ற பெயர் பிரபந்தம் அருளியவர்களுக்கு மட்டுமே ஏற்பட்

பட்டது. அவர்கள் பகவத் குணத்தில் ஆழ்ந்தமையா லுண்டான பெயர் இது. கும்பகோணத்து மூலவர் திருமழிசை யாழ்வாரிடம் ஈடுபட்டவரா கையால் பெருமாள் ஆழ்வாராகி, ஆழ்வார் பிரானுனர். திருமழிசைப் பிரான் என்றும் ஆராவமுதாழ்வார் என்றும் மாறிற்று.

**ஆராவமுது** 3417/4. வானேர்க்கு ... தே *. நிரதிசய போக்யன். 3418/1 ... தே அடியே னுடலம் *. ... தாய் அடியேனுவி 3427/2. நிரந்தரா நுபவம் பண்ணினுலும் த்ருப்தி பிறவாத நிரதிசய போக்ய பூதன். காட் செல்லச் செல்ல விடாயைப் பிறப்பிக்கும் விஷயம்.

**ஆரா வயிற்றன்** 3969/3. ... னை அடங்கப் பிடித்தேனே *. நிறை யாத வயிற்றை யுடையவன்.

**ஆரா வன்பிளையவன்** 723/2. ... னுடருங்கானம் *. குறைவற்ற அன்புடைய இளைய பெருமாள் (லக்ஷ்மணன்).

**ஆராவின்னமுது** 233/2. ... ண்ணத் தருவன் *. ஒரு காலும் தெகு (வி) ட்டாததாய் இனிதாயிருந்துள்ள அமுது. [திரு வாழி.

**ஆராழி** 2286/4. ... கொண்டா ற்கழகு *. ஸௌந்தர்ய பூர்ணமான

**ஆரானும்**–ஆராவது. "சொல்லிற்றுங் கொள்ளேன் *. 2687/1.

**ஆரானு மல்லன்** 2696/2. யாரோ ஒருவனென்று சொல்லும் படி நமக்குத் தெரியாதவனல்ல. [ எதுவானுலும் செய்ய.

**ஆரானு மாதானும்** செய்ய 2609/1. ... அகலிடத்தே *. யார்

**ஆரானு மாதானு** மல்லளவள் 2737/2. ... காணீர் *. ஆரோ ஒருத்தி யல்லள்.

**ஆரானுழ** 2169/4. "காட்டார் நரகம் புகிலென், தவறிலென், ஆரானுழ." ஆர்தான் பிறருக்கு துஃகப்படுவார் – என்றபடி. உழல என்பது உழ எனக் குறைந்தது.

**ஆரிடர்** 2722/1. என் ... ரை நீக்காய் *. பெருந்துன்பம்.

**ஆரியம்** 2055/2. "... த்தைச் சொல்லி அதனுடைய சிதை வாகை யாலே பின்னை தமிழைச் சொல்ல". ஸம்ஸ்க்ருதம். ஆரியர்கள் இகழ்ந்த தெற்கில் திக்கு" 3960/3 (24). ஆரியர்கள் தெற்குத் திக்கை இகழ்ந்த ராகச் சொல்லுகிருர் பெரியவாச்சான் பிள்ளை. [3466/4.

**ஆரின** – ஆருடையன. "அவைதான் நீ ... என்றிருக்கிருய்"

**ஆரும் புகழ்** 327/3. பார் ... ப்புதுவை *. நிறைந்த புகழ்.

**ஆருயிர்க்கோது** 3841/2. என் ... *. ஆருயிராயினும் கோது – நிஸ் ஸாரம். கோதான ஆத்மா. நிஸ்ஸாரமான ஆத்மா.

**ஆருயிரார்** 3620/4. என்னுடைய ... *. ஆத்மாவினுடைய ஹேய தயை (புன்மையை) நினைத்துப் பேசுகிருர் ஆர் என்பதால். ஆத்மா வானவர் என்பது போல ஆருயிரார்.

**கனி வாய்க் கிள்ளை** 1802/4. ... பேசும் குறுங்குடியே *. **கனி வாய்ப் பெருமான்** * 3451/3. கனிந்திருக்கிற திருப் பவளத்தை யுடையவன். திருப் பவளம் – உதடு.

**கனிவார் வீட்டின்பமே** * 3035/2. உளங் கனிந்தவர்களுக்கு மோக்ஷ ஸுகமா யிருப்பவன்.

**கனை கட லரவம்** 921/2. ... ... கனி வண்டு மிழற்றிய *. விம்மல் பொருமலாய்ப் படுகிற கடலின் இரைச்சல். கனைதல் - கோஷித்தல்.

**கனை கழல்** 3185/4. தேர் கடவிய பெருமான் ... *. ஸுஸ்வரமான வீரக் கழல், கனைக்கிற கழல், செறிந்த திருவடிகள். செறிந்த கழல் என்னும் அர்த்தத்தில் கனை கழல்; அப்போது ஐ அசை.

**கனைத்த தீ** 1014/3. ... யும் கல்லு மல்லா *. எரிகிற போதை வெடு வெடென்கிற த்வனியை யுடைத்தான தீ.

**கனையா ரிடி குரல்** * 1784/1. ஆர்தல் – மிகுதல். மிகவும் கர்கரமாய் கறுமுறடாய் இடி போலே யுருக்துள்ள குரல்.

**கனையிருள்** 3015/4. வாழி ... ... னே *. கனைத்துக் கொண்டு செறிந்து வருகிற இருள்.

**காக்ககில்லோம்** 202/2. கல்வி தன்னைக் ... *. காக்க மாட்டுகிறிலோம். **காக்கணம் பூ** 2917/4. கணவலர் என்று காக்கணத்தையும் ஆம்பலேயும் சொல்லும்.

**காக்குமா சொல்லீர்** 2844/2. என்னிதனைக் ... ... *. காக்குமாறு சொல்லீர். **காக்கை நோக்குகை பணியாயிருக்கும்** 3345/4. காக்கை குத்தாமல் கொத்தாமல் பார்க்கை.

**காக்கைப் பிள்ளாய்/ளை** 1943/2. ... கரையாய்*. காக்கை. அதைப் பிள்ளை யென்று கொண்டாடுவது அது ஸர்வேச்வரன் வரும்படி கரைய வேண்டியதால்.

**காக்கைப் பொன்** 3130/4. " ஒருவன் ஒரு குழமணனைப் பண்ணி அதன் கழுத்திலே ... ணைத் தோற்றி ". பொன்னிறமான காகிதம். குருநாப் பட்டை என்று பொம்மைகள் மேல் ஒட்டுவது; காக்காப் பொன் என்று நாம் கொச்சையாகச் சொல்லுவது.

**காக்கை வாயிலும்** கட்டுரை கொள்வர் * 433/4. அறிவுடையார் காக்கையின் அசுத்தமான வாயிலிருந்துண்டான நற் சொல்லையும் ஏற்றுக் கொள்வர். **காகம்** 1500/3. மணி முடி மேல் ... ஏற *. காக்கை.

**காகுத்த நம்பி** 3514/3. எங் ... க்கு *. ஸர்வகுண பரிபூர்ணனான காகுத்ஸ்தன், ராமன். நம்பி - பூர்ணன்.

**காசாங் தோப்பு** 3462/ப்ர. காயாம் பொழில்.

**காசின் வாய் கரம்** விற்கிலும் 869/1. கழஞ்சுப் பொன்னுக்கு ஒரு பிடி நெல் விற்கும்படியான காலத்திலும். வாய் - இடம். காசின் வாய் காசுக்கு - பொற்காசுக்கு. இன் சாரியை. காசுவாய் - காசுக்கு.

**காசி னொளி** 1331/3. ... யில் திகழும் வண்ணம்*. பொன்னொளி.

**காசு** 349/3. முறியாழியும் ... ம்*. பொற் காசு. **காசும் பிறப்பும்** 480/3. ... கல கலப்ப *. அச்சுக் காசு கோத்த காசுமாலை. அச்சுத் தாலி பார். **காசை யாடை** 1058/1. ... மூடியோட *. காஷாய வஸ்திரம். **காட்கரையப்பன்** 3845/4. திருக்காட்கரையிலே நிற்கிற பெருமான்.

**காட்சிப் பழகிக் கிடப்பேன்/னை** 627/1. காட்சியிலே பழகிக் கிடக்கிற என்னை.

**காட்சி** 2483/அவ. கிளவிச் துறையில் பிரதமத்தில் பிறக்கும் திருஷ்டி பந்தம். **காட்சியாள்** 2810/2. கன்னியரை யில்லாத ... *. பெருமையை யுடையவன்.

**காட்டகம்** 2833/2. கன்னவிலும் ... த்தே*. காடு. **காட்டி நடந்தால்** 1328/4. ஒருகால் ... *. நடந்து காட்டினால்.

**காட்டீரானீர்** 1334/3. ... நுந்தமடிக்கள் *. காட்டாமற் போனீர்.

**காட்டும் கலந்து** 2367/4. கார் வானம் ... *. கலந்து காட்டும். **காட்டுப் பழம்** 1658/1. " மலைத் தேனும் ... ... மும் ". மலைத் தேன் போலே காட்டுப் பழமும் சிரேஷ்டமானது.

**காட்டு மின்கள்** 3588/1. காலம் பெற என்னைக் ... *. காட்டுங்கோள். **காட்டேன்மின்** 3831/4. ... ... நும் முயிர் *. காட்டாதே கொள்ளுங்கோள். **காடர்** 3088/2. காட்டிலே யிருக்குமவர்கள். **காடிச்சால் மூலை** 937/அவ. கழுநீர்ச் சட்டி வைக்கும் ஈசான்ய திக்கு.

**காடு கைக்கல்** 3786/4. " புறம்பே நின்று பரக்கக் ... லாவநித்தனை போக்கி சுருங்க ஒரு பாசுரத்தாலே சொல்லலாவதில்லை." சொல்லுகிறவனுக்கே வாய் கைக்கும்படி வர்ணிப்பது. வாய்க்குக் கேடாய்ச் சொல்லுகை. பேசின இடமெல்லாம் கைக்கையில் பேசின வாயும் கைக்கும் என்றபடி. காடு என்பது இடமென்றபடி.

**காடு படும்படி** 3433/4. " ஐசுவர்யம் அவனுக்கு ... யிறே பார்த்தது." ஸம்ருத்தமாம்படி, காடாக வளரும்படி.

**காடு மேடையுமான** பரப்பு 2072/பட். **காடும் மேடுமா யுள்ள** என்பதன் கொச்சை. **கடு மோடையும் அளந்து** 3697/3. காட்டையும்

அதிலுள்ள ஓடையையும் கணக்கிட்டு. காட்டையும் மேட்டையும் அளக்கிறான் என்று சொல்லுவதுண்டு.

**காடு வாழ் சாதி** 624/1. ... யுமாகப் பெற்றான்*. ஒருரிலே தங்குகை யன்றிக்கே பசுக்களுக்கு நீரும் புல்லு முள்ள இடத்தே தங்குமவர்கள். **காடு நிறைக்க பொன்னடிக்கள்** 1992/3. காடுகளில் ஸஞ்சரித்த திருவடிகள்.

**காண்க** 2392/1. ... கண் *. காணவேணும். காணக்கடவதாக. **காண் காணென** விரும்பும் கண் *. 2316/1. காண ஆசைப்படும் கண்கள். **காண்கிலர்** 1056/2. பணிந் தேத்திக் ... *. காணப் பெறுர்.

**காண்கிற்பார்** 2049/4. மெய்ம்மையைக் ... ரே *. காணவல்லார்.

**காண்கின்ற கடல்** 3398/3. ... எல்லாம் யானே*. காண்பார்க்குக் கண்டதாய்த் தலைக் கட்ட முடியாத பரப்பை யுடைத்தான கடல்.

**காண்குற்ற வப்போது** 2240/2. பொருள் தெரிந்து ... *. காணவுற்றபோது. **காண்கேன்** 3724/4. உன்னை யெங்கே ... ... னே *. காணக்கடவேன்.

**காண் கொடான்** 3689/4. அவனவை ... *. காட்டிக் கொடான். காணக் கொடான். காட்டான். **காண் கொடுப்பா னல்லான்*** 3690/1. **காண்டலின்றி** 3488/3. ...வளர்த்து*. காணுமல், அறியாதபடி. **காண்டவம்** 1089/4, ... த்தைக் கனலெரிவாய்*. **காண்டாவனம்** 1079/1. ...என்பதோர் காடு*. **காண்டி** 148/3. பெருக்கித் திரியவும் ...*. காண், காணுயே. **காண்டும்** 606/4. அது ... *. காண்போம். **காண்டோறு** 2567/3. ... அசுரர் குழாம் *. பார்க்குந் தோறும். **காண் தகு தாமரைக் கண்ணான்**. 3683/3. காணத் தக்கிருந்துள்ள கண்களை யுடையவன்.

**காண் பரியாய்** 3815/3. என்றும் ... *. காண அரியனுன நீ. **காண்பா னவாவுவன்** *. 2561/3. காணவேணு மென்று ஆசைப்படா நிற்பன்.

**காணக் கழி காதல்** 2237/1, ... கை மிக்கு*. காணக் காண மிகாநின்ற காதல். **காணக் கொடாள்** 3394/1. அன்னை ... *. காண இடக் தருகிறிலள். **காணப் பணி** 2245/4. பரு மொழியால் ... *. அநுபவிக்கும்படி அருளிச் செய். **காணப் பொதி யவிழும் பூவைப் பூ*** 2170/3, காணக் காண அலரா நின்றுள்ள பூவைப் பூ. **காணலு மாங்கொல்** 2569/2. ... என்றே வைகலும் *.

**காணுது திரி தருவேன்** 1094/4. ... கண்டு கொண்டேன் *.

**காணு(க்)கண்** 2092/4. ... கேளாச் செவி *. கண் காணுது. **காணுமே** போவோம் 526/4. பல்லாரும் ...*. காணுதபடி போகிறோம்.

**காணுக் கண்ணிட்டு** 1029/4. "ஆனே, பெரிய குற்றங்களைக் ... ட்டுப் பொறுக்க வரிய செய்யவற்று யிருக்கை." 3158/3. "இவன் ப்ராமாதிகமாகப் பண்ணும் பாபங்களையும் ... ணிட வல்லனுயிருக்கை." 3657/4, 3737/ப்ர. இந்த நாலு இடத்திலும் அரும்பதம் மௌநம். மறைவாயிருந்து காண்கை யென்று பொருளாக வேண்டும்.

**காணுக் கோல்** 2483/1, 2552/1. கடைக் கண் பார்வை யாகை யாலே வருகிறது தெரியாமல் பட்டபோது தெரிகை. அம்புக்குப் பேர்.

**காணி** 75/4. ... கொண்ட கை *. பூமி.

**காணிய பேதுற்று** 3207/2. உன் கழல் ...*. காணவேணு மென்று அறிவு கெட்டு, ஆசைப் பட்டு, ஈடுபட்டு.

**காணியை உத்தரித்த கட்டனே** 1948/1. பூமியைப் ப்ரளயத்தி னின்றும் வெளியே எடுத்தது உத்தாரணம் செய்தது.

**காணி** லொட்டார் 526/1. எம்மனேமார் ... *. காணில் ஸம்மதி யார். **காணுடைப் பாரதம்** 3598/4. ... கையறை போழ்தே *. தர்ச நீயமான காணத்தக்க மஹாபாரத யுத்தம்.

**காணே** 552/4. அவனை நான் செய்வன ... *. காண்.

**காத்தளிக்கும்** 2936/1. கல்கித்தான் ... *. காப்பதும் செய்து கிருபையும் செய்வான். **காத்தான்** 1304/4. காங்கைக் காத்தனே *. காவல் பூண்டிருக்கிறவன்.

**காத்தனை** 2191/2. மண்ணிரந்து ...*. காத்தாய். **காத்தி** 1743/4 தொடாமை நீ ... *. காத்திருப்பாய்.

**காத்தும்** 3223/1. பரிவின்றி வாணனைக் ... *. காக்கக் கடவோம்.

**காத்தூட்ட** வல்ல பரிகரத்தையுடையவன் 3217/2. காத்து அநு பவிப்பிக்கை. "படுக்கையும் தானேயாய் ... வும் வற்றுயிருக்கை". 3432/4. விரோதிகள் வராமல் காத்து புஜிப்பிக்கவும் வற்று யிருக்கை.

**காதக் குதிரை** 471/1. "... கட்டியாய்த்து வந்தது." அஞ்சலிலே குதிரை வைச்கை. காதத்துக் கொரு குதிரை. காதம் போகும் குதிரை.

**காதம்** 456/1. ... பலவும் கிரிக்து*. பெரியன ... பொருட்கோ *. 2488/2. நெடுந் தூரம்.

**காதல் கூர** 3305/3. ... மட வன் னெஞ்சம்*. காதல் மிக விஞ்சி வர. **காதல் செய்யுந் தொண்டர்** * 663/4. பக்தர்.

**காதல் நோய்** 3017/1. கொந்தாரை ... *. பிரேம வ்யாதி. **காதல் மக்கள்** 1425/2. ... ளைப் பயத்தலும் *. பிரியமான குழந்தைகள்,

**காதல் மகளிர்** 2990/1. உடனமர் ... *. காதலுடைய பெண், பெரிய பிராட்டி. **காதல் மகன்** 2373/2. ... னைச் சிறை செய்த *. **காதல் மென்** பெடை * 3452/1. **காதல் மைய லேறினேன்** * 3261/2. ஸ்நேஹத்தால் மதி கெட்டேன். மையல் – பிச்சு. **காதல் வெள்ளம்** 1225/2 **காதலன்** 689/1. ... தான் செய்திடினும் *. **காத லாதரம்** 1419/2. ... கடலினும் பெரிது *. காதலின் காரியமான ஆதரம். **காதலிமார்** 1278/1. மற்றவர்தம் ... *.

**காத லுற்ளுர்** 2574/4. ... க்கு முண்டோ கண்கள்*. காதல் முறுகு கொளுந்தினவர்கள், த்ருடமானவர்கள்.

**காதற் களிறு** 3129/2. தொழுங் ... *. **காதன்** 1569/3. மகரக் குழைக் ...*. **காதன்மை** 2999/1. கண்ணுள்ளே நிற்கும் ... *. பக்தி, ஆசைப்பாடு. **காதான்** 2445/2. பொன் மகரக் ... னை *. **காது செய்வான் கூதை செய்து** * 3789/2. காது பெருக்கப் புக்கு பண்டுள்ள காதையும் மூளி யாக்கி.

**காதுப் பணி** (?) காதணி. **காது மறியும்** 144/3. ... பொறுத் திறைப் போது *. மறியும் – தண்டு புரளும், காது அற்றுப் போம் – அறுந்து போகும்.

**காந்தப்பர்** 280/3. அம்பரம் திரியும் ... *. கந்தர்வர்கள்.

**காந்தள் முகிழ்** விரல் 329/3. ... சிதை *. செங்காந்தள் முகிழ் போலே யிருக்கிற விரல்.

**காப்பணிவான்** 2424/2. கங்குல் புகுந்தார் ... *. இருவந்திக் காப்பெடுப்பான். **காப்பு நாண்** 559/4. ... ... கட்ட *. காப்பு நூல், ரக்ஷா பந்தநம். **காப்புன்னை** புன்னைக் கழியும்* 2156/1. உன்னை யுன்ன – தியானித்தால், காப்பு – காவலாய் புரவர் போலுள்ள மிருத்யு, கழியும் – போய் விடும். புரவர் – தலையாரி.

**காபாலி** 45/3. விடையேறு ... *. கபாலத்தை யுடையவன்.

**காம்பணை தோள்** 3059/2. ... பின்னை *. சுற்றுடைமைக்கும், செவ்வைக்கும், பசுமைக்கும் மூங்கில் போலே இருந்துள்ள தோள். காம்பு-மூங்கில். **காம்பு கனவலை** 51/1. கச்சொடு பொற்சுரிகை ... *. சிறுக் காம்பன் சேலை, எழுத்துச் சிற்றுடை. காம்பும் கனவலையும்.

**காம்பு** 909/3. ... அறத் தலை சிரைத்து *. பற்று, தொற்று, ஒட்டு. **காம்புடைக் குன்றம்** 1288/2. ... ஏந்தி *. மூங்கில் வளரும் மலை.

**காம்பு துகில்** 184/2. ... அவை கீறி *. துகில் காம்பு – பணிப்புடவைகளின் விளிம்பு, கரை, தலைப்பு.

**காம்புலர** விட்டுக் காய்ச்சி (வா. மா. 90). கள்ளி.

**காமக் கதிர் வேல்** 1497/3. ... வல்லான் *. காமம் - ப்ரகாமம், மிகுதி. மிக்க புகரை யுடைய வேல்.

**காமங்கள்** 502/8. மற்றை கம் ... *. விருப்பங்கள். **காமத்த ராயினர்** 2736/2. கடல் போலும் ... *. **காமத் தீ** 578/3. ... ... யுள் புகுந்து *. காமாக்கி. **காம தேவன்** 505/2. ... வா மூயன் றுன்னை *. மன்மதன். **காம நீர்** வேளாது 2216/3. ... நின் பெருமை *. காமத்தை யும் நீரையும் விரும்பாமல். **காமர்** 3428/4. மழலை தீரவல்லாக் ... *. காமுகர், பிரியதமர். **காமர் சேவடி** *. 1193/1. ஸ்ப்ருஹணீயமான சிவந்த திருவடி. **காமர் தாதை** 91/4. ... தளர் நடை நடவானோ*. காம னுக்குத் தந்தை, காமனை உண்டாக்கினவன், காமனைப் பயந்த கா னே. **காமர் தென்றல்** 1511/3. ... அலர் தூற்ற*. ஸ்ப்ருஹணீயமான தென் றல். **காமர் பூங் கோவல்** 2167/3. ... இடை கழியே பற்றி *. ஸ்ப்ரு ஹணீயமாய் பூ - அழகியதான திருக்கோவலூர்.

**காமரம்** 547/3. ... கேட்கும் காதலி *. காமரம் என்கிற பண். 722/3. வண்டினங்கள் ... *.

**காமரு குயில்** 3913/2. ... களும் கூவுமாலோ *. அழகிய குயில். காவிலே மருவிய குயில், பரஸ்பரம் விருப்ப முடைய குயில். **காமரு சீர்க் கலியன்** * 1797/3. கண்டார்க்கு ஸ்ப்ருஹை பண்ண வேண்டும் படியான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடு கூடின ஆழ்வார்.

**காமரு பூங்** காவிரி * 2559/3. கோயிலை நடுவே யுடைத்தாகை யாலே அழகான காவிரி.

**காம ரூபம்** 3900/3. **காமரெழில் விழல்*** 736/2. கண்டார் விரும் பும்படி அழகான விச்வாமித்ரம் என்னும் தர்ப்பை.

**காம வேள்** 513/1. ... ளைக் கழலிணை பணிந்து *. காம ரூ கிற தேவதை. **காமன்** 1684/3. ... றன் தாதை *. மன்மதன்.

**காமின்கள்** 2483/4. உயிர் ... *. ரக்ஷித்துக் கொள்ளுங்கோள்.

**காமுற்ற கையறவு** 3011/1. ... வோடு எல்லே *. விரும்பின பொருள் பெறாத துக்கம். கைத்து - பொருள். அறவு - இழவு. கைத்து என்பது கையென்று குறைந்திருக்கிறது.

**காய் கதிர்ச் செந் நெல்** * 228/1. பசுங்காயான கதிரையுடைய செந் நெல். **காய்ச்சின நீர்** 154/3. நன்றாய்க் காய்ந்த நீர், சூடான வெந் நீர். **காய் சினம்** 1705/2. ... த்த கழுது *. காய்தலும் கோபம், சின மும் கோபம். மிகச் சினம் என்று பொருள்.

**காய் சினத்த** கழுது* 1705/2. ... காசி மன்னன் *. 858/1. **காய் சினப் பறவை*** 3796/4. **காய் சின மா களிறு*** 562/3. **காய்சின வாழி*** 3797/4. **காய்சினவேந்து*** 3797/3. **காய்சின** வேற் கலியன்* 1217/3.

**காய்ந்தது**3484/2. **உரவுநீர்ப்பொய்கை** காகம் ...*. முனிந்தது, ஓட்டியது. **காய்ந்து பொருந்துகை** 524/அவ. மிருத் பாண்டமாதல், இரும்பாதல், பொன்னுதல். மிருத் பாண்டம் மனேக்கு அறுந்தவுடனே கொட்டினுல் அழியும், காய்ந்து கொட்டினுல் நிரந்த்ரமாகப் பொருந்தும். இரும்பு முதலானவை மழு வெழக் காய்ந்தால் நிரந்த்ரமாகப் பொருந்தும். இருவர் கூடினவாறே யிருந்தால் உக்மஸ்தக ரஸமாய் அழிவர்; பிரிந்து கூடினுல் நன்ருகக் கூடி தரிப்பர்கள்.

**காயங் கழித்து** 3216/3. ... அவன் தாளிணை*. சரீரத்தை விட்டு. **காயமலர்** 69/1. ... நிறவா *. **காயாம் பூ மலர்** * 648/3. காயாவின் பூ - அழகு, பூ மலர் - அழகிய பூ.

**காயுங் கடுஞ் சிலை** 3376/2. ... யென் காகுத்தன் *. விரோதிகளை சுட்டுப் பொகடும் கடிய வில். **காயுடை நெல்*** 510/1. பச்சைநெல், பால் மாருத பசுங் காயான நெல். **காயு நீர்** 120/1. ... புக்குக் கடம் பேறி *. கொதிக்கிற ஜலம்.

**கார்க் கடல்** 621/2. ... வண்ணன் *. கருங் கடல், கறுத்த கடல், **கார்க் கண்டன்** 2468/3. ... நான்முகனேடு *. நீலகண்டன்.

**கார்க் கொள்** படாக்கள் * 588/3. மினை கொண்ட படா என்னும் கொடிகள். கொடிகள் மினை கொள்ளுகையாவது— பூத்துக் கிடக்கை. **கார்க் கோடல் பூ** 246/1, 597/1. காந்தள் பூ, சிவனர் கொடிப் பூ, கார் காலத்தில் கோடல் பூ, கறுத்த பெருத்த கோடல் பூ. கார் கறுமையும் பெருமையும். **கார்க்கோடு** பற்றியான் * 2108/4. குளிர்ந்து முழங்குகிற ஸ்வபாவத்தாலே மேகத்தோடு ஒத்திருந்த சங்கு. அத்தைக் கையிலே பற்றியவன். கார் - மேகம், கோடு - சங்கம், கார் போல முழங்கும் சங்கம்.

**கார் கடல்** 316/1. ... லை யடைத்திட்டு*. ஆழத்தின் மிகுதியாலே கருமை மிக்க கடல்.

**கார் கலந்த மேனியான்** * 2670/1. மேகத்தோடு கலந்த, சமமான மேனியை யுடையவன். **கார் காலம்** 584/1. ... த் தெழுகின்ற*. கார்– வர்ஷா காலம். **கார் கெழு** கடல்கள் * 1453/1. மேகங்கள் படிந்த

ஸமுத்ரம். **கார் கொண்டு** 2496/2. ... இன்னே*. கறுத்துக்கொண்டு சிறிக் கொண்டு, கறுப்பு சிறமாதல் நிறையாதல்.

**கார் கொள்** பைம் பொழில் * 1697/3. நிரந்தர மேக ஸஞ்சாரத்தை யுடைத்தான பரந்த பொழில்.

**கார் கொள் வேங்கைகள்** * 964/1. கார்மேகமாய் மேக பதத்தளவும் செல்ல வளர்ந்த வேங்கை மரம். அன்றிக்கே, நீல வேங்கை என்னுதல். **கார்த்த களங் கனி** 2349/3. கறுத்த களாப் பழம்.

**கார்த் தண் கமலக் கண்** * 640/1. மேகத்திலே சிரம ஹரமான தாமரை பூத்தாப் போலே யிருக்கிற திருக் கண்.

**கார்த்தண் முகில்** * 622/1. கார் காலத்தில் குளிர்ந்த முகில்.

**கார்த்தனவே வன் கொன்றைகள்** 2545/4. கருவடைந்து அரும்பின - சினைத்தன. கருவடைந்தாலொரு நிற முண்டிறே, அத்தைச் சொல்லுகிறது. அன்றிக்கே, கார் காலத்தைக் காட்டா நின்றன.

**கார்த்திகை** புதியதுக்குக் குளித்தாள் 2941/3. கார்த்திகைக்கும் குளிப்பார், புதியதுக்கும் குளிப்பார். புதியது - புது நெல் வரும் போது மங்கள ஸ்நாகம் பண்ணி இஷ்ட தேவதைக்குப் பொங்கலிட்டு பக்துக் களும் தாங்களும் புஜிப்பாளிறே. ஆகையாலே கார்த்திகைக்கும் புதியதுக்கும் என்கிறது. ... ... ம் நாம் இடவேணும். (?).

**கார் தழைத்த** திருவுருவன் * 1534/3. ஆகாசாவகாசம் இட மடையும்படியான வடிவை யுடைத்தாய் துளிர்த்துக் கொண்டு வந்து தோன்றுகிற மேகம் போன்ற வடிவழகை யுடையவன்.

**கார் நிறைந்த மேகம்** * 1339/2. கார் காலத்தில் நிறைந்த மேகம். **கார் நீர் என்னக் கதறு** கிற்கும் 2023/1.

**கார்மணி** 1784/1. ... யின் காவாடல் *. கறுத்த மணி. **கார் மலி வேங்கை** 1821/3. ... கோங் கலர் *. கார் கொள் வேங்கையே.

**கார் மன்னு நீள்** வயல் * 1137/2. சினை கொண்ட வயல் கறுப்பாய் திரண்டிருக்கிற தசா விசேஷத்தைச் சொல்லுகிறது. சினை கொண்ட வயல், சினை கொள்கை - செழித்திருக்கை.

**கார் வயல்** 1800/4. மேயுங் குறுங்குடி *. கருவடைந்த பயிர்.

**கார் வான்** 2338/1. பொலிக் திருண்ட ... ... *. கார் காலத்திலே மேகம். **கார் வானத் துள்ளாய்/ன்** 2059/3. வர்ஷுக வலாஹகம் போலே, மழை பொழியும் மேகம் போலே, திருக் கார் வானத்திலே வர்த்திக்கிறவன். இத் திருப்பதிக்குத் திருநாமம் இந் நாயனுர் ஸ்வபாவத்தைப் பற்ற வாயிற்று. பெருமாள் திரு நாமமே ஊருக்கு மாயிற்று.

**காரகத்தாய் 2059/3.** ... *கார் வானத்துள்ளாய்*. *திருக் காரகத்திலே நின்றருளினவன். காரகம் திவ்ய தேசம்.*

**காரகில் 596/1.** *சந்தொடு* ... *. *கருத்த அகில் கட்டை. வைரம் பற்றிக் கருத்த அகில் மரம்.*

**காரணம் 3076/2.** ... *இரிசை கருமம்* *. *க்ரியா ஸாதகம்.* **காரணன் 2308/3.** ... *கீன நீரணை மேல்* *. *ஜகத் காரண பூதன்.*

**காரணி மேகம் 1268/4.** ... *நின்ற தொப்ப* *. *கார் காலத்தில் அழகிய வடிவை யுடைத்தா யிருக்கும் மேகம்.*

**கா ரரக்கன் 1522/1.** ... *கடி யிலங்கை*. *கறுத்த நிறத்தை யுடையவன், அன்றிக்கே தண்ணியன். கறுப்பு தண்ணிமைக்கும் நிறத்துக்கும்.* **காரரவு 2391/1.** *பூங்* ... *. *சிற்றத்தை யுடையஅரவு.* **காராமை 1681/3.** ... *யான கண்ணபுரத்து*. *பெரிய ஆமை.* **காராயன் 1203/4.** ... *என்னுடைய*. *சிரம ஹரமான வடிவை யுடையவன்.*

**காராயின** *காள நன் மேனி* * **3803/3.** *கார் போன்ற என்னாதே கார் தானாயிருக்கிற காள நன் மேனி. கார் - மேகம். காள காராயின நன்மேனி என்று அந்வயிப்பது.*

**காரார் திண் சிலை** * **1255/2.** *காரார் - கருமை மிக்க தென்று சப்தார்த்தம். வயிரம் பற்றி ஒருவரால் சலிப்பிக்க வொண்ணா திருக்கிற வில்.* **காரார் புரவி 2778/2.** ... *ஏழ் பூண்ட* *. *மேகத்திலே ஸஞ்சரிக்கிற குதிரை.* **காரார் புரவில் 1337/2.** ... *மங்கை* *. *மேகங்களினுடைய நிரந்தர ஸஞ்சாரத்தை யுடைத்தான பர்யந்தம், பக்க நிலம்.*

**காரார் வயல் 1637/3.** ... *மங்கை* * *இருள் மிக்கிருந்துள்ள வயல்.* **காரார் வரை 2673/1.** ... *க் கொங்கை* *. *மேகம் படிந்த மலை — என்று மலைக்கு உயரம் சொல்லிற்று.* **காரானை 1088/4.** ... *யிடர் கடிந்த*. *கார் - பெருமை, பெரிய ஆனை.*

**காரிகை மாதர் 1932/3.** ... *கருத்தும்* *. *ஸுந்தரிகளான ஸ்திரீகள்.* **காரி மாறப் பிரான்* 943/1.** *நம்மாழ்வாருக்குத் திருநாமம். காரி என்பவருக்குப் பிறந்த மாறன் என்பவரான பிரான் மஹோபகாரகன்.* **காரி மாறன் சடகோபன்* 3285/3. 3362/3. கா ரிமி லேறு 1791/1.** ... *ற்றணர்* *. *கறுத்த கருத்தை யுடைத்தா யிருக்கிற ருஷபம். இமில்-திமில்.* **காரியப் பாடாலே பிரியிலும் 3526/3.** *காரிய வசமாக.* **காரியப் பாடாக உள்ள 3/3.** *பிரயோஜநமாக.*

**காரியம் நல்லனகள்* 3525/1.** *நல்ல பதார்த்தம். க்ரியத இதி கார்யம் வஸ்து.* **காரினம் புரை மேனி * 664/1,** *கார்த்திரள் ஸ்ருமேனி,*

**காரும் வார் பனி*** 1024/3. மேகங்களும் மிக்க பனியும். காருகை - பெருகுகை. காராகிற்கிற மிக்க பனி.

**காரெள்ளி னுண்டை *** 210/1. காரெள்ளிட்டு வாரின எள் ளுண்டை. கார் - கறுப்பு. கருப்பு எள்ளு.

**காரேழ்** 3969/3. ... கடலேழ் *. புஷ்கலம் ஆவர்த்தகம் என்ற ஏழு மேகங்கள். **காரேற்றிருள்** 2546/1. ... செகிலேற்றின் *. இருளான காரேறு, கறுத்த ருஷபம் போலே மேலெழுச்சி யுடைத்தான இருள்.

**காரொக்கு மேனி*** 102/3. திருமேனி கரு முகில் போல் புகர் பெற்ற படி. **காரோடொத்த மேனி *** 798/1. **காரோதச் சீற்றத் தீ *** 2205/4. படவா முகாக்நியைச் சொல்லுகிறது. காரோதம் - கடல். அதில் சீறுகிற தீ. **காரோத வண்ணன்** 2088/3. ... னே படைத்த மயக்கு *. கறுத்த கடல் போலே இருண்ட வடிவை யுடையவன்.

**கால் கடியர்கள்** ஏத்தப் புக்கால் எல்லை காணப் போமோ * 3127/3. சக்திமாக்கள். **கால் கடுகி வந்தது** 2481/2. வேகமாக வந்தது. **கால் கடையிலே** 1666/4. காலடியிலே. **கால் குலைந்து** பெருமிடறு செய்து கூப்பிடுகிறார். 3539/ப்ர. இருப்புக் குலைந்து.

**கால் கொள் கண் கொடி*** 1156/3. கால் - வெற்றிலைக் கொடி. அத னுடைய கொள் - காம்பு. அது மறையும் படியாகக் கண் தோறும் பல்லி பற்றுகை, கிளைக்கை. கால் கண் கொள் கொடி - வெற்றிலைக் கால்கள் கண் தோறும் கிளைக்கிற கொடி.

**கால் சிதைந்து** 2484/1. மன்னரிட்டுக் ... *. கால் விழுந்து நிலை குலைந்து. **கால் தடவும் *** 1234/3. கண் வளரக் ... ... *. கால் வழிக ளாலே பரம்பா நிற்கும்.

**கால் தாழப் பண்ணும்** 2914/2. அகப்படுத்திக் கொள்ளும். **கால் நடை தந்து** 1800/4. "பேயானது ... இரை தேடிப் போமாயிற்று". **கால் நடை தருவார்** காலிலே விழுந்து தூது விடுகிறார். 3451/ப்ர. நடக்க வல்லார். **கால் நடை தந்தாராய்** ஸஞ்சரியா நிற்பர்கள் 3179/4. நடக்க சக்தியுள்ளாராய். **கால் நலக்கம்** 474/3. "பின்னைகள் ... த் தாலே கறப்பன கடைவன வற்றால் குறைவற்றிருக்கை". அநுபந்தம் பார்.

**கால் பாவாதவன்** 3282/4. "தரையில் ... போக் கற்றுத் தரை யிலே வந்து விழுந்தான்". கால் வைத்து ஊன்றி நிற்கமாட்டாதவன். **கால்வது** 2494/3. சுடர் ... போல் *. உமிழ்வது.

**கால்** பெருத்துப் பொலி சிறுத்தாலும் அளப்பாருண்டோ 2535/4. கால் - மரக்கால், பொலி - நெல். மரக்கால் பெரிதாய் நெல் அற்றும் குறைந்திருந்தால் கூட அதை அளப்பதுண்டோ.

**கால் வலை** 2421/4. ... யிற் பட்டிருந்தேன் *. திருவடிகளாகிற வலை. **கால் வாங்குகை** - பழமொழி பார். **கால் வாசி.** சிலேடை பார். **கால்வாய்** 725/3. " ... களில் மணிகளைக் கொடு வந்து கரையிலே ஏறிடும்". ஸமுத்திரக் கழி.

**கால் விசைத்த** காளை 1763/3. ... ... யர் *. காலால் உதைத்த காளை. **காலக் கழிப்புச்** சொல்ல வொண்ணாது 3205/4. கண்ணழிவு குறை சொல்ல வொண்ணாது.

**காலக் கழிவு** செய்யேல் * 1269/2. காலவிளம்பம் பண்ணாதே கொள். **கால சக்கரத்தாய்/ன்** * 3578/2. காலசக்கரத்துக்கு நிர்வாஹகன். காலத்தை நடத்தும் திருவாழியை யுடையவன்.

**காலடி** 242/3. ... கோவக் கன்றின்* உள்ளடி. உள்ளங் கால், அடிக்கால். **கால நான்கு** 795/3. ... நிறைந்த *. சதுர் யுகம். **கால நேமி காலன்*** 782/1. கால நேமியான அஸுரனுக்கு மிருத்யு.

**காலப் பண் தேன்** 3203/2. ... ... உறைப் பத் துற்ற *. காலாநுரூபமான பண்ணுகிற தேன்.

**கால புருஷ தாநம்** 3917/4. யம பிம்ப தாநம். அப மிருத்யு தோஷ பரிஹாரத்துக்காக யமனைத் தங்கத்தில் வெள்ளியில் செய்து தாநம் கொடுக்கை. **காலம் பெற** 2331/4. ... ... ச் சிந்தித்து *. 3587/4. ... என்னைக் காட்டுமினே *. 3588/1. ... என்னைக் காட்டுமின்கள் *. விளம்பமில்லாமல். **கால மயக்கு** 2495/அவ. தமிழ் இலக்கியத்தில் ஒரு துறை. **காலர்** 3231/2. கரு நாய் கவர்ந்த ...*. காலை யுடையவர். **கால வேல்** 1397/3. ... பரகாலன்*. மிருத்யுவான வேல். மிருத்யு போலக் கொல்லும் வேல்.

**காலன்** 427/3. ... னையு முடனே படைத்தாய் *. யமன். "காலன் கொண்டு மோதிர மிடுமாப் போலே ஸ்வரூப விரோதியானது எனக்கு வேண்டா". 3420/2. "... வானரப் போலே என் பேற்றுக்கு நான் யத்நம் பண்ணுமவளோ." 3914/4. கால புருஷ தாநம் வாங்கி அந்த தங்கத்தைக் கொண்டு குழந்தைகளுக்கு மோதிரம் இடுவது - செய்து போடுவது. **காலனூர்** 2002/3. ... தமரால்*. யமன். **காலனூர்*** 779/3. ... புகப் படைக்கலம் *. யம புரம்.

**காலார்ந்த கதிக் கருடன்** * 654/2. கால் - காற்று. அதினுடைய வேகம் ஆர்ந்த கதியையுடைய கருடன். **காலார் மருது** 1705/2. வலி மிக்க ... ... *. வேரூன்றி வளர்ந்த மருத மரம். **காலாள்** 1490/1. ... அணி கொண்ட *. காலாட் படை.

**காலிகள் காப்பவன்** 65/3. ... னே *. பசுக்களையும் கன்றுகளையும் ரக்ஷிப்பவன். காலிட்டு வாராதே (?). "பல விடங்களிலே ... ...". பல சரீரங்களிலே பட்டு அந்த துர்க்கந்தம் கலசி வாராதே — என்றபடி. **காலிடைப் பாசம்** * 445/2. யமபடர்கள் காலிலே துவக்கி இழுக்கும் பாசம். காலி என்று காற்றாய் ஆத்மாவை வரிந்து கொண்டு கிடக்கிற ஸூக்ஷ்ம சரீரம். அன்றிக்கே, காற்கட்டான தேஹ ஸம்பந்தம், விஷய ஸம்பந்தம்.

**காலின் மணி கரை யலைக்கும்** * 725/3. காற்றாலே உள்ளுக் கிடக்கிற ரத்நங்களைக் கரையிலே யெறிடும். கால்வாய் பார்.

**காலும்** 2252/2. விடம் ... *. உமிழா நின்ற. **காலும் கலமும் வைத் தூட்டுகை.** 921/2. "உறவு முறையாரைப் பட்டினி விட்டு விருந்தாணரைக் ... ...". அருபந்தம் பார்.

**காலுமெழ** 3597/2. எரி ... *. காற்று நசிக்கும் படி.

**காலுமெழா** 457/1. ... கண்ண னீரும் நில்லா *. கடை நரா.

**காலெடுக்க** 3454/1. "ஒன்றின் நினைவு மற்றொன்றுக்கு ... அமைந்திருக்கை". அநுமதி பண்ணுகை. அடி யெடுக்கை என்றும் சொல்லலாம். **காலே பொதத் திரிந்து** 2606/1. கால் தேயும்படி திரிந்து. பொத -பொத்த லாகும்படி.

**காலைக் கையைக்** கட்டா நின்றார் 3550/பர. விரற் காலைப் பிடிக்கையும் விரற் சரட்டைக் கட்டுகையும் செய்தார். கை விரல் சரடு - விரல் அழுந்தாமைக்காக சரடு கட்டுவது. கை புடை கோதைக் கட்டியாகும் — என்று நிகண்டு. கை புடை கோதை என்று கைக் கட்டிக்குப் பேர். **காலைப் பிடித்துக்** கோலைத் தொடுப்பதாக நிற்க 3148/2. கால் - விற்கால். கோல் - அம்பு.

**காலையம்** பொழுது 917/2. கன விரு ளகன்றது ...தாம்*. சின்னஞ்சிறு காலே என்கிறபடியே லமாராதக யோக்யமான அழகிய காலம். அக்நியம் போது போல காலையம் பொழுது. **காலை வெய்யோன்** 2570/1. ... ற்கு முன்னேட்டு *. காலைக் கதிரவன்.

**காவடிவில்** கற்பகம் 1146/2. ... மே போல் *. தனிக் கற்பக மின்றிக்கே சோலை வடிவிலான கற்பகம். சோலை போலே தழைத்த கற்பகம்.

**காவணம்** 1418/4. "பாடுவார்க்குக் ... மிட்டுக் கொடுப்பார்". பந்தல். **காவலர்** 1027/4. கடல் வையம் ... ராசி *. ரக்ஷகர். **காவலிட்டு** 1158/1. உயிர் ...*. போகாதபடி செய்து. **காவலோன்** 3092/3. மூவுலகுங் ... *. ரக்ஷகன்.

**காவளம் பாடி** 1298/4. ...மேய கண்ணனே*. திருக்காவளம் பாடி என்னும் திவ்ய தேசம். **காவளரும் கடி பொழில்** * 1657/2. காவில் கடி வளரும் பொழில். சோலையில் பரிமளம் வெள்ளமிடாநின்ற பூமி.

**காவளரும் பொழில்** 2012/3. திரண்டு பரந்த சோலை.

**காவற் காடு** (?). "இந்திரனுடைய ...". பாதுகாப்புள்ள தோட்டம். "... ட்டில் துஷ்ட மிருகங்களுக்கு ஊட்டியிட்டு வளர்க்கும்". 3314/3. **காவற் சோர்வு** 3682/1. "தம்முடைய ... வாலே வந்தது". ரக்ஷா ச்யுதி.

**காவாய்** 202/2. உன்மகனைக் ... *. காத்துக் கொள்ளுவுதி.

**காவார் தெங்கு** 1350/3. ...கின் பழம் விழ*. செறிந்த சோலையிலுள்ள தெங்கு. **காவார் மடல்** பெண்ணையன்றில் * 1778/1. ஒரு மடலே எங்கு மொக்க சோலை செய்திருக்கிறது. மடற் பெண்ணையையுடைத்தான காவிலே ஆர்ந்த அன்றில்.

**காவி** 1125/3. ... யொப்பார் *. கருநெய்தல். **காவிரி நன்னதி*** 128/3. **காவிரியின் தென்பால்** மன்னுபேரகம் * 2059/3. திருப்பேரகம் அப்பக்குடத்தான் என்னும் திவ்ய தேசம்.

**காவு** 116/2. இந்திரன் ... விளில் நிற்பன செய்து *. புறக்கடை என்று அலக்ஷியமாகச் சொல்லுகிறபடி.

**காழ்த்து** 2576/3. ... உபதேசம் தரினும் *. சீறி, அனன்று. **காழ்ப்பு** 3517/4. "வெளிறும் ... புமாகச் சொல்லி". ஸாரம். வெளிறு-அஸாரம். விகயமும் பருஷமுமாகச் சொல்லி. "ஆத்மாபஹாரம் ... ... பேறின படி" 892/2. ஊன்றின படி. வைரம் பற்றின படி. **காழிச் சீராம** விண்ணகர் * 1178/4. சீர்காழி என்னும் திவ்ய தேசம்.

**காளங்கள்** 3984/2. ... வலம்புரி*. சின்னங்கள். "... பரிமாற" (ஸம். ஸா). காஹளம், எக்காளம்.

**காள நன் மேகம்** * 65/3. கறுத்து நன்மையுடைய மேகம். **காள வண்ண வண்டு** * 2526/4. கறுப்பு வண்டு. **காளாஞ்சி** (ஸம். ஸா). வழி நடையில் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கும் அர்க்கிய பாத்ய தீர்த்தத்தை ஏந்தும் பாத்திரம்.

**காளியன்** 69/1. ... உச்சியிலே *. ஒரு நாகம், யமுனா நதியின் மடுவில் இருந்த பாம்பு. **காளையர்** 1615/2. கடியார் ... ரைவர் * இளகிப் பதிக்கும் பருவத்தையுடையர்.

**காற் கட்டப் பண்ணும்** : அதி சங்கை பண்ணும். "விலக்ஷண விஷயம் தானும் கால் கட்டி, எதிர்த்தலையையும் கால் கட்டப் பண்ணு

மாயிற்று ". 3072/4. " ஆர் ... டனீ அன்று நோக்கிற்று ". 3562/3. ப்ரார்த்திக்க. " இவன் தான் ... டி ஆணையிடாதே " 3314/2. பிரதி பந்தித்து. காற் கடை 3960/1. ராஜ புத்ரன் நீச ஸ்திரீயின் ... யிலே துவளுமாப் போலே ". காலடியிலே.

காற் கடை கொண்டு 485/(6). "கிருஷ்ணன் பேரைக் ... " ஆசிரயித்து. "தன்னைக் காற்கடைக் கொண்டவனை ஐச்வர்யம் விடாதாப் போலே " 696/4. உபேக்ஷித்தவனை. அநாதரித்தவனை. காற் கடை தலைமாடாக 2742/2. (பெரி). கால் மாடு தலை மாடாக, தலை கீழாக, கீழ் மேலாக. காற் கூறு 3319/அவ. (?). காலத் தோன்றும் திருவடியும். காற்றம் 2023/3. ... த்திடைப்பட்ட கலவர் *. காற்று.

காற்ற வொண்ணுது 3994/3 (24). " அக்நி ஸந்தப்தமான இரும்பு உண்ட நீரானது ... ". மீட்கப் போகாது. " ப்ராப்தி ப்ரதிபந்தக கர்மங்களுக்குக் ... ணுத நஞ்சானவனை 3036/1. ப்ரத்யௌஷத மிட்டுக் காக்க வொண்ணாத, தடுக்க வொண்ணாத.

காற்று வளத்திலே (வாக்கிலே) அசையா நிற்கும் 3459/1 (12). காற்று வழியிலே. காறு காறு என் றிருந்தான் (வா. மா. 41). " ஈசுவர விபூதிகளோடே ... ".

காறை 88/3. கழுத்தினில் ... யொடும் *. கழுத்தணி. 293/1. ... பூணும் *. கான் : காடு. கான் றடம் பொழில் பார்.

கான்ற 1175/3. எரி ... நீண்ட வெயிறு *. உமிழ்ந்த. ... கழல் 2287/4. கங்கை நீர் ... *. பெருக்கின, கக்கின, சொரிந்த, உமிழ்ந்த.

கான்றடம் பொழில் 400/3. கான் - கடற்கரை, கழி நீரோடு கால், நாற்றம், தடம் – பெருமை. நறு நாற்றத்தை யுடைய பொழில்.

கான்றெடுத்த நெறி * 405/3. இடை வெளியறச் செறிந்த காடு. காற்றோடு தொடுத்துக் கிடக்கிற வழி. [வர்த்திக்கிற யானை.

கானக் களி யானை * 268/3. தன் னிலமான காட்டிலே களித்து

கானகம்படி 278/2. ... புலாவி *. காட்டுக் குள்ளே. கானம் 1886/3. ... திரிந்த களிறு *. காடு.

கானல் 1209/4. வண்டமர் ... *. காடு போலே யிருக்கும் தோப்பு. 1724/3. செழுந்தண் ... மண நாறும்*. நெய்தல் நிலம். 1779/3 பொன்னங் கழிக் ... *. கடற் கரை நிலம். ... மட நாரை * 3009/1. கழியிலே வர்த்திக்கிற மட நாரை. வண்டமர் ... *. 1209/4. சோலை.

கானவர் 1048/2. ... ரிடு காரகிற் புகை *. வேடுவர்.

**காளுயன்** 1890/3. ... நடிமனே *. காடன். **காளுர் கரி** 1311/1. ... கொம்பு *. காட்டிலே புக்கு மனிச்சரோடே முகம் பழகாதே யிருக்கிற ஆனை. **காளுறு** 683/4. ... ருப்ப் பாயும் *. காட்டாறு.

**கானிலந் தோய்ந்து** * 2503/4. கால் நிலத்திலே பொருந்தி.

**கானீர்ப் பழனம்** 1158/3. கயலாடு ... *. நீரோடு காலே புடைய பழனம் – நீர் நிலம். **கானெறி** 340/4. ... யை மாற்றும் *. காட்டு வழி. 345/2. ... யே போக்குவிக்கும்*. கால் நெறி, அடிப்பாடு, நடை பாதை.

**கிஞ்சுக வாய் மொழியாள்** * 292/3. கிஞ்சுகம் முருக்கிதழும் கிளியும். முருக்கிதழ் போலே யிருக்கிற அதரத்தையும் கிளி மொழி போலே யிருக்கிற வார்த்தையையு முடையவள்.

**கிட்டம்** 3341/ப்ர. பீச்சாங்கய்டி. " இரண்டு ... தன்னிலே சேரக் கிடந்தால் ஒன்று பொன்னு யிருக்குமாப் போலே ".

**கிட்ட மாளிகை** 2114/1. " அந்தரங்கர்க்குக் ... ... சமைக்குமாப் போலே பிரம்மாவுக்குத் திருநாபி கமலத்தைக் கலவிருக்கையாகக் கொடுத்தான்". **கிட்டின** தன்னையும் 3787/2. " நற்சரக்கு ... கை விடுகைக்கு உடலாவதே ". கிட்ட யிருக்கச் செய்தேயும்.

**கிடக்க** 1800/4. " அது ... ". **கிடக் கிடாய்** 3918/2. " ஒங்காண் ! இது ... ". கிடக்கட்டும்.

**கிடக்கிடீர்** 2930/அவ. அவன் விமுகர் பக்கல் பண்ணுமவை ... " கிடக்கட்டுங்க என்பது போலே. **கிடக்கட்டுங் கோள்** 3538/4. " அவை ... ... " கிடக்கட்டுங்க. **கிடக்கிடும்** 1658/1. " அது ... " கிடக்கட்டும். **கிடக்கை** 709/4. ஆனையிற் கிடந்த ... *. இருப்பு. 3268/2. அவன் ... யிதென்றும்*. படுக்கை. "கிடக்கைப் பாயிலே வெள்ளம் கோத்தாப் போலே" 3949/1. கிடக்கிற பாய், படுக்கும் பாய்.

**கிடங்கு** 810/1. தடங் ... பூம் பொழில் *. அகழ். 1365/4. குலை தாழ் ... கின் *. கொடிக் கால்.

**கிடத்தி** 798/2. கீறிடத் தராவணை ... *. கிடக்கிறாய்.

**கிடந்த நம்பி** 1538/1. ... குடந்தை மேவி *. கண் வளர்ந்தருளின போதை அழகாலே பரிபூர்ணனானவன். சயநத் திருக்கோலம். **கிடந்தலர்ந்த** மென் கால் கமலத் தடம் * 2519/1. கிடைப் பாட்டிலே விகஸிதமான கமலம்.

**கிடந்தானை** கண்டேறுகை 3/1. படுத்துக் கிடக்கிற யானையின் மேல் பிறர் ஏற்றி வைத்து கௌரவியாமல் தானே ஏறுகை. காலேந்து இடங்களில் இது காணலாம்.

**கிடந்திடத்தே** கிடக்க 1800/4. "பேர்க்க மாட்டாதே ...". கிடந்த இடத்தே. **கிடவாதே** 1926/3. "கதவை யடைத்துப் புறத் திண்ணையிலே ...". கிடக்காதே என்றில்லை.

**கிடாய்** 3001/4. "நான் உன்னை விடாதே ... என்கிறது." விடாதேடா — என்று பொருள். "என்னைக் கைவிடாதே ... என்று கொண்டு". 3007/4. **கிடாய்ப் பாய்ச்சல்** 3595/3. "... போலே திரையோடு திரை தாக்கிக் கிளருகிற ஒலி". மேஷ யுத்தம்.

**கிடா விடுவது** 2071/ப்ர. "அறப்பது ... தாய்க் கொண்டு". **கிடிகோள்** 3281/4. "அடியற்றுல் வாடுமத்தனை ...". "ப்ரக்ருதியை யிட்டு வஞ்சித்து வைத்தபடி ..." 3335/4. ஆற்றவல்லவன் மாயங் கண்டீர் என்பதில் மாயங் கண்டீருக்குப் பொருள். (24) லும் இதுவே வார்த்தை. "அதிசயித சக்திகனானவனுடைய வஞ்சகம் ..." என்று (9). "ஸர்வேசுவரன் ... இங்கு வந்து நிற்கிறவன்" 1618/2. அரவினணைத் துயின்ற மாயன் கண்டீர் — என்பதற்குப் பொருள். "இதுதான் தனக்கு அலப்ய லாபமாகக் கொண்டு நிற்கிறவன் ஸர்வேசுவரன் ..." 1619/4. கிடீர் கிடிகோள் என்பது காண்மின் கண்டீர் என்று முன்னிலை வினைச் சொல்லாக வழங்குகிறது.

**கிடீர்** 857/1. "ஸௌஹ்ருதம் ஸர்வ பூதாநாம் என்கிற விஷயத்திலே ... கருத்தனுய்த்து".

**கிடை** 3048/1. "இக் ... இவனுக்கு ஒரு படுக்கையிலே சாய்ந்தாற் போலே" இருப்பு. ஒரு கிடையிலே பார். "அடியற்ற மரம் போலே தரைக் கிடை கிடக்கிறபடி பாராய்" 1768/2. (அரு).

**கிடைப்பாடு** 2072/பட். "நெஞ்சில் ..." கிடச்கை, இருப்பு. "... ட்டிலே விகஸிதமான கமலம்". கிடந்தலர்ந்த பார். **கிடையாது** 1768/1. "அவர் வரக் கொள்ள இத்தலை வெறுந் தரையா யிருக்குமென்று அவரைக் ... தே". கிடைக்காது பெற முடியாது என்று பொருளாகலாம். **கிண்கிணி** 54/2. பொன் முகக் ...*. பாத சதங்கை என்று காலில் அணிவது. இடுப்பில் அணிவது முண்டு.

**கிண் கிணி வாய்ச் செய்த** தாமரைப் பூ* 495/4. அரை வடத்திலுள்ள கிண் கிணியின் வாய் போலே அர்த்த விகஸிதமான, பாதி யலர்ந்த தாமரைப் பூ.

**கிண்டி** 1439/3. *கிளேயோடு மலர்* ... *. *ஒளறி*. **கிண்டி** 1426/1. "*பொற் ... யில் தண்ணீர் வஸிஷ்ட சண்டாள விபாகமற விநியோகங் கொள்ளலாமிறே*". *மூக்கு வைத்த குடம் அல்லது சொம்பு*.

**கிண்டு** 665/1. *வண்டு ... கறுத்துமாய்* *. 773/3. *வண்டு ... தண்டுழாய்* *. *கிண்டல் கிழித்தலும் இழித்தலும்*.

**கிண்ணகம்** 2899/1. "*ஆற ... எடுத்தால்*". *வெள்ளம், பிரவாஹம்*. **கிண்ணம்** 1932/4. *பின்னை தன் கையில்* ... *. *கிண்ணி*.

**கிணறு** 437/1. *துடவையும் ... மிவை யெல்லாம்* *. *தூரவு*. **கிணுக்க** 548/4. "*நீர் ... அமையுங் காண் அவன் வருகைக்கு*". *சப்திக்க, அதாவது அல்ப்பம் ஸமிப்பிக்க என்றபடி*.

**கிதயுகம்** 3354/1. *பெரிய ... பற்றி* *. *கிருதயுகம்*. **கிதி** 3399/1 *செய்கின்ற ... யெல்லாம்* *. *கிருதி, கிரியை*.

**கிரயம்** 3710/2. "*... செலுத்திக் கொடுக்கும்*". **கிராமத்துக்கும்** *படிக்கல்லுக்கும் ராயஸம் கொடுத்த கதை*. 2959/(அ. அ).

**கிரி** 2234/2. *இளங் ... யென் றெண்ணி**. *மலை*. **கிரிசை** 2477/3. *கற் ... காரணன் நீ* *. *கார்யம், வ்யாபாரம்*. 3076/2. *காரணம் ... கருமம்* *. *க்ரியை*. **கிரீடை** 212/2. *பண்டவன் செய்த* ... *. *விளையாட்டு, லீலா சேஷ்டிதம்*, **கிருமி** 2525/1. *மெல்லிய லாக்கைக்* ... *. *புழு*.

**கிரேதம்** 1613/3. ... *திரேத துவாபர கலியுகம்* *. *கிருத யுகம்*.

**கில்லாது** 1869/2. *அம்பின் வாய்ப் பட்டு ஆற்ற ...**. *மாட்டாமல்*.

**கில்லான்** 2972/2. *தானும் ... இனி**. *மாட்டான், சக்தனல்லன்*. **கில்லேன்** 150/2. *காதுகள் கொத்திடும்* ... *. *மாட்டேன். வர மாட்டேன்*. ... *னென்னுது* 209/1. *மாட்டேன்*.

**கிலாந்திருக்கை** 3445/1. (24). "*ஊடுகையும் ... யும்*". **கிலாம்** 3451/1. "*... தோற்றச் சொல்லுகிறள்*". *ப்ரணய ரோஷம்*. "*... தோற்றும் படி அவன் திருவடிகளிலே கை சென்று தாக்கும்படி விழுந்து கிடவுங்கோள்.*" 3452/4. **கிலாய்த்து** 948/அவ. (அரு). "*பெரிய பெருமாளைக் ...*". *வெறுத்து*. ‡**கிலாய்ப்போடே** *தலைக்கட்டுகிறர்* 2061/4.

**கிலேன்** 3215/2. *மற்று யான்* ... *. *சக்த னல்லேன்*.

**கிழக்குத்தை** *ராஜாக்கள்* 3664/1.

**கிழங்கிருந்து** *கிளராமே* 407/1. *அசுரர்களைக்* ... *. *அடிக் கெடாமல் கிழங்கூன்றிக் கிளர்ந்து வராதபடி*. **கிழங் கெடுத்து** 519/3. "*ராக்ஷஸ ஜாதியைப் பக்க வேரோடே ...*". "*விரோதி வர்க்கத்*

தைக் ..." 3275/ப்ர. மீண்டும் கிளைக்காதபடி அடிக் கிழங்கோடே பறித்துப் போட்டு.

**கிழத்தி** 806/1. மன்னுமா மலர்க் ... *. உரியவள். 1099/1. நன் மாமலர்க் ... *. தலைவி. 3287/4. கிருஹிணி, உத்தம நாயகி. **கிழவன்** 1485/2. ஈளையோ டேங்கு ... *. முதுமைப் பருவத்தன்.

**கிழாய்/யார்** 2672/21. "பெரிய ... யான ருத்ராதிகள்". சிரேஷ்டர், பெரியவர். **கிழி** 1/அவ. "கொட்டுத் தழும்பைக் காட்டி ... யை அறுக்கலாமோ". பணமுடிப்பு. **கிழிக்குறை** 3042/ப்ர. "பரதாழ்வானோடும் சத்ருக்நாழ்வானோடும் கூடப் பெறுத ... யாலே கூட நிற்கிற இளைய பெருமாளோடும் கூடிற்றாய்த் தோற்றிற்றில்லையிறே பெருமாளுக்கு". கிழி - சாளிகை, பணப் பை. பணமுடிப்பு. தன லுப்தனுக்கு ஒரு முடிச் சீரையிலே சில குறைந்தால் சேஷமிருந்தது இருக்கிறதாய்த் தோன்றுகிறே; அப்படி யென்று கருத்து. **கிழிச் சீரையோடே தனத்தைக் கொடுப்பார்** 948/ப்ர. தனம் வைத்திருக்கும் துணி முடிப்பு.

**கிள்ளாக்கு** 2521/1, (?). வியாக்கியான வார்த்தை எண் தவறியிருக்கிறது. ஆகு - இலை, தெலுங்கு. கிள்ளின ஆகு. அதிகாரி வெற்றிலையைக் கிள்ளி காயப்படுத்திக் கொடுப்பார். அதைக் காட்டிக் கருவூலத்தில் தங்க சாமான் வாங்கி பெருமாள் உத்ஸவத்துக்கு உபயோகித்து திருப்பிக் கொடுப்பது ஸ்ரீரங்கம் கோயில் வழக்கம். "உன் அதிகாரம் கிள்ளாக்குப் பறக்கிறதோ!" என்று கேட்பதுண்டு.

**கிள்ளிக் களைந்தான்** 486/2. ... னைக் கீர்த்திமை *. வாங்கிப் பொகட்டான், பிடுங்கிப் போட்டான்.

**கிள்ளி யெழுப்பி** 157/1. ... க் கண்ணைப் புரட்டி *. தேளெறிந்தாப் போலே விறிட்டுக் கூப்பிடும்படி யாகக் கிள்ளி யெழுப்பி.

**கிள்ளை*** 1225/4. கிளி. **கிளர் சோதி** 369/3. ... யாய்! குறளா !* மிக்க தேஜஸ். **கிளர் தெய்வம்** 3127/3. ... மாய்க் கிளர்ந்து*. ஈசுவரனோடு மசக்குப் பரலிடும்படி கிளர்ந்த தேவதை, பெரிய தெய்வம்.

**கிளர்ந் தெழுந்த பெருந்** தெய்வம் * 3322/1. மொண்டெழு பானை போலே கிளர்ந்து வருகிற நிரவதிக ஸம்பத்து. மொண்டெழு பானை - ஏற்றம் இறைக்கும் பானை. **கிளர் பொறிய** மறி *. 1093/1. கிளர்ந்து நானா வர்ணமான (விதமான) பொறிகளையுடைய மான் குட்டி. மறி - மான் குட்டி. **கிளர்வார்** 3109/4. கெடலில் வீடு செய்யும் ... க்கே *. சிரத்தையா யிருப்பார். கிளர்தல் சொல் வன்மையும் செயல் வன்மையும். **கிளர் வாழ்வு** 3051/2. ... வை வேவ*. கிளர்ந்துள்ள ஐசுவர்யம்.

**கிள ரரக்கன்** 3312/2. ... நக ரெரித்த *. தாயும் தமப்பனும் சேர இருக்க வொட்டாதே பிரித்த மிகையை யுடைய அரக்கன், ராவ ணன். **கிளரிக் கிளரிப் பிதற்றும்*** 2560/3. எடுத் தெடுத்துப் பேசும். **கிளருஞ் சுடரொளி *** 2993/3. கிளரா நின்றுள்ள ஒளஜ் ஜ்வல்யம்.

**கிளரொளி மணி முடி *** 3985/3. **கிளரொளி யிளமை*** 3110/1. கிளரா நின்றுள்ள ஒளியை யுடைத்தான யௌவநம்.

**கிளவி** 2585/3. ... யுள் பொதிவோம் *. சொல். **கிளவித் தலை மகன்** 2478/ வாதி. அவ. **கிளவித் துறை** 2582/1. கலம் பாராட் டுகை. **கிளிக் கிளவி** 2688/1. ஏரார் ... *. கிளியின் பேச்சு. கிளியை விட இனிமையான பேச்சு.

**கிளி தாவிய சோலை** 3971/3. ... ... சூழ் திருப் பேரான் *. **கிளிப் பைதல்** 3830/1. கான் வளர்த்த சிறு ... *. இளங் கிளி. **கிளிமடவார்** 1685/2. ... செவ்வாய் மொழி *. கிளி போலே இருக்கிற ஸ்த்ரீகள். **கிளி மொழியாள்** 3312/1. தனிச் சிறையில் விளப்புற்ற ... *. கிளி போலே இனியபேச்சை யுடையவள்.

**கிளை** 3828/2. ... கொள்ளேன் மின் *. சப்தம். ஆந்தை கிளை கூடிற்று என்னக் கடவதிறே. **கிளை** 1262/1. படை யொடும் ... யொடும் *. பரிகரம், பரிவாரம், விருதுகள். **கிளை** 2662/1. துணை நாள் பெருங் ... *. பந்துக்கள். **கிளைப்ப** 1722/3. உழுநீர் வய லுள் ... *. விளையும்படியாக.

**கிளை மக்கள்** 1028/1. தாரமே ... ... ளே *. கிளையும் மக்களும். கிளை – பந்துக்கள். மக்கள் – பிள்ளைகள்.

**கிற்கின்றிலேன்** 1032/2. ... வந்தடைந்தேன் *. சக்தி யற்றவன். **கிற்பன் கில்லே** னென்றிலன் 3137/1. கிற்பனென்றிலன், கில்லே னென்றிலன் என்று பிரிப்பது. வல்லேனென்றிலன், மாட்டேனென் றிலன். **கிற்ற** 2900/1. (9). "நீ ... கினைந்த இன்மை ஸாதிக்க" ஸ்தாபிக்க. **கிறி** 73/2. மோதிரமும் ... யும் *. மணிக்கட்டில் அணி யும் சிறுப் பவள வடம், பவளக் கங்கணம், கங்கணம். **கிறி** 109/1. கிண்கிணி கட்டிக் ... கட்டி. **கிறி** 298/3. நன்றும் ... செய்து போனான்* கிரியை, விரகு, உபாயம், **கிறி** 3114/4. சாலப் போவது ... யே *. நல் விரகு, ப்ராப்யம், பேறு.

**கிறிக் கொண்டு** 3038/2. ... இப் பிறப்பே*. பகவத் கிருபை, நல் விரகு. **கிறி செய் தென்னைப்** புறத்திட்டு *. 3546/3. விரகு அடித்து,

துடிக்கப் பண்ணி. **கிறிப்பட்டேன்** * 460/2. விரகிலே அகப் பட்டேன் விரகாவது யந்த்ரம், தந்த்ரம், சூழ்ச்சி.

**கிறியம்மான்** 3313/4. ... கவராத கிளரொளி *. பெரு விரகனான, மஹா ஸமர்த்தனான ஸர்வேச்வரன். பெருங் கிறியான் - மஹா ஸமர்த்தன். கிறி - ஸாமர்த்தியம்.

**கின்னரம்** 279/4. தந்தம் ... *. வீணை. **கின்னர மிதுனங்கள்** 279/4. ... ளும் தந்தம் *. கின்னர மென்னும் வீணை கொண்டு பாடித் திரிகையாலே கின்னர மிதுநங்களென்று ப்ரஸித்தரா யிருக்கிறவர்கள்.

**கின்னரர்** 925/2. கீதங்கள் பாடினர் ...*. 3983/3. கின்னர தேசத்திலுள்ளார். **கினிய** 3198/2. " ஒரு மேருவைக் ... காள மேகம் படிந்தாற் போலே ". வியாபிக்க, கபளீகரிக்க. " அத்தைக் ... ஒரு மேரு வஹித்தாற் போலே யிருக்கிற பெரிய திருவடி." 3583/2. கபளீகரிக்க. 3797/2, 3198/2. இப்படியே வாக்கியம். மலை கினிய நின்ற பெருமாள் என்று திருவேங்கட முடையானைச் சொல்லும் வாக்கியம். குனிய நின்ற என்று சில இடங்களில் காண்பது பிழை. கினிய என்றே அங்கு திருத்தவேணும்.

**கீசகம்** 911/4. " கர்ணன் விட்ட ஸர்ப்ப சிரஸ்ஸு போலே ... த் தோடே போக்கும்." கீசகம் - தலைக் கட்டு, தலைப்பா,

**கீசு** 480/1. ... கீ சென்றெங்கும் *. பக்ஷிகள் கூவும் அக்ஷரமான சப்தம். **கீண்டவர்** 3247/2. அகலிடம் ... *. இடந் தெடுத்தவர், ஒட்டு விடுத்தவர்.

**கீண்டு** 115/3. பொதுக் கோவாய் ... டிட்ட *. கிழித்து.

**கீதங்கள்** 3983/3. ... பாடினர்*. பாட்டுக்கள். கானம். **கீத முழவு** 3293/4. ... விட்டு கிரணங்கு *. பாட்டோடு கூடின வாத்தியம். **கீத வலை** 280/3. அமுத ...... யால் *. கீத வசீகர வலை, கான வலை. **கீத வேள்வி** 760/3. வேத வாணவர் ... *. ஸாமகாந ப்ரதாநமான யாகம்.

**கீர்த்திக் கனி** 3203/1. ... யென்னும் கவிகளே*. கீர்த்தி ரூபமான கனி. **கீர்த்தித்த மாயன்** 3650/3. தான் தன்னைக் ... *. ஸ்துதித்த, கவி பாடின ஆச்சர்ய பூதன்.

**கீர்த்திமை** 486/2. ... பாடிப் போய் *. கீர்த்தி, வீர சரிதம், கல்யாண குணங்கள். **கீர்த்தியார்** 820/1. செவிக்கினத ... *. கீர்த்திமாங்கள். **கீர்த்தியினுன்** * 440/3. **கீர்த்தி வெள்ளம்** 3461/2. உலப்பில் ... *. 3469/2. ... க் கதிர் ஞான மூர்த்தி *. கீர்த்தி ஸாகரம்.

**கீழ்க் கன்று** 637/1. பல தேவற் கோர் ...*. தம்பி, பம்பன், சிறியன். 2057/3. பீட் கன்றுக்குப் பொருள் கீழ்க் கன்று.

**கீழ் கடல் மேல் கடலாய்** 3595/3. கிழக்குத்தையில் நீர் மேற்கே போக, மேற்குத்தையில் நீர் கிழக்கே வர என்றபடி. **கீழ்ச் சீரை யறுத்துக் கொண்டு (?).** அநுபந்தம் பார்.

**கீழ் தாழ்ந்து** 2351/1. வாய் பூசி ... *. கீழே வந்து.

**கீழ்து** 3599/3. மலை ... பிளந்த சிங்கம்*. கீழே யிட்டுக் கொண்டு, கிழித்து, மகிழ்ந்து என்று மூன்று அர்த்தம். தாமரையை மரை என்பது போலே தலைக் குறைத்தலாய் மகிழ்ந்து என்பது கிழ்ந்து என்றாய் நீட்டு வழி நீட்டலாய் கிழ்ந்து என்பது கீழ்து ஆயிற்று.

**கீழ் நாள்கள்** 2666/2. ... எல்லாம் *. கீழே கடந்த நாள்கள், கழிந்த நாள்கள். **கீழ் மகன்** 1418/1. ஏழையேதலன் ... *. 3294/1. ... இட்ட முழவு *. ஜந்மத்தில் கொத்தை, நீஹீந குலஜன்.

**கீழ் மேல்** 2608/3. பார் ... லாம் *. அதரோத்தரம். **கீழ்மை** 3115/1. ... செய்யாதே *. நீசதை. பகவத் வியதிரித்த விஷயங்களில் ஆசை வைப்பது, நீச விருத்தி. 3293/4. நீரணங் காடுதல் ... *. சாலத் தண்ணிது. **கீழ்மை வகைவுகள்** 3607/2. செவி கடு ... ... *. தண்ணிய வசவுகள்.

**கீழ் வயிற்றுக் கழலை** 2901/4. அடி வயிற்றுப் புண். **கீழ் வானம்** 481/1. ... வெள்ளென்று *. கிழக்கு திக்கு.

**கீழாண்டைச் சிகை** 2938/2. "... வாசியா நின்றார்." பழங் கணக்குகளிலே யிருக்கிற நிலுவை. "... யாயிற்று கணக்கிடுகிறது" 2938/4. (24). **கீழால்** 2752/2. விதானத்தின் ...*. கீழே. **கீழிழிந்து** 3195/1. சாதிகள் காணிலும் ...*. கிழ்ப் பட்டு. **கீழுலகு** 407/1. ...கி லகுரர்களை*. பாதாளம். **கீழுற்றைக்கும்** ஏதேனுமுண்டோ 3409/1. " இது மேலுற்றைக் கிட்ட மர்யாதையோ, ... க்கும் ஏதேனு முண்டோ". சென்று போனதற்கு, மேலுற்றைக்கு - இனி வரப் போவதற்கு.

**கீழைப் போலே** 3575/4. (சி. அரு.) முன் பாட்டில் போல, முன் போல. **கீழை யகம்** 699/1. ... த்துத் தயிர் கடைய *. கீழண்டை யகம். **கீழை வாசல்** 3271/1. "... லிலே சென்றவாறே". கிழ வாசல் என்று நாம் கொச்சையாகச் சொல்லுவதன் சுத்தி.

**கீழோலை யிட்டோம்** 3519/1. (ஸம்மதித்தோம்?) "அராஜகமான தேசத்தில் வன்னியரடையத் தங்களிலே கை செய்து ... யிட்டு நாலு வாசலையும் வந்து பற்றுமாப் போலே". ரஹஸ்யமாக ஓலை எழுதுகை.

**கீள** 1522/2. பல்லாகம் ... *. கிழிய. **கீளாதே** 2625/3. ... பன்னிரும்*. கிழியாதே. **கீளா மருது** 2335/2. ... இடை போய்*. இணை பிரியாத இரண்டா யருகே நின்று பிளவாத மருத மரம்.

**கீறி** 184/2. காம்பு துகிலவை ... *. கிழித்து. **கீறு திங்கள்** 793/2. ... வைத்தவன் *. கலா மாத்ரமான சந்திரன். கீறி எடுத்த சந்திரன்.

**குக்கர்** 910/2. ... ரில் பிறப்பரேலும்*. நீசப் பிறவி. வேத விஹிதங்களை அநுஷ்டியாதேயும் நிஷித்தங்களை அநுஷ்டித்தும் போருகிற நீசர். **குக்கூடல்** 702/2. பொன்னொத்த வாடை ... விட்டு *. முட்டாக்கு, மறைவு. **குகன்** 321/3. கூரணிந்த வேல் வலவன் ...*.

**குங்குமக் குழம்பு*** 805/4. **குங்குமஞ் சுமந்த கழுதை** (ஸ்ரீ வ. பூ. 237). "பாகவதனன்றிக்கே வேதார்த்த ஜ்ஞாநாதிகளை யுடையவன் ... ...".

**குச்சியிட** 487/4. நிறவு கோலிட. குச்சி - நிறவுக் குச்சி.

**குசாண்டு :** குஸ்ருஷ்டி 477/1. சேதநனுடைய நன்மை தீமைகளைக் கணக்கிட்டுப் படி வைக்கும் ... டுள்ள ஈசுவர கோஷ்டி.

**குசை தாங்கின** அருமை 2056/1. வேகத்திலே போகிற குதிரையைக் கடிவாளத்தை வெட்டி நிறுத்துகை. "திருவடிகளைக் ... அருமை" 3793/2 கடிவாள மெட்டிப் பிடித்த.

**குஞ்சரம்** 437/4. ... விழக் கொம்பொசித்தான் *. யானை. **குஞ்சி குழல்** 2072/1. மை வண்ண நறுங் ... *. குஞ்சி - கூந்தல் முழுதும், குழல் - மேலெடுத்துக் கட்டின மயிரும் அதுக்கு சேஷமாக நான்ற பிடரியும். **குட்ட நாட்டுத்** திருப் புலியூர் * 3759/3. அந்நாட்டுக்கு அப்படிப் பெயர். **குட்டம்** 1985/4 பிளவெழ விட்ட ... *. குழி, மடு.

**குட்ட மிட்டு இடந்தான்** 3949/2. பள்ள மெடுத்து. **குட்ட மிடுவாரைப் போலே** 726/2. "துர் மாம்ஸம் கிடந்த இடத்தே ... துர் மாம்ஸம் கிடந்த மார்விலே.

**குட்டன்** 35/2. கோவலர் ...*. மகன், பிள்ளை. **குட்டி** 1945/1. கொட்டாய் பல்லிக் ... *. **குட்டி** 1648/1. (அரு). பைசல் என்பதற்குப் பொருள். **குட்டிச் சுவர்** 3005/அவ. " ... ... ரிலே முட்டாக்கிட்டுக் கொண்டு கிடந்தார்." கைவல்யம். "குட்டிச் சுவரும் மட்டைத் தெங்குமாக்கி" (?). வீட்டை யெல்லாம் பாழாக்கி, இலை யெல்லாம் கழித்துத் தலை மட்டையாக வைத்த தென்னை மரம்.

**குட்டேறு** 638/2. ... ற்றைக் கோவர்த்தனனை *. இளங் காளை. **குட்டை** 3874/4. "செங்கொடு குட்டைகள்". காழி.

**குடக் கூத்து** 188/1. (மணா.) தலையிலே அடுக்குக் குடமிருக்க, இரண்டு தோள்களிலும் குடங்களிருக்க, இரண்டு கைகளிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே ஏறிடுவது ஏற்பதாயாடுவது.

**குட கொங்கன்/கு** 1503/4. தென்னுடன் ... ... *. மேற்கிலுள்ள கொங்கு நாடு. **குடங்கால்** 1380/2. மருவாளால் என் ... *. மடி. **குடங்கை** 270/4. ... க் கொண்டு மந்திகள் *. உள்ளங் கை. ... ப் பெரியன கெண்டை * 2488/3. சிறுங்கை யத்தனை பெரிய கெண்டை மீன். **குட திசை** 890/1. ... முடியை வைத்து *. மேலைத் திக்கு.

**குடந்தை** 177/4. ... க் கிடந்தான்*. திருக் குடந்தை திவ்ய தேசம், கும்பகோணம். **குட நயந்த கூத்தன்** * 2354/3. குடக் கூத்தை விரும்பின கூத்தன்.

**குட நீர் வழித்தாலும்** போகாது (பர. ரஹ. த்வ). **குடநீர் வழித்து நின்றுன்** 3194/1. தண்ணீர்க் குடம் உடைத்தான். இறந்தாரை தஹநம் செய்து முடித்ததும் கையிலிருந்த தண்ணீர்ச் சட்டியை, எல்லாம் தீர்ந்தது என்று காட்டுவதாக போட்டு உடைப்பது. இதற்கு குட நீர் வழிக்கை என்று பண்டைத் தமிழ். குட நீராலே ஸம்பந்தத்தை வழிக்கை – போக்குகை.

**குடபாலாணை** 2061/3. தென்னுனைப் வடவாளுப் ...*. மேலைத் திக்கிலுள்ள கோயிலிலே (ஸ்ரீரங்கத்திலே) சாய்ந்தருளின மத்த கஜம்.

**குடம் நிறைக்கும்** வள்ளல் பெரும் பசுக்கள் 476/7. **குடமாட்டு** 716/1. குரவை கோத்ததும் ... ம் *. குடக் கூத்து ஆடினது.

**குடமாடி** 1393/3. ... மது சூதன் *. குட மாடுகிறவன்,

**குட மூக்கு** 2278/4. ... க் கோயிலாகக் கொண்டு *. திருக் குடந்தை. **குடல் குடம்பிக் கூப்பிட்ட ஒலி** 2598/2. (?). குடல் ... குழம்பும் படியான விரஸ்ரீ 781/4. " ராவணுதிகள் ... ". **குடல் துடக்கு** 835/4. " இத்தலையில் விகாசம் தன் னிழவாம்படியான ...". சரீர ஸம்பந்தம். ரத்த ஸம்பந்தம். " இழவு பேறு தன்னதாக ..." 2969/2 (24). குடல் தொடக்கு, குடற் றுடக்கு, குடற் றெடக்கு — என்றும் சில இடங்களில் காண்கிறது.

**குட வயிறு பட** 276/2. ... வாய் கடை கூட *. வயிறு குடம் பட = குடம் போலேயாக. வயிற்றிலே வாயுவைப் பூரித்து நிறுத்தி இருப் பவளத்தாலே விட்டு விட்டுக் குழலூதுகையாலே வயிறு குடம் போலே உப்பும். **குடவாய் பட நின்று மழை பொழியும்*** 267/4. குடத்திட்டுச் சொரிந்தாற் போலே, குடத்திலிருந்து கொட்டினுற் போலே.

**குடி** 298/4. என்று மெமர்கள் ... க்கு *. குலம். **குடிக்கரசு** 78/4 எங்கள் ... *. குலத்துக் கரசன்.

**குடிக்காடு** 524/அவ. "பஞ்சலக்ஷம் ... ட்டில் பெண்களுக்கு தனித் தனியே ஆளிட்டு ஆராய்ந்து". குடி – ஸமூஹம், குடும்பங்கள் நிறைந்த ஊர். "எங்களுக்கு ஐந்து ... அமையும்" 3722/3. குப்பம், கிராமம்.

**குடிக் கிடந்து** 3793/1. ... ஆக்கஞ் செய்து *. குடிக் கிடாக வர்த் தித்து, குல மரியாதை தப்பாத படி வர்த்தித்து.

**குடிக்கிற வேப்பங் குடி நீர்** 2124/3. வேப்பங் குடி நீர் – கஷாயம்.

**குடிகிடக்கும்படி** 1911/4. "நா ளிவ்வூரில் ...". **குடி குடியாகக் கூடி** 1346/3. ... க்கூடி*. பார்யா புத்ரர்களோடே திரண்டு. **குடி குடி யாட் செய்கின்றோம்*** 7/2. பரம்பரையாக அடிமை செய்யக் கடவோம்.

**குடி குடி வழி வந்து** 3792/2. ஆட் செய்யும் *. குடி குடி – ஸபரி கரமாக, வழி வந்து – சாஸ்திரங்களில் சொல்லுகிற முறை தப்பாதபடி வந்து. **குடிச் சீர்மை** 2506/4. ... யி லன்னங்களே *. குடிப் பிறப்பால் வந்த சீர்மை.

**குடிநீர்** 688/2. கஷாயம், மருந்து. "பிரஜையினுடைய நோய்க் குத் தாயிறே ... குடிப்பாள்". 514/1. "ஸ்தநந் தய ப்ரஜை நோவு கொண்டால் அதுக்காகத் தான் ... குடிக்கும் தாய்." 1552/3.

**குடிப் பகை** – ஞாதிப் பகை, தாயாதி விரோதம் (தனி சுலோ. த்வம ப்ரமேய :). **குடிப் பழி** 3385/ப்ர. "இது உனக்குக் ...". குலத்துக் குப் பழி. **குடிப் பற்று** 3215/4 (9). "... றில்லாத அதிலுப்தன்". **குடிப் பிறப்பு** 2291/2. மாசில் ... ம் மற்றவையும் *. குலத்தில் பிறப்பு.

**குடி புகுந்தார்** 2606/2. மாலார் ... *. வஸிக்கலானார். **குடி போந்து** 1615/3. ... உன்னடிக் கீழ் வந்து *. குடியிருக்க விரும்பி.

**குடி போன** 3014/1. "தாமரை ... ... பொய்கை" குடி விட்டுப் போன. இருப் பற்றுப் போன.

**குடிமக்கள்** 3950/2. "கெடுநாள் நம்மைக் ... ளாக்கி எளிவரவு படுத்தின ஸம்ஸாரம்". குடியாள். "தேவ வர்க்கத்துக்குக் ... ளான மநுஷ்ய வர்க்கம்." 884/1. அடிமையாள். **குடிமகன்** 670/1. "காம னுடைய வில்லுக்குக் ... ளாய்த் திரியும் பாரினரோடுங் கூடுவ தில்லை". அடிமை.

**குடிமன்னர்** 167/1. இழக்கில் ... *. குடியிருப்பா யுள்ள மன்னர்.

**குடிமன்னு மின் சுவர்க்கம்** 3239/3. ... எய்தியும் *. குடியிருப்பை யுடைத்தாய் இன் = ஸுகோத்தரமான ஸ்வர்க்கம். பூமியில் போலே யன்றிக்கே நீர்க்க கால மிருக்கலாய் விலக்ஷணமான ஸ்வர்க்கம். குடி

செருக்கத்தை யுடைத்தான நரகம் போலல்லாமல் இனிமையான ஸ்வர்க்கம். குடிமை 486/2. ... கொள்வதற்கு ஐயுற வேண்டா *. அடிமை, சேஷவ்ருத்தி, கைங்கர்யம். குடிமை 1464/2. " அஹங்கார மமகாரங்களுக்குக் ... செய்யும் ஸம்ஸாரம்."

குடிமை 910/1. அடிமையில் ... *. ஊற்றம். குடிமையில் கடமைப் பட்ட குக்கர் * 910/2. குடிப் பிறப்பில் கீழான சண்டாளர், நீசர். குடி யடியார் 3985/4. குடந்தை யென் கோபாலன் ... க்கு *. பரம்பரை யாக வரும் அடியார். 3986/1. ... ரிவர் கோவிந்தன் தனக்கு *.

குடியா 1354/3. ... வண்டு கள்ளுண்ண*. குடியாக, குடும்பமாக. 1728/3. ... வண்டு கொண்டுண்ண *. கூட்டமாக, பசல்களோடும் குட்டிகளோடும். குடியிருப்பார் 3217/3. "... ரோபாதி யாயிற்று பரம பதத்தில் ஸ்ரீ வைகுண்ட நாதனுக்கு கூட்டுக் குடியிருப்பார்".

குடியிருப்பு : இருப்பதற்கு இடம்." அஸுர ராக்ஷஸர்களை அழியச் செய்து ...த் தர ". 821/2. குடியும் தடியுமாயிருக்க நினைத்தால் 2483/4. " ஸம்ஸாரத்திலே ... ". குடி - கிருஹம், தடி - க்ஷேத்ரம், பூமி.

குடியிற் பிறந்தவர் 304/1. ... செய்யும் குணம் *. உயர் குடியில் பிறந்தவர். குடியேறி யிருந்து 273/1. ... மழை பொழியும் *. குடி புகுந்து. குடியேன் 704/4. " அடியேன் ... என்று சில வார்த்தை களைச் சொல்ல." மாடு கிடு என்று நாம் அலக்ஷியமாகப் பேசு வது போலே.

குடில் 10/2. அடியோங்களடிக் ... *. குடிசை, கிருஹம். குடில் 958/அவ. " பயிர்த் தலையில் ... கட்டி நோக்குமாப் போலே ".

குடில் வளைக்க 10/2. வீடு கட்ட. " சேஷி ஸந்நிதியிலே சேஷ பூதர் கிருஹத்தைக் ... என்னக் கடவதிறே".

குடி வாங்க வேண்டும் படியாயிறே யிருப்பது 2901/4. " இவர் ஈசுவரோஹ மென்றால் அவனுக்கும் ...". ஸந்நிவேச நிர்க்கமநம் பண்ண வேண்டும் படியிறே என்று அரும் பதம். விட்டுப் போக வேண்டும்படி — என்று பொருள். " கிடந்த கிடையிலே லங்கை ... ம்படி யிருக்கை." 3094/1. காலியாம்படி. சூந்ய மாம்படி.

குடி வாங்கின 517/ப்ர. " சந்திரன் ... ஆகாசம் ". இல்லாமற் போன, மறைந்து போன. " பெரிய ஊர் ... ளுப் போலே கண்ணில் பரப் பித்தனையும் நித்திரை குடி போன படி." 1888/2. காலியாளுற் போலே, பின் வாங்குகை கால் வாங்குகை என்பது போல. விட்டுப் போகையைக் காட்டும் தொடர்.

**குடிவாய்** 3488/1. "... உடன் பட இருந்தானாகில் இருக்கிறான், இல்லையாகில் உமக் கோலாலே தகர்க்கிறோம்". குடிமகன், குடியான வன். **குடிவாரம்** நீல வாரம் என்ற இரண்டு தலை வாரமும் 2866/1.

**குடிவாழ்க்கை** 308/3. ... வாழ்ந்து *. குடிக்குத் தகுதியான வாழ்க்கை. **குடி வாழப் பிறந்த செல்வப் பிள்ளை** 2068/4. ராமன்.

**குடிவாழுங் கொலோ** * 808/2. குடி வாழுமோ. [யப் பட்டவர்.

**குடிவிட்டவர்** 1464/3. ... ரைத் தேறுது *. குடி வாழும்படி செய்

**குடுமி** 1089/2. ... த் திருவேங்கடம் *. சிகரம். 2750/2. சென்னிமணிக் ... *. சிகை, தலை.

**குடைக் குல சேகரன்** * 729/3, 740/3. ஐசுவர்ய ப்ரகாசகமான வெண் கொற்றக் குடையையுடை குல சேகரப் பெருமாள். **குடைத் திறல் மன்னவன்** 1135/1. கொற்றக் குடையையும், திறல்- பெரு மிடுக்கையு முடைய சக்ரவர்த்தி.

**குடைந்தாடுஞ் சுனை*** 462/1. ஆழ இழிந்து அவகாஹிக்கும் தலை யருவி. **குடைந்து** நீராடுவான் 524/1. குள்ளக் குளிரக் ... *.

**குடையும்** செருப்பும் * 247/2. வர்ஷாதப வாரியான விரியோலை. **குடையேற** 2424/4. ... த் தாம் குவித்துக் கொண்டு *. குடை முதலானவற்றை.

**குண்டர்** 1102/1. சமண் ... *. குண்டு - ஆழமாய் அத்தாலே தாழ்ச்சியாய் நீசர் என்றபடி. **குண்டலங்கள்** 1650/2. மணி மகர ...*. வளையங்கள். **குண்டலப் புண்டரீகம்** 2534/1. புலக் ...*. வட்டணித்த தாமரை. **குண்டலம்** 8/2. காதுக்குக் ... *. மகர குண்டலம்.

**குண்டிகை** 2390/1. ... நீர் பெய்து *. கமண்டலு/லம். **குண்டு நீர்** 516/1. ... குறை கோளரி *. ஆழமான கடல்.

**குணங்கள்** 762/4. ... சொல்ல வல்லரே *. **குணங்கு** 3078/2. (24). "என்னைக் ... கோடே விஷயீகரித்து." துர்க்கந்தம், தோஷம். குணங்கு குணுங்கு இரண்டும் ஒன்றே.

**குண திசைச் சிகரம்** 917/1. கதிரவன் ... *. கிழக்கில் உதய கிரியின் உச்சி. **குண திசை மாருதம்** 918/1. கூர்ந்தது ... *. விடியற் காற்று. கிழக்குக் காற்று.

**குண நன்றுடையர்** 142/2. ... இக் கோபால பிள்ளைகள்*. குணவாக்கள். **குணபால மத யானை** 2061/3. குட பாலானுய் ... *. கிழக்கில் மதயானை - திருக் கண்ணபுரத் தெம் பெருமான்.

**குணம்பரன்** 2474/3. ... னே உன்னை *. குணநிகன்.

**குணல மாடி** 389/3. ... த் திரிமினோ*. குணலைக் கூத்து. ஆடி - ஹர்ஷ விசேஷத்தாலே களிப்பின் மிகுதியாலே தலை கீழாகக் கூத் தாடுகை. 3667/4 (?). தடு குட்டமாவது குணலை. குழமணி பார்.

**குணில்** 497/4. கன்று ... லா வெறிந்தாய் *. 2341/3. ... லை விளங்கனிக்கு*. தடி, எறி தடி. **குணுங்கு** 152/1. வெண்ணெ யளைந்த ... *. 638/2. ... நாறிக் குட்டேற்றை *. முடை நாற்றம்.

**குத்துண்ணும்** படியான பேச்சு 3497/2. " ஸ்ரீ ராமாயணம் ... " தள்ளுபடியாம்படி.

**குதறிக் கொட்டியாய் ரூப** மழிந்து 3649/1. " இவன் ஓரிடத்தே இழுக்க, அவன் ஓரிடத்தே இழுக்கக் ... சிதறிப் போம்." கலக்கிக் கொட்டி. குளறிக் கொட்டி என்று நாம் சொல்லுவது பேச்சுக்கு. இது சிறு பிள்ளைகளின் கையைப் பிடித்து நாம் எழுதுவிப்பதைச் சொல் லுகிறது. **குதறிச் சிவந்த கண்** 3464/2, 906/2, 2078/1, கலங்கிச் சிவந்தது. **குதறு கொட்டும்** 2085/4. " நல்ல விஷயம் காட்டாவிடில் ... ". ஹிம்ஸிக்கும் என்று தெலுங்கு பதவுரை.

**குதிகொண்டு** 7/3. "ரக்த வெள்ளம் ...". குதித்துக் கொண்டு.

**குதிரி** 3371/4. ... யாய் மடலூர்துமே *. குந்திரி குதிரியாயிற்று. அடங்காப் பெண், தடையில்லாதவள். குதிரி - குத்ஸித ஸ்திரீ, அல் லது குதிரையை யுடையவள். குதிரி - ஆபரணமிட்டு வைக்கும் செப்பு. அது போல, ஆபரணமணிவனே யன்றி அதற்கேற்ற தன்மை யில்லா தவள். நாணற் பெண்.

**குதுகலித்து** 551/2. ... ஆவியை ஆகுலஞ் செய்யும்*. கௌதூ ஹலம் பண்ணி, ஸஸம்ப்ரமித்து.

**குதை** 3551/2. " கொண்ட ... மாறுதே இரை பெறுப் பாம்பு போலே ஜ்வலியாநிற்கும்." உத்யோகம் முயற்சி. 3355/4 (?).

**குதையும் வினை** 2462/2. ... ஆவி தீர்த்தேன் *. குதை அசை வாய் தடுமாற்றம். தடுமாற்றத்தைப் பண்ணக் கடவ தொழில்.

**குந்தணத்தில்** அழுத்தின முக்தா மணி ரத்நங்கள் 2072/பட். ஆபரணங்களில் ரத்நங்கள் இழைப்பதற்காக உள்ள குந்தணத் தங் கம். குந்தணத்தால் அழுத்தின என்று பொருள்.

**குந்தம்** 821/1. ... மொடு சூலம் *. சவளம் (ஆயுதம்). 2460/3. மெய் ... மாக விரும்புவர் *, நோய். 3064/4. செய் ... தா உன்னை

நான் பிடித்தேன் *. சுத்தன். குந்தம் பூவாய், அத்தால் வெளுப்பாய் சுத்தியைச் சொல்லுகிறது. குமுத : குந்தர : குந்த : — என்று ஸஹஸ்ர நாமத்திலுள்ள நாமம்.

குந்தன் 3655/2. செய் ... தன்னை என்னாக்கி *. 3655/4. செய்... தன்னை எக்காள் *. சுத்தன். முகுந்தனில் தலைக் குறைவு குந்தன்.

குந்தாலி 3330/4. " ... கொண்டு இணறு கல்லி ". மண்வெட்டி.

குந்தாவருந் தீமை 3064/3. செய் ... *. தப்பாத அருந் தீமை, தப்பாமல் வருந் தீமை.

குந்தி 1266/3. ... வாழையின் கொழுங் கனி நுகர்ந்து *. காலைக் குந்தி, குந்திட்டு, உட்கார்ந்து. குந்தியடியிட்டு நிற்கும் 3959/3. "சேதந த்வாரா ... குமவனிறே அவன்." பத்மாஸநமாய் சப்பணம் கட்டி உட்காராமல் கால்களைக் குந்தி உட்காருவது. பெண்கள் வலதுகாலை மடித்து இடது காலை ஊன்றி யிருப்பது குந்திட்டு உட்காருதல்.

குப்பம் 3509/3. குறிச்சி. ஒரு ... த்திலிருந்து" (வா. மா. 278).

குப்பாயம் 269/4. ... என நின்று காட்டும் *. 640/3. ... ப் புகர் மால் யானை *. சட்டை. நம் பெருமாள் சாத்திக் கொள்ளும் பெரிய சட்டைக்கு கபாய் என்ற பெயர் குப்பாயத்தின் திரிபு.

குப்பி 482/1. மாணிக்கக் ... போலே புறம்பே நிற்க உள்ளுள்ளதெல்லாம் தோற்ற நிற்கும்". குப்பி – டப்பி. உள்ளுள்ள மாணிக்கம் வெளியே தெரியும்படியான டப்பி அக்காலத்திலு முண்டு போலும்!

குப்பைக் காலன் 3657/1. நல் வழிக் காலன். " ஒருவன் செய்தது வாய்த்து வரப் புக்கவாறே, அவன் ... காண், ஸ்ரீமாக் செய்ததெல்லாம் நன்றாய் வருங்காண் — என்னக் கடவதிறே."

குப்பைக் கீரை 1292/4. குவலயா பீடத்தின் பெரிய கொம்புகளை ... போலே அநாயாஸேந வாங்கி." 1093/2. குப்பை மேனி 1524/4 " தன் புழக்கடையிலே ஒரு ... யைப் பிடுங்கினான்."

குப்பை கிளர்ந்தன்ன செல்வம் *. 3213/1. குப்பை போலே தோஷமே தோற்றும்படியான ஸம்பத்து.

கும்பக் களிறு 199/2. ... றட்ட கோவே *. மஸ்தகத்தின் உயர்த்தியை உடைத்தான யானை. கும்பம் - குடம். குடம் போன்ற தலையை யுடைய யானை. கும்பகர்ணன் 1869/4. ... பட்டுப் போனான் *.

கும்ப நிரை 1219/3. மாடங்களின் மேல் மகுடா காரங்களான கும்ப வரிசை. கும்பர் 2498/4. நம் (?). நப்பின்னையின் தமப்பனை கும்பாண்டன் போலும்! கும்பன் 1869/4. நிகும்பனும் பட்டான் *.

**கும்பிடு நட்டம்** 666/2. ... மிட்டெழுந்து*. 3168/3. ... மிட்டாடி*. வணங்குவதும் ஆடுவதும். நட்டம் ந்ருத்ய விசேஷம். நல்லகிழான கூத்து.

**கும்பி நரகர்கள்** 3194/3. ... ஏத்துவரேலும் *. கும்பீ பாகமான நரகத்தை அநுபவிபாநிற்பவர்கள்.

**கும்பிடு கொள்கை** 479/1. கிருஷ்ணனையும் ... க்கு ஒரு திருமுற்ற முண்டு. **கும்மட்டி** 2036/2. இந்தளம் என்பதன் பொருள்.

**கும்மாயத் தொடு வெண்ணெய் விழுங்கி** 225/1. குழையச் சமைத்து வைத்த பருப்பு. ஸ்ரீரங்கத்தில் பிரதிதினம் காலையில் ரொட்டி வெண்ணெய் பருப்பு பால் — முதல் நைவேத்தியம்.

**குமர் கிடந்து போம்** 3526/2. " இவள் பருவமும் ...". குமர் குமரியாய் அநுபவ யோக்ய மல்லாதே போம் என்றபடி. 3559/4 (?).

**குமர தண்டம்** 922/3. ... புகுந்தீண்டிய வெள்ளம்*. குமரன் - தேவ ஸேநாபதி. தண்டம் - தண்டு, ஸேநாபதியும் சேனையும். குமரன் என்கையாலே என்றும் சிறு பிராயத்தரான தேவர்களும் தண்டம் - அவர்களின் ஆயுதங்களும் என்னுமாம்.

**குமரர் கோமான்** 2353/4. இளங் ... இடம் *. பரம பதத்தில் துவாதச வார்ஷிகரான நித்ய ஸூரிகளுக்கு சேஷியானவன். **குமரனார் தாதை** 3907/4. ... ... துன்பம் துடைத்து *. ஸுப்ரம்மண்யனுக்கு உத்பாதகன்.

**குமரி மணம்** 299/1. ... செய்து கொண்டு *. குமரி - கந்யகை. கந்யகாவஸ்தையில் செய்யும் கல்யாணம். **குமரிருக்கும்** 3551/2. " அங்குக் கூர்மை ... ; இங்கு அழகு ... " பயன்படாமற் போகும்.

**குமரிருந்து போம்** 2064/2, 3088/2. குமரி - குமாரீ. கந்யகா. அநுபவ யோக்யமில்லாமற் போம். " தயை ... தயை பண்ணுநிருக்கிற நீர்." 2937/1. " அல்லாத குணங்கள் ... போமித்தனை. " 3656/4. 3309/3. "... வ்யர்த்தமே போகாமே." **குமிழ்த்தி** 393/1. வலம்புரி ...* ஊதி. **குமிழ்த்து** 285/2. ... க் கொழித் திழிந்து *. குதித்து.

**குமிழி** 2540/1. மதகு. " இக் கண்ணின் ... க் கிழே விளையும் காட்டைச் சொல்லுகிறது. " மதகு மோழை. " வெண்ணகத்தில் ... க் கிழே சாவி போமாப் போலே. " 3369/4. " குமிழி - ப்ரவாஹோத் பத்தி ஸ்தானம்." " அநுபவித்துக் ... நீருண்டு போமித்தனை யொழிய சொல்லித் தலைக் கட்டப் போமோ ". 3032/4. தல ஸ்பர்சியாக அவகாஹிக்கை. தரையளவும் ஆழ்ந்து அநுபவிப்பது.

**குமிழி நீருண்ணப் பண்ண வல்லவளாய்த்து. 596/2.** "நானொருவனுமே உன் குணங்களிலே ... ண்ணு நின்றேன்." 2165/4.

**குமிறும் 3495/4.** *நின்று நின்று ... மே *. வெளிக் காட்டாமல் உள்ளே நின்று சுழிக்கும். மாநஸ வ்யாபாரம்.*

**குமிறு மோசை 3496/1.** ... *விழ வொலி*. கம்பீர கோஷம்.*

**குமுதங்கள் 1263/3.** *வாய் ... காட்ட *. அரக்காம்பல்.*

**குமுறி 396/1.** *தலைப் பெய்து ... *. இடிந்து முழங்கி.*

**குமைக்குந் திறங்கள்* 2622/2.** *நலிக்த பிரகாரங்கள்.* **குமைக்கும் 3346/1.** *இரு வல் வினையார் ... *. பிடிக்கும், நலியும். குமை - நலிவு.* **குமைத்திட்டு 3324/1.** ... *க் கொன்றுண்பர் *. நலிவு படுத்தி, ஹிம்ஸித்து.* **குமைதின்பர்கள் 3232/3.** *கானகம் போய்க் ... *. நலிவு படுவார்கள்.* **குமை தீற்றி 3561/1.** *உண்ணிலாவிய ஐவரால் ... ... *. நலிவு படுத்தி.*

**குயமி(மு)டை** *தடவரை யகலம் ** **1708/2.** *குயம் – குசம், முலை, முலைகள் மிடைகிற நெருக்கு(ண்)கிற, தடவரை – மலை போன்ற, அகலம் – மார்வு. குயமுடைய தடவரை போன்ற அகலம் என்றுமாம்.*

**குயல்வாய் மலர் 2501/4.** ... *மேல் *. குவிந்த வாயை யுடைய மலர். கொயல் வாய் என்று பாடமாகில் வட்டமான மலர்.*

**குயிலினம் கூவுஞ் சோலை 885/2. குயிற் பைதல் 3832/2.** ... *கள் கண்ணன் நாமமே *. குயில் பிள்ளை.*

**குரக் கரசன் 1322/2.** *இலங்கை செற்ற ... *. வாநர ராஜா.* **குரக்கு நாயகர்/கள் * 1858/3.** *வாநர யூதபதிகள்.*

**குரக்கு வெல் கொடி 334/4.** ... *த்தேர் மிசை*. வாநரமான வெற்றிக் கொடி.* **குரக்குக் கைகொடு கூழ் துழாவி 3795/4.** *குரக்கை, குரக்கு வாதம் வந்து வலிக்கும் கை. கால் குரக்களி வாங்குகிறது என்பதை குரக்கு வலி என்ன வேண்டும்.*

**குரகோஷம் 3583/2.** "*உங்களுக்குக் ... கேட்கிற தில்லையோ*". *கருடன் பறந்து வரும் பிரஸ்தாவமாகையால் அதன் காலோசை யென்று பொருள். க்குரம் - மிருகங்களின் கால் குளம்பு. பக்ஷிக்கும் சொல்லலாம் போலும்!. குர கோஷம் குர குர என்னும் கோஷமாகவுமாம்.*

**குரங்கு 772/4.** ... *கை யாளுகந்த வெந்தை *. வாநரம்.* **குரங்கு 2562/1.** *எறி வொத்து *. வாநரம், அல்லது விலங்குதல், அஸாத்ய ஸ்தலம், செல்ல வொண்ணாத இடம்.*

**குரங்குப் பிடி 2018/அவ.** (அரு). "... *போலே பிடித்ததையே பிடித்துக் கொண்டு மூர்க்கரா யிருக்கும்படி.*"

**குரம்பை** 271/3. இலை வேய் ... *. குடில், குடிசை, குடீரம். படலடைத்த சிறு குரம்பை *. 1280/1. ஊனக் குரம்பை * 2172/1. சரீரம். ஊனுடைக் குரம்பை வாழ்க்கை* 2039/4. மின்னிலும் நிலையற்றிருக்கிற சரீர வாழ்வு.

**குரல்** 457/2. ... மேலு மெழா *. **குரவக் கொடி** முல்லைகள் * 274/2. குரவு என்கிற விருக்ஷத்திலே கொடியாய்ப் படர்ந்து கிடக்கிற முல்லை. **குரவை** 143/2. ... பிணைந் திங்கு*. வளைய நின்றாடும் கூத்து.

**குரா நற் செழும்** போது * 2212/2. குரா - காட்டு மரம். அதனுடைய நன்றாய் செவ்விதான பூ. **குரிசில்** 1426/1. அரசர் தம் ...*. ராஜா.

**குருக்கத்திப் பூ** 188/4. ... சூட்ட வாராய் *. **குருக்கள்** 361/1. ... ளுக் கனுகூலராய் *. பன்மை பூஜ்யதையைப் பற்ற.

**குருகு சினை** 1179/3. ... யென்னச் சூழ்ந்து *. பக்ஷியின் முட்டை.

**குருகூர் நம்பி** * 939/3. திரு நகரியிலே வர்த்திக்கிற நம்பி. இவருடைய பூர்த்திக்கு ஊற்றுவாய் இத் தேச வாஸம். நம்பி - பூர்ணன். திரு நகரி - ஆழ்வார் திருநகரி, நம்மாழ்வார் அவதரித்த திவ்ய தேசம். **குருகை** 3186/4. ... க் கோன் *. குருகூர்.

**குருச்சி** 900/1. ஊர். "சேதநரில் ஒரு ... யில் பிறவாதா ரில்லையிறே." **குருட்டா** 2571/3. ... மிலைக்கும்*. குருட்டுப் பசு. **குருடர்க்கு வைத்த** இறைபிலியிலே விழித்தார்க்கு ப்ராப்தி யில்லையிறே" (?).

**குருதி** 7/3. பொழி ... பாய *. இரத்தம்.

**குருந்தம்** 366/1. ... ஒன்றொசித்தான்*. குருந்த மரம். (குருக்கத்தியென்று 3370/2.) **குருந்து** 525/4. ... திடைக் கூறை பணியாய் *.

**குரு நாடு** 3530/2. ... டையவர்கட்காய் *. குரு க்ஷேத்ரம். **குரு பாண்டவர்** 456/3. தூது சென்றுப் ... க்காய் *. குரு வம்சத்தில் பிறந்த பாண்டவர்கள்.

**குருமணி** 1239/2. அமுத மளிக்கும் ... *. பெரு விலையுள்ள ரத்நம். **குருமாமணிப் பூண்** 32/3. சிரேஷ்டமான பெரிய ஆபரணம்.

**குரு முகமாய்க்** காத்தான் * 404/2. குரு வாயிருந்து ஹிதோபதேசம் பண்ணி ரக்ஷித்தவன்.

**குருவிக் கணங்கள்** 594/1. **குருவிந்தக் கல்** 2225/2. "... லை மாணிக்க மென்று நினைத்திருந்தால் ரத்ந மாகாதிறே."; "ரத்நம் அறி

யாதானொருவன் ... லோடு ஒக்கும் இது என்றால்." 3122/4. காவிக் கல். குருவிந்தக் கல்லைத் தெலுங்கில் க்ருந்தம் என்கிறார்கள். இந்தக் கல்லில் கத்தி முதலிய ஆயுதங்களைத் தீட்டுவதுண்டு.

குருளை 1266/3. ... யைத் தழுவிப் போய் *. குட்டி.

குரை கடல் 410/1. குவளைகள் போல் ... போல் *. குரை கழல் கூத்தன் * 1856/1. ஒலிக்கிற வீரக் கழலோடு அழகாய் நடந்தவன். குரை - ஒலி. குலக் குமரன் 320/3. ... ரா, காடுறையப் போ *. குலம் விளங்கப் பிறந்த குமரன்.

குலக் கொடி 1078/1. அன்றுயர்...*. குலத்துக்குக் கொடி போன்ற பெண். குலங் களாய ஈரிரண்டு * 841/1. நாலு வர்ணம். குலங் கெழு கொல்லி 1115/3. நல்ல குலத்தில் சேர்ந்தவளாய் கொல்லி (மலையிலுள்ள) பாவை போலே யானவள்.

குலங் கொண்டே ஜீவிக்கும் (வா. மா. 152). "குலங் க றந் து மணியை புஜிக்கும்". அநுபந்தம் பார்.

குலச் சோழன் 1504/4. சிலைத் தடக்கைக் ... ... *. க்ஷத்ரிய வம்சியனான சோழன். குல சேகரன் 657/3. கொடைக் ... *. குல சேகராழ்வார். குலத் தலைய மத வேழம் 1620/1. ... பொய்கை புக்கு *. நல்ல ஆகரத்திலே (இடத்திலே) பிறந்து அலைகிற மத்த கஜம்.

குலத்தவர் 230/3. கோளார் ஆயர் ... *. குல தெய்வம் 465/1. எம்மனா என் ... மே *. குலத்துக்கு ப்ரதான தெய்வம்.

குல தொல்லடியேன் 3550/4. ... உன பாதம் *. குடி யடியேன், குல ப்ரயுக்தமாகப் பழையதாக அடிமையாயிருக்கிற நான்.

குலந்தரும் 956/1. ... செல்வந் தந்திடும்*. குலந் தாங்கு சாதிகள் நாலு 3195/1. ... லிலும் *. ஸகல குலங்களுக்கும் ஆதார பூதமான பிராம்மணாதி ஜாதிகள் நாலு.

குல நல் யானை 3253/2. ... மருப் பொசித்தாய் *. நற் குலத்திலே பிறந்த ஸர்வ லக்ஷண ஸம்பந்நமான ஆனை.

குலப் பாவை 1210/1. அரக்கர் ... *., 1700/3. வல்லா ளரக்கர் ...*. ஒரு ஜாதிக்காக (ராக்ஷஸ ஜாதி முழுதுக்கும்) கண் காட்டியானவள், தர்சநீயையானவள். குலப் பெருஞ் சுடர் 710/2. என் தன் ... ரே *. குலத்துக்கு விளக்கானவன்.

குலபதி 469/1. பாண்டியர் ... *. 1504/1. முது துவரை ... *. குலத்துக்கு நிர்வாஹகன்.

**குலம் பாழ் படுத்து** * 338/2. மறு இளை யறும்படி குட்டிக் கோலை யாக அறுத்து. குலம் பாழ் படும்படி பண்ணி. குட்டிக் கோலை - கர்ப் பத்திலேயே சிசு நசிக்கும்படி செய்வது.

**குலம் புனைவு** 3321/1. கொண்டாட்டும் ... ... ... ம் *. குலம் தொடுக்கை. இல்லாத குலத்தை ஏறிட்டுக் கொண்ட ஆபிஜாத்யாபி மானம். **குல மகள்** 689/2. கொண்டானை யல்லா லறியாக் ... *. நற் குடிப் பிறந்தவள். **குலமகன்** 1151/2. ... ற் இன்னருள் கொடுத்து*. குல புத்ரன். **குல மதலை** 727/1. தயரதன் தன் ... லாய் *. குலத்துக்கு உத்தாரகன். **குல மயில்** 1260/3. ... நடமாட *. மயில்களின் குலம், கூட்டம். **குலமலை** 353/3. ... கோல மலை*. தலையான, சிரேஷ்டமான மலை. **குல மன்னர்** 1162/1. ... அங்கம் மழுவில் துணிய*. ராஜகுலம், அரசர்கள் யாவரும்.

**குல மா மகட் கினியான்*** 1842/2. பெரிய பிராட்டியாருக்கு இனி யன். **குலமுடைக் கோவிந்தன்** * 385/3. கோப குலத்தில் பிறந்து கோவிந்தாபிஷேகம் செய்து கொண்டவன். **குல முதல்வன்** 1235/2. இமையோர் ...*. இரணுக்கு நாதன். **குல முத லடுந் தீவினை*** 3569/1. ஒருவன் பண்ணின பாபம் அவன் தன்னளவிலே போகையன்றிக்கே குலமாக முத லற முடிக்கவற்றான பாபம்.

**குலவரை** 2819/1. மன்னு ... யும் *. பூமிக்கு ஆணி யடித்தாற் போலே யிருக்கிற குல பர்வதங்கள்.

**குலவரையன்** மடப்பாவை* 2060/1. ஹிமவானின் புத்ரி.

**குலவாயர் கொழுந்து** * 3406/1. அபிஜாதரான கோபாலர்க்கு கொழுந்து - சிரோ பூதையான நப்பின்னைப் பிராட்டி.

**குல வானவர்** தம் கோதன்/தா 1466/1. நித்ய ஸூரிகளுடைய கொண்டாட்டத்துக்கு விஷய பூத னானவன். கோதுகலம் என்கிற இடத்தில் கோதா என்கிறது; கோதுகல மானவனே.

**குலவி** 1239/1. என்னாரமுதம் ... யுறை கோயில்*. கொண்டாடி. **குலவிய** 1711/3. மதுகரம் ... மலர் *. சூழ்ந்த.

**குல விளக்கு** 338/2. ... காய் நின்ற கோன் *. குலத்துக்குப் பிர காசம், குல தீபம். **குலவு தண் வரை** 1156/2. ... ச்சாரல் *. கொண் டாடும்படியான குளிர்ந்த மலை. **குலவு மிடம்** 1245/2. குடமாடு கூத் தன் ... *. கொண்டாடி வர்த்திக்கிற தேசம். **குல வேந்து** 1860/2. கொல் வேல் ... தே *. வம்சத்திலே பிறந்து அதுக்குத் தலைவன். **குல வேழம்** 1601/1. ... அன்று பொன்றுமை*. ஆகரத்திலேபிறந்த ஆனை.

**குலாகின்ற வெஞ்சிலை** வாண்முகம் * 2552/2. எப்போதும் வளைந்தே இடப்பதாய், ஒரு வியாபாரம் பண்ணவேண்டாதே கண்ட காட்சியிலேயே இலக்கானுர் அழியும்படியாய், அல்லா விற்களோபாதி கையிலே யிருக்கை யன்றிக்கே முகத்திலே யிருக்குமதான வில் வர்த்தியாகின்றுள்ள முகம்.

**குலாவி** 32/3. குருமாமணிப் பூண் ... த் திகழும் *. அசைந்து. **குலுக்கி** 2899/3. "திறில் நின்ற நிலையைக் ...". இட முண்டாம் படி பண்ணி. **குலுக்கும்** 298/1. தன் கையில் வளை ... *. அசைத்துப் பாராகிற்கும். **குலுங்க** 2515/3. மண்ணும் விண்ணும் ... *. ஆச்சர்யப் படும்படியாக.

**குலை** 747/1. ... கட்டி மறு கரையை யதனுலேறி *. அணை. 2230/2 ...சூழ் குரை கடல்*. கரை. 3707/3. செறி ...வாழை கமுகு*. கொத்து. **குலைக்கப் படும்** 3292/2. நும் தோள் ... *. அசைத் தாடப் படாகின்றது. **குலை செய்து** 895/1. "... தகைய வொண்ணுத படி". அணை கட்டி. **குலைத் தெங்கு** 1234/3. ... கொடிச் செந் நெல் *. குலை யையுடைய தெங்கு. **குலைந்து வீழ** 1256/1. பாகனெடும் ... *. நடுங்கி விழும்படியாக. **குலை மலி கதலி** 1753/2. ... குழுவும் வார் கமுகும் *. குலை நிறைந்த வாழை. **குலை யார்ந்த பழுக் காயும் பசுங்காயும்** *. 1535/1. குலைமிக்க பழுக்காய். பழுத்த காயும் பச்சைக் காயும்.

**குவடு** 577/3. முலைக் ... *. 2079/3. பொன்னிலங்கு முலைக் ...*. சிகரம். **குவலயத் துங்கக் கரி** * 125/2. பூமியிலுண்டான ஆனைகளில் விஞ்சினது. கு – பூமி, குவலயம் – பூமண்டலம், துங்கம் - உயர்த்தி, உயர் பிறவியான, உயரமான கரி – யானை.

**குவலயத்தோர்** 1069/2. ... தொழுதேத்தும் *. பூமியிலுள்ளோர்.

**குவளைக் கண்** 1109/2 ... ணிணை யெழுதாள்*. குவளைபோன்ற கண். **குவளை வண்ணன்** 1875/4. ... காண வாரீர்*. செய்தல் பூ நிறத்தன். **குவால்** 998/2. அதிகம், ஆதிக்யம். "அதில் ... லுண்டாக நினைத்து ஆதரிக்கிற இவன் பிரமமேயிறே யுள்ளது."

**குவாலாக்கி** 672/4. அதிகமாக்கி. "ஓரடி இவன் புகுர நின்ருல் அத்தைக் ...". **குவாலுள** 2023/1. "திரு வுள்ளத்துக்குச் சேற வேண்டுவன ...". **குவாலைச் செய்து** வைத்து 2023/1. "சேற வேண்டுவன ...". **குவி சோறு** 264/1. அட்டு ... *. குவித்த சோறு.

**குவிந் தெழுந்தில** 288/3. கொங்கை யின்னம் ... *. திரண்டு கிளர்ந்தன வில்லை.

**குவி முலை** 27/4. ... யீர் வந்து காணீரே *. குவிகிற பருவத்தி லுள்ளது. **குவை** 1103/1. புலன் கொள் நிதிக் ... *. குவியல், ராசி. 1638/2. முத்துக் **குவை** - முத்துக் குவியல். 1875/3. இரத்தினக் குவை.

**குழக் கன்று** 2200/2. ... திவிளவின் காய்க்கு *. அழகிய கன்று. **குழகன்** 58/3. ... சிரீதரன் கூவக் கூவ *. ஸம்ச்லேஷ சீலன், நீர்மை தோற்றச் சிரித்து உறவாடி யிருப்பவன். 3178/2. குரவை கோத்த...*. வாசியறக் கலக்க வல்லவன்.

**குழகனார்** 543/4. ... வரில் கூடிடு கூடலே *. கலந்தவர்களோடே கலக்க வல்லவன். **குழகி** 3467/1. ... யெங்கள் குழமணன் கொண்டு*. வசீகரண வ்யாபாரங்களைப் பண்ணி, குழகுகையாவது— யுவாக்களா யிருக்குமவர்கள் எதிர்த்தலை தங்களுக்கு அபவ்யமானால் அவர்களைச் சேரவிட்டுக் கொள்ளுகைக்காகப் பண்ணும் சேஷ்டிதம்.

**குழகு** 3441/2. குரவை பிணைந்த ... *. இனிய செயல், ஸாமர்த் தியம். விரகும், லீலா வ்யாபாரமும், பவ்யதையும்.

**குழகேல்** 3466/4. ஒளியோடும் ... லே *. அநாதரித்து வார்த்தை சொல்லாதே, செறியாதே, லீலா ரஸம் கொண்டாடாதே.

**குழம்ப** 1982/3. அலைகடல் நீர் ... *. குழம்பும்படியாக. **குழம்பு சாதி** 767/1. தலைக் கணத் துகள் ... *. கலப்பு ஜாதி. மநுஷ்ய ஜாதி யும் விலங்கு ஜாதியும் புண்ய பாப மிச்ரங்களாகையாலே குழம்பு சாதி. ஆஹார நித்ரா பயாதிகளாலே விலங்குகளுக்கும் மநுஷ்ய ஸாம்ய முண்டு. தேவ கணம் புண்ய யோநி. ஸ்தாவரங்கள் பாப யோநி. புண்ய பாப மிச்ரயோநி திர்யக் ஜாதியும் மநுஷ்ய ஜாதியும்.

**குழம்புப் பால்** 3509/1. சேர்ப்பாலும் கண்ட சர்க்கரையும் என் பதில் சேர்ப் பாலின் பொருள் குழம்புப் பால், கெட்டியாகக் காய்ச் சின பால்; சர்க்கரை ஏலம் மிளகு சேர்த்துக் காய்ச்சி மாவுகரைத் துக் கலந்து கெட்டியாக்கின பால். தெப்பத்தில் ரங்கநாதன் அமுது செய்கிறார். சேர்ப்பால் என்பது இவையெல்லாம் சேர்த்தது.

**குழமணன்** 3467/1. குழகி யெங்கள் ... கொண்டு *. மரப்பாச்சி. "ஒருவன் ஒரு ... ளைப் பண்ணி" 3130/4, 3608/3.

**குழமணிதூரம்** 1868/4. ஆடுகின்றோமே ... *. குணலைக் கூத்து போலே தோற்றார் தோல்விக் கிடாக குழமணி தூரக் கூத்தென்று ஒரு கூத்துண்டு ஆடுவது

**குழல்கள்** 42/4. ... இருந்தவா காணீர் *. கூந்தல். **குழல்கள்** 254/2. ... ளும் கீதமுமாகி *. இலைக் குழல் வேய்ங் குழல் முதலா னவை. **குழல் கற்றை** 2234/1. செறியார் ... *. மயிர் முடி.

**குழல் தாழ்ந்த முகத்தான்** 263/2 ... ஊதுகின்ற குழல்*. தாழ்ந்த குழலையுடையவன். **குழல் தாழ்ந்த தோள்** 3392/4 மொய்ய நீள் ... *. குழலானவை தாழ்ந்து அணைக்கைக்கு யோக்யமான தோள். குழல்கள் வந்து அலையெறியா நிற்பதாய் அணைக்கப் பாங்கான தோள்.

**குழல் பணி** 606/4. "திருக்குழல் பணியை சேர்த்து வைத் தழைக்கவுமாம்." தலையலங்காரம்.

**குழல் முழைஞ்சுகள்** 285/2. ... ளினூடு*. குழலினுடைய ஸுஷி, துளை, மயிரில் துளையுண்டு; அதனால்தான் மயிர் வளருகிறது. மயிரை நுனியிலுள்ள பிளவிலிருந்து இரண்டாய் உரிக்கலாம். **குழல் முழவம்** 285/3. ... விளம்பும் புதுவை*. குழலோசை. **குழல் வாய் விரை** 2582/3. குழலில் பரிமளம். புஷ்பாதிகளாலே வந்தேறியான பரிமள மின்றிக்கே ஸ்வாபாவிகமான பரிமளம். **குழல் வாராய்** 162/4.

**குழலழகர்*** 608/2. **குழலி*** 43/1. **குழலியர்** 1187/3. கொங்கு மலர் ... *. **குழலோடின தோள்** 3913 (?). கூந்தல் புரளும் தோள், அல்லது மூங்கில் போன்ற, வேய் மரு தோள் என்று பொருளாகலாம்.

**குழறி** 3832/2. கண்ணன் நாமமே ... *. அநக்ஷரமாகச் சொல்லி. **குழறு பூவை** 3466/4. ...யொடும் கிளியொடும்*. அநக்ஷரமாகப் பேசும் பூவைப் பறவை. **குழன்று** : " ... பிடித்துக் கட்ட வொண்ணாத மயிர் முடி" (?) கூட்டி. அரு.

**குழா** 3583/4. பிள்ளைக் ... விளையாட் டொலி *. குழாம்.

**குழாங்கள் குழிய** குழு * 2561/1. திரளாகத் திரண்ட திரள். ஸமூஹங்கள் திரண்ட திரட்சி.

**குழாங் கொளாயிரம்** 3041/4. ... ... த்துளிவை பத்து *. பத்துப் பாட்டு ஒரு திருவாய் மொழியாய், பத்து திருவாய் மொழி ஒரு பத்தாய் இப்படி பத்துப் பத்தாகக் கூடின ஆயிரம்.

**குழா நெடு மாடம்** 2513/4. இலங்கைக் ... *. திரண்டு நெடிய மாடம். **குழாம் விரிந்த** நீலக் கங்குல் * 2517/1. குழாம் குழாமாக விஸ்த்ருதமான ராத்ரி. **குழாய் மூடியிட்டாற் போலே** 1983/3. அரு. கண் செறியிட்டாற்போல என்பதன் பொருள்.

**குழா வரி வண்டு** 1141/3. ...இசைபாடும்*. திரண்ட வரிவண்டு. **குழிக் கண்** 379/2. ... கள் பிழற்ற *. உள்ளே இடி விழுந்த கண், இடுங்கின கண். **குழிய குழு*** 2561/1. குழாங்கள் திரண்ட திரள்.

**குழியிலே கால் கழுவினூர்** 622/3. " ... ரோபாதியாக வாய்த்துக் கொள்வது." பித்ருக்கள் நிமித்தமாக வரிக்கப்பட்டாற் போலே (கால் கழுவி போக்தாக்கள்) தானும் விதி ப்ரேரிதமாகக் கொள்ளும்.

**குழு** 3/2. எங்கள் ... வினில் புகுதலொட்டோம் *. திரள். **குழுமி** 655/1. தொண்டர் தங்கள் குழாம் ... *. கலசி, கலந்து, கூடி. **குழுவு மாடத்** தென் குருகூர் * 3307/2. நெருங்கின மாடம், திரண்ட மாடம்.

**குழைக் காதன்** 1569/3. மகரக் ... *. குழை - காதணி, காதுப் பணி. **குழைக்கின்றது** 3816/2. காய் கூழை வாலால் ... *. பிரகாசிப்பிக்கிறது, தெரிவிக்கிறது, ஸ்வாபேக்ஷித ஸூசகமான சேஷ்டையைப் பண்ணுகிறது. **குழைச் சரக்கு** 477/4. " ... கேயாகிலும் விடவொண்ணாத போக்யதை மிக்கிருக்கை." அஸாரமான வஸ்து. "மீண்டும் இவ்விடத்தை விரும்புவர்கள் — என்று நினையாத படி ... க்கறுத்துக் கொண்டு போனபடி." 3517/ப்ர. ரக்ஷ்ய வர்க்கம், அல்லது குழைய வேண்டிய, கொஞ்சிக் குலாவ வேண்டிய சரக்கு. அறுத்துக் கொண்டு போனபடி - கூட்டிக் கொண்டு போனபடி. பிறரிடமிருந்து அறுத்துத் தன் பரமாக்கி. **குழைத்த எம் மைந்தா** 3072/3. உன்னை யென்னுள்ளே ... *. கலசின, ஏக த்ரவ்யமாம்படி கலந்த.

**குழைத்து** 389/3. கோத்துக் ... குணலமாடி *. கூட்டி, கூடிக் கலந்து. **குழைந்து கொடுக்கை** 1130/1. "கருத் தறிந்து ... க் கிடான மேன்மை." தாழ்ந்து கொடுக்கை.

**குழை முந்நூல்** கொள்ளுமாப் பொலே 2500/கம். அநுபந்தம் பார். **குழையுமா லெந்த னுள்ளம்** * 2040/2. உருகி சிதிலமாகா நின்றது.

**குழையும் மகரமும்** 73/3. காதுப் பணி, மகரக் குழை. **குழைவு** 623/1. வண்ணக் திரிவும் மனம் ... ம் *. நெகிழ்ச்சி.

**குள்ளக் குளிர** 486/6. ... க் குடைந்து *. வவ்வலிடும்படி, குளிர் ஒடுக்கும்படி. **குள்ளே** 1242/1 (அரு). " லோகத்தில் வாமனர்களெல்லாரும் த்ரிவிக்ரமனோடொப்பா ரென்னும் படி மிகவும் ... ".

**குளச்சிட்ட கயிறு** 3192/2. (சி. அரு). சுருக்கு போட்ட கயிறு. **குளந்தை** 3685/3. மாடக் கொடி மதிள் தென் ... *. நவ திருப்பதியில் ஒன்றான பெருங்குளம். **குளப்படி** (?). குளம் பளவு.

**குளப்புக் கூறு** 632/2. ... கொளப் பட்டு*. குளப்பில் கூறு, பிளவு. **குளம்** 1119/2. ... படு குவளை *. குளவிக் கூடு (?). " ... போலே திரண்டு " **குளன்** 3210/3. ... ளூர் கழனி *. குளம்.

**குளிர் சாந்தம்** 565/1. ... மட்டித்து *. பழகப் புதைத்து ஆறின சாந்தம். **குளிர் வாயினர்** 285/4. ... ராகி*. குளிர்ந்த பேச்சை யுடையவர். **குளிர் விழி** 2540/1. ... யதன் மென் கமலத் தடம் *. குளிர்ந்த பார்வை. **குளிரிக் குடம்** 570/1. "செருக்கராயிருக்குமவர் கையிலே ... பிடித்திருக்கும்." பனி நீர்க் குப்பி.

**குளு நீராற்றும்** 413/1. (திவாய் பி). " வெந்நீரைக் ... ".

**குற்ற வாட்டி** 3552/4. "நான் தான் ...யல்லேனோ". குற்றவாளி ஆண் பால், குற்ற வாட்டி பெண் பால். **குற்றவாளர்** 3559/4. " பெருமான் தான் ... அல்லரோ ".

**குற்றுடை வாள்** 992/1. குறு உடை வாள், சிறிதான உடைவாள். உடையில் சொருகும் கத்தி. **குற்றுயிராக்கி** 6/3. "ஹிரண்யனைக் ... கி விடாதே," குறுகின ப்ராணன். அதாவது— ம்ருத ப்ராயன்.

**குறடு** 1532/1. அகில் ... ம் சந்தனமும் *. கட்டை. **குறங்கு** 169/3. கொந்தக் குழலைக் ... புளியட்டி*. வார்த்து, பெய்து. **குறம் :** குறத்தி சொல்லும் குறி. குறத்துக்கு அருளப் பாடு என்று கோயில் முத்துக் குறி அபிநயிக்க அருளப் பாடு இடுவதுண்டு.

**குற மகளிர்** 264/3. ... கொட்டைத் தலைப்பால் *. குறத்திகள், குறப் பெண்கள். **குற மாதர்** 1025/3. ... ... கீளிதனைம் *. **குறவர் மாதர்கள்** * 1049/2. குறப் பெண்கள். **குறவாணர்** 2370/1. குறவர்களுக்கு நிர்வாஹகர்.

**குறள் ;** திருக் குறள். " தானந் தவ மிரண்டும்." 3013/3. " வேட்டப் பொழுதில் " 3517/1. இப்படி இரண்டு மூன்று குறள் ஈட்டில் உதாஹரித்திருக்கிறது.

**குறள் கயிறு** 1996/2. குறுங் கயிறு. **குறள் மாண்** 2934/2. ... ஞாயுல கிரந்த கள்வர் *. குறளான அழகு. அழகான குறள் - வாமநன். **குறளடிகள்** 1629/4. உருவக் ... *. வாமநப் பெருமாள்.

**குறளர்** 2057/1. " கூனர் ... ஸஞ்சரிக்குமாப் போலே." எக்கடிகள். **குறளன்** 44/4. மாணிக் ... னே தாலேலோ *.

**குறிக் கொண்டிது** நீ கேள் * 553/2. நெஞ்சிலே படும்படி அவதாநம் பண்ணி. **குறிக் கொண்மின்** * 451/4. அறியுங்கோள், மனதில் கொள்ளுங்கோள். **குறிக் கொள்** ஞானங்கள் * 3038/1. யம நியமாத் யவஹிதராய்க் கொண்டு ஸம்பாதிக்க வேண்டும் ஞானங்கள்.

**குறிக் கொளந்தணமை*** 896/1. மந்த்ர லோபம், க்ரியா லோபம், த்ரவ்ய லோபம், கால பேதம், தேவதா வ்யத்யயம்— யாதும் இல்லாமல், பாதுகாக்க வேண்டும் ப்ராம்மண்யம், பார்ப்பனமை.

**குறிச்சி** 3509/3. "இருக்கைக்கு ஒரு ... யும் கொடேடாம்". குப்பம். **குறிஞ்சி** 352/3. குற மாதர்கள் பண் ...*. குறிஞ்சிப் பண். **குறிஞ்சி மருள்** 1049/3. ... இசை பாடும் வேங்கடம் *. குறிஞ்சி யென்னும் பண். **குறிஞ்சி யிசை** 3869/1. ... தவருமாலோ *. குறிஞ்சியாகிற பண்ணோடே கூடின இசை. **குறிஞ்சி நிலம்** 2485/2. "... ... ந்துத் தலை மகன்." மலைச் சாரல். **குறிஞ்சியின் நறுந்தேன்** 1819/3. குறிஞ்சிப் பூவின் செவ்வித் தேன்.

**குறித்த சங்கம்** 256/2. ஆநிரை யினம் மீளக் ... *. ஊதின சங்கு. **குறித் தெறிந்த சக்கரத்தான்** *. 2380/3. குறி வைத்து விசின சக்கரம்.

**குறிப்பறிந்து கூருயே** 1200/4. கூர் வாய சிறு குருகே ...*. கருத்தறிந்து வந்து எனக்குச் சொல். **குறிப்பாகில்** 1647/4. நின்றனக்கும் ... ... *. ஆதர முண்டாகில், விருப்ப முண்டாகில். **குறிப்பிடம்** 378/4. ... கடந்து *. அநுபவ விசாச்யமான தேசம். **குறிப்பில் கொண்டு** 2580/1. ... நெறிப் பட *. மனத்தில் கொண்டு. **குறிப்பில் வைத்தது** 835/4. திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறது.

**குறிப்பு** 463/4. இனி யென், திருக் ... பே *. நினைவு. **குறிப் பெனக் கடையு மாகில்** * 879/3. எனக்கு இலக்கு வாய்க்குமாகில்.

**குறிய** 2537/1. மொய் பூங் குழல் ... *. குறுகி யிருந்தது. **குறிய மாண்** 3349/4. ... உருவாகிய*. கோடியைக் காணியாக்கினாப்போலே கண்ணாலே முகக்கலாம்படி வடிவை அமைத்தபடி. குறுக்கின அழகு.

**குறி யழித்திட்டா லாகாதோ** (?). எம்பெருமான் தளிகையில் வைத்த அடையாளத்தைக் கூட அழிப்பதில்லை. பிரஸாதம் அமுது செய்கைக்கு அடையாளமாக அதிலுள்ள குறியையாவது அழிக்கக் கூடாதோ என்று அநுதபிக்கிற வார்த்தை.

**குறி வரவிட்டு** 2492/அவ. "கிட்டக் கடவதாகக் ... ப் போய்". குறியிட்டுப் போய், ஸங்கேதம் பண்ணிப் போய்.

**குறுக்கும்** 3858/2. ... வகையுண்டு கொலோ *. கிட்டும். **குறுககில்லார்** 3902/2. கூற்றின் தமர்களும் ... *. கிட்ட மாட்டார், ஓடிப் போவார்கள். **குறுகச் சென்றால்** 425/1. எல்லை வாசல் ... *. கிட்டச் சென்றால், கிட்ட விட்டு.

**குருகப் பெறு** 466/3. என் கோலாடி ...*. கிட்டப் பெறுது. **குறுகா** 171/4. ... வினைதானே *. அருகு வந்து கிட்டாது. **குறுகாத மன்னர்**

345/1. ... ரைக் கூடு கலக்கி *. கிட்டாத ராஜாக்கள். **குருகா னோ** 3548/1. ... இறுதி கூடா *. ஸ்வத: குறுகுகையும் நீளுகையு மின்றிக்கே யிருக்கை.

**குறுகி** 1912/2. வீளையாடுமிடம் ... *. கிட்டி. **குறுகினம்** 3951/4. குரை கழல்கள் ... மே *. கிட்டப் பெற்றோம். கூடப் பெற்றோம்.

**குறுங் கயிறு** 1434/2. கண்ணியார் ... *. குறளா யிருப்ப தொரு தாம்பு. **குறுங்குடி** 823/2. ... நெடுக்தகாய் *. திருக்குறுங்குடி திவ்ய தேசம். **குறுஞ்சி** 1710/4. " ... நிலமும் மருத நிலமும்." மலைச் சார்பு, கொல்லை நிலம். குறிஞ்சி குறுஞ்சி இரண்டும் ஒன்றே. குறிஞ்சிப் பூ என்று ஒரு பூவும் உண்டு.

**குறுணி** 2666/2. " குனியக் ... பற்றிய காலமெல்லாம் வயர்த்தமா யிருந்தேன்." ஒரு குனிக்கு குறுணி நெல் அள்ளும் பருவம் என்று பொருள். 2729/2. **குறுத்தால்** 1996/2. "கயிறு ... உரலில் இடம் காணவொண்ணாது." குறுகினால், குறைந்தால்.

**குறுந்தடி** 1938/4. ... நெடுங்கடல் வண்ணா *. சிறு தடி, குறுகின தடி. **குறுந் தலை** 287/2. ... ச் சிறு பிள்ளைகள் *. தன்மையில் தலை நின்றது. தூர் வ்யாபாரத்திலே சிரேஷ்டமானது.

**குறுந் தெரு** 1529/2. " ... வும் நெடுந் தெருவு முண்டாக்கினார்கள்." சிறு தெருவு, முடுக்குத் தெரு.

**குறும் பதக்கி** 418/1. ... யரசு வாங்கி *. செருக்கை வாட்டி.

**குறும்பன்** 3630/3. தருமமறியாக் ... னே *. தீம்பன். **குறும்பு** செய்தாற் போலேயாம் 3077/2. துஷ்டத் தனம்.

**குறுமை நெடுமை** 3482/1. சிறுமை பெருமை ... யுமாய்*. ஹ்ரஸ்வ தீர்க்கங்கள். **குறு வெயர்ப் புருவம்** 282/2. ... ... கூடலிப்ப *. குறு வேர்வை யரும்பின புருவம்.

**குறை** 657/1. "விளங்கா நின்ற திருக் குறையை யுடைத்தாய் கரையையு முடைத்தான காவேரி." திடர். திருமுடிக் குறையென்றும் காண்கிறது. திரு முடிக் குறையாவது பெருமானுடைய திருமுடிப் பக்கத்திலுள்ள பிரதேசம்.

**குறைக் கொள்ளி** (?). "வீரனும் நின்று ... யான சரீரம்". எரிந்த கட்டை. குறைக் கொளிக் கட்டை என்பது இதன் கொச்சை.

**குறை கிடவாதபடி** 3281/1. " இப் பரப்பில் ஓரிடம் ... ஆண்டவர்." **குறை கிடவாமை** 1568/4. "நெஞ்சே அநுபவித்து, கண்கள் அநுபவிக்கப் பெற்றதில்லை என்ற குறை கிடவாமை." குறை இல்லாதபடி.

**குறை கொண்டு** 2390/1. ... ... *நான் முகன் குண்டிகை நீர்ப் பெய்து* *. குறைகளை முன்னிட்டுக் கொண்டு.

**குறை பட்டது** 3842/4. *கோட் ... என்னுருயிர் கோளுண்டே* *. சேவித்தது. **குறை முடித்து** 1424/8. *உன்னை வேண்டிய* ... *. மனக் குறையைத் தீர்த்தது. **குறையல்** 1287/2. *மங்கையர் கோன் ... வாளி**. திருக் குறையலூர். **குறை யிரந்து** 2198/4. *மாலைக் ... தான் முடித் தான் கொண்டு* *. குறைகளைச் சொல்லி வேண்டி.

**குறைவற்றார் குறைவாளர்** (?).

**குறைவாளர்** 877/8. "*நிறைவாளர்க்குத் தன்னைக் கொடுத்தவன் ... ர்க்குத் தன்னைத் தரச் சொல்ல வேணுமோ.*" 3154/4. தாழ்ந்தவர். **குறைவிலம்** 3308/4. *மாறனன் கவராத மணிமாமை ... மே* *. **குறை வினம்** 3001/2. *இனியென்ன* ... *. அஸாத்யமாய் குறை கிடப்ப தொன்றை யுடையோம்.

**குறைவு** 501/4. ... *ஒன்று மில்லாத கோவிந்தா* *. **குறை வேண் டேன்** 3420/2. *ஒன்றும்* ... *. குறை நிரம்புவதாக வேண்டி யிரேன்.

**குன்ற நாடு** 2485/2. *பாண் ... டர்**. குறிஞ்சி நிலம், மலைகளோடு கூடின நாடு. **குன்ற மாமணி மாட** *மாளிகை* * ... 3768/2. மலை போலே அவிசால்ய மாயிருப்பதாய் பெரு விலையுள்ள ரத்னங்களாலே செய்யப் பட்டிருந்துள்ள மாடமும் மாளிகையும்.

**குன்றர்** 266/4. *கொம்மைப் புயக்* ... *. மலை மேலே வர்த்திக்கிற குன்றுவர், மலைக் குறவர். **குன்றன்** 1602/4. *அஞ்சனக் ... தன்னை**. குன்று போன்றவன். **குன்றனைய குற்றம்** * 2122/1. மலை போலே ஸ்வ யத்நத்தால் சலிப்பிக்க வொண்ணாதை. பெருத்து உறைந்திருக்கிற குற்றம். **குன்றரும் திரள் தோளன்*** 1531/4. ஆர்தல் பொருந்துதல். மலையாலே மலையை யெடுத்தாப் போலே திரண்ட தோளை யுடையவன்.

**குன்றி** 863/1. *கோய்மை ... மூப் பெய்தி**. குறைந்து, (கோய்மை யாலே குன்றி). **குன்றிச் சூடு** 3783/4. "*சிறு ப்ரஜை ... என்று நெருப் பிலே கை வைக்கும்.*" குந்த மணிக் கொண்டை. குந்துமணி என்று சொல்லுகிறோம். குந்த மணி என்று தகாரத் தோடு கொண்டையும் காண்கிறது. கொண்டை கொட்டை யென்று பொருளாகலாம். "*... போலே வைத்த கண் மாறாதே கண்டு கொண்டிருக்க வேண்டும்படி வரிகளையுடைய திருவநந்தாழ்வான்.*" குஞ்சர பீடம்.

**குன்றிருந்த மாட நீடு** *பாடகம்* * 814/1. மலைகள் சேர இருந்தாப் போலே ஓங்கின மாடங்களையுடைய திருப் பாடகம்.

**குன்றின் முல்லை** 1806/4. ... *மன்றிடை நாறும்* *. *மலையிலுண்டான முல்லை.* **குன்று நேர் மாடம்** 3909/2. ... *மாடே* *. *மலைகளை புடைபடத் தொளைத்து நெருங்க வைத்தாற் போலே யிருக்கிற மாடம். நேர் - ஒப்பு. புடை பட - இட முண்டாம் படி.*

**குன்றெயில்** 1182/3. *தேம் பொழிற்* ... *. *மலைபோலே யிருக்கிற மதிள்.* **குன்றேய் மேகம்** 1130/3. ... *அதிர் குளிர் மாமலை* *. *குன்றுகளிலே வர்த்திக்கக் கடவ மேகம்.*

**குன்றேல்மின்** 2002/4. *செய்ந் நன்றி* ... *. *குறைக்காதே கொள்ளுங்கள், குறைக்காதீர்கள்.* **குனிக்க வல்லார்** 212/3. இவை பாடிக் ... *. *ஆட வல்லார்கள்.*

**குனிக்கும்** 266/4. *குன்றர் சிலை* ... *. *வளையா நிற்கும்.* **குனிக்குமவர்கள்** 3165/*ப்ர.* (6). " *ஆர்வம் பெருகிக்* ... ". *வளையம். ஆடுகிறவர்கள்.* **குனி சங்கு** 2552/2. ... *இடறி* *. *வளைந்த (வலம்புரி) சங்கு.* **குனி சார்ங்கன்** 3748/3. *நான்கு தோளன்* ... *. *வளைந்த சார்ங்க வில்லை யுடையவன்.* **குனிப்பார்** 3170/4. *முனிவின்றி யேத்திக்* ... *. *ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணுவார்.*

**குனியக் குறுணி** *பற்றுகிற காலம்: குறுணி பார்.* **குனி வில்** 732/1. ... *லேந்தும் மல்லணைந்த வரைந் தோளா* *. *வளைந்த வில். வீரர்களின் வில் ஒருக்காலும் நாணி யிறங்கிடாமையாலே வளைந்த படியே யிருக்கும்பிறே.*

**கூ** 1947/1. *கோழி* ... *என்னுமால்* *. **கூக் குரல்** 3827/4. *நும் எங்கு* ... *கேட்டுமே* *. **கூகிற்றி யாகில்** 550/4. *என் தத்துவனை வரக்* ... *. *கூவ வல்லையாகில்.* **கூகின்ற தில்லை** 1967/4. *கோழியும்* ... *. *கூவுகிறதில்லை.* **கூச்சு** 457/2. *மயிர்க்* ... *சுமரு* *. 1670/1. *சூலம்.* **கூச்சுக் கால்** 1006/1. " *கவரில்* ... *களாக வைத்து* ". **கூச்சு முறை** 531/1. " *உனக்குக்* ... ... *புடையாசெல்லாரும் போக்தார்கள் காண்* ". *கூச வேண்டும்படி முறையுடையவர்கள்.*

**கூசஞ் செய்யாது** *கொண்டாய்* * 3991/4. *கூசாதே, தயங்காதே அங்கீகரித்தாய்.* **கூசம்** 292/2. ... *மின்றி நின்றுர்கள்* *. *கூச்சம்.* **கூசி நடுங்கி** 698/3. ... *யமுனையாற்றில்* *. **கூசியிட்டீர்** 975/2. *உள்ளம்* ... *கூசினீர், கூச்சப் பட்டீர், கூச்சமடைந்தீர்.* **கூசு முறை** 2750/(?) ... *யாய்க் கடக்க நிற்குமவன்.*

**கூட்டகம்** 1957/3. *முளரி* ... *த்து* *. *கூடு.* **கூட்டத்தலைவ** 289/1. *திரண்ட திரள்.* **கூட்டரவு** 2899/*முஞீ.* *ஸமுதாயம், கூட்டம்.*

**கூட்டரிய திருவடிகள்** 3326/4. எக்கான்று கூட்டுதியே *. பெறுதற்கரிய திருவடிகள். **கூட்டல்லர்** 3866/4. "அவர்கள் செத்துப் பிழைக்கிறவர்களுக்குக் ...".

**கூட்ட வல் வினை** 3778/1. தமர்கள் ... *. ஸங்கத்துக்கு வரும் வலிய பாபம். **கூட்டிக் கொடுக்கைக்கு தோழிமாருமில்லை** 1911/3. அழைத்துப் போகை. **கூட்டினை** 3327/4. கூட்டரிய திருவடிகள் ... *. சேர்த்துக் கொண்டாய். **கூட்டு** 1758/4. "இப் பார்வைக்கு நானும் ... டென்று பார்க்கிறானோ". ஸம்மதம். **கூட்டுகிறார்** 2699/4. "திருவுள்ளத்தோடே ...". உபதேசிக்கிறார். **கூட்டுண்டு நீங்கினான்*** 3330/4. கலந்து பிரிந்தான். **கூட்டுத் தேட வேண்டும் படியாயிற்று** 3418/4. "தான் தன்னை அநுபவிக்கைக்கு ..." ஸஹாயம். **கூட்டுதி** 3326/4. 3327/1. எஞ்ஞான்று ... யே *. ... நின் குரைகழல்கள்*. கூட்டு வாய்.

**கூட்டுப் படை** 3506/4. "கூளப் படையான ..." பங்களப் படைக்குப் பொருள். "... நின்றவாறே கலியா நின்ற தாயிற்று." 3629/3. திருமேனியி லழகு. **கூட்டோடே கொடுத்து** 3321/2. சரீரத் தோடே. கூண்டோடே என்றாலும் அர்த்தம் இதுவே.

**கூடகிற்பீர்** 1498/2. திருவடியே ... *. **கூடம்** 1351/3. கவினார் ... *. **கூடல் நாயகன்** 667/3. கொல்லி காவலன் ...*. மதுரைக்கு நிர்வாஹகன்.

**கூடலர்** 330/1. ... சேனை பொருதழிய *. சத்ருக்கள். **கூடலர்கோன்** 657/3. ... கோடைக் குலசேகரன் *. மதுரைக்கு நிர்வாஹகன். **கூடலன்** 673/1. எம்பரத்த ரல்லாரோடும் ...*. கூடமாட்டேன். என் யாத்ரையே யாத்ரையா யிராதாரை யாக்கு வனைத்திருப்பன் (?). **கூடலாம்** 3163/4. அவனையும் ... மே *. இட்டலாம்.

**கூடலிப்ப** 282/2. குரு வெயர்ப் புருவம் ... *. மேலே இளர்ந்து வளைய, நெளிய. **கூடலிழைக்கை** 2511/அவ. "அவன் வருமளவும் ஆறியிருக்க வொண்ணாமையாலே ... க்கத் தொடங்கினார்." 534/அவ. அரு. கூடலாவது — மண்டலாகாரமாகக் கீறி, உள்ளே வளையமாக சுழி சுழியாக சுழிக்க, இவை இரண்டாகக் கூடினால் இரட்டைப் படுகை வரவுக்கு ஸூசகம்; ஒற்றைப் படுகை வராமைக்கு ஸூசகம். கூடலாவது — மணல் முதலானவைகளாலே வட்டமாகக் கீறிப் பார்க்கை. கூடல் - சுழி. கூடலிழைத்தல் - சுழி கீறுதல்.

**கூடலூர்** 1858/4. *கூந்தல் கமழும் ... ரே* *. *ஆடுதுறைப் பெருமாள் கோயில். தேவர்கள் கூட்டமாக வந்து பெருமாளை ஸேவிக்கும் ஸ்தல மாகையால் கூடலூர் என்று திருநாம மாயிற்று.*

**கூடாக்கி** 2394/2. *மெய் வருந்திக் ...* *. *வற்றப் பண்ணி.* **கூடா முன்னம்** 2274/2. *அது ... கிட்டுவதுக்கு முன்னே.* **கூடார்** 505/1. *... ரை வெல்லுஞ் சீர்* *. *கூடாதவர்கள்.* **கூடு கலக்கி** 351/1. *கூறுகாத மன்னரைக் ...* *. *இருப்பிடத்தைக் கலக்கி.* **கூடுகிறார்** 2899/4. *" திருவுள்ளத் தோடே ... " உறவு கொண்டாடுகிறார்.* **கூடு கிடக்க வாளை யுருவிக் கொடு போவாரைப் போலே** 1208/1. *கூடு - கத்தி யுறை, அது கிடக்க - இருக்கையில்.* **கூடு கொண்டது** 1303/2. *"துர்வர்க்கமடையக் ... தாய்த்து." அழிந்தது.*

**கூடு நீரரங்கம்** 804/4. *ஸஹ்யத்தினின்று வந்ததும் இப்பா லுண்டான வர்ஷத்தாலுமாகக் கூடின நீரையுடைய திருவரங்கம்.*

**கூடுபுனல்** 3588/4. *... திருப் பேரெயில்* *. *ஆற்று நீர் ஊற்று நீர் வர்ஷ ஜலம் மூன்றுமாகக் கூடினது.*

**கூடு பூரிக்க** 3021/2. *" இருந்ததே குடியாகப் பாபங்களைக் ... ". உறைய நிறைக்க, அதிகமாக்க என்று அர்த்தம்.* **கூடு பூரித்தார்** 3041/3 (24). *"திரண்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஜீவநத்தைக் ... தாராயிற்று."* **கூடு பூரித்து** 873/*அவ. " பாபத்தைக் ... யம பீதனுயிருக்கிறவனுக்கு." நிரப்பி.* **கூடு பூரித்துக் கிடந்ததோ** 484/7. *நிறைந்து கிடக்கிறதோ. கூடு - தாய்ய மிருக்கிற கிருஹ விசேஷம்.*

**கூடை** 926/3. *தொடை யொத்த துளவமும் ... யும் பொலிந்து* *. *திருப்படலிகை.* **கூண்டோடே கொடுத்து** 3321/2. *கூட்டோடே பார்.*

**கூத்தவப்பன்** 3472/2. *... தன்னைக் குருகூர்ச் சடகோபன்* *. *கூத்தையுடைய மஹோபகாரகன்.* **கூத்த வெம்மடிகள்** * 1823/2. *மநோஹாரியான சேஷ்டிதத்தை யுடைய ஸ்வாமி.*

**கூத்து வந்தாடி** 115/2. *... குழலா லிசை பாடி* *. *கூத்து உவந்து ஆடி.* **கூதல்** 698/3. *பனிக் ... லெய்தி* *. *ஊதல் குளிர்.* **கூதை** 3789/2. *காது செய்வான் ... செய்து* *. *மூளி.*

**கூந்தல்** 1540/3. *வண்டு முரலும் ... லாய்ச்சி* *. *மயிர் முடி.* **கூநீர் மதி** 1803/4. *வானில் ...* *. *வளைவை ஸ்வபாவமாக வுடைய சந்திரன். கூன் வளைவாய் அத்தாலே மண்டலாகாரத்தைச் சொல்லும்.*

**கூப்பி** 126/2. *கதறிக் கை ...* *. *கூட்டி. அஞ்சலி பண்ணி.* **கூப்பிட் டழைத்தக் கால்** 3720/3. *என்னையாளக் ...* *.

**கூப்பிழைக்க வரிதான** 2892/1. அநுபந்தம் பார்.

**கூப்பீடு** 3042/3. " கூப்பிட்ட ... ம் பாட்டாய் விழா வின்றது." கூப்பாடு. **கூம்பின** 487/2. ஆம்பல் வாய் ... காண்*. மொட்டித்தன, மூடின. **கூம்பு** 692/4. வங்கத்தின் ... பேரும் மாப் பறவை*. கொம்பு, கொடி மரம். **கூம்பும்** 284/4. இறங்கும் ... *. குவியா நிற்கும்.

**கூமாறு** 3320/4. ... றே விறை கண்டாய்*. அழைக்கும்படி. **கூய்** 2496/3. இறை ... யருளார்*. கூவி. **கூய்ப் பணி** கொள்ளே* 3321/4. கூவி, ஏவி, பணி கொள்ள வேணும். கூவுதல் - ஏவுதல்.

**கூயே கொள்ளடியேனே** * 3324/4. கூவிக் கொள்.

**கூர்க்கப் பார்த்து** 2697/1. " ... க் கொண்டு நின்றவர்களே ". க்ரூரமாகப் பார்த்து. **கூர்கொள் நல்ல வேல்** 1327/3. ... கலியன் *. கூரான நல்ல வேல்.

**கூர்த்த வாயலகு*** 3010/1. வாயலகுக்குக் கூர்மையாவது க்ரூர மான த்வநி. **கூர் தண் வாடை** 3875/1. இக் ... *. மிக்கிருந்துள்ள குளிர்ந்த தண் வாடை. கூர்மை - மிகுதி.

**கூர்ந்தது** 918/1. ... குணதிசை மாருதம் *. விஞ்சிற்று, மிகுந்தது, **கூர்ந்து** 965/1. இரவு ... இருள் பெருகியே *. விஞ்சி. **கூர் மழை** 698/3. ... போய்ப் பனிக் கூதல் *. மிக்க மழை, அடை மழை.

**கூர** 734/2. வெம்பசி நோய் ... *. மிக. **கூரணிந்த வேல்** 321/3 ... ... வலவன் குகனோடும் *. மிக்க கூர்மையை யுடைத்தான வேல். அணிந்த - பிராபித்த, அடைவித்த. வேலானபோதே கூர்மை ஸித்தமா யிருக்க, விசேஷித்ததுக்குக் கருத்து மிக்க கூர்மை என்றது.

**கூரம்பன்** 2389/4. ... அல்லால் குறை *. அம்பின் கூர்மையை யுடையவன். கூரான அம்பையுடையவன்.

**கூரா** 3330/ப்ர. "செம்புக்குக் ... ச் சிற்றறிவாளுண்டோ." கூர்மை போராத. **கூரிய மெய்ஞ் ஞானம்** 2128/3. ஸூக்ஷ்மமாய் பரமார்த்தமா யிருக்கிற பக்தி ரூபாபந்நமான ஞானம்.

**கூரியர்** 3315/4. " அல்லாத ஆழ்வார்கள் ... ரே யாகிலும் " ஸூக்ஷ்ம புத்திகள், தீக்ஷ்ணர். **கூரிய விச்சை** 3712/3. ... ... யோ டொழுக்கம்*. ஸம்யக் ஜ்ஞாநம், ஸூக்ஷ்மாவகாஹியான வித்யை.

**கூரிருள்** 1967/4. ... ஆயிற்றே *. காடாந்தகாரம், மிக்க இருள். **கூருகிர்** 65/1. ... ரால் குடைவாய் *. முழுக் கூரான நகம்.

**கூரும்** 1141/2. அன்பு ... அடியவர் *. மிக்க. **கூரை** 2024/3. பாம்போடொரு ... யிலே. **கூவிக் கொடுப்பார்** 3825/4. என்னுயிர் ... *. அபஹரித்துக் கொடுப்பார் (24). **கூவில்** 551/4. வரக் ... *. கூவுநியாகில். **கூவிளை** 2017/1. கணவலரும் ... யும் *. பில்வம்.

**கூவுகிலீர்** 3825/3. வரக் ... *. அழைக்கிறிலீகோள்.

**கூவுவன்** 3139/4. எங்கெய்தக் ... னே *. கூப்பிடுகிறேன்.

**கூழ்** 3/2. ... மாட்பட்டு *. சோறு. **கூழ்கள்** 694/1. வான்மறந்த காலத்தும் பைங் ... *. பயிர்கள். **கூழ்ப்பு** 3687/2. எல்லையில்லா தன ... செய்யும் *. ஸம்சயம். **கூழாட்கள்** (வா. மா). 319. ஓட்டோமென் கைக்கே யோக்யர்.

**கூழாட்பட்டு** 3/2. ... நின்றீர் *. சோற்றுக்காக ஆரேனுக்கும் தன்னை யெழுதிக் கொடுத்து அகப்பட்டு.

**கூழேன்மின்** 3184/4. அவனிவனென்று *. ஸம்சயப் படாதே கொள்ளுங்கள். **கூழை** 1104/1. பஞ்சிச் சிறு ... உருவாகி *. மயிர், கூந்தல். 3463/3. "இவள் ... யாகையாலே மயிரைக் கொண்டாடுமே." கூழை - மயிரில் வைலக்ஷண்ய மறிந்தவனும் சபலனும்.

**கூழைப் பார்வை** 1800/4. ... க் கார் வயல் மேயும் *. க்ருத்ரிம மான பார்வை. **கூழைமை** 238/2. கனி வாய் கொடுத்துக் ... செய் யாமே*. க்ருத்ரிம வ்யாபாரங்கள். **கூழைவால்** 3816/1. காய் ... குழைக்கின்றது *. கூழையான குட்டையான வால். கூழைப் பாம்பு போலே. **கூளம்** 2693/1. "தேவதாந்தரங்களாகிற ... த் தையும் பதரையும் அறுத்து." குப்பை. 2478/1. "மஹாபாரத மெல்லாம் ... மும் பலாப் பிசினும் போலே ப்ரக்ருதி புருஷ விவேகம் பண்ண மாட்டிற்றில்லை. **கூற்றம்** 466/3. ... மும் கொடுமை செய்யும் *. மிருத்யு.

**கூற்ற மன்னுர்** 1874/1. ... காண வாரீர் *. மிருத்யு போன்றவர்கள். **கூற்றியல் கஞ்சன்** * 3625/3. மிருத்யு போன்ற கம்ஸன்.

**கூற்றுத்தாய்** 310/3. ... சொல்ல *. கூற்றம் மிருத்யு போன்ற தாய், கைகேயி. **கூற்றே ருருவில் குறள்** * 1361/4. கூறுகைக்கு - தேஹி என்று கேட்கைக்கு, ஏர் - தகுதியான, உரு - ப்ரம்மசாரி வேஷத்தையுடைய, குறள் - வாமனன்.

**கூறன்** 823/3. மாது தங்கு ... *. கூறு - பாகம். பாகத்தையுடையவன். **கூறுளும் தனியுடம்பன்** 3308/2. இருட்களும் ... *. கூறிவிட்டு ஆளும்படி. தனி - அத்விதீயமான உடம்பு படைத்தவன்.

**கூறிய அறுசுவை** 2672/22. ... ப் பயனுமாயினை *. சாஸ்த்ரங்களிலே சொல்லப்படுகிற ஷட் ரஸம்.

**கூறு செய்த வூரிலே** கையும் கைத்தளையுமாய்த் திரிவார் 995/2. 1528/8. பங்காண்ட. **கூறு செய்வார்கள் 3359/1.** ராஜாக்கள் ஊர் தோறும் ... ளை வைக்குமாப் போலே." தாக்யாதிகளை விபஜிக்கும் (பங்கு போடும்) அதிகாரிகள். மணியக்காரர் என்றபடி.

**கூறு செய்வானும்** அம்பலத்திலே யிருந்தால் ஈசுவரனும் நம் பக்கல் வரத் தட்டென் ?. **3610/1.** மணியம் பண்ணுமவன்.

**கூறு தேற வேறிதே** * 772/4. இதே - இத்தை, வேறு தேற - விசேஷமாய் அறியும்படி, கூறு - சொல்லு.

**கூறுமின்** வேறு கொண்டே * 3459/4. ஓலக்கத்திலே விண்ணப்பம் செய்யாதே, வேறு கொண்டே - ஏகாந்தத்திலே, அறிவியுங்கோள்.

**கூறுவித்தேன் 252/2.** பல்லாண்டு ... *. கூறி வைத்தேன்.

**கூறை யுடை 244/2.** ... யும் குளிர் முத்தின் கோடாலமும் *. கூறையாகிற உடை, கூறை - சீரை. **கூறைப் பை 3232/2.** "தானே ... யும் சுமந்து கொண்டுபோய் விட்டுப் போரும்." கூறை யிருக்கிற பை - புடவை வைக்கும் பை. [யாட்டி.

**கூன் தொழுத்தை 405/1.** ... சிதகுரைப்ப*. கூனியாகிற அடி

**கூனகம் 781/4.** ... புகத் தெறித்த *. கூனியின் கூனிலே. **கூனர் 2057/1.** "... குறளர் ஸஞ்சரிக்குமா போலே" வ்ருத்தர் - கிழவர்.

**கூனல் சங்கம் 654/1.** ... கொலையாழி *. வளைந்த சங்கம். பகவதநுபவத்தால் வந்த செருக்காலே கூனியாய்த்து ஸ்ரீ பாஞ்சஜந்ய மிருப்பது.

**கூனல் பிறை 268/4.** ... வேண்டி அண்ணுந்து *. வளைந்த பிறை, சந்திர கலை. **கூனி 125/1.** கொங்கை வன் ... *. கூனையுடையவள், மந்தரை. **கூனியதோர் கொற்ற வில் * 1927/2.** கரம்பு படைத்து வளைந்து ஐசுவர்ய ஸூசகமான வில். கொற்றம் - ஐசுவர்யம். [சங்கம்.

**கூனேறு சங்கம் 677/3.** ... இடத்தான் * கூனல் சங்கம், வளைந்த

**கெடலில் வீடு 3109/4.** ... செய்யும் *. வீடு - மோக்ஷம். கெடுதலில்லாத ஆநந்தம். அவித்யாத் யநர்த்த கந்த மில்லாத ஆநந்தம்.

**கெடலில் ஆயிரம் * 3109/3.** அநர்த்தம் வாராதபடியான ஆயிரம் பாட்டு. **கெடுத்து 2069/4.** "ஆற்றிலே ... க் குளத்திலே தேடுகிறுள்" கெட்டுப் போக்கி, காணுமற் போக்கி. **கெடு மரக்கலம் 2912/3.** வழி தப்பின ஓடம். "... கரை சேர்ந்தாற் போலே."

**கெடுமிடராய வெல்லாம்** * 3902/1. *இடராய வெல்லாம் கெடும்.* **கெடுவாய்** 3047/அவ. *"... ஆகரத்தில் தகவு மறுக்குமோ".* *வார்த்தைப்பாடு. சீ, கெட்டே. சீ, கெட்டான் அவன் — என்பது போல கெடுவாயும்.* **கெடுவிகாள் (?).** *துஷ்டர்களே என்று அர்த்தம்.*

**கெருடர்கள்** 925/2, 3983/3. *கின்னரர் ... கருட தோத்தவர்கள். கருடன் போலே சிறகுடையவர்க ளாகையாலே கந்தர்வர்கள் என்றும் சொல்லலாம்.* **கெழுமிய** *கதிர்ச் சோதி* *3182/2. *கலந்து அதனாலே பிரகாசிதமான தேஜஸ்.* **கெழுமீர்** 3847/4. *என் தலை மேல் ... ரோ *. சேரிகோள்.* **கெழு விசும்பு** 1438/1. *எரி காலினோடு நீர் ... ... *. (நெருப்பு காற்று) ஜலம் நிறைந்த ஆகாசம்.*

**கேகயர் கோன்மகள்** * 734/3. *கைகேயி.* **கேசம்** 43/2. *திருப் பாத ... *. கூந்தல்.* **கேசரம்** 1128/3. *எரியன ...*. கேஸரம் - உளை மயிர், பிடரி மயிர்.*

**கேசி** 858/2. *மாலி ... தேனுகன்*. ஸ்வர்க்க வாஸிகளான தேவதைகளுக்கு பாதகனான கேசி ராக்ஷஸன்.*

**கேட்கலாவார்** (?) *வினவப்படுவதற்கு உரியர். கேட்கத்தக்கவர்.* **கேட்கின்றனகள்** 2485/1. *காண்கின்றனகளும் ... ளும் *. கேட் கிறவை.* **கேட்குறள்** 8501/2. *என்ன வார்த்தையும் ... *. கேட்க உறள், கேட்கிறிலள்.*

**கேட்ட மனு** 2457/3. *... வும் சுருதி மறை நான்கும் *. ஆப்த தமனாகச் செல்லக் கேட்ட மனு, ஸ்ம்ருதிகாரர்.* **கேட்டார் வாய் கேட்டார்** 1074/1. *"கண்டநுபவித்தவர்களோடு ... ... ரோடு வாசியற." நேரில் கண்டவர்க ளன்றிக்கே கேட்டவர்களு மன்றிக்கே கேட்டவர்கள் வாயிலிருந்து கர்ண பரம்பரையாகக் கேட்டவர்கள்.*

**கேட்டிருந்தேயும்** 1225/3. *கேட்டிருக்கச் செய்தேயும்.*

**கேட்டியேல்** 499/2. *மேலையார் செய்வனகள் ... *. கேட்புதியாகில்.* **கேட்டிரே** 881/3. *... நம்பிமீர்காள்*. கேட்டிகோளோ, கேட்டீரோ.* **கேட்கும்** 601/4. *கூவி நும் பாட்டுக்கள் ... மே*. கேட்கிறோம்.*

**கேட்டே கிடத்தியோ** 480/7. *கேசவனைப் பாடவும் நீ ... *. கேட்டும் உறங்குகிறாயோ.* **கேட்டேயும்** 2618/1. *பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் *. கேட்டும், கேட்கும் போது.*

**கேட்பது சிந்தை** 8504/4. *அவ்வூர்த் திருநாமம் ... யே *. கேட்பதில் மனோரதம்.* **கேடகம்** 1120/2. *... மொண் மலர் *.*

**கேடகம் கோப்பவன்** 271/2. *கலிவானுறக்* ... *. *கடகம் கோத்துப் பிடிக்குமவன். கடகு - பரிசை. கடகு பிடிப்பவன்.* **கேடிலன்** 3229/4. *யானென்றும்* ... *. *கேடிலேன்.*

**கேடிலா வான் குடை** * 2646/2. *நித்யமாய் பெருத்த ஆகாசமாகிற குடை.* **கேணி** 1068/4. *திருவல்லிக்* ... *. **கேதகை** 1375/4. *மன்னு* ... *. *தாழை.* **கேதம்** 2442/1. *மனக்* ... *சாரா* *. *சிரமம்.*

**கேயத் தீங் குழல்** 3485/1. ... ... *ஊதிற்றும்* *. *கானத்தோடே கூடின இனிய குழல்.* **கேவலம்** 1795/1. ... *அன்று கடலினுளை* *. 1893/1. ... *அன்று உன் வயிறு**. *ஸாதாரணம், மட்டம்.*

**கேழ்** 710/3. *நின் செங்* ... *விரலினும்* *. *நிறம்.* 2325/1. *ஒண்* ... *அலர் கதிரும்* *. *அழகு.* 3051/2. ... *ழி லொண் கண்* *; 3153/3. ... *ழி லாயிரம்* *. *ஒப்பு.*

**கேழ்த்த சீரான்** 3127/3. ... *முதலாக் கிளர் தெய்வம்* *. *கேழ் - கிளர்த்தியாய் பெருமை, சீர் - ஞாநாதிகள்.* **கேழ்த்த அடித் தாமரை** * 2377/3. *நிறமுடைத் தாமரை.*

**கேழ்பவர்** 2522/3. *வருங்* ... *உளரே* *. *நன்மையை யுடையவர். கேழ்பு - நன்மை, கேழ் - அழகாய் அத்தாலே நன்மை.*

**கேழல் திருவுரு** 3609/4. ... *வாயிற்று* *. *வராஹமான திருவுரு.* **கேழலர் கதிர்** 2325/3. *ஒண்* ... *. *அழகியதாய் அலரா நின்றுள்ள ஆதித்யன்.*

**கேள்வர்** 1987/3. *புல மங்கை* ... *. *வல்லபர், பர்த்தா.* **கேள்வனூர்** 2421/3. *நூலாட்டி* ... *.

**கேள்வி** 807/3. *நீதியான* ... *. 1096/3. ... *யோடங்கமாறும்* *. *ஆசார்யோபதேசம்.* **கேள்வி கொள்ள வேண்டாதபடி** 2995/3. " *ஸர்வேசுவரனைக்* ... ... *நிரபேக்ஷனை சதுர்முகன்* ". *கேட்க வேண்டாதபடி, கேட்டறிய வேண்டாதபடி ஸ்வதந்த்ரன்.*

**கேள்விப் பதங்கள்** 1408/1. ... *ளும் பதங்களின் பொருளும்* *. *கேள்விக்கே யோக்யமாய் பத ஸமூஹாத்மகமான வ்யாகரண சாஸ்த்ரம்.* **கேள்வியர்** 2366/2. *செவியினூர்* ... *. *கேள்வியை உடையர்.* **கேள்வியார்** 760/3. *நீதியான* ... *. *கேட்டறிந்த ஞானிகள்.*

**கேளவன்** 2144/2. ... *னது இன் மொழியும்**. *உறவானவன், நிருபாதிக பந்து.* **கேளா** 3237/2. "*எங்களை நோக்க என்பார்கள் ; அத்தைக்* ... ". *கேட்டு.* **கேளாச் செவிகள்** 2013/4. ... *செவியஃல* *. *கேளாத*

காதுகள். **கேளா செவி** 2092/4. காறு கன் ... *. காது கேளாது, கேட்க விரும்பாது. **கேளிணை** யொன்று மிலாதான் * 2998/2. கேளே கேழாக்கி ஒப்பாய், இணையும் ஒப்பாய், திரளவும் தனித் தனியும் ஒப் பில்லாதான் என்னுதல், அன்றிக்கே — கேள் என்று உறவாய், சேர்ந்த ஒப்பில்லாதான் என்னுதல். கேள் - பொருத்தம்.

**கை** 3550/ப்ர. காலைக் ... யைக் காட்டா நின்றார். கால் - விற் கால். கை - விரல் சரடு. கை புடை கோதை கைகட்டி யாரும் என்று நிகண்டு. கை, புடை, கோதை என்று கைகட்டிக்குப் பேர். மேள காரர் போல வில்லாளிகளும் விரலில் காயம் உண்டாகாதபடி சரடு கட்டுவர்.

**கைக் கட்டி** 3550/ப்ர. விரல் சரடு. **கைக் கடங்கினதையும்** கொண்டு மடிச் சரக்கையும் கொண்டு போனான் 3853/1.

**கைக் கிளைத் தலைவி** 3914/4. " ... பொறை யழிந்தால் எல்லாம் சொல்லப் பெறுமிறே " கைக்கிளை - ஒருதலைக் காமம். ஒரு தலைக் காம முடைய நாயகி என்றபடி.

**கைக்கு மெய்தான்** 3588/2. ... முன்னே வந்ததென் *. கைக்கும் எட்டான். **கைக்குறி யகப்பைக் குறி** : அகப்பைக் குறி பார்.

**கைக் கூட்ட மிட்டாற் போலே** : கைக் கொண்டு பார்.

**கைக் கூட்டன்** 2672/11. " ராஜபுத்ரனோடே வினையுண்ட ... ... னுக்கும் பால் நிரனை யிடக் கடவது காண்." 3667/2; " ராஜ புத்ரனை சிறையிலே இட்டு வைத்தால் கைக் கூட்டனுக்கும் பாலுஞ் சோறு மிடு வார் " 1520/2. காவற்காரன்.

**கைக் கூலி** (ஸ்ரீ வ. பூ. 285). " கொண்டதுக்குக் ... ... கொடுக்க வேணும் " கை மேல் கூலி.

**கைக் கொடுத்த** மாமேனி 2161/3. ரக்ஷகன் கையிலே காட்டிக் கொடுத்த மஹாநுபாவன்.

**கைக் கொண்டு** 443/2. எங்கும் ... நிற்கின்ற கோய் கான் *. உடன் வந்தி போலே. (உடன் வந்தி - வந்தேறியன்றிக்கே ஸஹஜம்) கைக் கூட்டமிட்டாற் போலே என்னவுமாம். அணி வகுத்தாற் போலே.

**கைக் கொள்ளாண்டிகளைப் போலே**: 3308/1. **கைக் கொளாண்டி** 3022/1. " ... களைப் போலே இறுமாந்திருக்கும். **கைக் கோளாண்டி** 2086/1. அரும் பதங்கள் மௌனம். கங்கெத்து வாடு என்று தெலுங்கு வியாக்கியானம். அதாவது — பெருமாள் மாட்டுக் காரன். எருதைக் கைக் கொண்ட ஆண்டி.

**கை கண்ட யோகம் 621/2.** ... தடவத் திரும்*. கை கண்ட பலன் என்பது போல. கை கண்ட உபாயம், பிரயோகம்.

**கை கண்டிருக்கிறது 3165/1.** " நம்மைக் கைமிஞ்சி வாராதென்று கை கண்டிருக்கிற இது." ; " எல்லார்க்கும் ... தெரியலாம்படி " 409/2. பிரத்யக்ஷித்து. சிலேடையில் பார்.

**கை கமலம் 3054/1.** செந்தாமரைக் கண் ...*. கை கமலம் போலே.

**கை கரவேல் 477/1.** ஒன்று நீ ... *. ஔதார்யம் மாற வேண்டா. கை - கொடை. கரக்கை - மாறுகை

**கை கலந் துண்டான் 2980/2.** வெண்ணெய் ... ... *. இரண்டு கையாலும் உண்டான். **கை கவியாய் 459/2.** அஞ்சேலென்று ... *. கையை கவித்து அபய முத்திரை காட்டு.

**கை கழியப்** போக வல்லீரோ **3216/1.** கை விட்டுப் போக. கை கழுவி என்றாலும் இதுவே பொருள். **கை கழியேல் 3920/2.** கலவியும் நலியும் என் ... *. என் கைக்குள் நின் றகலாதொழிய வேணும்; என் கைக் குள்ளேயே இரு.

**கைகளை யார 3695/3.** ... த் தொழக் காணீர் *. கைக ளார ஐ அசை. **கைகாட்டி 475/7.** ஆந்தனையும் ... *. கொடுத்து. **கை காட்டும் 3264/2.** வைகுந்த மென்று ... *. கையாலே காட்டும்.

**கை கூடும் 2124/2.** தனமாய தானே ... *. கை புகுரும். **கை கூப்பி 126/2.** ... என் கண்ணு கண்ணு என்ன*. கையெடுத்து அஞ்சலி பண்ணி. **கை கூப்பு 3254/3.** ... ச் செய்கை *. அஞ்சலி.

**கைகேசி 320/1.** ... வரம் வேண்ட*. கைகேயி. "கைகேயி யாகிற காள ராத்ரியினுடைய பாபப் பட்டோலை." (வா. மா. 33). **கை கோலி 2228/2.** காலை தொழுதெழுமின் ... *. கைகூப்பி. ஏற்கவே கோலி என்றுமாம். முன்பே கோலி - விரும்பி. [யுடைய ஸர்வேசுவரன்.

**கைச் சக்கரத் தண்ணல் * 3928/2.** கையிலே திருவாழியை

**கைச்சதும் புளிச்சதும் 1992/3 (?)** கசந்ததும் புளிச்சதும். பித்தளையில் வைத்த மோர் முதலியவை கச்சது என்பது கசந்தது கைச்சது என்றே பொருள். **கைச் சரிவளை 47/2.** அம் ... *. முன் கை வளை. கையிலே சரிவதா யிருப்பதாகையால் முன் கைவளை என்றபடி.

**கைச் சிறை** யாயிருக்க வல்லன் **561/4.** அரும்பதம் மௌகம். கையைச் சிறையாகக் கொண்டவன், கையில் அகப்பட்டவன், கை வசமா யிருப்பவன், மீறிப் போகமாட்டாதவன்.

**கைச் செந் தீ** 2121/1. குறவர் ... *. குளிலே கொளுத்திக் கையிலே கொடு போகிற நெருப்பு. சூளி – சூளுந்து. சூழ்ந்து கொளுத்திக் கொண்டு வர வேண்டுமென்று சொல்லுவதுண்டு. சூளி – வெலுதுரு கர்ர என்று தெலுங்கு வியாக்கியானம். சூள் – நெருப்பு, அல்லது கொள்ளிக் கட்டை. கையிலே யுள்ள சிவப்பான நெருப்பு, கையில் பிடித்த சூழ்ந்துத் தீ. [சிருங்கை. 2573/3; 1648/1.

**கைசு** 3547/2 (24). " பைதல் ... கோய் முக் கைசு". கால் பலம்.

**கை செய்ப்பாலது** 3690/1. ... தோர் மாயம் *. கைத் தொழிலுக்கு அப்பாலதான (கோலம்). செய்கை என்பது செய்யாகக் குறைந்து கிடக்கிறது. அக்ருத்ரிமம் அன்றிக்கே கருவி (சித்திரம்) உயிர் பெற எழுதினாற் போலே யுள்ளது. கை செய்கையை – சித்திரமாக எழுதுகையை, பாலது – ஸ்வபாவமாக வுடையது.

**கை செய்த கண்ணி** 50/1. காறூர் நறுந்துழாய் ...*. கையாலே கட்டின, கைத் தொழில் தோன்றும்படி அழகாகக் கட்டின கண்ணி – மாலை. **கை செய்து**: சிலேடையில் பார்.

**கைடவன்** 2347/3. வாய்ந்த மது ... வரும் *. ஒரு ராக்ஷஸன்.

**கைத் தண்டு** 1935/4. தொண்டர் ... *. கையி லாயுதம்.

**கைத் தலத்தது** 1649/1. ... என்கின்றனால் *. கையிலது. **கைத் தலத்திடரில்** * 568/3. கைத்தலமாகிற உயர்ந்த இடத்தில்.

**கைத் தலத்** துள்ள மாடு * 294/1. கையிலுள்ள அர்த்தங்களும் தலத்து – பூகதமாக்கி வைத்த அர்த்தங்களும் — என்னுதல். மாடு — என்று கன்று காலிகளுக்குப் பேர். கோதகராகையாலே கற்றுக்களையும் வறட்டாக்களையும் சொல்லிற்றாகவுமாம். கையிலுள்ள தனம்.

**கைத்தால்** 521/4. கட்டியும் ... *. கசந்தால். **கைதாமரை** 1977/4. ... குவிக்கும் *. கையாகிற தாமரை.

**கைத்து** 3078/3. பாவந்தன்னையும் பாறக் ... *. ஓட்டி, துரத்தி.

**கைதலை பூசலிட்டால்** * 3297/3. பூசல் பொருந்துதலாய் தலையிலே பொருந்தினால், அஞ்சலி பண்ணினால், தலையிலே கை வைத்துப் பூசலிட்டால் – கூப்பிட்டால். **கைதலை பூசலிட்டு** 3347/3. தலையிலே கை கட்டி – அஞ்சலி பண்ணிக் கூப்பிட்டு.

**கைத் தளை** 995/2, 1431/1. "கையும் ... யுமாய்த் திரிவார்கள்." கை விலங்கு. **கைத் தொடர்** 946/1. " தாமே ... ... ராய் நின்று

**சந்தோகன்** 1396/3. ... பவுழியன்*. சசந்தஸ் ஸாமம் அறிந்தவன், வேதத்தாலே அறியத் தக்கவன்.

**சப்பரை**: புரணிக்கு அர்த்தம் 888/3 ல் "சப்பரையான முடி" (சி. அரு). 3198/1. **சப்பாணி** 75/4. காணி கொண்ட கைகளால் ... *. சப்பாணி கொட்டுகை, குழந்தை இரு கையும் சேர்த்துக் தட்டுகை.

**சம்படவர்கள்** 1270/2 (அரு). செம் இல்லாமல் சம் உண்டு போலும். **சம்பத்து** 2916/1. அடங்கெழில் ... *. ஐசுவரியம்.

**சம்பறுத்தார் கைக்குப்** போக வேண்டுமோ 3294/4. அரும்பதம் மௌனம். சம்பறுத்தார்க் கைக்கு என்று பாடாந்தரமாகக் குறிப்பு காண்கிறது. அநுபந்தம் பார்.

**சம்பான்** 3183/4. ஓடம். **சம்பான் மரம்** 692/4 (அரு). ஓடம்.

**சம்பிரதம்** 273/1. மணி வண்ணன் மலையு மோர் ... *. இந்திர ஜாலம், கண்கட்டு வித்தை. பாஹ்ய காரணங்களும் அந்த: கரணமும் கூடாமல் சக்ஷுரிந்த்ரிய ப்ரதாநமாகச் சிலர் 'காட்டும் வித்யா விசேஷம்.

**சம்புகன்** 749/1. செறிதவர் ... *. தவம் செய்ய அதிகாரம் இல்லாத இவன் தபஸ் செய்ததாய் ராம ராஜ்யத்தில் பிராம்மணச் சிறுவன் இறந்தது காரணமாக ராமன் இவனை வாள் வீசிக் கொன்றான்.

**சம்மட்டி** 1205/3. "விடு நகமும் ... புமிட்டு கலியா மிற்க".

**சம்மதித்து** 3785/1. தம்மைத் தாமே ...*. இசைந்து. **சம்மானம்** 500/2. யாம் பெற ... *. கொண்டாட்டம்.

**சமைந்து** 3445/1. "பாடிச் ..." முடிந்து. **சமைந்தேன்** 1784/1 "அதெல்லாம் செய்து ...". செய்து தலைக் கட்டினேன்.

**சமண்** 1054/1. தருக்கினால் ... செய்து *. அவைதிக ஸித்தாந்தம், க்ஷபணக ஸித்தாந்தம், அமண தர்சநம், சமண மதம், ஜைந மதம்.

**சமண் குண்டர்** 1102/1. ... முதலாயோர் *. சமண தர்சநத்தை தர்சித்துக் கொண்டு நிற்கிற நீசர். குண்டு - ஆழம். அந்தால் தாழ்ச்சியாய் நீசர் — என்றபடி. **சமணத் தொண்டர்கள்** 1053/1. துவரியாடையர் மட்டையர் ... *. சமணர். **சமணம்** 878/1. புத்தொடு ... *. ஜைந மதம். **சமணர்** 3334/1. இலிங்கத்திட்ட புராணத் தீரும் ... ரும் *. ஆர்ஹதர், பிரம்ம ஸம் ஹ்ருதி சிஷ்டரான சமணர்.

**சமணர் முண்டர்** 879/1. வெறுப் பொடு ... *. சமணரும் சைவரும். **சமத்து** 1581/1. தென்னிலங்கை வெஞ் ... *. யுத்தத்தில், பூசலில் சமம் - பூசல். ஸமரம் என்பதில் இடைக் குறைத்தல்.

**சமய நீதி நூல்** 3159/1. ... என்கோ *. வைதிக மதத்துக்கு உபகாரமாயுள்ள இதிஹாஸ புராணாதிகள். வேதார்த்தத்தை விளக்கும் நூல்கள். **சமயங்கள் காப்பான்** 2468/4. ... ... அவை கண்டானவை காப்பான் *. வைதிக மதங்கள்.

**சமய விருந்து** 2468/2. இந்திரனுக்கு இட்ட ... *. சமயத்தாலே, ஸங்கேதத்தாலே, கட்டுப்பாட்டாலே ஏற்பட்ட விருந்து.

**சமயிகள்** 2521/2. அறமுதல் ஞானச் ... *. ஸித்தாந்திகள், நிஷ்டர், வ்யவஸ்திதர்.

**சமர்த்து** 1023/1 (அரு). "சிறு பிள்ளையாயுண்ட ... ம், மதிகெட்டுப் போகாதபடியான ... ம்" சமத்து, சாமர்த்தியம்.

**சமன்** 3777/2. ... னிலாத பல பரப்பி *. ஒப்பு, உபமானம்.

**சமன் கொள் வீடு** 3149/1. ... தருக்தடங் குன்றம் *. ஸாம்யாபத்தி ரூபமான மோக்ஷம்.

**சமிதை பாதி ஸாவித்ரி பாதியாக** வன்றிக்கே அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே 3075/4. உபா கர்மத்தின் மற்றைநாள் பிரம்மசாரிகளுக்கு ஆயிரம் ஸமிதை யிடுதல் இல்லாவிட்டால் ஆயிரம் காயத்ரீ ஜபம் பண்ணுதல் செய்யாதே ஐநூறு ஸமிதையும் ஐநூறு காயத்ரியுமாகப் பண்ணலாகாது. 3790/2, 474/7, 911/1.

**சமிதையிடா மாணியைப்** போலே தானே சூழ்ந்துக் கொண்டு கிடக்கிறபடி 875/1. சுப்பிலாலே தன்னை வளைத்துச் சூழ்ந்துக் கொண்டு கிடக்குமொரு ஜந்து விசேஷம். சிலந்தியாகலாம். ஸமிதை என்று ஸகாரமா யிருப்பதை சகாரமாக்கி இங்கே சேர்த்திருக்கிறது. சுப்பிலுக்கும் ஸமிதைக்கும் பொருள் அநுபந்தம் காண்க. 2140/2. சுப்பீல மேலே சூழ்ந்துக் கொள்ளுகிற பூச்சி.

**சமைய வைம் பூதம்** 1306/1. சந்தமாய்ச் சமயமாக்கி ... *. வ்யவஸ்தித ஸ்வபாவமான ப்ருதி வ்யாதி பஞ்ச பூதம்.

**சமைய வளர்ந்த** முலை 620/2. "... களானவை உள்ளே குடிபுகும்". நன்றாக வளர்ந்தது. **சமைய விட்டுக் கொண்டு** 3598/3. "ஸர்வேசுவரனோடொக்க இன்னா ரின்னா ரென்னும்படி தந்தாமைச் ... ". ஸம்ஸ்க்ருத விசேஷத்தாலே யாக்கிக் கொண்டு. அதாவது உத்க்ருஷ்டாம்படி பண்ணிக்கொண்டு என்றபடி.

**சயத்திரதன்** 335/3. ... தலையைப் பாழிலுருள *. **சயப் புகழார்** 3131/2. ... பலர் வாழும் *. ஜயிக்கையால் வந்த புகழையுடையவர்கள்.

**சய மரம்** 20/2. ... கோடித்து*. தோரணம் நாட்டி அலங்கரித்து. **சயமே தேமலர்ப் பொழில்*** 1272/2. ஸமூஹமான தேமலர்ப் பொழில் சய: - ஸமூஹம், திரள். **சயமே யடிமை தலை நின்றார்*** 3771/3. ஸ்வய மாகவே தாங்களாகவே எல்லா அடிமைகளையும் செய்பவர்கள். அடி மையின் தலையில் எல்லையிலே நின்றவர்கள்.

**சயனத்தர்** 17/2. தண்டினர் பறியோலை ... *. படுக்கையை யுடை யவர்கள். **சயனம்** 492/2. பஞ்ச சயனத்தின் மேலேறி *. படுக்கை.

**சரங்களாண்ட** தண்டாமரைக் கண்ணன் 1571/4. அம்புகளை நடத்தின புண்டரீகாக்ஷன். **சரண்** 1425/1. எந்தை நின் ... என் னுடை மனைவி *. உபாயம்.

**சரணங்கள்** 3927/1. நல்லமேல் புனைக்தேன் ... *. திருவடிகள். **சரணம்** 3693/4. சங்கு சக்கரக் கையவ னென்பர் ... மே *. புகலிடம்.

**சரக்காள்** (ப்ர. பரி). "ஈசுவரன் தானே ... ளாய் வந்து" ஸ்வாமி யாய் உடையவனும், சொந்தக்காரனும் வந்து.

**சரக்கிலே வாங்கி** 494/3. "கைப் பட்ட பெண்களைச் ... க் கைப் படாதவர்களைக் கைப் படுத்துகைக்காக வுண்டான உபாயம்" வஸ்த் துக்களோடே சேர்த்து, தன் சரக்காக்கி.

**சர கூறல்** 572/1. "ஆயிரங் காதம் நூற்றுக் காதம் போய்ச் ... ... விலே மூழ்கித் திரியாதே". செத்தை வீழ்ந்து ஊறிக் கிடக்கும் புராண புண்ய தீர்த்தங்கள்.

**சரணம் சார்வது** 3576/4. ...'தே வலித்த *. திருவடிகளில் சேர் வது. **சரணமே சரணம்** 1006/2. உன் தன் ... மென்று *. திருவடி களே சரணம். **சரணல்லால் சரணில்லை*** 688/1. திருவடிகளல் லாது வேறு உபாயமில்லை.

**சரணும்** 1636/4. உனதடியே ... மே *. சரணமாகும். **சரணு மறை** 2141/1. ... பயந்த தாமரையான் *. உபாயங்களை அறிகைக்கு ஸாதநமான வேதம். **சரதம்** - அமோகம். "பகவத் சமாச்ரயணம் கதி மாத்ருகம் போலே சரதம்." நிச்சயம் என்னுமாம். "சரதமாக பிக்ஷைக் கைக் கிட்டின தூர் வியாதி நசிக்கும்" 3665/1.

**சரற்காலம்** 569/1. ... ல சந்திரன்*. சரத்ருது ஐப்பசி கார்த்திகை மாஸங்கள். **சரா சரங்கள்** 750/1. அன்று ... *. ஸ்தாவர ஜங்கமங்க ளான ஸகல ஜந்துக்களும்.

**சராவம்** - மடக்கு 1200/1. "கட சராவாதி காரியங்களாக நிர்மிக்கும்". சருவம் என்பது சராவத்தின் திரிபு.

**சரித்து** 2952/1. இரு வினைகளும் ... *. போக்கி. **சரிதை** 248/8 தன் ... கேட்டான் *. **சரிவளை** 261/4. ... கழல்கின்றது *. சரியும் வளை. முன் கை வளை. 581/4. தான் கொண்ட ... *.

**சலகு** 3345/2. "... கில் கிடந்த முத்துக்கும் பொன்னுக்கும் அழுக்கேறின நாள் அறிவாரில்லை." முத்துச் சிப்பி.

**சலங் கலந்த** செஞ் சடை * 864/1. கங்கா ஜலத்தை ஸாகல்யேந தன்னுள் அடக்கினதாய் சிவந்த ஜடை. **சலங் கலந்த பொய்கை** 887/1. விஷமே ப்ரகாரமாய் அத்தோடே யமுநா ஜலமும் கலந்த பொய்கை. **சலங் கொண்ட சொல்லார்** * 1482/1. கபடோக்திகளைச் சொல்லக் கடவ ஸ்த்ரீகள்.

**சலங் கொண்ட இரணியன்** * 1228/1. சீற்றத்தையுடைய இரணியன். **சலங் கொண்டு மலர்** சொரியும் மல்லிகை * 1228/3. இசலி இசலி (போட்டி யிட்டுக் கொண்டு) மலர் சொரியும். **சல சயனம்** 1628/3. சிறு புலியூர் ... திருள்ளும் *. ஜல சயனப் பெருமான் வர்த்திக்கும் இடம் சல சயனம். சலம் - ஜலம்.

**சல சல பொழிந்திட** 396/1. சல சல என்று பொழிந்திட. சல சலப்பு. **சலஞ் சூழ்ந் தழகாய** சாளக்கிராமம் * 990/4. ஜல ஸம்ருத்தியை யுடைத்தாய் அழகான ஸாளக்ராம க்ஷேத்ரம்.

**சலஞ் செய்யாதே** 57/3. சந்திரா! ... *. வெறுப்புச் செய்யாதே. **சலமிலாவணில்** * 898/2. சலம் - வியாஜம், சலிப்பு, கபடம்.

**சலவர்** 340/1. வஞ்சகம் செய்யும் ... *. க்ருத்ரிமமாய் அநுகூலரைப் போலிருந்து பிரதிகூலம் பண்ணுமவர்கள்.

**சலவன்** 990/4. அரக்கர்க் கெஞ்ஞான்றும் ... *. சத்ரு. **சலன் சலனென்றிட** 97/2. தன்னிய லோசை ... *. சல சலப்பிட. **சலார் பிலார்** 86/1. குடர் சங்கிலிகை ... *. சலார் பிலார் என்னுமோசை.

**சலிக்கும்** 412/4. ஒ ... ஒளிபரங்கம் *. அசையா நிற்கும். **சலிப் பின்றி யாண்டு** * 3192/4. ... சலந மில்லாமல் ஆண்டு.

**சவடிப் பூணூல்** 3224/4. இட்ட ... லும்" பொன் யஜ்ஞோப வீதம் சவடியும் பூணூலும். சவடி - அரை நாண், உடை நாண்.

**சவர் கழியும்படி 3608/2.** உவர். " விளை நிலம் உவர் கழியும்படி நீரைத் தேக்கி வைக்குமாப் போலே " உவர் – சவர், **சவரணை 579/1. 1522/1, 3352/2.** கட்டுக் கோப்பு, ஆணைப் பண் ணுர்க்கச் சவரணை பார். நன்று யிருப்பாரை, " உன் சவரணை குலைய" — என்று பெண்டுகள் நிட்டுவதுண்டு.

**சவி 948/**ப்ர. " வயிறு கோவா நின்றது ... என் பார்." வை.

**சவி கொள் பொன் முத்தம் * 3157/1.** சவி யென்று பொன்னிலே வந்தால் புகராகக் கடவது; முத்திலே வந்தால் நீர்மையாகக் கடவது. புகரை யுடைத்தான பொன். நீர்மையை யுடைத்தான முத்து. முத்துக்கு நீர்மையாவது அழகாதல் குளிர்த்தியாதல்.

**சவிப்பார் 3169/4.** என் ... மனிசரே *. ஜயிப்பார், ஜபிப்பார், சபிப்பார். **சவை 326/2.** மிக்க பெருஞ் ... *. சபை, திரள், ஓலக்கம்.

**சழக்கு நாக்கு 434/2.** ... கொடு புன் கவி சொன்னேன் *. அசுத்தமான நாக்கு, பொல்லாங்குள்ள நாக்கு.

**சளைத்து 3528/2 (?).** " பிரிவுக்கு ... தூது விட ". **சளும் புகை:** சறை பார். **சறை (கை சறை) 3311/4.** ... கவராத தளிர் நிறத்தான்*. சறை கைமணி யென்று ஒரு மணி உண்டாயிற்று, இடையர் அரையிலே கோத்துக் கட்டி முன்னே போகா நின்றால் அந்த த்வனி வழியே பசுக்களெல்லாம் ஓடிவரும்படியா யிருப்பதொன்று. சறை யென்று தாழ்வாய் பிரதாக வர்ணங்களில் ஒக்க எண்ண வொண்ணாத தாழ்ந்த இடைக் குலத்திலே பிறந்தவர்கள். சறை யென்று சளுர் புகையாய் அல்லாத இடையர் விஷயக ஸங்க்ரமங்களுக்கு, உடம்பிருக்கத் தலை குளித்தல், உடம்பிலே துளி நீரேறிட்டுக் கொள்ளுதல் செய்வார்களாகில், அதுக்கும் அவஸர மற்றிருக்கு மாயிற்று, பசுக்களின் பின்னே திரிகையாலே. சறை கை மணி - மர மணி. சளும்புகை – பேணுமை. சளும் புகையை – அழுக்கூருகையை யுடையவர், அழுக் கூர்ந்த வுடம்புடையவர்.

**சன்ம சன்மாந்தரம் 3192/4.** ... காப்பாரே *. இந்த ஜந்மமும் மறு ஜந்மமும். **சனக ராசன் 329/4.** ... தன் வேள்வி *.

**சனங்கள் 3168/4.** சாது ... ளிடையே *.

**சாக்கியர் 3334/1.** சமணரும் ... ரும் *. பௌத்தர். **சாகேன் 878/3.** தலையறுப்புண்டும் ... *. சாவேன். **சாங்கம் 3376/3.** " அவனுடைய ... என்னளவில் கண்டிலேன் ". வில்லும் பக்ஷபாதமும். " பெருமாள் பக்கல் ... மிறே இப்படிச் சொல்லுவித்தது " **3387/3.** " சப ஹ்ருதயை யானுள் அவர் பக்கல் ... த்தாலே ". **3445/4.**

**சாடி** 33/2. சகடத்தைச் ... *. உதைத்து. **சாடிறப் பாய்ந்த தலை வன்** * 386/3. சாடு – சகடம், சகடாஸுரன். அவன் இரும்படியாக, முடியும்படியாகப் பாய்ந்த தலைவன்.

**சாடு சாடுபாதன்** 837/1. ... னே *. சாடு - சகடாஸுரன் முடி யும்படி சாடின – உயரத் தூக்கின பாதத்தை யுடையவன்.

**சாண் சந்தை** 1003/2. " இந்தச் ... யும் நெஞ்சில் படாத போது செய்யாத துண்டோ ". சிறு வாக்கியம்.

**சாண் சாணரைப் புல்லாய்** பசுகு பசுகென்று அறுக்க அறுக்கத் தொலையாதே கிடந்ததிறே 2478/அவ. (கம்). நீளமான புல் மாட்டுத் தீனிக்குப் பயன் படாது. சாண் சாணரை நீளமுள்ள புல் பசுமையாய் முளைத்திருப்பதையும் அறுக்க அறுக்க உடனே முளைப்பதையும் சொல்லு கிறது. **சாணகச் சாறு** 3240/1. பஞ்ச கவ்யம். பசுஞ் சாணம், பால், தயிர், நெய், பசு மூத்திரம் — இவ் வைந்தையும் மந்திரம் சொல்லிச் சேர்ப்பது. **சாணம்** 2072/ (பட்). " இறக்கின ... " அரைக் கச்சை. இடுப்பில் கட்டும் பட்டை.

**சாணரைப் புல்** 2478/அவ. (கம்). **சாணிச் சாறு** 2965/3. "அந்த ணன் ... ந்நிரூபாதி சுத்தன்."

**சாத்த** 200/3. திருக்காப்பு நானுன்னைச் ... *. இட. **சாத்தன்** 2689/1. தாரார் நறு மாலைச் ... ந்து *. சாஸ்தா, அய்யனார்.

**சாத்தாக** 3780/4. " திருவநந்தபுரத்துக் குச் ... ப் போகாநிற் கச் செய்தே ". திரளாக. **சாத்தினாற் போலே** 2057/1. பெரிய திரு வடியை மேற் கொண்டால் திருப் பரியட்டத்தைக் கொய்து ... அங் குத்தைக்கு அலங்காரமாயிருக்கை." உடுத்தினாற் போலே.

**சாத்துப்படி** 3254/1 (12). " கூனியிட்ட சாந்து போலே தகுதி யான சாந்து ..." **சாத்துப்படி** - சந்தனம் 3360/3 (12). "மாகாஸாதுஸந் தாகத்தாலே ... சாத்தி " (வா. மா. 434). ஸ்ரீரங்கத்தில் திருமஞ்சன காலத்தில் சந்தனம் எடுத்துக் கை நீட்டுகைக்கு சாத்துப்படி என்றே அருள்பாடு; சாத்துப்படி என்றே எப்போதும். அலங்காரம் செய்வ தற்கும் சாத்துப்படி என்றே சொல். **சாதிக்கலுற்று** 3993/4. எம்பரம் ... *. சாதிப்பதாக, செய்வதாக ஏறிட்டுக் கொண்டு.

**சாதிக்கின்றது** 3589/4. ஆரை இனிக் கொண்டு ... *. காரியம் சாதிப்பது. **சாதித்து** 3217/3. சாய் கொண்ட இம்மையும் ...*. தந்து,

பண்ணித் தந்து, உண்டாக்கித் தந்து. "தீர்த்தம் சடகோபம் சாதி" — என்னும் வைஷ்ணவ பரிபாஷை இந்தத் தமிழிலிருந்து உண்டாயிற்று.

**சாதி நல் வயிரம்** * 3157/2. நல்ல ஆகரத்திலே பிறந்த நல்ல வயிரம். ஆகரம் – உத்பத்தி ஸ்தானம். சாதி – பிறவி. ஜாதி – ஜன்ம.

**சாதி நாலு** 3194/1. குலந்தாங்கு ...*. பிராம்மணாதி ஜாதிகள் நாலு. **சாதிப்பதற்கு** 3169/1. கஞ்சனைச் ..., *. கிரஸிப்பதற்கு, முடிப்பதற்கு. **சாதிப் பவளம்** 49/2. ... மும் சங்கச் சரிவளையும் *. ஆக்க என்றிக்கே ஜாதியான பவளம். ஆக்கள் – ஆக்கினவை, க்ருத்ரிமங்கள். பிறவியிலேயே பவளமாயுள்ளவை.

**சாதி மாணிக்கம்** 3156/4. சங்கு சக்கரத்த னென்கோ ... ... ந்தையே *. போலியல்லாத நல்ல மாணிக்கம், ஆகரஜமாய் பெரு விலையுள்ள இரத்தினம்.

**சாதி யந்தணர்கள்** 914/2. தமர்களில் தலைவராய ... *. பிறவியினால் பிராம்மணர்கள், பிராம்மணராய்ப் பிறந்தவர்கள். **சாதியாவகை** 3563/2. உன் திருவடி ... . தடுத் தென்பெறுதி *. பெறுதபடி, கிட்டாதபடி, பிராபியாதபடி.

**சாதிலிங்கப் பொடி** 261/1. சிந்துரப் பொடி.

**சாது கோட்டி** 285/4. ... புள் கொள்ளப் படுவார் *. ஸ்ரீ வைஷ்ணவர் திரள். **சாது சனங்கள்** 3168/4. ... இடையே*. **சாதுவாய்** 3126/2. ... நின் புகழ் தழைதலல்லால் *. நன்றாய். **சாந்தம்** 8/3. மெய்யிட நல்லதோர் ... *. சந்தனம். **சாந்து** 72/1. செய் தயிர் ஒண் ... *. சந்தனம். **சாந்துப் பரணி** (?). சந்தனக் கிண்ணி.

**சாபம்** 494/8. எங்கள் மேல் ... இழிக்தேல் *. துக்கம்.

**சாம்பவான்** 1865/2. ... உடன் நிற்கத் தொழுதோம் *. வ்ருத்தராய் நன்மை தீமைக்குக் கடவ ஜாம்பவான்.

**சாமம்** 488/3. ... ம வேத நாண்மலர் *. ஸாம வேதம். **சாமத்து நிறம்** 578/1. ... கொண்ட *. சியாமமான நிறம், கறுத்த நிறம்.

**சாம நிறத்தன்** 3830/4. பசுஞ் ... *.

**சாம மா மேனி** 1748/2. ... யென் தலைவன் *. கண்டார் கண் குளிரும்படியான கருப்பு மா மேனி.

**சாமரை** 1220/3. வெண் ... யோடு பொன்னி *. சாமரம். **சாமரைக் கற்றை** 1840/3. ... சந்தனமுந்தி * சாமரத் திரள்.

**சாமாறு** 189/2 ... அவனை நீ வெண்ணி*. சாகும்படி. **சாமாறும் கெடுமாறும்** 3320/1. ... தமருற்றூர் *. உயிர் போகையும், பொருள் அழிகையும்.

**சாமியப்பன்** 1064/2. நிரை மூகனார் தங்களப்பன் ... *. ஸாம வேத ப்ரதிபாத்யனான காரண பூதன். அப்பன் - காரணர்.

**சாய்க்கும்** 415/4. இறுமாந்து பொன் ... புனலரங்கமே *. தள்ளிவிடும். **சாய் கரகம்** 582/2. "... த்தை உயர வைத்துத் தண்ணீர் வார்ப்பாரைப் போலே, காணவே விடாய் கெடும்படி உயரவேறி வர்ஷிக்கிறிகோளிறே". "விடாயர் இருந்த விடங்களிலே ... சாய் கரம் போலே உயர வைத்துக் கொண்டு வந்து காட்டும்". 3045/2. தண்ணீர்ப் பந்தலிலே உயர வைத்து சாய்க்கிற கரகம்.

"சாய்கரம் போலே அம்ருதத்தைக் கொண்டு வந்து கொடுக்கைக்குத் திருவடி (யின்) முதுகிலே வந்து தோன்றின படி". 3198/2. விடாய்த்தவன் முகத்திலே நீர் விழும்படியாக தண்ணீர்ப் பந்தலிலே உயர வைத்த கரகம். ( 1655/1. 3556/3 ). தண்ணீர்ப் பந்தலில் வெளியே நீட்டி வைத்திருக்கும் குழாய். நம் பெருமானுக்கு திருமஞ்சன காலங்களில் தீர்த்த பாத்திரமான கிண்டியை எடுத்துக் கொடுக்க "திருக் கரகக் கையேல்" என்று அருள்பாடு. கரகம் - சரித்து எடுக்க வேண்டிய பாத்திரம், மூக்குள்ளது, கிண்டி. கும்பம் கரகம் என்பதில் கும்பம் பிரதான தேவதையை ஆவாஹிக்க. கரகம் சில்லரை தேவதைகளை ஆவாஹிக்க. காளி முனியப்பன் முதலானூர் சில்லரை தெய்வங்களாகையாலே அவர்களுக்குக் கரகம் எடுப்பது என்றும், பகவானுக்கு கும்பாபிஷேகம் செய்வது என்றும் சொல்லுகிறோம்.

**சாய் கொண்ட இம்மை** * 3217/3. ஒளியுடைத்தான ஐஹிக ஸுகம். **சாய்விலாத குறுந் தலை** 287/2. ... சில பிள்ளைகளோடு *. சாய்வு - ஒடுக்கம். குறுந்தலை - தண்மையில் தலைமை. சாய்விலாமை, துர் வியாபாரம், அதுவாகிய தண்மையில் தலை நிற்பவர்.

**சாயல் சாமத் திருமேனி** * 3715/3. சாய் - சாயல், ஒளி. ஒளியுடைத்தாய் சியாமமான திருமேனி. **சாயால் கரியான்** 2598/1. நிறத்தால் கரியனுயுள்ளவன். **சாயிழந்தேன்*** 3682/3.

**சாயை** 455/2. நீ ... அழிவு கண்டாய் *. தேஜஸ், நிழல்.

**சார்கின்ற நன்னெஞ்சினூர்** * 2489/4. அபிநிவேசித்துப் போரு கிற. பற்றுடைய நல்ல மனது. **சார் கொடான்** 3003/2. நோயும் ...* அணுகக் கொடான், அணுக விடான்.

**சார்ங்கத்தான்** 2302/3. *சக்கரத்தான் சங்கினன் ... *. சார்ங்க வில்லை யுடையவன்.* **சார்ங்கத் துணை பாதம்** * 3554/4. *சார்ங்கத்தை யுடைய உன் திருவடி.* **சார்ங்க நாண்** 2104/1. *தழும்பிருந்த ... ... *. சார்ங்க வில்லில் பூட்டிய நாண் – கயிறு.*

**சார்ந்தவர்** 2464/2. ... *க்குத் தன்னூற்றான் *. ஸ்வயம்த பரரானவர்கள்.* **சார்ந் தொழிந்தார்** 2591/2. *தானே அனுக்கராய் ... *. கிட்டி விட்டார்.* **சார்வது சதிரே** * 3110/4. *சார்விதே சதிர். தெற்குத் திருமலையைக் கிட்டுவதே பாக்யம். சதிர் – சாதுர்யம்.*

**சார்வதே வலித்த கையல்** * 3576/4. *சாரவேணுமென்ற உறுதியோடிருப்பவன். சேர்க்கதுபவிக்க வேணுமென்கிற சிக்கெனவை யுடையவன்.* **சார்வம்** 2219/2. *தமக்கென்றும் ... *. ஆச்ரயம், ஆதாரம்.* **சார்வரியர்** 2593/2. *அவர்நாம் ... ரானார் *. கிட்ட அரியர்.* **சார்விலாத தனிப் பெரு மூர்த்தி*** 2575/3. *தனக்கொரு ரக்ஷகன் தேவையில்லாத தனிப் பெரு மூர்த்தி.*

**சார்விலா மூர்த்தி** 2655/2. *தனி நின்ற ... *.* **சார்வு** 3923/4. *உரைத்தன இவையும் பத்தவற்றின் ... வே *. ஒப்பு, சேர்த்தி.*

**சார்வு நமக் கென்றும் சக்கரத்தான்*** 2381/1. *ரக்ஷகன்.* **சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்** * 3924/1. *நிச்சயம்.*

**சாரகில்லாவே** 2031/4. *என்றும் வினையாயின ... *. அணுக மாட்டா.* **சாரணர்** 925/3 *மாதவர் வானவர் ... இயக்கர் *. தேவஜாதியிலே உலாவித் திரிந்துகொண்டே யிருக்கும் சிலர்.* **சாரதி** 1145/2. *தேரேறு ... யாய் *. ஸாரதி.* **சாரம்** 3137/2. *அற்ப ... ங்களவை *. ஸாரம், பசை.* **சாரல்** 322/3 *தேனமரும் பொழில் ... *. மலைச் சரிவு.*

**சாரா** 1517/3. *பாழ் ... பழ வினைகள் *. அணுகா.* **சாரிகை** 3583/2. **சாரிகைப் புள்ளர்** 2496/3. *வாழியரோ ... *. மண்டலாகாரமாக வாராநிற்கிற புள். சாரிகை - வட்டமாக ஸஞ்சரிக்கை, வையாளி.*

**சாரேன்** 3970/1. *பிறவி கொடுத்தேன், பிணி ... *. கிட்டேன்.*

**சால்** 2370/2. *படிந்துழு ... *. பூமி, உழுத பள்ளம்.* **சால்பு** 2550/4. ... *பின் தகைமை கோலம் *. அமைவு, மர்யாதை. சால்பு சார்பாய் ரக்ஷகம்.* **சாலக் கொடுமைகள்** 428/1. ... *செய்யா நிற்பர் *.*

**சாலக வாசல்** 254/3. *மங்கை ... பற்றி *. பலகணி த்வாரம். சாலகம் - பலகணி.* **சாலத் தருமம்** 551/4. ... *பெறுதி *. மிக்க தர்மம்.* **சாலப் பணி யுண்டா யிராநின்றது** 1808/ப்ர. *மிக்க சிரமம்,*

**சாலப் பல நாள்** 3541/2. ...உகந்தோறும்*. அநேக காலம். **சாலப் பன்னிரை** 260/1. மிகவும் பலவான பசு நிரை. **சாலப் பெரும் பறை** 499/6. ... யே பல்லாண் டிசைப்பாரே *. மிகப் பெரிய பறை. ஒரு மன்றிலே த்வநிக்கையன்றியே எங்கு மொக்க த்வநிப்ப தொரு பறை. மன்றில் - பொதுச் சாவடி.

**சால முதலிகளா யிருந்தீர்** 2499/௩௭(?). பெரிய யஜமாகரானீர்.

**சாலவும் சேய்த்து** 503/2. ஊரிலகர் ... *. நெடுந் தூரம், மிக்க தூரம். **சாலி** 810/1. ... வேலி தண் வயல்*. நெல். **சாலேகம்** 2780/1. துன்னிய ... சூழ் சுதவம் தாழ் இறப்ப *. ஜாலகம் - பலகணி, ஜன்னல். **சாலைகள்** 1245/3. துன்னு மணி மண்டபங்கள் ... *. யாக சாலைகள்.

**சாவ** 150/4. வஞ்சமகளைச் ... ப்பாலுண்டு. சாம்படியாக. **சாவத் தகர்த்த** 343/2. சாம்படி தகர்த்த, சாவடித்த, சாக அடித்த.

**சாவது** 3915/4. ... இவ் வாய்க் குலத்து *. நசிப்பது. **சாவ முள்ளன** நீக்குவான்*. 3177/2. சாபம் போலே அநுபாவ்யமான துக்கங்களை நீக்குவான். **சாவி போமிறே** 3210/3. அவிந்து போம். நெல் சாவி போம், பயிர் சாவி போம்.

**சாழல்/லே** 1992 — 2001. சென்னி மலர் கண்டாய் ... லே *. தோழீ/லே. **சாளக் கிராமத் தடிகள்** * 997/1. ஸாள க்ராம க்ஷேத்திரத்திலுள்ள எம்பெருமான். **சாற்றி** 299/2. தாமோதரனுக் கென்று ... *. சொல்லி, பறை சாற்றி, பிரஸித்தமாக்கி.

**சாற்றி** 476/2. நம்பாவைக்கு ... நீராடினல் *. இட்டு. **சாற்றிச் சொன்னேன்** 132/3. ... போக வேண்டா *. குன்றுங் குறிச்சியாக (ஏகாந்தமாக) வன்றிக்கே பலரு மறியும்படி பிரஸித்தமாய்ச் சொன்னேன். **சாற்றுமினே** 581/4. சரிவளைகள் தருமாகில் ... *. அறிவித்துப் போருங்கள். **சாற்று வெள்ளம்** 3916/3. பழுத்த நல் லமுதின் ... *. ரஸ ப்ரவாஹம்.

**சாறு** 1151/3. ... கொண்ட மென் கரும்பு *. ரஸம். **சாறு பட** 3595/4. ... அமுதங் கொண்ட நான்றே *. உத்ஸவமாக, பசை பட, ஸாரம் உண்டாக.

**சாறு பெறுத்துமவர்** 605/1. "இடங் கொடுத்தார் நெஞ்சிலே கல்லையிட்டு நெருக்கிச் ... ... ரன்றோ". சாறு பெறுத்துகை - ஸாரம் வாங்குகை, மூக்குச் சாரம் போடுகை என்றுமாம். மூக்குச் சாரம் போடுகை அநுபந்தம் பார்.

**சான்ற** 1874/3. ஆற்றல் ... தொல் பிறப்பு *. சார்ந்த. **சான்று** 1771/1. "சான்றும்படி வந்தான்," ஸாக்ஷி.

**சிக்கம்** 2569/1. (?). "சரீரமாகிற ... த்திலே." உறி. சிக்யம் ஸம்ஸ்க்ருதம். **சிக்கனச் சுற்றம்** 379/3. செங்கண் மாலுடன் ... ... மாம் *. கெட்டியான, சலிப்பிக்க முடியாத உறவு. **சிக்கன நாடுதிரேல்*** 330/2. 336/2. ஊற்றத் தோடே தேடுகிறீர்களாகில். **சிக்கன நாமிது சொன்னோம்** *. 531/1. இது ஸத்யமாகச் சொன்னோம்.

**சிக்குத் தலை** 659/4. "பல ... களிலே உபநரதிப்பட்ட கங்கை." பல சிக்குத் தலை - பல ஜடைகளையுடைய தலை.

**சிகரமா களிறு** 3486/2. ... அட்டதும் *. பர்வத சிகரம் போலே யாயிற்று பெருத்திருக்கிறபடி. ஆனைமா மலை யென்னக் கடவதிறே.

**சிகலுண்டோ** 3838/1 (6). சிகல் - குறைவு, கேடு.

**சிகை** 3324/1. வட்டி. "இவனிட்ட காசு தன்னை யடையத் தன் பேரிலே செலவு எழுதி சிகைக் கடிப்பிக்கும்." அடிப்பிக்கும்(?). இரண்டைச் சிகை பார். அங்கே சிகை - நிலுவை, பாக்கி என்று பொருள்.

**சிங்கப் பிரான்** 446/3. ... அவனெம்மான் *. ந்ருஸிம்ஹ ரூபியாய் வந்து உதவினவன்.

**சிங்க விளக் கெரித்துக்** கொல்லாதே 3671/1. "தலையிலே சாணியை வைத்து விளக்கேற்றுகையும், வாயிலே பந்தங்கட்டி எரிக்கையும்". "சிங்க விளக்கெரித்தல் செய்யில் செய்வதென்." 2932/4. ஸிம்ஹாகாரமாக ப்ரதிமை பண்ணி அந்தைத் தலையிலே வைத்து எரிக்கை.

**சிங்க வேள் குன்றம்** 1008 — 17. அஹோபிலம். நரஸிம்ம மூர்த்தி எழுந்தருளி யிருக்கும் மலை. **சிங்காசனம்** 334/4. ... த்தே யிருந்தானை *. ஸிம்ஹாஸநம். ஸிம்ஹங்களைக் காலாக வுடைய ஆஸநம். **சிங்காமை** 1898/2. அறநூல் ... விரித்தான் *. கருங்காமை.

**சிசுபாலன்** 353/1. பழித்த ... தன்னை*. **சிட்டர்கள்** 559/2. பார்ப்பனச் ...*. சிஷ்டர்கள். **சிட்டன்** 3575/4.... னே செழு நீர் திருவரங்கத்தாய் *. திருமால், ஸ்ரீக்ரு இஷ்டன் சிஷ்டன், சிட்டன்.

**சிணுங்கி** 1888/3. ஏங்கி யிருந்து ... விளையாடும் *. சிராட்டி. சிராட்டப் பெற்ற. **சித்த மனையாள்** 124/2. ... அசோதை *. மனதுக்கு உவந்து நடப்பவள். **சித்தர்** 925/3. ... ரும் மயங்கினர் *. ஸித்தர்கள்.

**சித்திர குத்தன்** 441/1. ... எழுத்தால் *. சித்ர குப்தன், யமனுக்குக் கணக்கு எழுதுகிறவன்.

**சித்திரம் குத்துமோ** என்றிருந்தார்கள் 3586/1. சித்திரம் தீங்கு செய்யுமோ. **சித்திர கூடம்** 178/1. பொற்றிகழ் ... *. இராம பிரான் எழுந்தருளியிருந்த சித்திர கூட பர்வதம். [மான தேர்.

**சித்திரத் தேர்** 3640/1. ... வலவா *. விசித்திரமான, ஆச்சரிய

**சிதகு** 405/1. ... உரைப்ப *. தோஷங்கள். சிதைந்து போம்படியான துருக்திகள். **சிதைக்கின்றது** 2510/4. இவள் மாமை ... தே*. அழிக்கின்றது. **சிதைகிய பானையர்** 3231/2 கருகாய் கவர்ந்த காலர் ... *. பொளிந்த பாண்டத்தை யுடையவர். பொளிந்த - சில்லியான.

**சிதைந்து** 1185/4. தெட்ட பழம் ...*. நசுங்கி. **சிதைந்து** 2484/1. கால் ... *. விழுந்து. **சிதையாரோ வுன்னோடு** * 575/4. சண்டையிடாரோ! **சிதையேல்** 514/4. சிற்றில் வந்து ... லே *. அழிக்காதே. **சிதைவர்** 2659/2. முகம் ... ராமன்றே*. வாடிப் போவர், கீழ்ப்படுவர்.

**சிந்தப் புடைத்து** 346/1. ... ... செங்குருதி கொண்டு*. சிதற அடித்து, கொன்று பொகட்டு. **சிந்தனை** 928/4. சென்றதா மென ... யே *. மனம், நெஞ்சு.

**சிந்தாமணி** 1046/1. ... பே திருவேங்கடம் மேய *. சிந்தா விஷயமான பலன்களைக் கொடுக்கும் இரத்தினம். சிந்துதல் சிதறுதலாய் அழிவில்லாத மணி. **சிந்தாமல் கொண்மின்** * 2382/4. இதை மங்காமல் அறியுங்கோள். **சிந்தி** 1442/1. மூள வெரி ... *. சிதறி.

**சிந்திக்கில்** 3609/1. சூழல்கள் ... *. ஆராய்ந்தால். **சிந்தித்தி** 2025/2. திரிவாயென்று ...*. நினைத்திருக்கிறாய். **சிந்திப்பே யமையும்** * 3787/2. ஸ்ம்ருதி மாத்ரமே, நினைப்பே போதும், நினைத்தாலே போதும்.

**சிந்துக் காடுகை** 930/3. (அழ). "... வாரைப்போலே மயில்கள் ஆலித் தாடின. அநுபந்தம் பார்.

**சிந்துக் கோன்** 1495/2. ... விழ வூர்ந்த *. ஸிந்து தேசத் தரசனான ஜயத்ரதன். **சிந்துரப் பொடி** 261/1. ... க்கொண்டு *. **சிந்தை நோய்** 2690/1. நீராதென் ...*. மனோ வியாதி. **சிந்தையகம்** 3795/2. தெளிந்த வென் ... *. சிந்தை. **சிந்தையாளி** 1636/4. ... யென் சிந்தையான் *. சிந்தையை ஆள்கிறவன்.

**சிந்தையான்** 1436/4. சிந்தையாளி யென் ... *. ஹ்ருதயத்திலே நித்ய வாஸம் பண்ணுகிறவன்.

**சிமயம்** 2508/3. ... மிசை மின் மிளிரிய *, மலை, சிகரம்.

**சிரங்கள்** 1339/1. அரக்கர்தம் ... ளா *. தலைகள். **சிரத்தை** 776/1. வரத்தினில் ... *. மிக்க ஆதரம். **சிரமப் பட்டோம்** 516/3. வெள்ளக் கைகளால் ... இலேசப் பட்டோம்.

**சிரமம் செய்த** 1340/3. "ஸ்த்ரீகள் ... ஒற போதை நாடக த்வநி". பழகுகை. **சிரமம் செய்விக்கை** 882/4. "... க்கு வந்து கிடக்க, நீங்கள் அகங்ய பரராய்த்திரிகிறிகோளே." பழகுகைக்கு. [னேன்.

**சிரமம் தீர்ந்தேன்** * 470/4. கினைந்திருந்தே ... *. இளைப்பாறி

**சிரீஇதரன்** 3083/1. ... செய்ய தாமரைக் கண்ணன் *. ஸ்ரீதரன். **சிரீவர மங்கல நகர்** 3407/3. சேற்றுத் தாமரை செந்நெலூடு மலர் ... * வானமாமலை க்ஷேத்ரத்துக்குப் பெயர்.

**சிரைத்தல்** 3214/1. "கோட்டை சுமத்தல், புற் சிரைத்தல் செய்ய மாட்டீர்களோ". புல் செதுக்குதல். **சிரைத்திட்டான்** 309/4. தலையைச் ... வன்மையைப் பாடி *. அழித்தான்.

**சில்** 1016/4. சில்லி ...... லென்று*. சில்லென்றும் ஓசை. **சில்லி** 1016/4. ... சில்லென்று சொல் *. சில் லீடு என்னும் பக்ஷி. **சில்லியாய்** 3281/1. "பொளிந்து ...". ஓட்டையாய். சில்லி - துவாரம்.

**சில்லென் றழையேன்மின்** 488/2. ... கங்கை மீர் *. சிள்ளென்று காது பொளிரும்படி கூப்பிடாதிர்கள். **சில்லைவாய்ப் பெண்டுகள்** * 3520/2. சிறுகு சிறுகென்னும் ஸ்த்ரீகள், பஹுஜல்பநம் பண்ணும் ஸ்த்ரீகள், வாயாடிப் பெண்கள். சிறுகிடுகை - சண்டையிடுகை. **சில்வானவர்** (வா. மா. 154). "... ரைப் பற்றி சிர்கேடராகாநின்றார்கள்". அல்பர்கள். **சிலம்படி** 999/1. ... புருவில் *. சிலம்பை யுடைய அடி. சிலம்பு – காலணி. **சிலம்பார்க்க வந்து** * 338/3. சிலம் பொழிந்தும் பஞ்சை யிட்டும் வருகையன்றிக்கே, சிலம்பு த்வநிக்க வந்து, பஞ்சையிட்டு - சிலம்பு த்வநியாதபடி பஞ்சை அதிலே அடைத்துக் கொண்டு என்றபடி. **சிலம்பாறு** 338/4. சிர் ... பாயும் *. நூபுர கங்கை என்னும் நதி. **சிலம்பிய நற் செல்வம்** * 1285/4. சப்திக்கிற, முழங்குகிற, புகழப்படுகிற நல்ல பெரிய ஐசுவர்யம்.

**சிலம்பினிடைச் சிறு பரல்** 1285/1. கால் சிலம்பு ஒலிப்பதற்காக அதில் வைத்த சிறு கல். **சிலம்பியலாறு** 1836/3. ... டைய திருமாலிருஞ்சோலை *. சிலம்பினுடைய ஸ்வபாவத்தையுடைய ஆறு, நூபுர கங்கை. **சிலம்பின** 479/1. புள்ளும் ... காண்*. சப்தித்தன, கூவின.

**சிலம்பு** 999/1. ... அடிபுருவில் *. கால் சிலம்பு. பாத பூஷணம். **சிலம்பு** 2370/4. நீங்குழல் வாய் வைத்தான் ... *. மலை.

**சிலம்பும்படி செய்வதே** * 2564/4. கூப்பிடும்படி.

**சிலர்** 1055/1. ... பேசக் கேட்டிருந்தேன் *. **சிலவர்** 3314/3. "அவர்களிலே ... இவனோடே கை செய்து." சிலர். "நீ செய்கிறவை யெல்லாம் பொறுக்க வல்லார் வேறே **சிலவர்கள்**" 3467/2.

**சிலாதலம்** 2339/1. ... த்தின் மேலிருந்த மந்தி *. பாறை.

**சிலிங்காரம்** 262/1. ... த்தால் குழல் தாழ விட்டு *. சிருங்காரம், அழகு, அலங்காரம். **சிலிடம்** 2908/3. கரந்த ... *. அல்ப்பமான ஸ்தலம். **சிலிர்ப்பவர்** 662/4. மெய் ... *. அசைப்பவர், மயிர்க்கூச் செறிபவர். **சிலிரா** 2693/2. மெய் ... க்கை மோவா *. சிலிர்த்து.

**சிலுகு சிலு கென்னும்** ஸ்த்ரீகள் - சில்லை வாய்ப் பெண்டுகள் பார். **சிலுகு** - சண்டை, **சிலுகிடுகை** – சண்டையிடுகை. **சிலுகு படுத்துவதே** 10/3. "கம்ஸனுக்கு மறம் பிறக்கும்படி ... ". சண்டை யுண்டாக்குவதே. **சிலுகு வாய்ச்சிகள்** 3520/2. "... களான நம் சேரியிலுள்ளார்", **சிலுகுவாரிகளான** நம் சேரியிலுள்ளார் 3520/1 (9), (24). சில்லை வாய்ப் பெண்டுகள், சிலுகிடுகையே ஸ்வபாவமாக உடையவர்கள்.

**சிலுப்பி** 1923/1. ஒரு செண்டு ...*. சலிப்பித்து. தயிர் சிலுப்பி — என்ற வழக்குக் காண்க. **சிலும்ப** 2818/2. உம்பர் மேல் ... *. சப்திக்க, கோஷிக்க.

## சிலேடைகள் : இரு பொருள் சொற்கள்

[ அரும்பதக் காரர்கள் சிலேடைகளை சாடு என்ற சொல்லாலேயே விளக்குகிறார்கள். சாடு என்ற ஸம்ஸ்க்ருதத்துக்கு ஸாமர்த்தியம் என்று பொருள். சாடு என்ற ஸம்ஸ்க்ருத வார்த்தையை தமிழில் சரியாக உச்சரிக்கும்படி எழுத்து இல்லை. சாடு என்பதை விட சிலேடை என்ற சொல் தமிழ் இலக்கணத்தில் அதிகமாக வழங்குவதால் இந்தச் சொல்லின் கீழ் அ முதல் வ வரையிலுள்ள எழுத்துக்களில் முதலெழுத்து வரும் சொற்களை மாதிரிக்காக சில காட்டுகின்றோம்.

சிலேடைச் சொற்கள் அகர முதல் சாங்கம் வரையுள்ள எழுத்து வரிசையில் முன்னே விவரித்தவற்றுக்கு சொற்களை மட்டும் காண்க. விவரிக்கப் படாதவற்றுக்கும் இனி வரப் போகிறவற்றுக்கும் சுருக்கமாகப் பொருள் காண்க.]

**அச்சு** : அச்சாயிறே இருப்பது — பார்.

**அடிக்கழிவு**, அடிப்பட, அடிப்பாடு, அடிபட, அடி பற்றின மருந்து, அடியற்ற பேச்சு, அடியற்றால் வாடும், அடி யறியாதார், அடியிட்ட படி, அடியில் ஸுகம், அடியிலே தலையாக வாழ, அடியிடுகிறார், அடியிலே பிறந்துடைய கர்த்தம், அடியுடையார், அடி விடாதே கொள்ளுங்கோள், அடி விடார், அடுத்தூணாக வுடையவன், அடுத்தேறுக, அரி மிதியான, அரு மிதியான, அல்லிலே கிடந்து நோவு படுகிறாள், அறக் கை விஞ்சினான், அறற்றலையாய் 3285/1. இவை அந்தந்த எழுத்து வரிசையில் விளக்கி யிருப்பது காண்க.

**ஆகாசவாயர் 3485/4.** "... எனக்கு எதிரோ". வாய் - இடம். ஆகாசம் பரமாகாசம் அதுவாகிற இடத்திலே யுள்ளவர். ஆகாசத்தைப் பார்த்து வாய் திறந்திருக்கும் தரித்திரர். ஆகாச வாயன் (?). 3161/1. "... னுக்கோ இடுவது". பரமாகாசத்திலுள்ள பரம புருஷன் ஸ்வபாவார்த்தம். ஆகாசத்திலிருப்பவன், இருக்க இட மில்லாதவன் என்று த்வநி. **ஆசை யில்லாத ஜகத்து** ஆசை - திக்கு. அது இல்லாதது, நாதன் இல்லாதது.

**இடையிலே பிச்சேறி:** இவளிடையிலே ஆசைப் பட்டாயிற்று கோட்டிடை ஆடிற்று" 690/1 (?). இடையிலே - இடுப்பழகிலே, கோட்டிடை - ஏழு எருதுகளின் கொம்புகளினிடையே. **இறையிலி.**

**கடலோடத் தட்டில்லை 1768/3.** "உத்தேசியம் கைபுகுந்தால் ...". கப்பல் வர்த்தகம் செய்கையும் திருப் புல்லாணியில் கிடக்கையும்.

**கண் காணக்** கைவிட்டுப் போயிற்று **3385/3.** கண் காண - ப்ரத்யக்ஷமாக, அவளுடைய கண்ணழகு காண்கையில் கை நழுவிப் போயிற்று. **கண்ணறையர் 3444/2.** "கண்ணுடையனு யிருக்கச் செய்தேயும் ... செய்வதைச் செய்தான்". கண் - கண்ணும் தயையும். கண்ணறையர் - அந்தர், கிருபாஹீநர்.

**கண்ணுடையார்** செய்வதும் செய்திலை **3470/3.** கண்ணுடையவர், தயை யுடையவர். **கண் வட்டக் கள்ளன் 2994/4.** கண் வட்டத்தில் வர பயப்படுகிறவனும் டங்கசாலையில் க்ருத்ரிமப் பணம் அடிக்கிறவனும்.

**கரபாதை** யிறே இவனை இப்படிக் கலங்கப் பண்ணிற்று — என்று அடுத்தேறுக வந்த கரத்தைக் கழித்து ப்ராப்தமான கரத்திலே நிறுத்தினவனே (?). கரம் - கையும் கப்பமும், அடுத்தேறுக - அதிகமாக, அடுத்தடுத் தேறின.

**கழி சிறை** 629/1. அம்பு. சிறகையுடைய கழி. க்ஷுத்ரன் என்று த்வநி. கழிசிறையானுன் என்று இகழ்கிறோம். சிறை - சிறகு. அதைக் கழிக்கவேண்டிய துஷ்டனுனுன் என்று பொருள்.

**கழுத்துக் கட்டி** 3915/1 (?). "அல்லாதா ரடங்கலும் ... யாயிற்று இருப்பது". கழுத்துக் கட்டி போலே பாதகமென்று ஸ்வபாவார்த்தம், கழுத்திலே கட்டின லிங்கம் — என்று த்வநி.

**கறையடி :** கறை சேர் பருந்தாட் களிறு பார். **கன்னமிட்டுங் காணவேண்டும்** கன்னமிட்டுக் கொண்டும் பார்.

**கால் கூறு** 3196/1. "தன் படிக்குக் ...ம் போராதத்தை யிறே அமுது செய்தது." படி பூமியும் உடம்பும், கால் கூறு : கால் பாகமும் பாத ப்ரமாணமும்.

**கைக்கு மேலேந்தும் காட்டிக்** காணும் இவனுடைய ஆபரணம் வாங்கிற்று (?). திருக் கையிலிருக்கிற பஞ்சாயுதங்களைக் காட்டியென்று ஸ்வபாவார்த்தம். குறடு கீறி விளையாடுகிற வளவிலே அஞ்சுக் கையி லக்காய் ஒரு பருக்கை யிருந்தால் கைமேலே அஞ்சு போட்டு வெட்டு கிறேன் என்று ஒட்ட மோடி. அப்படியே போகட்டு அத்தை வாங்கு கிறேன் என்று சாடுவுக்கு அர்த்தம். குறடு கீறி ஆடுகை - பாண்டி ஆடுகை. **கைகண்டு** 3287/3. "நான் இது ... டன்றோ சொல்லு கிறது". கையில் கண்டு, ப்ரத்யக்ஷமாகக் கண்டு.

**கை செய்** திருக்கையாலே 3583/2. கை செய்கை - அலங்கரிக்கை யும், ஸஹாயம் செய்கையும், யுத்தம் பண்ணுகையும்.

**கைப் பற்று** 3207/4 (?). "வாணனுடைய ... றையும் கழித்து இறையிலியாக்கினாய்". கைப் பற்றையும் - கைவசமானத்தையும், கைகளைப் பற்றி உடையவனா யிருந்தமையையும். இறையிலியாக்கி - இறை யில்லாதவனாக்கி. இறை – தேவதையும் கரமும். கரம் - கப்பம்.

**கை பார்த்திருப்பார்** 3314/3. "ஒருவன் ... ... அநேகருண்டா கில்" ஒருவனுக்குப் பர தந்தரரா யிருப்பா ரென்றும் கையிலே இருப்பா ரென்றும். திருச் சங்கு பற்றி வார்த்தை இது.

**கைம் முதல்** 3182/4. "நீ தந்த ...". இஷ்ட ஸாதக பூர்த்தி த்ரவ்யம் — என்று த்வநி. "வாணனைக் ... லறுத்து தலை யழியாமே வைத்த தலைமை" தலைமை – சிரைஷ்ட்யம்.

**கைம் மேலே** 3314/3 "... இலக்கை பெறுதார்க்கு அன்றுடு படி விட வேணுமிறே". கை மேலே – ஸத்ய:, உடனே. இலக்கை - மாஸச்

சம்பளமும் லக்ஷ்யமும். **கை(ம்) மேலே** தான் அகப்பட்ட படியைச் சொல்லுகிருள். 3385/3. திருக் கையிலே யிருக்கிற ஆயுதங்களின் சேர்த்தி யழகிலே என்றும் பிரத்யக்ஷமாக என்றும். " கைமேலே திர்த்துக் கொண்டு வருகைக்கும் பரிகர முண்டோ " 3204/2. ஸத்ய: உடனே என்றும் கையில் திருவாழியாலே என்றும்.

**கைமேலே முடிவார்** 3349/4. கையாலே குத்திக் கொண்டு முடிவார், யுத்தத்திலே முடிவார் — என்று இரண்டு பொருள். கை - யுத்தம். பாரதம் கை செய்து, யுத்தம் செய்து. " வாணனுடைய நெஞ்சுவலி கைமேலே போம்படியாக அவன் தோளைத் துணித்தான் "3207/3. (?) நெஞ்சு வலி - உள் வன்மை, கைமேலே - உடனே, கையோடே. "கைமேலே காணலா யிருக்கிறது காணுமிவள் மெலிவு" 3918/1. பிரத்யக்ஷமாக என்றும் தோளிலே என்றும்.

**கை வந்த படி** 3491/2. " ஈசுவரன் ... செய்யாதவர்களைக் கைமேலே தண்டிக்கை பிரஸித்தம் ". கை வந்தபடி - சொன்ன படி. கைமேலே பிரத்யக்ஷமாக, ஸத்ய:

**கை விஞ்சினுன்** 3316/2. "இவன் அறக் ... என்று கரத்தைக் கழித்து விட்டார் ". கைகளை அதிகமாக வுடையவன் என்றும் கைக்கு அடங்காமலிருந்தான் என்றும்.

**கைகழிய** 3207/3 (?). "வாணன் கைவிஞ்சினனென்று அவனைக் ... விட்டான் ". கைகளைக் கழித்தான், ரக்ஷியாமல் நழுவ விட்டான்.

**கொம்பு** 960/1. "ஒரு கொம்புக்காக இரண்டு கொம்பிலே விழ்ந்தான் ". கொம்பு - ஸ்த்ரீ. ஆயர்தம் கொம்பான நப்பின்னைக்காக எருதுகளின் கொம்பில் விழ்ந்து பொருதான்.

**சங்கை** யற்றிருந்தேன் ; நீங்கள் சங்கை யுடையீ கோளா யிருந்தி கோள் 3682/1. சங்கு - வளையும் ஸந்தேஹமும். நான் வளையில்லாமலிருந்தேன் - ஸந்தேஹமில்லாம லிருந்தேன் ; நீங்கள் வளையுள்ளவர்களாய் ஸந்தேஹிகளா யிருந்தீர்கள்.

**சாங்கம்** 3376/3. " அவனுடைய ... என்னளவில் கண்டிலேன்." வில்லும் பக்ஷபாதமும். "பெருமாள் பக்கல் ... பிறே இப்படி சொல்லுவித்தது." 3387/3. **சிவிட்கு**: சொல் வரிசை பார்.

**சுரம்** 872/2. " வாலி பேர் கேட்க வஞ்சி ... மடைந்தார் மஹாராஜர் (ஸுக்ரீவன்)". சுரம் - மலையும் ஜ்வரமும். ரிசியமுக பர்வதத்தில் ஒளிந்தவன் சுரமடைந்தான் - மலையி லிருந்தான். ஜ்வரம் அடைந்தான் என்பது த்வநி.

**தலை** 3190/3. " ஒரு ... சேர்க்தால் பின்னை யெல்லாம் வேண்டின படி அநுபவிக்கலாமிறே". ஸமுத்ரத்துக்குள்ளே ஓடத்திலே யிருக்கிற வன் ஒரு சாஸ்திரத்தைக் கொண்டு கரையேறினுல் அநந்தரம் வேண்டினபடி மௌக்த்யாதிகளை (முத்து முதலியவற்றை) அநுபவிக்கலாம் என்றபடி. தலை - கரை, சாஸ்திரம். " ஒரு நூலைப் பற்றி நீந்திறவர்களை அது தானே **ஒரு தலை சேர்த்து விடுகை** நிச்சிதமிறே." 3190/3. நூல் - யஜ்ஞோப வீதமும் சாஸ்த்ரமும். நூலென்றது ஸமுத்ர யாகம் பண்ணுகிறவர்கள் கடலிலே சம்பான் மேலே மேல் தட்டிலே யிருந்து படிக்கிற நக்ஷத்ர சாஸ்திரம். ஒரு தலை சேர்த்து விடுகை - ஒரு கரை சேர்த்து விடுகை. **தலையாக ஜீவித்து** 3207/3. "அத் திருவடிகள் பெறில் ... அதில்லையாகில் இல்லையாம் நான் ". தலையிலே வைத்துக் கொண்டு ஜீ வி த் து. நன்ருக ஜீவித்து.

**தலையான மதியை** யுடையவன் 3161/2. தலையிலே யான மதியை சந்திரனை யுடையவன். தலையான - சிலாக்கியமான, மதி - ஞானத்தை யுடையவன். **திருமுகம்** மறுத்துப் போனவர்க்கு எத்தைச் சொல்லுவது (?). பிராட்டி முகமும் ராஜ சாஸநமும். ஸ்ரீ முகம்.

**தாரை :** சிவிட்கென்று வில் பார்.

**திறம்** 3308/4 " திறத்திலே அவன் ஆதரிக்கு மென்றன்றோ இத்தால் காரியமுள்ளது ; அல்லது திறக்கேடா மித்தனையிறே". திறத்திலே முறையிலே, திறக் கேடு - காந்தி ஹீநம்.

**நுனியாடிகள்** 3314/3. ஹஸ்தாக்ரவர்த்திகளும் ஸேகாக்ரவர்த்திகளும். "இவர்கள்தாம் (சங்கு சக்கரங்கள்) ... ".

**நூல் :** ஒரு தலை சேர்த்துவிடுகை பார்.

**படி** 1345/அரு. "ஸ்ரீ வாமகன் படி யநுஸந்திக்க, அது ஒரு படியன்றிக்கே, இரு படியாலே படி யெல்லாமளக்க, இப்படி இன்னமொரு படி யுண்டோ என்ருராய், ஒரு படி இரு படியான (இரண்டு விதமான நரங்கலந்த சிங்கமான) நரஸிம்ஹத்தின் படியை அநுபவிக்கிருர்."

**படி :** பல படியாலும் அடிமை செய்யப் பெறுவர் 3318/4. படி - சரீரமும் ப்ரகாரமும். **படி விட** 2966/1. " அவன் தன்னையே பற்றி அவன் ... ... ஜீவித்திருப்பர்." படி - அரிசி. **படி விடும்** 476/3 (?). " புண்ய பாபாரு ரூபமாகப் ... ஸர்வேசுவரன்". படி - திருமேனி. ஸாக்ஷாந் காரமாக்குவன், பலன் கொடுப்பான்.

**படியும் நடையும்** கிடைக்கும் 3285/4. படி - அநுபவமும் ஜீவநமும், நடை - கைங்கர்யமும் விருத்தியும்.

**படியெடுத்துக்** காட்டுகிறன் 3535/1. தேஹத்தைக் காட்டுகிறன், ஆபரண ஜாலத்தைக் காட்டுகிறன் — என்று த்வநி. படி களைவது - (ஆபரணம் களைவது) என்று கோயில் பேச்சு.

ஒரு கைக்குப் **படையாயிருக்கும்** 3341/1. படை, ஆபரணம், சேனை, ஆயுதம். கை - ஹஸ்தமும் யுத்தமும். "இதுதான் ஆபரணமுமாய் வினைத் தலையில் ஆயுதமுமா யிருப்பது ; ஒரு கைக்குப் படையா யிருக்கு மிறே." **படைத் தடைத்து விடுகை** 3491/2. " ... ... த்து விட்டான்". படை – ஆயுதமும் சேனையும். படைக்கு செலவிட்டான், திருவாழிக்கு செலவிட்டான். அடைத்து விடுகை – செலவிடுகை.

**பா** 3254/2. "இவருடைய பா நல்ல நூலாகையாலே வான் பட்டாடையாயிற்றுக் காணும். நல்ல நூலாக வேணுமென்று அடியிலே நோற்று நூற்றவரிறே." பா - ச்சந்தஸ்ஸும் நூலும். நூல் - சாஸ்திரமும் தந்துவும். நோற்கை - ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகை. நூற்கை - பண்ணுகையும் நூல் நூற்கையும். அடி – ஆதி, ஆரம்பம், முதல், திருவடி. அடியிலே நோற்கை - திருவடியிலே நோன்பு நோற்கை, விரதம் கிடக்கை.

**பாகிலே பிடி பட்டவள்** 3286/4. ஸாரத்ய வேஷத்திலே, பிரகாசத்திலே ஈடுபட்டவள். பா – ப்ரகாசம். (எப்படி ?)

**பொடி பட்டுக் கிடக்கிறது** 3270/2. "அது ... என்று அறிகிறிலன். தூளியா யென்றும், பராஹதமாய் என்றும்.

**பொய்ம் முடி** (?). "அல்லாதார் முடிகளைப் ... யாக்கும்படி தலையான முடி". பொய்ம் முடியாக்கும் - அஸத் ஸமமாக்கும், சப்பரையான முடி. தலையான முடி - தலையிலே இருக்கிற முடி, சிரேஷ்டமான முடி.

**மால்** 3244/4. "மார்பத்து மாலைக்கு அவன், அம்மாலுக்கு மால் இவள்" மால் - வியாமோஹமும், பரத்வமும்.

**மாலைக் கண்** 3020/1. "மாலைக் கண்ணெனன் றிருப்பார்க்கு அல்லாத தெல்லாம் மாலைக் கண்ணாய்த் தோன்றும்". மாலை - ஸர்வேசுவரனை, கண் - ரக்ஷகம் என்றிருப்பார்க்கு, மற்றை வஸ்துக்களெல்லாம் மாலைக் கண் ராத்ரியில் பதார்த்த அதர்சந சக்ஷுஸ்ஸா யிருக்கும், ராத்ரியில் காணமுடியாத கண்ணாயிருக்கும்.

**முடி :** "உபய விபூதிக்கும் ஒரு ... யிலே கட்டுண்ணும்படி **கவித்த முடியிறே**". ஒரு முடியிலே - முடிச்சிலே, கவித்த முடி – வைத்த கிரீடம்.

**மெய் 3210/2.** " தன்னை ... யாக அறியாதவன். அசித்ப்ராயன், தன்னை பகவச் சரீரமாக, ஸத்யமாக அறியாதவன்." மெய் - உடம்பும் ஸத்யமும். " மெய்யான குடல் துடக்கிறே. இவனுடைய பொய்யோடு மெய்யோடு வாசியற இவனுக்கு இரண்டும் உடலாயிருக்கும் ரக்ஷிக் கைக்கு " (?). குடல் துடக்கு சரீர சரீரி ஸம்பந்தம்.

**வ்ருத்தம் :** " இவனுடைய ... கைமேலே காணலாம்படியிருக்கும்" வ்ருத்தம் - ஆசாரம், வ்ருத்தம் - சக்கரம், திருவாழி. கைமேலே ப்ரத்யக்ஷமாக, கையின் மேல்.

**வலக்குறி 3195/2.** " இவர்கள் உத்தேசிய ராகைக்கு என்ன ... உண்டு". வலக்குறி பலமான அடையாளம். வலது கையில் திருவாழியும் வல மார்பினில் ஸ்ரீவத்ஸமென்னும் மரு - மச்சமும்.

**வாய்க் கரை 3457/4.** கை கழியப் போய் நின்று ரக்ஷிப்பதும் கை விடாதே ... ... யிலே நின்று ரக்ஷிப்பதுமான திவ்யாயுதம். சங்கு சக்ரம் இரண்டில் சக்கரம் கைவிட்டுப் போய் சத்ருவைக் கிட்டிக் கொன்று ஆசிரிதரை ரக்ஷிக்கும். சங்கு ஸர்வேச்வரனுடைய கையை விட்டகலாதே வாய்க் கரையிலே (மேலெழ), வாயருகே இருந்து கொண்டே முழங்கி சத்ருவை முடிக்கும். வாய்க் கரை - மேலெழ என்றும் வாயருகே என்றும் அர்த்த த்வயம்.

**வாயாடி :** வாய்க் கரைப் பற்றை அடுத்தூறுக வுடையவன் **3315/4.** வாயிலே ஸஞ்சரிப்பவன், வாயால் முழங்குகிறவன். திருச்சங்கு. வாய்க் கரைப் பற்றை - ஸர்வேச்வரனுடைய அதரத்தை, அடுத்தூறுக வுடையவன் - கிட்டின ஜீவநமாக வுடையவன்.

**விடை 3311/2.** " நப்பின்னைப் பிராட்டியை விடை கொண்டு வந்து காணும் கைப் பிடித்தது ". விடை கொண்டு - ஸம்மதி பெற்று. " விடை கொண்டு வந்து காணும் நப்பின்னைப் பிராட்டியைக் கைப் பிடித்தது ". ஏழு விடைகளைக் கொண்டு வந்து - கொன்று வந்து.

**விலங்கு :** " ஆனையின் காலில் ... கையிறே வெட்டி விட்டது." விலங்கை - கட்டை, ஸம்ஸார பந்தத்தை, விலங்கை - கொடிவாய் விலங்கான முதலையை. விலங்கான ஸம்ஸார பந்தத்தையும் வெட்டிவிட்டான்.

**சிலேடைச் சொற்கள் முடிந்தன.**

**சிலைக் கருமேகம் 662/3.** மெய் ... ஒன்று *. பின்னுகிற வில்லை யுடைய மேகம். **சிலைக் குரல் 662/1.** ... ஏற்றெருத்தம் *. சிலை - கோபம். கோபத்துடன் கூடிய முழக்கம்.

**சிலை கால் 1701/1.** வரி வெஞ் ... வளைவித்து *. வில், விற்கால். **சிலை குனிக்கும் 266/4.** கொம்மைப் புயக் குன்றர் ... *. வில் வளைக்கும். **சிலை மலி** செஞ்சரங்கள் * **1988/4.** வில்லில் நிறைந்த செவ்விய அம்புகள். ஆயிரம் இரண்டாயிரமாக ஒரு தொடையிலே தொடை யுண்ணும் செவ்விய அம்புகள். தொடையிலே தொடை கொள்கை - எடுப்பிலே அகப்படுகை.

**சிலையர் 2514/1.** கொடுங் காற் ... *. வில்லாளிகள்.

**சிலை யிலங்கு பொன்னாழி * 1648/1.** சார்ங்க வில்லோடு கூடின பொன்னாழி. ஆபரணத்துக்கும் அழகுக்கும் இவை முதல் விரலா யிருக்கும். முதல் விரல் – எண்ணிக்கையில் முதல் ஸ்தானம்.

**சிலை யிலங்கு மணி மாடம் * 1231/3.** சிலை - வில். அத்தால் மின்னல், அரு ஒளி. ஒளி விளங்கு மணி மாடம். **சிலை வலவன் 722/4.** ஏமரு ... *. வில்லன். **சிவட்கு :** சிவிட்கு பார்.

**சிவப் பட்டார் 2387/2.** சிறியார் ... *. சைவர்கள்.

**சிவளிகைக் கச்சு 1654/1.** செவ்வரத்த உடையாடை யதன் மேலோர் ... *. கட்டும் கச்சு. பொன்னெழுதின கச்சு. ஆடைமேல் கச்சாகையால் இடுப்பில் கட்டும் பட்டை. பொன்னெழுதினது ஜரிகைப் பட்டையாகும். சிவளிதான் ஜவுளியாய் மருவிற்றே!

**சிவிட்கென்று 482/4.** "பின்னையும் உணரக் காணுமையாலே ..." சீக்கிரமாய் சிற்றமுண்டாய். " ... ட்குப் பிறந்து வார்த்தை சொல்லுகிறார்". 1328/ப்ர. " இளைய பெருமாள் திருவுள்ளத்தில் ... தாரையை விட்டு ஆற்றவேண்டிற்று ". சிவிட்கு - கோபம், உஷ்ணம், சுளுக்கு. தாரை – வாலி பத்நியும் தைல தாரையும். எண்ணெய் தடவி சுளுக்கு வழிக்கை.

**சிவியார் 2930/1.** " வஹித்தேன் நானன்றே — என்று ... ... சொல்லும் வார்த்தையைச் சொன்னுனிறே". கை வர்த்தர், தண்டிகை முதலானவை சுமப்பர். தண்டிகை - பல்லாக்கு, சிவிகை – பல்லாக்கு சிவியர் – பல்லாக்குச் சுமப்பவர், போகிகள்.

**சிவீலென் றிருப்பார்கள் 879/1.** "பகவ துத்கர்ஷம் கேட்டால் ..." அஸஹ்யப் படுவார்கள். காதில் குச்சி பாய்ந்து **சீவீல்** என்னுமாப்

போலே ஆன்புறவர்." "என் வைபவத்தைச் சொன்ன விடத்தில் சிவீலென் றிருந்திலே. இன்னமும் எனக்கு வைப்பானவற்றைச் சொல்லுகிறேன். செவி தாழ்த்துக் கேட்டுக் காண்". 1403/1. சிவீலென்னுமாப் போலே – சுரீரென்று பாயுமாப் போலே.

**சிழகிச் சிழகி** 3138/1. "...யழுதால் என்ன பிரயோஜநம்." விக்கி விக்கி - சிழ்கிச் சிழ்கி என்று பாடாந்தரம்.

**சிளையாத** 3374/4. "பிரிவுக்குச் ... இது இனி என்னுப் முடியப் புகுகிறதோ". இளையாத. "பிரிவுக்குச் ... உடம்பு" 2728/1. "பிரிவுக்குச் ... என்னுடல்" 2940/4. சலியாத சளையாத சளைக்காத என்றும் சொல்லலாம். சளையாத என்பதே சிளையாத என்றாயிற்று போலும்!

**சிற்றஞ் சிறு காலே** 502/1. ... வந்துன்னை *. பிராம்ம முஹூர்த்தத்திலே. ஜாதிப் பேச்சு. வெட்டி விடியாலே (என்பது போலே). சிறு காலே ப்ராத: காலத்திலே, சிற்றம் என்றதால் அத்யந்தம் ப்ராத: காலத்திலே. **சிற்றடி** 1279/4. ... மேல் சிலம் பொலியும் *. சிறு அடி-சிறு கால். **சிற்ற வேண்டா** 3787/2. ... சிந்திப்பே அமையும் *. ஆயாஸிக்க வேண்டா, குறைவு பட வேண்டா, சிரமப் பட வேண்டா.

**சிற்றவை** 724/4. ... தன் சொற் கொண்ட சிராமா *. சிறிய தாயார், சிறு அவை, சிறியவள். அவ்வை அவையாயிற்று. 1068/4. ... பணியால் முடி துறந்தான்*.

**சிற்றாடை** 88/2. பீதகச் ... *. சிறிய ஆடை. 528/3. கோலச் சிற்றாடை *. **சிற்றாதே** 484/7. ... பேசாதே செல்வப் பெண்டாண்டி *. சிற்றுதல் - சிதறுதல். சேஷ்டை பண்ணாதே. சிற்றாமலும் பேசாமலும் உறங்குவதேன். **சிற்றாயர்** 248/2. ... சிங்கமே, சீதை மணாளா *. சிறு பிள்ளைகளான இடையர்.

**சிற்றாயன்** 3704/4. சீர் கொள் ... *. பால கிருஷ்ணன். **சிற்றாறு** 3704/4. திருச்செங் குன்றூரில் திருச் ... *. திவ்ய தேசம்.

**சிற்றிடை** 3392/3. ... யும் வடிவும் *. சிறுகின இடை, சிறுத்த இடை. **சிற்றிதழ்** 73/1. ... போல் விரலில் *. உள்ளிதழ்.

**சிற்றில்** 41/2. ... இழைத்துக் திரிதருவோர்கள் *. கொட்டகம், சிறிய வீடு. ... மென் பூவை *. 1215/2. சிறு கூடு.

**சிற்றில் மேலிட்டுக் கொண்டு** 519/2. சிற்றில் – வியாஜம். ஒரு வியாஜத்தை யிட்டுக் கொண்டு. சிற்றில் என்ற ஒரு வியாஜத்தை யிட்டுக்

கொண்டு. **சிற்றின்பம் 3328/1.** அளவிலாச் ... *. கைவல்யாநுபவம், ஆத்மாநுபவ ஸுகம், க்ஷுத்ர ஸுகம், சப்தாதி விஷயாநுபவம், அல்ப்ப ஸாரமான விஷய ஸுகம். முள்ளிப் பூவில் தேன் போலுள்ள அல்ப்ப ஸாரம். **சிற்றுண்டி 156/1.** அப்பங் கலந்த ... *.

**சிற்றெயிற்று** முற்றல் மூங்கில்* **803/1.** சிறுகின கண்களை (கணுக் களை) யுடைய முற்றின மூங்கில், சிறு மூங்கில், சன்ன மூங்கில், குச்சி யான மூங்கில், கணு சிறுத்து முற்றியிருக்கும் மூங்கில்.

**சிறகடிக் கொள்ளும் 3594/1.** " ஆயிரங் காதம் பறப்பதன் குட்டி ஐந்நூற்றுக் காதம் ... ". பறக்க அப்யாஸம் செய்யும்.

**சிறங்கை** - சிறுங்கை, கொஞ்சம். (தனி ச்லோ. த்வ மப்ரமேய : ).

**சிறந்த கால் 752/2.** ... இரண்டுமாய்*. சேதநர்க்கு ஆதாரமான பலத்தையுடைய வாயு.

**சிறந்த வான் சுடர் 3440/4.** ... ரே*. தகுந்த அளவிறந்த அழகு. வான் - பெரிய, அளவிறந்த. **சிறந்தார்க் கெழு துணையாம் * 2225/1.** திருநாமத்தைச் சொன்ன உத்க்ருஷ்டர்களுக்கு உத்க்ரமண தசையில் ஆதி வாஹிகர்க்கு முன்னே தானே துணையாய்க் கொண்டு போகக் கடவனும். **சிறந்தார் பிறந்தே * 3439/4.** சரீர ஸம்பந்தத் தோடே இருந்து வைத்து சிறப்பையுடைய சீரியர்கள்.

**சிறந்திடும் 825/2.** ஞானமொடு செல்வமும் ...*. சிறப்பு - மிகுதி. குறைவற வுண்டாம்.

**சிறந்து 3799/2.** தலைத் தலை ... பூசிப்ப *. கிட்டி. **சிறந்தேறிய புண் 872/1.** சியினால் உடை பட்ட புண்.

**சிறந்தேன் 1459/4, 1569/2.** நின்னடிக்கே ... *. தகுதியானேன்.

**சிறப்பில் வீடு 3103/1.** ... சுவர்க்கம் நரகம் *. சிறப்பிலேயான வீடு, சிறப்புடைய வீடு, மோக்ஷம்.

**சிறப்பு 3102/4.** கண்ணனே யான் கொள் ... பே *. ஐசுவரியம். **சிறப்பு 2579/5.** அமுத வெள்ளத்தானும் ... விட்டு *. ஐசுவரியம்.

**சிறப்பு** - கோயில்களில் சீர் வரிசை, மடத்துச் சிறப்பு, கொட்டாரம் சிறப்பு — என்பது ஐசுவரியமாகிற சீர் வரிசை.

**சிறப்புடைய பணங்கள் * 418/4** பிரகாசமுள்ள பணங்கள். அழ கான பணங்கள். **சிறப்புடைய மறையவர் * 408/4.** வேத தாத்பர் யத்தை யறிந்திருக்குமவர்கள்.

**சிருங்கித் திருக்கிற** 3550/ப்ர. "மஹோததி என்கிற பெருமையை நினைத்திரா நின்றது. தன்னைச் ... நம்மை அறிகிறதில்லை". அல்ப்பமாக நினைத்திருக்கிற. "எனக்கும் ஒரு சிறுங்கை யிட வல்லிகோளோ!" 890/4. சிறுங்காய் அரிசி என்பது போலே கையளவு, கொஞ்சம். "கடலிலே ஒரு சிறுங்கை புஜிக்குங் காட்டில் கடல் வற்றுகிறே". 1723/3. (சி. அரு.). **சிரும்பி** இரப்பாளனுய் நின்ற நிலை 3064/1. குறுக்கி. **சிரும்பித் தனுபவித்தல்** 3540/1. (சி. அ.) முகந்து கொள்ளல். **சிரும்பினவன்** 3055/2 (அரு).

**சிருய்** 3183/4. "ஒரு ... யை விரகவலித்து ஆறு மாஸத்துக்கு வேண்டும் சோறும் தண்ணீரும் ஏற்றிக் கொண்டு கடலிலே இழியா நின்றான்". மரக் கட்டை, சம்பான், ஓடம்.

**சிறிய ஞானத்தன்** 2949/1. அடியேன் ...*. அத்யல்ப்ப ஞானத்தை யுடையவன். **சிறியார்** 2387/2. ... சிவப் பட்டார் *. எளியார்.

**சிறுக் கள்வர்/வன்** 3508/2. திறங்களர் வாய் ... *. சிறு வயிற்றிலே பெரிய லோகங்களை வைத்து பரிச்சேதிக்க வொண்ணுத சேஷ்டிதத்தை யுடையவன்.

**சிறுகக் கோலமாட்டார்** 3104/(?). "பெறிலும் பெருதொழிலும் ...". அல்ப்பமாக ஆசைப்படார். **சிறுக நினைவது** 3240/1. ... தேர்பாசம் *. அபக்ருஷ்ட புருஷார்த்தங்களை நினைக்கை.

**சிறு கருந்தாள்** 709/2. சேவடி மலர் ... *. புறவாய் கறுத்த சிறிய தாள். **சிறுகா** 3548/2. ... பெருகா அளவிலின்பம் *. சிறிதாகாது.

**சிறு காக்கை** 328/1. ... முலை தீண்ட *. விவேக சூந்யமாய் க்ஷுத்ரமான காகம். **சிறு காலம்** 3548/4. ... த்தை யுறுமோ*. க்ஷண மாத்ரம், அல்ப்ப காலம். **சிறுக் கால்** 94/3. ... உறைத்து *. சின்னக் கால். **சிறு காலே** 248/3. ... யூட்டி யொருப் படுத்தேன் *. விடிவோறே. சிற்றஞ் ... வந்து *. 502/1. ப்ராத: காலத்திலே. **சிறுகாலை** 345/4. ... ப் பாடும் தென் திருமாலிருஞ் சோலையே *. ப்ராத: காலம். **சிறுகா(ல்)/னெறி** 345/2. ... போக்குவிக்கும் *. சிற்றடிப் பாடு. கள்ளப் பாதை. **சிறுகி** (வா. மா. 49). "உருச் ...". சிறுத்து.

**சிறு குரம்பை** 1280/1. படலடைத்த ... *. சிறிய குடிசை. **சிறு குரல்** 2068/2. மடப் புறவம் பெடைக்குப் பேசும் ... *. அஷ்டகர்ணமான சொல். மூன்றும் பேர் காதில் விழாத ரஹஸ்யமான குரல்.

**சிறு கூழை 1104/1.** ... வஞ்சிச் ... புருவாகி*. குழன்று, பிடித்துக் கட்ட வொண்ணாத படியான மயிர் முடி எல்லாம் செய்தாலும் பின்னையும் பாறிப் பரந்து கிடக்குமிறே.

**சிறு கூறுண அத்யல்ப்ப காலம் 3106/1.** அணு மாத்ரமான காலம்.

**சிறு கோல் 1672/3.** தாமெடுத்த ... லுக்கு*. சிறிதான கொம்பு. வைக்கோல் என்று 3442/3-ல் தாமெடுத்த சிறு கோல் என்பதற்கே அரும்பதம். **சிறுச் சிறிதே 495/5.** ... ... எம் மேல் விழியாவோ*. கொஞ்சம் கொஞ்சமாக, சிறிது சிறிதாக.

**சிறுச் சேவகம் 3442/2.** செய்த சின் ... *. சிறுமையி லுண்டான சௌர்யம். சூரத் தனம், பால பராக்ரமம்.

**சிறு சமயப் பந்தனையார் வாழ்வேல் பழுது* 2469/3.** சிறு சமயங்களை க்ஷுத்ரமான கர்மாத்யுபாயங்களைப் பற்றினவர்களின் வாழ்வு ப்ரயோஜக மில்லை. பந்தனையார் – பந்தக ஹேதுவான கர்மாத்யுபாயங்களை அனைந்தவர்கள். சிறு சமயம் - க்ஷுத்ரமான கர்மாத்யுபாயங்கள்.

**சிறு சோறு 194/1.** ...ம் இல்லும் சிதைத்திட்டு*. பிள்ளைகள் லீலார்த்தமாக மணல் கொழித்துச் சமைத்த சிறு சோறு.

**சிறு தாம்பு 937/1.** கண்ணி நுண் ... ஒரு சுற்றுக்குப் போராத, குறுகின, எட்டம் போராத தாம்பு, கயிறு.

**சிறுத் தேவி 3521/1.** விளையாட லுற்றுள் என் ... ... *. இளைய [மனைவி.

**சிறு தகையேன் 3300/3.** நாண மில்லாச் ... *. தகை – அளவு. அளவிலி, அல்பஜ்ஞன். **சிறு தறுகண் கரி 1669/3.** மழை மதத்த ...*. சிறுத்து க்ரௌர்யமெல்லாம் தோற்றும்படி யிருக்கிற கண்ணை யுடையயானை. **சிறு தூதை 521/1.** வட்ட வாய்ச் ... யோடு*. சின்னப் பானை தூதை - பானை. **சிறு தொண்டர் 2004/4** குணம் பரவாச் ... ... *. க்ஷுத்ர கிங்கரர்கள். **சிறு தொண்டர்/டீர் 1630/1.** பணியும் ... ... *. அந்தரங்க கைங்கர்ய பரர்கள்.

**சிறு நாணெறிவு 2499/1.** கொம்பார் தழைகை ... *. சிறு நாணி னுடைய தழும்பு, எறிவாலுண்டான தழும்பு.

**சிறு நுதல் 998/1.** வாணிலா முறுவல் ... *. நுதல் – நெற்றி. அது சிறுத்திருக்கை. இல்லையாகில் புருஷ முகமாம். பெண்ணுதல் அளவு பட்டது. **சிறு நோன்பியர் 1629/1.** தெருவில் திரி ... *. அவைதிக வ்ருத்தத்தை யுடையவர். சிறுமை - நிகர்ஷமாய் அவைதிகம். அதாவது — பூப்ரமணம், வ்ரதார்த்தமாகத் தரையில் புரளுகை சிறு

நோன்பு. **சிறுப் பத்திரம்** * 248/3. கைக்கடோன விளையாடு பத்திரம், கத்தி. **சிறு பசுந் தென்றல் 2551/4.** அலைக் துண் ...*. மந்தமான புதிய மாருதம். **சிறு பரல் :** சிலம்பினிடை பார்.

**சிறு பருப்பு** * 208/1. சிறு பயறு செரித்துண்டான சிறு பருப்பு. பெரும் பருப்பு ருசிக்காது. **சிறு பிறை முளை** * 87/1. நுனிக் கொம்பில் தோன்றும் ... பால சந்திரனுன அங்குரம், முளை.

**சிறு பீலி** 1085/1. பிச்சச் ... ... *. சிறிதான மயி லிறகு.

**சிறு புகர்** 94/2. ... பட வியர்த்து *. இடை யிடையே சிறிதாகத் தோன்றும் புகர். **சிறு புலியூர்ச் சய சலனம்** 1628 — 37. திவ்ய தேசம். **சிறு புறம் பேசிச் சிரிப்பர்** 156/3. சிறுமை - புன்மை. அதைப் புறம் பேசிச் சிரிப்பர். புறம் பேசுகை – மறைவில், காணுத இடத்தில் பேசுகை. **சிறு பேர்** 501/7. ... அழைத்தனவும் சிறியருளாதே *. பட்டப் பேர் அல்லாதது. கோவிந்தன் பட்டப் பேராகையால் நாராயணன் சிறு பேராயிற்று. **சிறு பேர் பட்டப் பேர்** 3376/2. சிறுபேர் செல்வப் பேர். அதற்கு எதிரிடை பட்டப் பேர்.

**சிறு மனத்தர்/து** 2767/2. அறிவில் ... *. அல்பமான மனஸ்ஸை யுடையவர்கள். **சிறு மனிசர்** 2950/2. ... உவலையாக்கை *. க்ஷுத்ர மனுஷ்யர்கள். **சிறுமா மனிசர்** 3772/4. ... ரா யென்னை *. வடிவு சிறுத்து ப்ரபாவம் கனத்திருக்குமவர்கள்.

**சிறுமா மேனி** 3772/2. ... நிமிர்த்த *. கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி சிறுத்து, வைலக்ஷண்யத்துக்கு எல்லையின்றிக்கே யிருக்கிற திருமேனி. **சிறு முறி** 3263/4 (?). சீட்டு, துண்டு. " பரம பதம் என் சிறு முறிப் படி அறியும் 2521/4. ஷிளாக்கூர் சொல்லும்.

**சிறுமை யோரா வெம்**பெருமான் * 899/3. தண்மையில், குற்றங்களில் கண் வையாதவன்.

**சிறு விரலானேன்** 2045/4. "பாவிக ளெண்ணுக்குச் ...". முந்துற எண்ணப்படுகிறவ ளுனேன். **சிறு வீடு மேய்வான்** * 481/1. மேய்வதற்காக சிறிது நேரம் அவிழ்த்து விடுகை.

**சிறு வாய்க் கயிறு** 3598/4. குதிரையின் கடிவாளம்.

**சிறைக் கூட்டன்** (வா. மா. 442). சிறைத் தோழன்.

**சிறைக் கூடம்** 3163/2. "... த்திலே சிறையனும் கிடந்தான், ராஜகுமாரனும் இருந்தான்." சிறைச்சாலை, **சிறைக் கூடு** (வா. மா. 442) சிறையாகிற கூடு.

**சிறை குலா வண்டு** 1817/2. ... டறை சோலை *. சிறையிருப்ப தால் எளிதாய் குலாவித் திரியும் வண்டு. **சிறைக் கோல்** 629/1. கடைக்க ணென்னும் ... *. சிறகை யுடைய கழி, அம்பு.

**சிறை யணிந்த பொழில்** * 1148/4. காவல் பட்டிருக்கும்படி ஊர் அரணை அகழை அணைத்திருந்துள்ள சோலை. சிறை - நீர்ச் சிறை, ஜல துர்க்கம். **சிறையன்** 3163/2. "... கர்ம மடியாக ப்ரவேசிக்கை யாலே துக்க ஹேதுவாயிற்று". சிறை தண்டனைப் பட்டவன். "ப்ர பந்நன் தன்னைச் சிறையனென்று அநுஸந்திப்பான்". (வா. மா. 442).

**சிறையுறவு** 3011/1. சிறைக் கூடத்திலே சேர இருக்கையால் வந்த உறவு. [**சிறை வெட்டி விடுகை** 3132/2. "ஓரோ காலங்களிலே ... டும் ராஜாக்கள் புத்ரோத்ஸவாதிகளிலே சிறையிலே கிடந்தவர்களை யெல்லாம் ஒரு காலே விடுவர்களிறே".

**சிறை வைத்து** 1576/3. ... ... இமையோர் தொழும் *. சிறை வைக்கை - போக வொட்டாமல் தடுக்கை.

**சின்மொழி** 2496/4. என் ... க்கே *. மித பாஷிணி. 2497/1. வாய் விட்டுச் சொல்லமாட்டாதவள், சொல்லிற்றுச் செய்யாதவள். சின்ன மொழியை யுடையவள், சிறுகினவளாய் மொழி மட்டுமே யுள் ளவள், வார்த்தை மாத்ர முண்டென்னும்படி ஸத்தை யழிந்தவள்.

**சின்னம்** 2565/3. அவன் ... பிதற்று *. சிஹ்னம், ரூபம். **சின் னம்/ங்கள்** 368/4. எம்பிரான் தன் ... ... *. அடையாளம். **சின்னம்** 3320/1. "காலு ... கைப் பட்டவாறே." காக. **சின்னம் விரிகை** 2794/2. (?). முகிழ் விரிகை.

**சினங்கள்** 1985/2. பரியோன் ... அவிழ *. துவேஷங்கள்.

**சினங் கொளாகம்** 813/1. இரணியன் ... *. நெஞ்சில் குரோதம் வடிவில் தோற்றி யிருக்கிறபடி. சினம் மிக்க வடிவு.

**சினஞ் செய் மால் விடை** 1696/3. சீற்றத்தையும் பெரிய வடி வையுமுடைய ருஷபம். **சினத்த கழுது** 1705/2 காய் ... *. சீற்றத் தையுடைய பூதனை. **சினத் தொழில்** 1003/1. கொடிய மனத்தால் ...*. மறச் செயல். **சினத் தோள்** 1003/4. ... அவை யாயிரம் *. சினத்தை யுடைய தோள்.

**சினவிற் செங்கணரக்கர்** * 1568/1. சினத்துக்கு இல் - இருப்பிட மாய், மிக்க சினத்தையும் கண்ணில் சிவப்பையு முடைய அரக்கர்.

**சினை** 3434/3. சேண் ... யோங்கு மரம் *. கவடு, பணை, கிளை, **சினை** 1179/1. தொல் குருகு ... *. முட்டை.

டைய. **தனிக் கடல் 471/3** ... லே தனிச் சுடரே *. ஒப்பற்ற கடல்.

**தனிக் கோல் 3275/1** ... செல்ல *. ஒப்பற்ற செங்கோல்.

**தனிச் சுட்டி 76/2** ... தாழ்ந்தாட *. அத்விதீயமான, அழகான சுட்டி, தலைச் சுட்டி. **தனிசர் 3435/4.** குறும்பர். "தனிசற இருக்கிற இடமிறே".

**தனிசாளன்** (அர்ச்சி மு. ப்ர.) பெருந்தனிசாளன், கடனுளி.

**தனி சுடையார் 1663/4.** "... பணைய மெடுப் பாரைப் போலே". தனிசு - கடன். பணயம் - பிச்சை. கொடுக்குமத்தனை தனமுடையவர் கள் பிச்சை யெடுப்பது போல.

**தனிசு புட்டிருக்கும் 2637/2.** "தன்பேர் சொன்னவர்களுக்குத் திருவுள்ளத்திலே ...". தனிசு - ருணம், கடன்பட்டவனாக நினைத் திருக் கும். **தனிசு வாங்கி ஜீவிக்குமவர்கள் 2933/4.**

**தனித்தடி** போட்டு - விசி வில்லிட்டு எழுப்புகைக்குப் பொருள். 496/4. **தனி நின்ற** சார்விலா மூர்த்தி * **2655/2.** காரிய ஜாத மெல் லாம் அழிந்து காரணா வஸ்தமாய் நாம ரூப விபாக கர்ஹமாய் "தான்" என்ற சொல்லிலே அடங்கி தனக்கும் வேறொரு அபாச்ரய மின்றிக்கே நிற்கிறவன். **தனி நெஞ்சம் 2480/4.** அப்புள்ளின் பின்போன ... * தனிப்பட்ட நெஞ்சம்: ஸ்வதந்த்ரமான நெஞ்சம்.

**தனிப் பாகீர் 1924/1.** கருளக்கொடி யொன்றுடையீர் ... *. அத் விதீயமாக நடத்த வல்லவரே — என்று விளி.

**த(நி)னிபோட்டுக் கிளப்பி 3221/3.** (சி.அரு). வடிம்பிட்டுத் தாக்கிக்குப் பொருள். தநி என்று தன்னகரம் இங்குமட்டும் காண்கிறது.

**தனி மாத் தெய்வத் தடியவர்** * **3580/7.** தனிமாத் தெய்வம் - அத்விதீய பர தேவதை. அதற்கு அடியவர் - ஸ்ரீவைஷ்ணவர்கள்.

**தனிமா முரண் 1219/1.** முதலைத் ... *. ஒப்பற்ற மிடுக்கு.

**தனிமுதல் ஞானம்** * **3229/1.** அத்விதீய காரணமான ஸங்கல்ப ரூப ஜ்ஞானம். திரிவித காரணமும் தானேயான ஸங்கல்ப ரூப ஜ்ஞா னம். **தனியர் 3143/2 (24).** "... ரல்லாமையாலே திருவுள்ளத்தோ டொக்கும்." அஸஹாயர் - துணை யில்லாதவர்.

**தனியன் 3170/2.** மாயப் பிறவி பிறந்த ... *. அத்விதீயன். **தனி யன்** - சிறப்புப் பாட்டு. ஆழ்வார்கள், பிரபந்தம், ஆசார்யர்கள் — இவர்களுக்கு தியாந ஸ்லோகமாய் அமைந்த ஸ்லோகம் அல்லது பாட்டுக் குத் தனியன் என்று பெயர். **தனியன் 659/1** "... ஒரு பெரு வெள் ளத்திலே யிழிந்து". தனியா யிழுப்பவன், தனியாள்.

**தனி யனுபவிக்க 3031/ப்ர. (9).** "தம்மால் ... வொண்ணாது".

தனியாய் அனுபவிக்க. த (மி) னியாட்டியேன் * 2549/3. தனியாயுள்ள நான். தனியாழித் தேரார் * 2678/2. ஸூர்யன்.

தனியாள் 2071/1. "ஒரு ... ளைப் புகவிட்டு லங்கையை நக்தமாக்கி". ஒற்றை யாள். தனில் 3022/3. மால் ... மிக்கும் * ஐந்தாம் வேற்றுமை. தனிவளர் செங்கோல் 2490/1 ... கடாவு * அத்விதீயமாய்க் கொண்டு வளர்கிற ஆஜ்ஞை.

தனை 327/1. வைதேவி ... *. தன்னை. தனை 578/4. "இதின் ... நன்மையுடையார் ஒருவருமில்லை" ... அளவு.

தாக்க 3233/1. "ஸ்ரீபாதத்திலே தலை ...". படும்படி. தாக்கிலும் 3311/4. "பிராட்டியுடைய திருப்பரியட்டம் ... முழுகத் தேடாநிற்பர்". பட்டாலும். தாங் கருஞ்சீர் மின்னிடை * 2783/1. தாங்கவரிதான அழகு. முலையைத் தாங்க அரிதாய், சீர் அழகிய மின்போலேயிருந்துள்ள இடை. தாங்குவித்து 2424/4. "இடிபேறத் ... க்கொண்டு" தரித்து. தாடாளன் 1178/2 ... தாளாளவீர் *. ஸர்வாதிகன், மேன்மையுடையவன். தாணெடுந் திண் சிலை * 1243/2. தாள் - பூட்டு. பூட்டின நாணையுடைய திண்ணிய வில். தாதாடு வனமாலை * 1393/1. வனத்திலே இருக்கிற தாது மாறாத வன மாலை. தாது சேர் தோட் கண்ணன் 3789/4. தாது என்று உள்ளிதழாய் மாலையை லக்ஷிக்கிறது. தோள் மாலையாலே அலங்க்ருதனான கண்ணன்.

தாதை 91/4. காமர் ... *. தந்தை. தாபதர் 1865/3. தஞ்சமே சில ... *. தாமஸர், தபஸ்விகள். தாம்பு 26/3. பழந் ... பாலோச்சகயிறு. தாமம் 1925/2 ... த்துளவம் *. மாலை. தாமரைக் கண்கள்* 3385/3. தாமரைக்காடு 2582/5 ... மலர்க்கண்ணொடு *.

தாமரைக் கை 715/1. தாமரைத் தாள் *· 40/2.

தாமரை பாதம் * 3079/1. தாமரைப் புலங்கள் * 1777/1. பொய்கைகள். தாமரைப் பொய்கை * 215/1. தாமரை மங்கை * 3794/3. லக்ஷ்மி. தாமரை மேலார் * 2472/1. பிரம்மா. தாமரையடி * 3896/4.

தாமரையாள் * 1318/3. லக்ஷ்மி. தாமரை யுந்தி * 2578/14.

தாமோதரன் * 299/2. ஓர் அபலை கையாலே கட்டவும் அடிக்கவுமாம்படி எளியனும் அசக்தனுமா யிருந்தவன்.

தாய்க் காவல் 2071/1. "இவளும் ... விட்டவாறே". தாயின் உதவி. தாய் செய்யும் ரக்ஷணம்.

தாய்த்தலைத் தென்றல் 2938/2. தாய் - பிரதமம். தலை - சிலாக்கியம். பிரதமத்திலே உண்டான சிலாக்கியமான தென்றல். "புறம்பேயிலர்க்கு உடம்பு கொடுத்துச் சுணங்காதே ... லாயிருக்கை".

3434/2. தாய் தலை 547/2 ... அற்றற்று வீழ *. மெய்யான தலை.

தாய 2047/2. வையம் ... *. அளந்த, தாவிய. உலகம் ... * 2179/2. தாயம் கிளர்ந்து கொண்டவன் * 2528/4. ஞாதிகள் காலைந்து கிரயம் சென்று போனத்தை எங்களுடையதென்று தொடருவர்: தாயம், தாய பாகம், தாயாதிகளின் பாகம்.

தாயஞ் செறு மொரு நூற்றுவர் * 3618/2. தாய ப்ராப்தியாலே செருகிற துர்யோதநாதிகள்.

தாயப் பதி 3733/4. தன ... யே *. தாய ப்ராப்தமான ஸ்தாநம்.

தாயப் பதிகள் 3734/1. அஸாதாரணமான அர்ச்சா ஸ்தாநங்கள். பழையதாய் வருகிற ஸ்தாநங்கள். தாயம் 229/3. பொருட்டாய மிலேன் *. ப்ராப்தி. விபாகார்ஹமான த்ரவ்யம்.

தாயர் 96/2 ... மகிழ வொண்ணுர் *. தாய்மார்.

தாயவர் 2640/3. அன்றுலகம் ... *: நினைத்தபோது தாமே வந்து கிட்டுமவர். தாயவள் 306/3 ... சொல்லிய சொல்லை *. தாயானவள்.

தாயவன் 2092/2. கையுலகம் ... னே * அளந்து கொண்டவன்.

தாயவன் 3200/4. ஆனுயவர் ... னே *. தாய்போலே பரிவனுனவன். தாயன் 3787/3. எங்கள் பெற்றத் ... *. ரக்ஷகன்.

தாயான் 993/4. உலகேழுக் ... *. தாயின 1760/2. இவ்வையமெல்லாம் ... *. தார் (வா. மா. 340). "ஊரும் பேரும் ... குடியும் வைத்துக் கவி பாடுமாப்போலே". அநுபந்தம் பார்.

தார்க் கிளந் தம்பி * 314/1. மாலையிட்டு ராஜ்யம் பண்ண மறுத்த இளந்தம்பி, பரதாழ்வான். இளந்தம்பி என்பதற்கு சரியான வியாக்யயாநம் இல்லை. தார் சதுரங்கம் சேனை என்று திபி.

தார்தழைத் துழாய் முடியான் 1534/4. துழாய்த் தார் தழைத்த முடியான் — என்று அந்வயிக்கை எளிது. பூந்தாரை யுடைய, துழாய் முடி என்று பதவுரை. தார் வடம் 1202/1. (?). முத்துத் தாவடம்.

தாரகை 66/2 ... யின்னுலகம் தடவி *. நக்ஷத்ரம்.

தாரகை 2412/2. நாரணனொழித்தான் ... புள் *: பூமியுள்.

தாரகை 2438/3. வானவர்தான் தானவர்தான் ... தான் *. பூமி.

தாரம் 379/2 ... முமொரு பக்க மலற்ற *. மனைவி.

தாரா கணப் போர் விரித்துரைத்த வெங்நாகம் 2444/1. நக்ஷத்ர கணங்களுடைய ஸஞ்சாரத்தை விரித்துரைத்த திருவநந்தாழ்வான்.

தாரா வயல் 991/4 ... சூழ்ந்த சாளக்கிராமம் *. தாராவாகிற பக்ஷிகளாலே சூழ்ந்த வயல். தாரா வாரும் வயல் * 997/1.

தாராவாரும் வார் புனல் * 1805/3. தாராளமான நீர் 3515/4 (?). தாரையாகப் பெருகுகிற நீர். தாரான் தரும் 2781/1 ... என்று*. தரிலுமாம், தாராதொழியிலுமாம். தரமாட்டான், தந்தாலும் தருவான்.

தாரித்து 80/1 ... நூற்றுவர் *. தரித்து என்பதை நீட்டிக் கிடக்கிறது. தாரியாதாகில் 148/2 ... தலை கொத்திடும் *. பொறுதாகில். தரியாதாகில் என்றத்தை நீட்டிக் கிடக்கிறது.

தாரில் நறுந்துழாய் * 1683/4. செவ்வியை யுடைத்தான நறுந்துழாய். தாரை யூறும் நறுந் தளிர் * 683/4. தாரை – பூ. பூவைத்தோற்றுவிக்கும் தளிர். தாரையென்று விழுகிற நீர்த்தாரையாய் தேனொழுகும் தளிர். தாலக்கால் 921/3. கால் - தாலக்கால். காலும் கலமும் பார்.

தாலாட்டிய செஞ்சொல் 53/2. ஆய்ச்சி ... * தாலாட்டுப் பாடின பாட்டு. தாலாட்டு விளையாட்டுப்போலே ஆட்டு என்னும் துணைவினையோடு வருவது. தாலிக் கொழுந்து 172/2 ... தைத்தடங் கழுத்தில் *. கொழுந்தான தாலி, சிரேஷ்டமான தாலி. தாலி – தாலம், பனை. அதன் கொழுந்து, வெள்ளைக் குருத்து பனையோலைத் தாலி கட்டுவது சாதி வழக்கம். தாலேலோ 44/4. மாணிக் குறளனே ... *. தாலாட்டு அதாவது - நாவசைத்தல். ஏல் பொருத்தம். பிள்ளைகளைத் தூங்கப் பண்ணுகைக்காக தாய்மார் நாக்கை அசைத்துக் கொண்டு உளுளாயி —என்று சப்திக்கை. தாலொலித்திடும் 708/4 ...திருவினை *. தாலாட்டும். தாவடி 219/4 ... யிட்டான் *. தாவிய அடி. தாவுவதாக இட்ட அடி. தாவருந் தீமை 3064/3. செய்குங் ... *. தாவ அரிதாய கடக்க அரிதான, தப்ப அரிதான தீமை - பாபம்.

தாவளந்து 1298/2 ... உலகமுற்றும் *. தாவித் திரிந்து, அநாயாஸேந அளந்து. தாவிலை 2169/4. "எனக்கு எதானால் ...". தேவலை என்று நாம் சொல்லுவது. தாழ்கின்ற நெஞ்சம் * 2549/3. காதல் தாழ்ந்து கிடக்கிற நெஞ்சம். ஈடு பட்ட நெஞ்சம். சிரமப்பட்ட நெஞ்சம்.

தாழ்ச்சி 3175/3. சிற்றின்பப் பற்று. விஷய ப்ராவண்யம்.

தாழ்சடை 2844/1 ... யும் நீண்முடியும் *. தொங்குகிற சடை.

தாழ்சினை * 1185/3. நீள் பலவின் ... *. தாழ்ந்த பனை, தாழ்ந்த கிளை. தாழ்த்தான் 139/1. கின் தந்தை யுங் ... * விளம்பித்தான், தாமதித்தான். தாழ்ந்த சொல் 3725/2 ... ற்களால் *. ஸ்நேஹமான சொல். ... சொற்கள் 3269/2. நீசோக்திகள்.

தாழ்ந்த தனஞ்சயன் * 111/2. சரணாகதி செய்த அர்ஜுனன்.

தாழ்ந்தது 3585/1. செஞ்சுடர் நீண்முடி ... *. தறைப்பட்டது.

தாழ்ந்து வரங்கொண்டு * 2204/1. ஆசிரயித்து.

தாழ்ந்து 2935/அவ. "அரை அவணம் ...". விளம்பித்து.

தாழ்ந்தூதாய் 1679/4 ... கோல் தூம்பி *. குனிந்து.

தாழ் பீலி 254/1. எக்கம் மத்தளி ... *. தூங்கின சின்னம், பீலி தாழ்ந்த வாத்யம். சின்னம் – ஊதுகிற திருச்சின்னம்.

தாழ் பொழில் 1578/2. கோங்கின் ... *. தழைத்த பொழில்.

தாழ்வர் 1770/2. தடஞ்சூழ் பொழில் ... *. பர்யந்தங்கள். பக்க பூமிகள். தாழ்வர்/ரே 3152/4. மொய் பூந்தடம் ... *. தாழ்வரை. தாழ்வரையை என்று அர்த்தம். தாழ் விசும்பு 2645/3 ... பின் மீதி லகி *. 2669/1 ... பின் மீது பாய்ந்து *. ஒத்த ஆகாசம்.

தாழ்விடங்கள் 2641/3. சுழித் தெங்கும் ... *. பள்ளங்கள்.

தாழ்வு 2343/4. நீரேற்குன் ...*. தாழ்மை தோற்றும் இடம், திவ்ய தேசம். தாழ்வுறுவர் 2616/3. தீ விணைக்கே ... *. பின் வாங்குவர்.

தாழப் படாமல் 3609/3. அழுந்திய ஞாலத்தை ... *. தளரப்படா மல், மங்காமல். தாழப் பெருக்கி 142/1. வார் காது ... *. தாழும்படி பெருக்கி. தாழ மின்றி 1864/1 ... மூங்கீரை *. விளம்ப மின்றி.

தாழாதே 477/6 ... சார்ங்க முதைத்த *. விளம்பியாமல்.

தாழி 62/1 ... யில் வெண்ணெய் *. வெண்ணெய்த் தாழி.

தாழை 220/1 ... தண்ணும்பல் *. தாழம்பூச் செடி.

தாள் சாய்த்து 419/4. கதிர் செந் நெல் ... * நெல் கதிரை நீட்டி:

தாள் சாய 3722/3. ஈரைம் பதின்மர் ... * காலற்றப் போம்படி.

தாள் தாமரை 2472/2. அமரர்கள் ... *. தாளையுடைய தாமரை.

தாள் வரை வில் 2601/4 ... ஏந்தினர் *. திண்ணரிய வில், வளைந்து மலை போலே யிருக்கிற வில். தாள் என்று வளைவு.

தாள தாமரை 3812/1, 3891/1. தாள் தாமரையே.

தாளநன் மாதுளை 73/2. தாளையுடைய நன்றான மாதுளை.

தாளாளன் 578/2 ... வார்த்தை யென்னே *. தாள் – திருவடி. அல்லது தாளாளன் மேன்மையை யுடையவன்.

தாளி - கொடி. "அருகும் தாளியும் பறித்தவன்". (தனி சுலோக தருணை). ஒக தீக — என்று தெலுங்கு வியாக்கியானம். தீக – கொடி. செடியின் கொடி.

தாழு 2615/2. நிழலும் ... ம் *. அளவு. 1796/1. இன்று ...

ம் *. அள்வு. **தாறு** 3764/2 (?). பழந்தாறு, பழஞ் சிப்பு.

**தான் கடத்தும்** *தன்மையான்* * 2415/4. தானே கடத்தும் ஸ்வ பாவன். **தான் கவலை** *தீர்ப்பானவதே* * 2042/2. தானே தன் துக்கத்தைத் தீர்க்கப் போமோ !

**தான் சேர் புணர்ப்பன்** * 3090/3. தனக்குத் தகுதியான சேஷ்டிதங்களை யுடையவன். **தான் தோன்றி** 3776/1. நிற்கும்படியாகத் ...*. பிறர் அர்த்திக்கை யின்றிக்கே தானாகவே வந்து தோன்றினவன்.

**தான்தோன்றியான கைப்பற்று** 3822/4. ஸ்வ யத்ந மூலமான ஸாதநம். **தான் முகமாய்** 2382/2 ... சங்கரனைத் தான் படைத்தான் *. தானே ப்ரதாநனாய்.

**தானத்த** 3596/1. ஏழ் மண்ணும் ... வே * தானம், ஸ்தாநம் ஸ்தாநத்தை யுடையன். **தான நகர்கள்** 3733/1 ... தலை சிறந்து *. *தானமான இருப்பிடமான நகரங்கள்.

**தானவர் கூற்று** * 1070/2. அஸுர வர்க்கத்துக்கு மிருத்யு.

**தானறி தெய்வம்** 2588/4. ப்ராமாணிகர்கள் அறிந்த தன்றிக்கே தானாக அறிந்த க்ஷுத்ர தெய்வம்.

**தானாங்காரமாய்ப் புக்கு** * 3967/2. தானே ஸர்வ அஹங்காரத்தோடு புக்கு. **தானான தன்மை** 3078/ (?) ஸ்வ ஸ்வபாவம்.

**தானுகந்த வூர்** 2057/2 ...எல்லாம் *. உகந்தருளின நிலங்களான திவ்யதேசங்கள். **தானுங் கில்லான்** * 2972/2. தானும் சக்தனல்லன்

**தானே தனக்குவமன்** 2319/1 ... தன்னுருவே *. தனக்குவமை யில்லாதவன். **தானே தனித் தோன்றல்** * 2608/1. ஒரு ஹேதுவாலே தோன்றுகிறவனல்லன்.

**தானே பிறர்கட்கும் தற்றோன்றல்** * 2608/2. அல்லாதார்க்கும் அந்தர்யாமி. **தானேல்** 3342/3 ... எம்பெருமான் *. தான் செய்த படியாகில், தானாகில். **தானை** 657/3. விறல் ... *. சேனை.

**தி** 1714/2. எரி தியொடு *. தீ. **திக்குப்பட்டு** 3499/4. "இவள் தொழிலும் ஒரு திக்குப் பட்டல்ல திராது காணும்." அடைவு பட்டல்லது. திக்கை யுடைத் தல்லது என்று இரு பொருள். **திக்குப் பட** 3959/4. "ஒரு ... விதே இவர் விரும்புவது." அடைவு பட.

**திகழ்தரு திகிரி** 919/4 ... யங் தடக்கை *. திகழா நின்றுள்ள திருவாழி. **திகிரி** 696/3. மின்னையே சேர் ... *. திருவாழி.

**திங்கள் ஞாயிறு** 2055/2. திசை நான்குமாகித் ... ருகி * சந்திராதித்யர்கள். **திங்கள் துண்டம்** 2059/1. நிலாத் ... த்தாய் *; சந்திர

**கண்டம்.** **திங்கள் புக்கிருப்பார்** 566/1. கர்ப்பிணி. மாஸமாயிருக் கிருள் — என்பதுபோல மாஸத்தாலே சொல்லுகை

**திங்கள் மும்மாரி** 476/3 ... பெய்து *. வெள்ளக் கேடும் வறட் கேடுமின்றிக்கே ஊறெண்ணெயிட்டாப் போலே ஒன்பது நாள் வெய்யி லும் ஒரு நாள் மழையுமாயிருக்கை. ஊறெண்ணெய் பார்.

**திங்கள் வெங்கதிர்** * 1954/2. நிலா. பிரிந்த காதலர்களுக்கு வெங்கதிராயிருக்கும். **திங்களம் பிள்ளை** * 2549/2. அழகிய பால சந் திரன். திங்களாகிற அழகிய பிள்ளை.

**திங்களும் சுடரும்** 1270/1 ...திட விசும்பும் *. சந்திர ஸூர்யர்கள்.

**திங்களும் நாளும் விழா** 3585/1. மாஸோத்ஸவ நித்யோத்ஸவங் கள். திருநாள் உச்சி விடு விடாதே செல்லுமூர்.

**திசைக் கருமம்** 9/3 ... திருத்தி *. 412/2 ... திருத்தி *. அந் தந்த திக்கிலே ஏற்பட்ட கருமம், காரியம்.

**திசைக்கின்றது** 3286/1. சிந்தை துழாய் ... *. மதி கெடுகிறது' அறிவழியா நின்றது, மோஹிக்கிறது, **திசைக்கும்** 212/4. எண் ... *. திக்குக்கும். 3576/4: சிந்திக்கும் ... * மோஹிக்கும், அறிவு கலங் கும், திகைக்கும். **திசை கை கூப்பி** 3711/2 ... யேத்தும் *. திக்கு தோறும் கை கூப்பும்.

**திசை ஞாலம்** 3497/4 ... தாவி *. திக்குடன் கூடிய பூமி.

**திசை திசை** 461/4 ... விழச் செற்றாய் *. திக்கு தோறும்.

**திசை நான்முகன்** 1644/1 ... தந்தை *. நாற்றிசை முகன். நாலு திசையிலும் முகத்தையுடையவன்.

**திசைப்ப** 1132/3. தென்னவனைத்... ச்செரு மேல் *. அறிவு கெடும்படியாக. **திசைப்பு** 3287/3 ... இன்றியே *. பிரமம், திகைப்பு.

**திசைப் பெண்** 2512/2 ... புலம்புறு மாலை *. திக்காகிற பெண்.

**திசை யுறு தெய்வம்** 2085/1. திக் பாலர்கள்.

**திட்கொடி மதிள்** 3574/4 ... சூழ் *. திண்ணிய மதிளில் திண்ணிய கொடி. அவிழ்த்துக் கட்டாத கொடி.

**திடநெஞ்சம்** 2523/4 ... மா வெம்மை *. த்ருடாத்யவஸாயம்.

**திடமாக வையேன்** 2447/2... மதிசூடி தன்னோடு *. திட பதார்த் தமாக நினையேன். **திடமொழி** 1270/3 ... மறையோர் *. பழுது போகாத வார்த்தையை யுடைய வேதம். **திடர் விளங்கு கரை** 657/1 ... ப்பொன்னி *. மேடு, திருமுடிக் குறை, பெருமாளுடைய சிரோ பாகத்திலுள்ள இடம்.

**திடவிசும்பு 1270/1** ... எரி நீர் *. ஸ்திரமான ஆகாசம்; ப்ருதி- வியாதி நாலு பூதங்களை விட அதிக காலம் இருப்பதால் திடமாகிறது.

**திடல் 1678/3** ... எடுத்துச் சுடர் *: மேடு.

**திண் கடல் 1399/3** ... ஏழும் *. கரையை அதிக்ரமிக்கக் கடவ தன்றிக்கே, நிற்கிற நிலையை ஒருவரால் கொலைக்க வொண்ணாதபடி அதில் திண்ணியதா யிருக்கிற கடல்.

**திண் கதவம் 2293/2** ... செம்மி *. வலிய கதவு.

**திண் கழல் 2919/4.** நாரணன் ... *.. ஆச்ரிதரை ஒரு நாளும் விட்டுக் கொடாத திண்மையைப் பற்ற.

**திண் கழற்கா லசுரர் * 3166/2.** அடிகள் பண்ணுகைக்கு காவிலே ஒருவரால் தவிர்க்க வொண்ணாத வீரக் கழலை யிட்டிருக்கிற அசுரர்.

**திண் களக மதிள் 1537/1** ... புடை சூழ் *. திண்ணிதான சாந்து பூசின மதிள். களகம் சாந்து என்று அரும்பதம். சாந்து என்பது சுண்ணாம்புச் சாந்து. களகம் கலவை என்று பொருளாக வேண்டும்.

**திண் கொளசுரர் 38/3** ... மைத்ரேய வளர்கின்றான் *. காய பலமும் மனோ பலமுமுடைய அசுரர். திண்மை பலம்.

**திண் சக்கர நிழறு தொல் படை * 3466/1.** திண்ணிய சக்கரமாய், நிழறு - தேஜஸ். தேஜ: ப்ரவாரியான தொல்படை. அஸாதாரணமான ஆயுதம். **திண் சிலை 1120/1** ... தண்டொடு *. எதிரிகள் மேல் நாவி ரண்டு பண்ணை வலித்தாலும் மெல்காத வில்.

**திண்டி 96/3.** ஊட்டி, தீனி, உணவு.

**திண் டிமிலேறு 1359/1.** செறும் ... *. திண்ணியதான திமிலை யுடைய ஏறு - எருது. **திண்டிறல் 1830/3** ... மா கரி *. திண்மையான வலி. **திண்டேர் 119/3** ... முன்னின்ற *. திண்ணிய தேர். அர்ஜுநனுடைய தேர். **திண்ணக் கலம் 164/1** ... த்திஸ் நிரை யுதறி மேல் *. சிக்கென்ற கலம், கெட்டியான, உடையாதிருக்கும் பாத்திரம், சட்டி.

**திண்ண நாரணம் 3935/4** ... மே *. நாரணமே திண்ணம் - நிச்சிதம். **திண்ண மழுந்தக் கட்டி * 3345/3.** த்ருடமாக நெருக்கிக் கட்டி.

**திண்ண மறி 3084/3** ... அறிந்து *. த்ருடமாக அறிந்து கொள்.

**திண்ணன் வீடு 3020/1** ... முதல் முழுதுமாய் *. ஒரு நாளும் அழியாத பரம பதம்.

**திண்ணனவு 2485/2.** பொருள் படைப்பான் கற்ற ... வே *. சிக் கனவு. த்ருடமான வசனம்.

**திண்ணனவு 3019/4.** வைகுந்தம் ... *. நிச்சிதம்.

**திண்ணென** 152/2 ... இவ்விரா *. நிச்சிதமாக.

**திண்ணென** நாமது கற்றிலோம் * 519/2. அழகிதாக.

**திண்ணெனவு** 2895/2. மன்னரிய ... *. ஆண்பிள்ளைத் தனம்.

**திண்ணை** 87/2. செக்துவர் வாய் ... *. உயர்ந்த நிலம், மேடை. 362/2 ... சூழ் திருக்கோட்டியூர் *.

**திண்படை** 1249/3 ... மன்னை *. திண்ணிய ஆயுதம்.

**திண் பாகன்** 3704/2. வார் கொள் ... *. திண்ணியனாய் ஆனையை நடத்துகிற பாகன். **திண்பூஞ்சுடர்** 2486/1 ... நுதி நேமி *. திண்ணியதாய் அழகிதான ஒளி.

**திண் மதி** 3036/1 ... யைத் தீர்ந்தார் *. திண்ணியதான புத்தி. த்ருடாத் யவஸாயம். கலக்க வொண்ணாத த்ருட ஜ்ஞாநம்.

**திணர்** 3554/3 ... நார் மேகம் *. திண்மை, செறிவு.

**திணர்த்த வண்டல்** 3455/2 ... கள் மேல் *. கொழுத்த நிணுங்கின, கனிப்பை யுடைத்தான, செறிமின வண்டல்.

**திணி வண்ணம்** 3016/1. இருவின் ... *. செறிந்த நிறம்.

**திணி ஞாலம்** 3590/3. மண் ... *. கடினமான பூமி.

**திணிந்த மண்** 3150/1 ... கிடந்த கால் * கடினமான பூமி.

**திணிமினே** 364/4 புல்லைத் ... *. திணியுங்கோள்.

**திணிம்பை** 2549/1. இருவின் கரும் ... * திண்மை, செறிவு,

**திணுங்கினப் போலே** 3054/1. "நெய் ...". திணுங்குகை. கெட்டியாகை.

**தித்திக்கும்** 149/2 ... பெருமானே *. ருசிக்கும். **தித்திப்பான்** 3728/2. உள்ளுக்தோறும் ... *. இனியனாகா நின்றான்.

**திமிர்க்கும் படியான நோக்கு** 1125/3. "இலக்கானார் ...".

**திமிர் கொண்டாலொத்து நிற்கும்** * 3496/3. ஸ்திமிதையாய் நில்லா நின்றான்.

**திமிர்த்து** 3064/1. "அணைத்த போதை ஸ்பர்சத்தாலே ... ச் சொல்லுகிறார்." **திமிர்ந்து** 3221/3. "ஸ்பர்சத்தாலே ...". ஸ்தப்தமாய். **திமிரும்** 52/1. மெய் ... மானப் பொடி *. மர்த்திக்கைக் கீடான

**திமில்** 1959/1. திண்டி மிளேறு * கழுத்து. 1792/1. திமில்.

**திரட் கோவை** 1638/2. முத்தின் ... * திரண்ட மாலை.

**திரட்டு 1285/3.** மாங்கனிகள் ... டுருட்டா வரு நீர் *. திரள விட்டு, திரட்டி.

**திரடோள் 1047/2.** மல்லார் ... *. மாம்ஸளமான, பருத்த தோள்

**திரண்டெழுதழை 283/1** ... மழை முகில் வண்ணன் *. செறிந்தெழுந்த பசுந் தழை. கார் காலத்திலே தன்னிலே திரண்டு கிளர்ந்து அகவாயில் நீர்க்கனத்தாலே தழைப் புண்டாயிருப்பது. தழைப்பு - ஸம்ருத்தி. **திரள்மா மாளிகை * 1497/2.** நெருங்கி ஓக்கத்தை யுடைத்தான மாளிகை. திரள் - நெருக்கம். மா - ஓக்கம்.

**திரள்/ளை:** பால் திரள். "ராஜ புத்ரனோடே விளையுண்ட கைக் கூட்டனுக்கும் ... ளை யிடுமாப் போலே". 2672/12.

**திரள** அநுபவிக்குமவர்கள் 3192/அவ. "ஸௌந்தர்யாதிகளைத் ..." ஸங்க்ரஹமாக, திரட்டி. **திரளச் சொன்னார் 3320/அவ (?).** ஸமுதாயேந. **திரளை 3237/2.** "ஒரு ... ளையைத் திரட்டி". உருண்டை.

**திரி கால் சகடம் * 1706/3.** உருகிற காலை யுடைய சகடம், வண்டி. **திரிகிலே 3922/3.** உடன் ...*. திரிகிறிலே.

**திரிகை 2528/1.** "குசவன்...ஒரு கால் திரித்துவிட்டால்" சக்கரம்.

**திரிசுடர் 356/4** ... சூழும் மலை *. ஸஞ்சரியா நின்றுள்ள சந்திர ஸூர்யர்கள். **திரிதந்தாகிலும் 939/1** ... தேவபிரா னுடை*. மீண்டாகிலும், ஸஞ்சரியா நிற்கச் செய்தேயும்.

**திரிதருவன் 2727/2.** திரிவேன், திரிந்தேன்.

**திரிதி 139/2.** தனியே போ யெங்கும்... *. திரிவுதி.

**திரிப 761/3.** நிற்பவும் ... வும் *. ஜங்கமங்கள்.

**திரிமின் 389/3.** குணுலமாடித் ... னே *. திரியுங்கோள்.

திரிய அத்தைக் கிடந்து சிக்ஷிக்கிறது 2154/2. (?) மீண்டும்.

திரிய **இருந்தாள் 3463/3.** திரும்பி யிருந்தாள்.

திரியட்டும் 1059/1. " ... ராமாவதாரம் அநுவர்த்தித்த படி" மீண்டும். திரியட்டும் அவர்களளவிலே பிரஸாதத்தைப் பண்ணி 1989/2. பின்னையும், மீண்டும்.

திரியவிட்டுவை 3324/1. "உன் க்ஷேத்ரத்தையும் என் மேலே ...", ஏறிட்டு எழுதி வை. திரியுங் **கலியுகம் * 3354/1.** பால் திரிந்தது என்றாற்போலே பதார்த்த ஸ்வபாவங்கள் மாறும் கலியுகம்.

திரியவுங் **காண்டி 148/3.** காது பெருக்கித் ... *. மீண்டும் கண்டாயே. திரியுண்ட **3982/4.** "பங்கு பெருதே ... ஸ்ரீவைஷ்ணவர்கள்". அல்லல்பட்ட.

திரிவன 3325/1. சீற்பனவும் ... வும் *. ஜங்கமங்கள்.

திரிவிக்கிரமன் * 3417/1. திரிவு 623/1. வண்ணம் ... *. மாறுதல். திருக்கடித்தானம் * 3828/3. திருக்கண்ணங்குடி * திவ்யதேசங்கள். 748/4. திருக்கண்ணபுரம் 723/3.

திருக்கமல பாதம் 927/4 ... வந்து என் கண்ணினுள்ளன *.

திருக்காட்கரை 3836/3 ... மருவிய மாயன் *.

திருக்காப்பு 1/4. உன் சேவடி செவ்வி ... *. 200/3 ... நானுன்னைச் சாத்த *. குறைவற்ற ரக்ஷை. அழகிதான ரக்ஷை. திருக்காப்பு சேர்க்கை என்று ஸந்நிதியில் கதவுகளைச் சாத்துவதற்கு சொல்லுவது. கதவு சாத்துவதும் ரக்ஷையே.

திருக்கார்த்திகை 948/அரு. (?). உத்ஸவம்.

திருக்கால் 3542/1 ... லாண்ட பெருமான் *. திருவடி.

திருக்காவணம் (வா. மா. 413). "... இட்டுக் கோடித்து". திருப்பந்தல். திருக்கி வைத்து 1280/1. "படலைத் ...". திருப்பி அல்லது திருகி. திருக்குடந்தை 3418/3. செழுநீர்த் ... *. கும்பகோணம்.

திருக்குணம் 897/2 ... செப்ப மாட்டேன் *. கல்யாண குணங்கள். திருக் குதிப்பது 939/4 (அம). "இருந்த விடத்திலே வந்து ... தே". பாக்யம் ஸித்திப்பது.

திருக்குருகூர் நம்பி 941/3. செம்பொன் மாடத் ... *. திருக்குருகூர். ஆழ்வார் திருநகரி, அங்கே அவதரித்த நம்மாழ்வார்.

திருக்குலத்து வளச் சோழன் 1505/4. க்ஷத்ரிய குலமாகையால் வந்த ஆபிஜாத்ய முடையவன். திருக்குலம் - க்ஷத்ரிய குலம் என்று பாடலில் பொருள். திருக்குலம் என்று ஸ்ரீவைஷ்ணவர்களான பஞ்சமர் குலத்துக்கும் பெயர். திருக்குழல் 259/1. சோரம்பும் ... லும் *.

திருக்குற்றெலியல் (வா. மா. 174). "... சாத்தியருளி" குற்றெலியல் சிறு துண்டு. திருமஞ்சனச் சாலையிலே என்று பிரஸ்தாவிப்பதால் ஸ்நாந வஸ்திரம், ஒலியல் வஸ்திரம். ஒலியன் என்றும் சொல்லுவதுண்டு.

திருக்குறளன் 3772/2. செந்தாமரைக் கண் ... * வாமநப் பெருமாள். திருக்குறளப்பன் 3661/2 ... அமர்ந்துறையும் *. ஸ்ரீ வாமநனை மஹோபகாரகன். ஸ்ரீரங்கம் வாமநப் பெருமாளுக்கு திருக்குறளப்பன் — என்று திருநாமம். திருக்குறிப்பு 463/4. இனியென் ... பே *. திருவுள்ளத்தில் நினைவு. 852/2. வரந்தருக் ... *. திருவுள்ளம்.

திருக்குறுங்குடி * 3885/2. திருக்குறையலூர் 2069/4. "... ரில் நின்றும் புறப்பட்டுத் திருநீர் மலையிலே புக்கு". திருமங்கை யாழ்வாரின் வாஸஸ் தலம்.

திருக்கைத்தலம்பிழக்தவன் 948/1 ... "இற்றைப் புறப்பாடு காணப் பெறாத நாம்." திருக்கைத்தல ஸேவை. பெருமாளைத் திருக்கைத்தலத்தில் எழுந்தருளப் பண்ணும் ஸேவை.

திருக்கோட்டி * 2268/4. திருக்கோட்டியூர் 1838/4. செங்கமல மலரும் ... ரானே *. ப்ரஹ்லாதன் நிமித்தமாக ரிஷிகள் கோஷ்டி பண்ண, அதுக்காக ப்ரத்யக்ஷமாகையாலே திருக்கோட்டியூரென்று பேர். திருக்கோயில் * 446/3. சிங்கப் பிரான் சேரும் ... கண்டீர் *. ஸ்ரீ விமானம். 448/2. பேணும் ... கண்டீர் *. திவ்ய விமானம். 487/4. தங்கள் ... சங்கிடுவான் *. இங்கே விமானமல்ல. கோயில் மட்டுமே.

திருக்கோவலூர் * 1138/4. கோபால புரம். கோபாலன் என்பது கோவலாயிற்று. திருக்கோளூர் * 3517/4.

திருச்சாழலிலே இரண்டு பிராட்டிமார் அவஸ்தை 307/அவ (தி.பி.) இரண்டு தோழிமார் பேசும் பாடலுக்கு திருச்சாழல் என்று பெயர். மானமரு மென்னோக்கி என்று பெரிய திருமொழி 11/5. திருச்சாழல். திருச்சித்திர கூடம் * 741/3. சிதம்பரம்.

திருச்சிற்றாற்றங்கரை 3706/3 ...மீபால் *. திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு *. 3704/4. மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி என்னுமாப் போலே. (மயிலை – மயிலாப்பூர் படை வீடு. திருவல்லிக்கேணி திருப்பதி) திருச்செங்குன்றூரென்று பட்டணமாய் திருச்சிற்றாறென்று திருப்பதி.

திருச்செய்ய கமலக்கண் * 3710/2. சிவந்த கமலம் போலேயிருக்கிற திருக்கண். திருத்தக்க செல்வம் 498/7 ... மும் சேவகமும் *. திருவுக்குத் தக்க செல்வம்.

திருத்தக்கீர் 1658/1. தேவர்க்கும் தேவர் ... *. பிராட்டிக்குத் தகுதியாயன்றோ தேவர் இருப்பது. திருத்தண்கா 2065/8.

திருத்தண்கால் * 1899/1. திருத்தலாவதே * 2609/2. ஆராய்ந்து ... *. திருத்த முடியுமோ. திருத்தன் 1644/1 ... னைத் திசை நான்முகன் தந்தையை *. ஸ்வாநந்தா நுபவத்தாலே நித்ய திருப்தன்.

திருத்தி 3176/1 ... ப்பணி கொள்ள வல்ல *. ஏவி.

திருத்தி 3078/2 ... என்னைக் கொண்டீர் *. தரிசு கிடந்த தரையைச் செய்காலாக்குமாப் போலே. தரிசு – கரம்பு. செய்கால் – பயிர் நிலம். திருத்தினேன் 955/1 ... கருத்துளே *. வலிய மூட்டிப் போக்தேன். திருத்துழாய் 2695/1 ... த்தார் *.

திருத்தெற்றியம்பலம் * 1278/4. திருநாங்கூர் திவ்ய தேசம்.

திருத்தேவனூர் தொகை * 1248/4. திவ்யதேசம்.

திருந்த வுள 3764/2. அடையாளம் ... * வியக்தமாக உள்ளன.

திருந்தாத ஓரைவர் * 3738/2. ஸர்வ சக்தியான ஸர்வேசுவரனும் அநாதி காலம் திருந்தப்போகாதபடியிறே இவற்றின் (இந்திரியங்களின்) வன்மை இருப்பது. திருந்தாத சேதநரைப்போலே நின்று நலிகிற ஐந்து இந்திரியங்கள். திருந்திய செங்கண் மால் * 2285/2. இவன் ஈசுவரனென்று அறியலாம்படி திருந்தச் சிவந்த கண்களை யுடையவன். இவ்வாத்மாக்கள் திருந்தாவிட்டால் இவற்றைத் திருத்தப் பாராதே தன்னைத் திருத்திக் கொண்டிருக்கும் ஸர்வேசுவரன்.

திருந்து செம்பொற்கழல் * 3758/1. ஆசிரிதரை வேறொருவர் காலில் குனிய விடாததாய் ஸப்ருஹணீயமாய் வீரக் கழலை யுடைத்தான திருவடிகள்,

திருந்து சேவடி 1965/2 ... யென் மனத்து *. ஐசுவர்ய ப்ரகாசமான திருவடி. திருவுந்து என்றது குறைந்து உந்துகை—முன்னே தள்ளுகையாய் பிரகாசிப்பிக்கையாகிறது.

திருந்து திசை முகன் * 2218/2. ஸமர்த்தனான பிரம்மா.

திருந்து நல் லின் கவி * 3653/1. கட்டளைப்பட்ட லக்ஷணங்கள் நிறைந்த கவி. கட்டளைப்பாடு – திருத்தப்பாடு.

திருந்து நான்மறை 366/2 ... யோர் *. திருத்தத்தை யுடைத்தாய் நாலுவகைப்பட்ட மறை. திருந்துலகு 3714/1 ... ண்ட வம்மானை *. கட்டளைப்பட்ட ஜகத்து. திருந்து வேதம் 3502/1 ... மும் வேள்வியும்*. பகவத் ஸ்வரூப ரூப குண விபூதி ப்ரதிபாதகத்தில் திருத்த முடைத்தான வேதம். நிறம் பெற்ற வேதம்.

திருநகரம் 3438/2. மண்ணும் விண்ணும் தொழ நின்ற ... * மஹா நகரம். திருநறையூர் நின்றாய்/ன் * 2067/3. பிராட்டியைத் தேடி அலமந்து நிற்கிறவன். க்ஷீராப்தியினின்றும் புறப்பட்டு பிராட்டி மேதாவி மஹர்ஷியிடத்தில் திருநறையூரிலே வந்திருக்க, அங்கே தேடி வந்தார் நம்பி.

திருநன் மார்பு 892/2 ... ம் மரகத வுருவும் *. பிராட்டியினுடைய செம்பஞ்சின் சுவடுகளும் கழிந்த மாலைகளுமா யிருப்பது. பிராட்டியாலே விலக்ஷணமான மார்பு. திருவுக்கு நன்றான மார்பு.

திருநாடு 3857/3. தெளிவிசும்பு ... * நிரதிசய விபூதி, பரமபதம். திரு நாம மிட்டு * 261/1. ஊர்த்வ புண்ட்ராகாரமாய் அழுத்தி வைத்து. திரு நாரணன் 205/2. திருப்பேர்க் கிடந்த ... ஞ *. ஸ்ரீமந் நாராயணன். இருநாவாய் 3858/3. சோலைகள் சூழ் ... *. திவ்ய

தேசம். திருநாள் திருவோணம் * 252/1. திருவோணத் திருநாள்.

திருநாளெழுந்தருளு விக்கிறது 2060/2. "இவனை இங்ஙனம் ..." குவாலாக விசேஷணங்கள் சொல்லுகிறது, அடைமொழிக ளிடுவது.

திருநிறம் 1153/2 ... த்தவனிடம் வடிவழகு *.

திருநின்ற பக்கம் 2443/1 ... திறவி தென்றேரார் *. பிராட்டி வாஸம் செய்யும் வலது பக்கம்.

திருநீர் மலை 1365/1 ... வாமெத்தை *, திவ்ய தேசம்.

திரு நுதல் 3633/3. பெருமான்தன் ... லே *. திருநெற்றி 259/1. சிந்துர மிலங்கத்தன் ... *.

திருப்படலிகை (வா மா 388). "... யிலே திருமாலையைச் சேர்த்துக் கொண்டு." பூக் கூடை. படலிகை – கூடை.

திருப்படித்தாமம் 917/அவ. பெரி. "ஆராதநோ பகரணமான ... ங்கள்". துளஸி.

திருப்பள்ளித்தாமம் 342/1 (மண) ... பறித்திட்டு. துளஸி என்று அரும்பதம். கஜேந்திராழ்வான் பிரஸ்தாவமாகையால் துளஸி அல்ல. புஷ்பம். திருப்படித்தாமம் இதன் கொச்சை.

திருப்பாத கேசம் 43/2. முன் சொன்ன ... த்தை *. பாதாதி கேச வர்ணகம். திருப்பாவாடை 3262/3 (24). "... ரஸித்தது என்ன; தன் வயிறு அறியாதே பரிச்சேதிக்க இழிவாருண்டோ." பாவாடை போட்டு விநியோகம் செய்யும் பிரஸாதம். பாவாடை விரித்த துணி.

திருப்பிரம்பு 927/அவ. (பெரி). "... க்குள்ளே பத்தாம் பாட்டுப் பாடி." ஸ்ரீ ரங்கம் கோயிலுக்குள் குலசேகரன் படிக்கு வெளியிலுள்ள கணை, குறுக்குத் தடி.

திருப்புகழ்கள் 655/1 ... பலவும் பாடி *. கல்யாண குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள். திருப்புலியூர் 3759/3. குட்ட நாட்டுத் ...*

திருப்புளிங்குடி * 3792/4. திருப்புன்னை 2530/1. ஸ்ரீ ரங்கம் சந்திர புஷ்கரிணிக் கரையிலுள்ள புன்னை மரம்.

திருப்பேர் 1428/3. தென் ... *. அப்பக்குடத்தான், கோயிலடி என்னும் திவ்ய தேசம். திருப்பேரெயில் 3583/4. தென் திருப்பேரை என்னும் திவ்ய தேசம், ஆழ்வார் திருநகரிக்குக் கிழக்கில்.

திருப்பொலிந்த சேவடி * 469/2. அழகு விஞ்சியிருப்பதாய் ருஜு வாயுள்ள திருவடிகள். திருப்பொலிந்த வாகத்தான் * 2221/2. ஸர்வேசுவரன்.

திருமகள் * 3308.1. பெரிய பிராட்டியார். திருமங்கை * 707/1. பெரிய பிராட்டியார். திருமங்கை மன்னன் * 1427/1. திருமங்கை யாழ்வார். திருமணங் கொல்லை 2072/பட். திருமங்கை யாழ்வார் கள்ளரா யிருக்கையில் பெருமானை மறித்த இடம்.

திருமணிக் கூடம் * 1288/4. திருநாங்கூர் திவ்ய தேசங்களில் ஒன்று. திருமணி வண்ணன் * 3174/2. திரு-காந்தி. காந்தி மிக்கிருந்துள்ள நீலமேனி போலே சிர மஹரமான வடிவை யுடையவன்.

திருமதுரை * 10/3. மதுரா புரி. திருமருகன் 721/2. சனகன்... கா *. மருமகன், மாப்பிள்ளை. திருமலை * 2038/3. திருவேங்கட மலை

திரு மறு மார்வன் * 911/1. திருவையும் மறுவையும் (ஸ்ரீவத்ஸ மென்னும் மச்சத்தையும்) மார்விலே யுடையவன்.

திருமாது * 658/1 ... வாழ் *. திருமாமகள் 1707/2 ... ளாலருள் மாரி *. திருமாமகளிர் 3502/1 ... ரும் தாம் * இம் மூன்றும் லக்ஷ்மீக் குப் பெயர்.

திருமாமணி 2290/4 ... வண்ணன் *. ஆஸ்ரிய சிலாக்கியமான மணி. திருமாமணி மண்டபம் ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தின் நடுவில் திருவாய் மொழித் திருநாளுக்கு பெருமாள் எழுந்தருளும் மண்டபம். பரமபதத்திலுள்ள திவ்ய ரத்ந மண்டபத்தின் பெயர் இதற்காயிற்று. திருமார்பு 1164/2. திருமார்வு என்றும் பல பாசுரங்கள்.

திருமால் * 2089/3. ... விடம் *. பிராட்டி பக்கல் பிச்சேறினவன். திருமாலவன் கவி * 2525/3. திருமாலுக்குத் தகுதியான கவி. திருமாலிருஞ் சோலை மலை * 3963/4 அழகர் மலை.

திருமுகம் 1108/1 ... ந்தரிவை *. அழகான முகம். திருமுகம் சிலேடை பார். திருமுடி * 166/2. பற்றி யெறிந்த பரமன் ... *. திருவபிஷேகம், கிரீடம். திருமுடிக் குறை 3429/2 "... யிலே ஒரு மரத்தை வெட்டப் புக" பெருமாளுடைய சிரோ பாகத்திலுள்ள உபய காவேரி மத்ய ப்ரதேசம். குறை யென்ற சொல்லுக்குப் பொருள் காண்க.

திருமுற்றத்தடியார் * 656/3. உன் திருமுற்றத்தி லிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள். திருமுற்றம் 660/3. திருமுற்றம் 479/1. கோயில் என்று பொருள். "கொண்டாடுகைக்கு ஒரு ... உண்டோ"

திருமூழிக் களம் * 3847/2. திவ்ய தேசம்.

திரு மெய்யம் 1206/3 * திவ்ய தேசம். திருமேனி யடிகள் * 3849/4. 3850/1. வடிவழகையும் அவயவ சோபையையும் காட்டி எழுதிக் கொண்டவன். திருமேனியம்மான் * 1228/2. திருமேனி யழகாலே ஸர்வேசுவரன் என்று தோற்றும்படி யிருக்கிறவன்.

திருமொழி 1336/4 ... எங்கள் தேமலர்க் கோதை *. 1505/3 இருக்கிலங்கு ... *. 2245/3. கதையும் ... ழியாய் *. சிறந்த சொல், இனிய சொல். திருமொழி : பெரிய திருமொழி. திருமங்கையாழ்வார் பிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி, பெருமாள் திருமொழி, நாச்சியார் திருமொழி — 4 திருமொழிகள்.

திருமொழித் திருநாள் மார்கழியில் முதல் இரண்டு ஆயிரம் பாட்டுக்கள் ஸேவிக்கப்படும் பகல் பத்து உத்ஸவம். திருமோகூர் 2746/1. திவ்ய தேசம். திருமோகூராத்தன் * 3896/3. அவ்வூர் எம்பெருமான். திருவடி * 412/3. எம்பெருமான் திருவடி.

திருவடி 3950/3 "... திருத்தோளிலும்." கருடன். "திருவடியைப் பொறுப்பிக்குமவள்." (முமுக்ஷுப்படி). கருடன் ஹநுமான் இருவருக்கும் இப்படிப் பெயர். பெரிய திருவடி சிறிய திருவடி என்பது நூதகம்.

திருவடிக்கள் 3326/4, 3327/4. கூட்டறிய ... *.

திருவடி திருவடி 3923/1. அத் ... மேல் *. திருவடி - ஸ்வாமி. திருவடி திருவடி - ஸ்வாமிக்கும் ஸ்வாமி, ஸர்வ ஸ்வாமி.

திருவடி நிலை 3462/ப்ர. "... கோத்து" பாதுகை.

திருவடியே துணை * 1503/2. திருவடிவு 2054/1 ... விற் கரு நெடுமால் *. திருவினுடைய வடிவு.

திருவண் வண்டூர் * 3421/2. திவ்ய தேசம்.

திருவணுக்கன் திருவாசல் : அணுக்கன் வாசல் பார். திருவபிஷேகம் 3388/3 (6) கிரீடம். திருவபிஷேகம் 2899/3. மூஸ்ரீ. "...பண்ணியருளி." பட்டாபிஷேகம். திருவனந்தபுரம் * 3906/4. திவ்ய தேசம்.

திருவயிந்திரபுரம் * 1149/4. திருவரங்கச் செல்வனார் 609/3. ரங்கநாதன். திருவரங்கம். திருவரசு : ஸந்யாஸிகளைப் புதைக்குமிடம். அங்கே அரச மரம் நடவேண்டியதால் வந்த சொல். அரச மரம் இல்லாவிடிலும் திருவரசு என்றே பிரஸித்தி.

திருவருட் கமுகு 3734/4 ... ஒண்பழத்தது *. அவனுடைய கடாக்ஷத்தாலே வளர்கிற கமுகு. திருவருள்கள் 3467/2. பரமேயித் ... *. அதிசயமான அருள்கள். திருவல்ல வாழ் 2429/3. திவ்ய தேசம்.

திருவல்லிக்கேணி 1068/4. திருவழுந்தூர் 2744/2. திருவளர் சோலை 3840/3 ... தென் காட் கரை *. அழகு விஞ்சின சோலை.

திருவன் 1683/1. மார்வில் ... *. 2265/3. சிங்கமாய்க் கீண்ட ... * ஸ்ரீமான்.

திருவாகம் 3874/3. திருமடந்தை சேர் ... *. சில ஸம்பத்தை த

புடைய திருமேனி. 2604/4 ... திண்டிற்று *. விலக்ஷண வடிவு.

திருவாகாரம் 1285/1 ... குலுங்க *. பிராட்டியினுடைய ஸந்நிவேசம். திருவாட்டாறு * 3946 — 3956. திருவாணை 454/2. நின் ... கண்டாய் *. பெரிய பிராட்டியார் ஆணை, ஆஜ்ஞை. 3991/2 ... நின்னுணை கண்டாய் * 384/4. "கிற்பாயாகில்..., கிடப்பாயாகில்...".

திருவாய் 1146/3. சேவடிகை ... * வாய். (திருவாய்ப்பாடி) திருவாயர் பாடிப் பிரான் 145/3. திருவாய்ப்பாடியிலுள்ள ஜநங்களுக்கு ஸர்வ ப்ராகாரத்தாலும் உபகாரகன். திருவாய் மொழி * 3961/1. உகவாதார் நெஞ்சுகளுக்கும் படியான பிரபந்தம். நம்மாழ்வார் அருளிச் செய்த பிரபந்தத்தின் பெயர்.

திருவார் பண் 1441/1 ...ணில் மலி கீதம் * அழகு மிக்கிருந்த பண். திருவாலி நகர் * 1201/3. திருவாலி நாடு * 1577/1. திருவாளன் 411/2 ... திருப்பதிமேல் *. ஸ்ரீயை யுடையவன் 421/4.

திருவாழி மோதிரம் (வா.மா. 235). திருவாறன் விளை * 3660/3. திவ்ய தேசம். திருவிக்கிரமன் 1832/2. அளந்த ... *. திருவிடம் 3054/2 ... மே மார்பம் *. லக்ஷ்மீ ஸ்தாநம். திருவிண்ணகர் 3473/4. செல்வம் மல்கு குடி ... *. திவ்ய தேசம். திருவிருத்தம் 2478/அவ. விருத்தாந்தம், அல்லது தாழிசை, துறை, விருத்தம்—என்கிற இனத்தின் வகையான கலித் துறையின் விருத்தம். நம்மாழ்வாரின் முதல் பிரபந்தத்துக்கும் இதுவே பெயர்.

திருவில்லாத் தேவர் 2434/3 ...ரைத்தேறேன் *. லக்ஷ்மீ ஸம்பந்தமில்லாத ருத்ராதிகள். திருவிலேன் 712/4 ... ஒன்றும் பெற்றிலேன் *. பாக்ய ஹீநையான நான்.

திருவிழவு 6/1. திருவோணத் ... *. 9/3. திருநாள், திவஸம்.

திருவிளக்குப் பிச்சன் 1187/1: ரங்கநாதனுக்கு அந்தரங்கனாயிருப்பான் ஒருவன்; பெருமாளிடம் வரும் ஒவ்வொருவரையும் ஏதோ ஒரு குற்றம் காண்பவன். திருமங்கையாழ்வார் மீது என்ன குற்றம் சொல்லுவாய்—என்று பெருமாள் கேட்க,—"செங்கமலத் தயனனைய என்கிற (1187) பாசுரத்தில், தேவரைக் கவி பாடத் தொடங்கி, தன்னையே பாடிக்கொண்டான், — என்ன. அதுவும் நம்மையன்றோ சொல்லிற்று" — என்று திருவுள்ளமானார் பெருமாள்.

திருவிளையாடு சூழல் 2060/1. "இவனுக்கின ... லுக்குள்ளே வந்து தரைக்கிடை கிடந்த விடமாயிற்று". விளையாடு மிடம்.

திருவிற் பொலி மறைவாணர் * 337/3: ஸ்ரீவைஷ்ணவர், ஸ்ரீயாலே மிக்கிருப்பாராய் வேதத்துக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார்.

**திருவிளர் வேதம்** 1818/8 ... நான்கு *. ப்ரமாண்ய லக்ஷணங்களால் குறைவற்றிருக்கிற வேதம்.

**திருவிலை** 708/4 ... யில்லாத் தாயர் *. திருவை. இரண்டாம் வேற்றுமை. **திருவுக்கும் திருவாகிய செல்வன்** 1608/1. தானன்றி மற்றவர்களின் ஸம்பத்துக்கு மூல பூதையான பிராட்டிக்கு ஸம்பத்தானவன். [பிள்ளை

**திருவுடைப் பிள்ளை** 204/1 ... தான் தீய வந்து *. ஸ்ரீமானான

**திருவுடையார்** * 3187/3. ஸம்பத்துடையார்.

**திருவுடையாள் மணவாளன்** * 183/3. திருவுக்கும் திருவான ஸர்வேசுவரனை யுடையவளான பெரிய பிராட்டிக்கு வல்லபன்.

**திருவூற்றங்கரை** 3902/3. பட்டர் பேரோலக்கமா யிருந்த இடம்.

**திருவெட்டெழுத்து** * 1740/3. அஷ்டாக்ஷர மந்திரம். ஓம் நமோ நாராயணாய என்பது. **திருவெள்ளக்குளம்** * 1322/3. **திருவெள்ளறை*** 192.3. **திருவெள்ளியங்குடி** 1338/4. திவ்ய தேசங்கள்.

**திருவேங்கடத்தான்** * 1518/3. திருவேங்கட முடையான் பாட்டில் இல்லை, ஸம்ப்ரதாயமான சொல்.

**திருவேட்டை** 3902/3. "ஒரு ... யிலே பட்டர் திருவூற்றங்கரையிலே. அரும்பதம் மௌனம். அநுபந்தம் பார்.

**திருவேளைக்காரன்** 3823/1. (சி. அ). திருவெள்ளைக் காரனா யிருக்குமோ என்று தோன்றுவதாகக் குறிப்பு காண்கிறது. அதற்குத் தான் பொருள் யாதோ! அநுபந்தம் பார். பூவேளைக்காரர் பார்த்துத் தெளிவோம். **திருவொடு மருவிய இயற்கை** * 2579/5. ஐசுவர்யம் நிலை நின்று அது தானே யாத்திரையா யிருப்பது. **திருவோணம்** 15/4 ... த்தானுல காளும் *. வைஷ்ணவ நக்ஷத்திரம்.

**திருவோலக்கத்தின் படியே தள்ளும்படியா யிருக்கை** 3435/3. சிஷ்டர்களோலக்கத்திலே அசிஷ்டர்கள் வந்திருந்தால் க்ரமேண கடத்திவிடுகை.

**திரேதம்** 1613/3. கிரேத ... துவாபர *. திரேதா யுகம். **திரேதை** 2054/1 ... க்கண் வளையுருவாய் *. திரேதா யுகம்.

**திரை** 3452/2. "நரை திரை". உடம்பில் நரம்பு படைக்கை, புடைக்கை (?). **திரைக் கவரி** 2753/2. பன்னு ... வீச *. திரை—அலை. அலையாகிற சாமரம். **திரைந்தான்** 1484/2. பொல்லான் ... என்னும் *. ஒடிந்த சிதிலமான சரீரத்தை யுடையவன். **திரைப்பாயல்** 2551/1. வரு ... *. திரைக்கிளப்பத்தை யுடைய க்ஷீரார்ணவமான படுக்கை.

**திரை மாறின கடல்** 2915/1. அலை ஓய்ந்த கடல்.

**திரையுறி** 164/1 ... மேல் வைத்த *. வைத்தவர்களாலும் வாங்க வொண்ணாதபடியான உறி. திரைக் கயிறுகள் சூழ காற்றிக் கண்ணி தெறித்த உறி; பெரிய உறி. கயிற்றுப் பின்னலாகக் கொண்டு சமைத்த உறி. **திரையை வளைத்து** 3143/1. "தானும் பிராட்டியுமாய்த் ... க் கொண்டிருந்தாலும்". திரை போட்டு. **திரை வயிற்றுப்பேய்** * 2789/2. பேய்களானவை நினைத்தபடி ஜீவிக்கப் பெறுமையாலே நரம்பு படைத்து அவை தான் தன்னிலே பன்னிப் பத்தெட்டு மட்டும் நிரைத்துக் கிடக்கு மாயிற்று. பெருவயிறுடைய பேய் — என்று எளிதிலே பொருளாகும்.

**தில்லைச் சித்திர கூடம்** * 1168/4. சிதம்பரம். **திலதம்** 1275/3. தென் திசை ... *. **திலதம்** 3960/3. தென் கொள் திசைக்குத் ... மாய் நின்ற *. சிரஸா வாஹ்யமாய் நின்ற. ஆபரணம். 3550/3. திலகம்.

**திலோத்தமை** 278/3 ... யரம்பை *. ஒரு அப்ஸரஸ், அணங்கு.

**திவம்** 3922/4 ... த்திலும் பசு நிரை *. பரம பதம். **திவலை** 889/1 இனி திரைத் ... மோத *. நீர்த் துளி. **திவளும்** 3046/3 ... தண்ணந் துழாய் *. 1749/4 ... மாளிகை சூழ் *. 1749/4 ... வெண் மதி *. ஒளி வீசும். **திளைக்கின்ற நம்பி** 1880/2. தெருவில் ... *. விளையாடு கிற நம்பி. **திளைக்கும்** 337/4. தெட்டித் ... *. களியா நிற்கும்.

**திளைகொண்ட பழம்** * 1530/2. பழுத்த பழம். திளை - பருமன்.

**திறங்கள்** 2214/4. வாய்த்...*. ப்ரகாரங்கள், படிகள். 2622/3. சுமைத் ... *. 3440/2 ... காட்டி விட்டு*. **திறங்கள்** 3453/1 ... ளாகி யெங்கும் *. திறள் – ஸமூஹம். திரள் திரளாக.

**திறத்தகத்து** 413/1. தன்னடியார் ... *. விஷயமாய். திறத்து அகத்து. அத்து சாரியையாய் அகம் ஏழாம் வேற்றுமை. **திறத்தது** 3584/4. செங்கனி வாயின் ... துவே *. ஸம்பந்தித்தது, அகப்பட்டது.

**திறத்தம்** 1966/4. பின்னை மணாளர் ... மாயின *. இடையாட்டத் தோம். **திறத்துக்கே துப்பரவாம் திருமால்** * 3657/1. காரியத்தைத் தலைக் கட்டிக் கொள்ளும்படிக் கிடான துப்பரவு – ஸாமர்த்தியம், அத்தை யுடையவன். திறம் - காரியம். **திறத்தோம்** 1859/4. ஒருவர் தம் ... *. இடையாட்டத்தோம்.

**திறப்பு** 278/4. வாய்ப்பின்றி *. திறத்தல் - வாய் திறப்பு. வாய் திறந்து சொல்லுவது. **திறம்** திறமை, காரியம், விஷயம்.

**திறம்பாச் செடி நரகு** * 2269/3. தப்பாமல் செடிமிக்க நரகம். தப்பாததாவது அநுபவித்து முடிக்கப் போகாதபடி, செடி - காடு. காடேறியிருக்கிற நரகு. திறம்புதல் – தப்புதல்.

**திறம்பாத கடல்** 3400/3. ... வண்ணன் * சாஸநத்தைத்தப்ப

வொண்ணுதபடி அபரிச்சேத்யமான கடல். திறம்பாத் - அதிக்ரமிக்கப் போகாத, சலிக்கக் கடவாத.

**திறம்பாத வுலகம் 3400/4 ...** த்தீர் *. சலியாதிருக்கிற ஜநங்கள்:

**திறம்பாது 2177/1 ...** என்னெஞ்சமே *. நான் சொல்லிற்றுத் தப்பாது. **திறம்பாமல் 1469/4 ...** கொண்டேன் *. தவறுமல்.

**திறம்பாமல்** கடல் கடைந்தேன் * **3400/3.** பிரிகதிர்ப் படாதபடி, தப்பாதபடி. **திறம்பா வழி 2269/2 ...** சென்றுர் *. சலியாத வழி:

**திறம்பிற்று 2269/1 ...** இனி யறிந்தேன் * கதவு திறம்பிற்று, சாத்திக் கொண்டது. **திறம் பேண் மின் 2449/1 ...** கண்டீர் *. மறுக்காதீர்கள், தப்பாதீர்கள்.

**திறமா 70/2.** நப்பின்னை தன் ... *. திறமாக, ஹேதுவாக.

**திறமுடை வலம் 3114/1 ...** த்தாய் * திறம்-ஸமூஹம். வலம்-பலம். நாநாவிதமான பலம். **திறல் 984/1 ...** களிறு *. மிடுக்கு.

**திறல் தேன் 658/1.** தேட்டருந் ... *. பலத்தைக் கொடுக்கும் தேன். **திறல் மீளி 3624/2 ...** மொய்ம்பில் * மிடுக்குடைய ஸிம்ஹம்.

**திறல் வலி 2669/2.** தண்கால் ... யை *. பெரு மிடுக்கு.

**திறலாகம் 1598/1.** அவுணன் ... * மிடுக்குடைய சரீரம்.

**திறவிது 2443/1 ...** என்றோரார் *. திறத்தை யுடையது. ஒன்றுலறியப் போகாதது. **திறனுரை 2122/4 ...** யே சிந்தித்திரு *. இடையாட்டமான சொல்.

**திறை 3232/ .** உய்ம்மின் ... கொணர்ந்து * கப்பம், காணிக்கை.

**திறை கொண்டு 1343/2.** "யமனைத் திறை ...". திறை செலுத்தும்படி செய்து கொண்டு. பர தந்த்ரனுக்கி.

**தின்ற விடம் 872/**அவ. "... த்தைச் சொறிதல்". அரித்த இடம். தினவு கண்ட இடம், தின்ற இடம். **தின்னலுறுதியேல் 156/2 ...** நம்பி * தின்பதில் உற்றிருந்தாயாகில்.

**திணைத்தனையும் 1014/4.** செல்ல வொண்ணு *. திணை ஸூக்ஷ்மமான தாந்யம். எள்ளத்தனை என்னுமாப் போலேயாய் பரிமிதமான காலத்தைச் சொல்லுகிறது. ... விடாள் * **3526/3.**

**திணைத்தனையும்** விடாள் * **3526/2.** சிறிது போதும். க்ஷண காலமும். **திணைத்தனையும் அச்சம் 1919/1.** ஏக தேசமும். **திணையாஞ் சிறிதளவும் 2929/2.**

**தீ 7/1 ...** யில் பொலிகின்ற *. அக்நி. **தீக்கதி 2144/2.** திணையேனும் ... *. துர்மார்க்கம். **2176/4 ...** க்கட்சென்று *. விநாசத்துக்கு ஈடான மார்க்கம். நரகத்துக்குப் போகும் வழி.

**தீக் குணங்கள் 860/3** ... நீர்த்த *. அஹங்கார மமகாரங்களாகிற நாசக ஸ்வபாபங்கள்.

**தீக்குறள் 475/6** ... ஊச் சென்றேதோம் *. பிறர்க்கு அநர்த்தாவஹமான பொய். குறள் – குற்றம். **தீக்கொளீஇ 464/3** ... வேகின்றதால் *. நெருப்புக் கொளுத்தி.

**தீங்கரும்பு 1141/4** ... கண் வளரும் கழனி *. இனிய கரும்பு.

**தீங்கவி செய்குந்தன் * 3655/3.** இனிதான கவிகளைச் செய்யும்படியான ஸ்வபாவத்தை யுடையவன். **தீங்கழை 2853/2** ... போய் வென்று *. அழகிய மூங்கில். களை என்றுக்கி பிடித்து விளையாடுகிற மூங்கில். வளைக்கையாலே எதிர்ந்து விளையாடுகிற மூங்கில். **தீங்குயில் 476/3.** மாவேறி ... * மதுர ஸ்வபாவத்தையுடைய குயில்.

**தீங்குழல் 262/2.** இனிதான குழல். ப்ரணய ரோஷ பரிஹாரமாக ஊதுகிற குழல்.

**தீட்டி வாட்டான் 2136/3.** "ஒரு பேரான் ஸம்ஸாரி பேரும் ...". எழுத்தாணியைத் தீட்டி, வாட்டான் எழுதமாட்டான். **தீட்டு** (வா. மா; 441) "அத்தீட்டை யாருக்குச் சொல்லுவேன்." ஆசௌசம். **தீபகம் 2478/(?)** "... கட்டி மிருகம் பிடிப்பாரைப் போலே". ருசி காட்டி.

**தீண்ட 323/1.** சிறு காக்கை முலை ... *. நலிய.

**தீண்டாமை 1902/2** ... நினைந்து *. ஸ்பர்சியாதபடி.

**தீத் தொழில் 1290/4.** வண்கைத் ... *. தீயினுடைய தொழில். தீ தவம் கெடுக்கு மமுதம்* **3077/3.** புத்தி பூர்வமான தீமையையும் ப்ராமாதிகமான அசுபத்தையும் கெடுக்கும்படிக் கிடான நித்ய போக்ய பூதன். தீது அவம், தீ தவம்.

**தீதறு திங்கள் 1934/1** ... பொங்கு *. தர்சநீயமுமாய் கண்ணுக்கு குளிர்ந்திருக்கும் சந்திரன். **தீதில் சீர் 3147/4** ... திருவேங்கடத்தான்*. சீருக்குத் தீதாவது – ஆசிரயிப்பாரின் குறை குண நிருபணம் பண்ணுகை. குற்றமற்ற குணங்கள்.

**தீதில் நன்னெறி 663/3** ... காட்டி *. தீமையோடே கூடின நெறியன்றிக்கே, நல் வழி. **672/1** ... நிற்க*. தீமையோடு விரவாத நன்னெறி

**தீதிலந்தாதி 3692/3** ... ஆயிரம்*. பகவத் குணங்களையொழிய கதாந்தர ப்ரஸங்கமாகிற பொல்லாங் கில்லாத அந்தாதி.

**தீதிலாத வொண் தமிழ்கள்* 3791/3.** சப்தார்த்தங்களில் குறையற்று பஹு குணமான த்ராமிடம்.

**தீப்பப் பூடுகள்** 278/1 ... அடங்க வுழக்கி *. முளைக்கிறபோதே ஸர்ப்பாதிகள் போலே பிரஸித்தமான காஞ்சொறி எரி புழு இவையான விஷப் பூண்டுகள். நிம்பிலே ஒருப்பட்ட த்ரிவித கரணங்களையு முடைய வர்கள்.

**தீப்பால பேய்த் தாய்** 2624/2 ... புயிர்களாய் *. பொல்லாத ஸ்வபாவத்தை யுடைய பேய் – பேய்ச்சி, பூதனை. அவளான தாய்.

**தீப்பால வல்வினையேன்** * 3380/4. தீய ஸ்வபாவத்தை யுடைத் தாய் பேர்க்கப் போகாதபடி கனவிய பாபத்தைப் பண்ணின நான். **தீபம்** 560/1. கதிரொளி ... *.

**தீம்பலங்கனி** 1371/4. தேனது நுகர் *. இனிய பலாப் பழம்.

**தீம்பால்** 1880/3 ... உருகி*. இனிய பால். **தீம்பு** 10/1. தௌஷ்டியம். **தீமழை** 3693/4 ... காத்து * நாச கரமான மழை.

**தீமனம்*** 3082/4. பொல்லாத நெஞ்சு. அம்ருதத்தையும் விஷத்தையும் ஒக்க விரும்புவாரைப் போலே உன்னையும் உகந்து க்ஷுத்ர விஷயங்களையும் உகக்கும் பொல்லாத நெஞ்சு.

**தீமாற்றமும் சாரா** * 2431/2. கெட்ட பெயர் அணுகாது, அபவாதம் வாராது. **தீமுகத்து நாகம்** 607/3 ... த்தணை மேல் *. உகவாதார்க்கு வந்து கிட்டவொண்ணாதபடி நெருப்பை யுமிழ்ந்தாப் போலேயிருக்கிற திருவநந்தாழ்வான். **தீமுற்றத் திலங்கை யூட்டினான்** * 3011/3. இலங்கை முற்ற, முழுதும் தீ யூட்டினான்.

**தீ மூன்று** 1725/3. செந்தீ ... மில்லிருப்ப *. திரேதாக்கிகள். **தீமை** 136/5 ... செய்திம் முற்றத் தூடே*. தீம்பு.

**தீயகம்** 2638/1. மாருதமோ ... ரோ *. அக்நி. **தீய பணம்** 120/2 ... த்தில் *. விஷத்துக்கு ஆச்ரயமாய் தீயதான பணம்.

**தீய புந்திக் கஞ்சன்*** 132/1. துர்ப்புத்தியான கம்ஸன், பிள்ளைக் கொல்லியிறே! மக்க ளறுவரைக் கல்லிடை மோதிய பாபிஷ்டனிறே!

**தீயர்** 1221/3. முறையாய் வளர்க்கும் மூத் ... *. அக்நியை யுடையர். **தீயரக்கி** 2647/3 ... மூக்கும் *. தீய அரக்கி, கொடிய அரக்கி.

**தீய வலவலை** 2951/1 ... ப்பெருமா வஞ்சப்பேய்*. கொடிய நினைவை யுடையவளாய், அலவலை–வாய் பாறி யேத்துமவள். **தீயன** 3357/1 ... வெல்லாம் *. க்ரூர ஸ்வபாவங்கள்.

**தீயிணக் கிணங்காடி** 287/3. பொல்லாத இணக்கத்தோடே இணங்கி வந்து. தாய்க் கடங்காதபடி. தலக்கறுக்கும் விஷயத்தோடே கலந்து என்றபடி. தலக்கறுக்கும் –உறவறுக்கும். தீயிணக்கு – உசிதமல்

லாத விளையாட்டு. **தீயினில் கொடிது** * 1111/2. **தீயினில் தூசாகும்*** 478/8. நெருப்பிலிட்ட பஞ்சுபோலே யாகும். **தீ யு லா வெங்கதிர்** * 1814/3. உஷ்ண கிரணனை ஆதித்யன். **தீயெம்பெருமான்** 1332/1 ... நீரெம்பெருமான் *. அக்நிக்கு அந்தர்யாமியாய் நிர்வாஹகனாயிருக்கிற ஸர்வேசுவரன்.

**தீயோம்புகை மறைபோர்** * 1634/3. தீயோம்புகையே ஸ்வபாவமாயுள்ள பிராம்மணர்கள், ஹோமம் செய்யும் பிராம்மணர்கள்.

**தீர்க்கல்** 454/1. தீவினை ... லுற்று *. போக்குகை.

**தீர்க்கிற்றிரே** 3534/4 ... விளையாட்டியேன் *. தீர்க்கவல்லி கோளோ. **தீர்த்த கர ராமின்** 2195/4 ... திரிந்து *. திரிந்து, உங்கள் ஸஞ்சாரத்தாலே தீர்த்த கர ராமின். பாவந ராகுங்கோள். ஆமின்- ஆகுங்கோள்.

**தீர்த்தங்க ளாயிரம்** * 3670/3. தீர்த்தங்களான ஆயிரம் திருவாய்மொழி. தீர்த்தமாவது— தன் போக்யதையாலே மற்றொன்றில் போகவொட்டாதபடி பண்ணவற்றுதல், பாவநமாதல்.

**தீர்த்தத் தினன்றிரா** 3445/1. தீர்த்தோத்ஸவத் தினன்று. "தீர்த்தவாரீ" யன்று, இரா – இருந்து.

**தீர்த்த நீர்** 801/3. இறைஞ்சியாடு ... *. ஸர்வ பாபங்களையும் போக்கும் சக்தியை யுடைய நீர். 1021/4 ... த்தடஞ்சோலை *. எல்லா ஸம்ருத்தியையும் பண்ணிக் கொடுக்கவற்றான ஜலம். தீர்த்தம் என்ற பதம் பாவநத்வத்தைச் சொல்லுகையாலே அது உபலக்ஷணமாய் த்ருஷ்டா த்ருஷ்ட ஸகல பல ப்ரதத்வத்தையும் சொல்லுகிறது.

**தீர்த்த பலம் தரு நீர்** * 95/3. மங்களாசாஸந பர்யந்தமான பலத்தைத் தரும் நீர், தீர்த்தம்.

**தீர்த்தம் ப்ரஸாதியாதே** 3110/2. "... நித்யவாஸம் பண்ணுகிற தேசம்." தீர்த்தத்துக்கு அநந்தரம் திருநாள் ஸமாப்தி. தீர்த்தம் பிரஸாதித்துப் போய்விடாதே இங்கேயே இருந்து என்று பொருள்.

**தீர்த்தம்** — என்று வைஷ்ணவர்களின் பேச்சில் சிராத்த நிகத்துக்குப் பெயர். திருநக்ஷத்திரம் – பிறந்த நாள். தீர்த்தம் – சிராத்த நாள். **தீர்த்த மனத்தனன்** 3670/2 ... ளுகி *. துணிந்த மனத்தை யுடையவன். **தீர்த்த முடைத் திருமாலிருஞ் சோலை** * 454/4. தீர்த்தங்களை – துறைகளை, ஸ்நாந கட்டங்களை யுடைய திருமாலிருஞ் சோலை.

**தீர்த்தருளாய்** 1814/4. என் வல்வினை ...யே *. போக்கியருளாய்.

**தீர்த்தவடிமைக் குற்றேவல்** * 3793/1. இதர புருஷார்த்தங்களில் நசை யறுக்கவல்ல அடிமைகளில் அந்தரங்கமான அடிமை. தீரப் பண்ணின அடிமை. **தீர்த்தவன்** 982/1. துயர் ... * போக்கினவன்.

**தீர்த்தன்** 1835/3 ... னைப் பூம்பொழில் சூழ் *. சுத்தியை யுடைய வன், சுத்தன். 3092/4 பெருமான் என் ... னே *. அவகாஹிக்கும் துறையாம்படி ஸுலபனானவன், தவிர்ந்தவன்.

**தீர்த்த வெம்பெருமான்** 3537/4. (சி. அரு.) ஸாளக்ராம மூர்த்தி. ஒருவரால் செய்ததல்லாமல் கண்டகி நதி நீர்த்தத்தில் மட்டுமே ஆவிர்ப் பவிக்கும் மூர்த்தி. எவ்வித அலங்காரமும் உபசாரமும் செய்ய முடியா மல் திருமஞ்சனத்துக்கு மட்டுமே உபயோகிக்கப்படும் மூர்த்தி.

**தீர்ந்த வடியவர்** 3175/1 ...தம்மை *. உறுதியோடுள்ள அடியவர். ப்ராப்ய ப்ராபகங்கள் அவனே என்றிருக்கு மவர்களாயிற்று தீர்ந்த அடி யவராகிறார். **தீர்ந்த வென் தோழி** * 3365/4. அந்தரங்கையான தோழி. **தீர்ந்தார்** 3036/2 ... தம் மனத்து *. ஸம்யக் வ்யவஸ்திதர்.

**தீர்ந்தேன்** 2462/2. குறையும் வினையாவி ... *. தளர்ந்தேன்.

**தீர்ந்தொழிந்தேன்** 3303/3. பேதைமை ... *. போகப் பெற்றேன், தீரப் பெற்றேன். **தீர் மருந்து** 3564/4. வினை ...*. போக்கும் மருந்து. தீர்க்கும் மருந்து.

**தீரக்கழிய** அபராதத்தைப் பண்ணி (பர. ரஹ. த்வ.) அத்யந்தாதிக மாக. **தீரக்கழியும்** 2903/1 "... அபராதத்தைப் பண்ணின பின்பு."

**தீரஇரும்புண்ட நீர்** * 3994/3. காய்ச்சல் தீர இரும்பு உண்ட நீர்

**தீராத சீற்றம்** 2723/1 ... த்தால் செய்து *. தீராக் கோபம். அடங் காத கோபம். **தீரா நோய் செய்தான்** * 2724/2. பக்தியை யுண்டாக் கினான். பக்தியிறே யாவதாத்மபாவியான நோய்; அது ப்ராப்தி தசை யிலும் அநுவர்த்திக்குமிறே.

**தீரா மாற்றுலே** 3832/2 "... நெஞ்சைப் புண் படுத்தின கிருஷ் ணன்." மாற்றுலே தீர்க்க முடியாதபடி. மாற்று - ப்ரத்யௌஷதம். 2887/2, "தீரா மாற்றுச் செய்து அகப்படாதே திரிந்து".

**தீரா வினைகள்** 3427/3 ... தீர வென்னை யாண்டாய்*. அநுபவைக விநாச்யமாய் போக்க வொண்ணாத கர்மங்கள்.

**தீரா வுடம்பு** 2687/2 ...பொடு பேதுறுவேன்*. அழியக்கடவதான உடம்பு. சிதிலமான, தளர்ந்த உடம்பு. **தீரா வெகுளியள்** 2708/2 ... ளாய் *. சீற்றத்துக்கு அவதி யில்லாதவள்.

**தீவடிவிற் சிவன்** 1146/4 ... அயனை போல்வார் *. அக்நி வர்ண னான ருத்ரன்.

**தீவளைத்து** மின்னிலகு மொளி முகில்* 3800/1. கொள்ளி வட்டம் (அலாத சக்ரம்) போலே மின்னி விளங்குகிற அழகான முகில்கள்.

இருட்டுக்குக் கை விளக்குக் கொண்டுபோவாரைப் போலே யாய்த்து மின்னிட்டுக் கொண்டு ஸஞ்சரிக்கிறது மேகம்.

**தீவாய் நாகம்** 1616/3 ... **த்தணையில் துயில்வானே***. நெருப்பை உமிழ்கிற திருவநந்தாழ்வான். **தீவாய் வல்வினையார்** * 1465/1. நியை வாயில் நின்று முடிமிழா நின்ற, வல் – அதிக்ருர பல ப்ரதங்களான வினையார் – பாபங்கள்.

**தீவாய் வாளி மழை** * 3553/2. வாளி – அம்பு. நியை வாயிலுள்ள அம்பு மழை, தொடுத்து விடும் போதாயிற்று அக்கியென்று அறியலாவது; படும்போது நெருப்புப் பட்டாற்போலே யிருக்கை, நாணியைக் கழித்தபோதே காலாக்கி கவடு விட்டாற்போலே எரிந்து கொண்டு செல்லா நிற்கும் – குண ஹீனமாறு விருக்கும் படியீறே இது. குண ஹீநம் சிலேடை. குணம் – கயிறும் ஆத்ம குணமும்.

**தீவிகை** 1140/4. கமலம் ... போற் காட்டும் *. **தீவிகை** – விளக்கு 3767/3. தாமரைக்கம் ... நின்றலநும் *.

**தீவிரிய மறை வளர்க்கும் புகழாளர்** 1198/3. அக்கி விஸ்தருத மாம்படி வைதிக மரியாதையைக் குறைவற நடத்துகையால் வந்த புகழை யுடையவர்கள். **தீவிழித்து** 496/2. சீரிய சிங்கம் அறிவுற்றுத் ... *. க்ரூரமாக விழித்து. பேடைக்கும் அருகு நிற்க வொண்ணுநிருக்கை. 2175/1. செற்றெழுந்து ... *. நெருப்பெழப் பார்த்து, சீறிப் பார்த்து.

**தீவினவு** 2200/3 ... வின் சாய்க்கு *. கொடிய விளா மரம்.

**தீவிளி விளிவன் வாளா** * 940/1 (அழ. அரு.) தீக்ஷ்ண பாஷணம் பண்ணி வியர்த்தமாகப் பேசுகிறவன். கேட்டார்க்கு நெருப்பை வழிய விட்டாற் போலேயாய், குடி பறியும்படியாக வாய்த்து வாய் விடுவது.

**தீவினை பெருக்கி** 950/1. சேமமே வேண்டித் ... *: ஸத் கிரியை பண்ணுதே பாபத்தையே யாயிற்றுக் கூடு பூரிப்பது, அதிகமாக்குவது.

**தீ வேள்வி** 826/1 ... ச்சென்ற நாள் *. ஆவஹநீயாத் யக்கி த்ரயத் தோடே பண்ணும் யாகம்.

**தீற்றி** 3561/1. குமை ... வெண்ணை*. புஜிப்பித்து. 3704/1. "மத கரமான திரவியங்களை ... " ப்பிச் சேற்றி, புஜிப்பித்து.

**தீன்** 1859/1 ...தேனுண்ட வண்டு*. இனிது. **தீன் தேன்**-இனிய தேன். தீம் தேன் தீந்தேன் என்றும் வரும். தீமும் இனிப்பு தான்.

**துக்கச் சுழலை** 453/1 ... ச்சூழ்ந்து *. சுழலாறு. வளைய வருகிற துக்கம்: கர்ப்ப வாஸம் போலே சுற்றிக் கிடக்கிற துக்கம் என்னுமாம்.

**துக்க சீலம்** 3296/4 ... இலர்களே *. துக்க ஸ்வபாவம்.

**துக்கமில் ஞானம்** 3228/1 ... ச்சுடர் * அஜ்ஞாந கந்த மில்லாத

ஜ்ஞாகம். **துக்கமிலன்** 3227/4. யானேர் ... னே *. துக்கத்தை யுடையேனல்லன்.

**துகள்** 767/1. தலைக்கணத் ... *. புழுதியும் குற்றமும். 1592/3. துகிலின் கொடியும் தேர்த் ... ளும் *. புழுதி.

**துகில் படலம்** 1531/1. துன்றேளித் ... *. வஸ்திரங்களின் வரிசை. வரிசையாகக் கட்டின வஸ்திரங்கள். **துகிலின் கொடி** 1592/3 ... யும் தேர்த் துகளும் *. துகில்களா லுண்டான கொடி.

**துங்கக் கரி** 125/2 ... யும் பரியும் *. துங்கம் ஒக்கமாய், விஞ்சின கரி, அடங்காத ஆனை. **துங்க மதக்கரி** 69/2 ... யின் கொம்பு பரித்தவனே *. மிக்க மதத்தை யுடைத்தான கரி. **துங்க மலர்ப் பொழில்** * 597/1. ஓங்கின (அதிகமான) மலரையுடைய பொழில். **துங்க முக மாளிகை** * 1153/3. ஓங்கின முகம், முன் பாகத்தை யுடைய மாளிகை.

**துங்கன்** 11/1. அபிமான ... * சிரேஷ்டன், உயர்ந்தவன்.

**துங்கா ரரவத் திரை** * 1799/1. ஒக்கத்தையும் பெரிய ஆரவாரத்தையு முடைய திரை — அலை.

**துச்சோதனன்** 101/3 சுழலைப் பெரிதுடைத் ... *. ஒருவரால் சோதிக்க அரிதான நெஞ்சை யுடையவன்.

**துஞ்சக்கொடான்** 2966/2. புலனைந்தும் ...*. நசிக்கும்படி விட்டுக் கொடான். நலிவுபட விடமாட்டான்.

**துஞ்சா நீர்வளம்** 1138/3 ... சுரக்கும் பெண்ணை *. நீர் மாறுதே யிருப்பதான வளம். **துஞ்சா முனிவர்** 2575/1 ...ரும் அல்லாதவரும் *. முடிவில்லா முனிவர், உணர்த்தியை யுடைய முனிவர்.

**துஞ்சி** 937/அவ. "சக்ரவர்த்தியும் ... பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப் போய்". நசித்து. **துஞ்சினர்** 1004/2 ... செல்லும் தொன்னெறி *. முடிந்தார்.

**துடக்கு** 846/2 ... கறுத்து வந்து *. வாஸனை. குடல் துடக்கு — சரீர ஸம்பந்தம் என்று வியாக்யாக வார்த்தையும் அரும்பதமும் காண்கையால் துடக்கு — வாஸனை என்பதற்கு ஸம்பந்தம் என்றே பொருள். துடக்குப்போன்ற சில துகரச்சொற்கள் தொகரத்திலும் தொடங்கியிருக்கும். துகரம் தொகரம் இரண்டுக்கும் அங்கு பொருள் ஒன்றுதான்.

**துடர்** 86/1 ... சங்கிலிகை*. விலங்கு. **துடர்** 109/2. கழுத்தில்... கட்டி *. சங்கிலியாகிற ஆபரணம்.

**துடர்ச்சி** 855/4. விள்விலாததோர் ...*. ஸ்வபாவம், தொடர்ச்சி, செறிவு. **துடர் சங்கிலிகை** * 86/1. சங்கிலித் தொடர். **துடவை** 487/1 ... யும் கினறும் *, விளை நிலம்.

**துடிகொள் நுண்ணிடை*** 960/1. **துடி சேரிடை** * 3717/4. துடி- ஒரு வித வாத்யம். பெண்களின் இடுப்புக்கு உவமையா யிருப்பதால் உடுக்கை போலே இடை குறுகின வாத்தியம்.

**துடிப்பு** 3165/2. "ஆனை யிடரைப் போக்கினபோது வடிவிற் பிறந்த துடிப்பும் குணத்திற் பிறந்த துடிப்பும்"; ... 3371/2. "லாபாலாபாதிகளால் வரும் துடிப்பறியாத ஒலக்கம்." ஈடுபாடும்கிலேசமும்

**துடிபடுங் கவ்வை** * 2514/2. பறை யறைதல் போன்ற ஆரவாரம். துடியின் ஓசை போன்ற கவ்வை. **துடியிடையார்** 926/2 ... சுரி குழல் *. கண்டாரைத் துடிக்கச் செய்யும் இடை. **துடை** 373/3.

**துடைக்கிளவி** 2585/3. நாவின் ...புள் *. அழகிய ஸக்தர்ப்பத்தை யுடைத்தான சொல். **துடைக் கீழே கிடக்கை** 2052/அவ. "உபய விபூதியும் இவர் ...". ஸ்வாதீநமாய், வசமா யிருக்கை.

**துடை குத்துகை** நீர்ந்துறங்கக் கடவையோ 480/7 (சு. ஸ. தொ.) "அதுவே துடைக் குத்தாக பகவதபாய பயம் நீர்ந்து உறங்கக் கடவையோ." உறங்கும்படி துடை தட்டுகை, தாலாட்டுகை.

**துடை குத்தவிட்டு** 960/4. "சில ராஜ புத்ரர் ... உறங்குமாப் போலே", வண்டிசை சொல் என்பதன் பொருளாகையால் தாலாட்டுப் பாடுகை. **துடை** கொள்ளலாம்படி 2516/3 (?). "வடிவிலே ..." தொடை பார். **துடைப்பற்று** 2521/1. துடையே துடைப்பற்று. **துடை** யாகிற இடம். **துடை** யிடம். சதைப் பற்று போலே துடைப் பற்று.

**துண்டம்** 932/1 ... வெண் பிறையன்*. **துண்டம்** 2059/1. நிலாத் திங்கள் ... *. கண்டம். 3629/2. திரள் பவளக் கொழுக் ... *. முறி.

**துண்ண** 1877/4. "விரக்கூத்தையாடத் ...". அநுபந்தம் பார்.

**துண்ணென** 1299/3 ... மாற்றார் தம்மை *. சீக்கிரமாக.

**துணங்கை யெறிந்து** 3292/2. திரள இருந்து கை தட்டி. சுணங்கை பார். **துணரி** நாழல் 1772/2 ... நறும்போது *. துணரி - பூங்கொத்து. நாழல் - கோங்கு மரம்.

**துணிக்கும்** 1670/2. திங்கள் மாமுகில் ... *. பேதிக்கிற.

**துணி செய்தான்** 2960/2 தோள்கள் தலை ...*. துணித்தான் வெட்டினான். **துணிந்த துணிவு** 626/2. தாழ் குழலாள் ... * கொண்ட உறுதி. **துணிபட** 1749/2. வன் முதலை ... *. துண்டமாம்படி.

**துணி பலவா** 3317/2. பல துண்டாக, நாநா கண்டமாம்படி, பல கூறாக, பல சகலங்களாக. **துணி முன்பு நால** 3235/3 ... ப்பல்லேழையர் *. துணி-சீலை. அது பின்னுக்கு எட்டாமையாலே முன்னளவிலே நாலும்படி. பின்பு கொண்டு இணைக்க எட்டம் போராமையால்

3440/ப்ர. ஒரு ... பார். மாரதர் * 840/3 மிஹாரதர். மாரனார் * 670/1 காமன், மந்மதன்.

மாரிகைகயேறி 2496/2 ... அறையிடுங் காலத்து*. மாரி - மழை, கைகயேறி – யுத்தமாகத் தோற்றி. மாரிப் பகை 264/2 ... புணர்த்த * மழையாகிற பகை.

மாரி மாக் கடல் வளைவணர் * 1689/1 மேகம் போலேயும் மாக் கடல் போலேயு முள்ள வடிவம். வளை – சங்கு போன்ற வணர் நிறத் தையுடையவர் – பலராமன்.

மாரி மாருத தண்ணம் மலை* 3285/1 மழை தவிராமலும், தண்-குளிர்த்தியாயும், அம் – அழகாயு முள்ள மலை.

மாரியனைய கை * 3215/3 கொடைக்கு மேகத்தை யொக்கும் கை. பிரயோஜந நிரபேக்ஷமாகக் கொடுக்கையும், கொடுக்கப் பெறாத போது உடம்பு வெளுக்கையும். கை – கொடை. மாருதம் * 918/1 மாருதி * 746/3 திருவடி, ஹநுமாந்.

மால் செய்கின்ற மால் * 3094/4 மால் ஸர்வாதிகனான ஸர்வே சுவரன் செய்கிற மால் – பிச்சு, கலக்கம். மால் புருடோத்தமன் * 395/2 தானே தனக்குப் பெருமையா யிருக்கும் புருஷோத்தமன்.

மால் வண்ணன் * 2472/3 கரு நிறத்தவன். மால் பிச்சாய் கறுப்பு. மால்வரை * 812/2 பெரிய மலை. மால் விடை * 2841/2 நாகின் மேலே பிச்சேறிப் படுகிற காளை. மால் வினை * 1087/3 பெரிய வினை.

மாலதாகி 296/2 ... மகிழ்ந்தனள் *. வியாமோஹத்தை யுடைய வளாகி. மாலதிடம்* 1350/2, 2119/4 ஸர்வேசுவரனுடைய இடம் மாலவன் * 1790/3 சாலப் பெரியவன். 2387/3 வியாமுக்தன்.

மாலவனை மாதவனை * 2446/2 அடியாரிடம் வியா மோஹங் கொண்ட மாதவன்.

மாலிகன் 189/1 சீ ... *. மாலி. மாலிமாலி* 779/3, 3797/2 மாலி ஸுமாலிகள். மாலிமான் * 779/8, 3797/3 மான் – மஹான். மாலி - மஹானான மாலி. மாலி மான் விலங்கு * 779/3 மிருகம் போலே பெரு மிடுக்கனான ஸுமாலி.

**மாலிருஞ் சோலை** * *3111/3*. **மாலினந்துழாய்** * *1959/2* ஸர் வேச்வரனுடைய திருமேனி ஸ்பர்சமுள்ள திருத்துழாய், அந்துழாய். **மாலின மொழியாள்** * *1109/3* வியா மோஹத்துக்குச் சேர்ந்த பேச்சையுடையவள். இனம் – ஒப்பு.

**மாலுங்கடல்** * *1082/1*. **மாலுங் கருங்கடல்** * *2100/9* ஜல ஸம்ருத்தியாலே பிச்சேறின கடல். **மாலுருவாய் நின்ற விண்** * *1646/1* த்ரிபாத் விபூதி யென்னும்படியான பரப்பை யுடைத்தான நித்ய விபூதி யுக்தன்.

**மாலை சேர் வெண்குடை** * *1397/4* முத்து மாலைகள் ஸரம் ஸரமாகச் சேர்ந்துள்ள வெண்குடை. பெருமாளுடைய குடையில் முத்து மாலைகளும் குஞ்சலமும் கட்டி யிருக்கும்.

**மாலைத் தஞ்சுடைய இருள்** * *1181/1* மாலையைத் தஞ்சமாக வுடைய இருள். **மாலை நண்ணி** *3880/1* ... த்தொழுமின் *. மாலையுற்று – பக்தியுக்தராய். ஐ அசையாய் மால் நண்ணி மாலுற்று.

**மாலைப் பூசல்** * *3879/1* ஸந்தியா காலத்தில் கூப்பிட்ட கூப்பீடு. **மாலையந் தண்ணந் துழாய்** * *2497/4* மாலா ரூபமாய் தர்சநீயமாய் குளிர்ந்த திருத்துழாய். **மாலைவாய்** * *347/3* இராக் காலத்தில்.

**மாவல்லிக் கேணி** *2416/3*. **மாவலத் தொருவன்** * *956/1* மஹா பலிஷ்டனான ஒருவன். **மாவலவன்** * *1847/1* மா – குதிரையை நடத்த வல்லவன். **மாவலன்** * *2323/2*. **மாவலி** * *1380/1* மஹாபலி. **மாவளம்** * *1298/3* பெரிய ஸம்பத்து.

**மாவளரு மென்னோக்கி** * *1657/1* மான் போலேயாய் பரப்பையுடைத்தாய், ம்ருதுவான நோக்கை யுடையவள்.

**மாவிகாரம்** *3375/1* ... மாயோர் வல்லிரவாய் *. மஹத்தான விகாரம். **மாவியம்புள்** * *2544/3* மா – மஹாநாய், வியம் – வியக்கத்தக்கதான புள் – கருடன். **மாவிலங்கல்** *1412/3* வெள்ளி ... *. பெரிய மலை.

**மாவிளை வயல்** *1716/3* விளை வயல். அது, மா–பெரிது. **மாவினை** *3770/3* கொடு ... *. **மா வீடு** *3098/4* எம் ... *. நிரதிசய போக்யமான மோக்ஷாநந்தம்.

**மாவேகி** 2250/2 ... ச் செல்கின்ற *. மா - குதிரை. ஏகி - ஏறி. **மாழாந்து** 3014/2 ... தேம்புதியால்*. ஒளி மழுங்கி. **மாழை** 1936/3 ... மென்னேக்கி *. இள மான். ... நோக்கு * 3051/4 அழகிய நோக்கு. ... மழை மான் * 1418/2.

**மாள்வித்து** *. 2961/3. **மாளாத காதல்** 691/2 ... மருத்துவன் பால் *. நீங்காத அன்பு. **மாளிகையும் மண்டபமும்** 1077/1 மாட ... *. மாளிகை - மேல் மச்சுள்ள வீடு. மாடம் - வெறும் வீடு, மச்சில்லாத வீடு. மண்டபம் - நாலு பக்கமும் அடைப்பில்லாமல் திறந்த கட்டிடம் (?).

**மாளிகைச் சாந்து** 8/1 நல்லதோர் சாந்தம், கோயில் சாந்து. அரமனைச் சந்தநம், சிலாக்கியமான சந்தநம்.

**மாளும் நாளது** * 863/2 முடியும் நாளாய்த்து கிட்ட வந்து நிற்கிறது. **மாளு மெல்லைக் கண்** * 871/2 கடைசி காலத்தில். **மாளுமோரிடம்** * 2928/4 அந்திம தசை.

**மாற்பால் மனஞ் சுழிப்ப*** 2295/1 மால்-வியாமுக்தன், பெருமாள். அவனிடத்தில் மனம் சுழிக்க. **மாற்றங்கள்** 306/1 ... கேட்டு *. வார்த்தைகள். **மாற்றங் கொண்டருளீர்** * 3456/4 மறு மாற்றம் சொல்லீர்.

**மாற்ற மாலை** 3279/3 ... புனைந்து *. சொல் மாலை. **மாற்றமுள** 2022/1 ... ஆகிலும் *. மறு மாற்றங்கள் உள. **மாற்றரசர்*** 1278/1 சத்ரு ராஜாக்கள். **மாற்றலர்*** 69/4 சத்ருக்கள். **மாற்றழிக்க வல்லான்*** 488/7 பலம் போக்க வல்லன்.

**மாற்றுண்மை** * 3095/4 சாத்ரவம். மறுதலையான ஆள். மாற்றுள், வேற்றுள் என்பது காண்க. **மாற்றேதே** 489/7 முன்னம் முன்னம் ... *. தடுக்காதே. 494/2 ... பால் சொரியும் *. தவிராமல் விடாமல். **மாற்றார்** 494/6 ... உனக்கு *. சத்ருக்கள். **மாற்றுனே** 2641/1 ... வல்வினையை *. போக்கானே.

**மாற்றிலி சோறிட்டு** 369/1 பிரத்யுபகாரம் இல்லாதபடி சோறு போட்டு-துர்மாநிகளுக்கு இரா மடம் கற்பித்து. **மாற்றி வந்து** 1873/1 கல்லின் முந்நீர் ...*. அணை கட்டித் தகைந்து வந்து.

**மாற்றுத் தாய்** 310/1 சத்ருவான தாய், கைகேயி மற்றைத் தாய், மாறு ஒப்பாய், பெற்ற தாய்க்குப் போலியான தாய், மாற்றுந் தாய்.

மாற்றேல் 2642/1 மாலே படிச்சோதி ... *. மாற்றாதே. மாற்றேலப் பட்டவர் 598/4 ... கூட்டம் *. மாற்றுகை – நீங்குகை. ஓலே – மாற்றப்படுகை. கைவல்ய நிஷ்டர். மோக்ஷத்தை அநாதரித்து கைவல்யம் புகுந்தவர்.

மாறன் 3340/3 மகிழ் மாலை மார்பினன் ... *. குடிப்பேர். ஆழ்வார்க்குத் திருநாமம். சத்துரு. மாறனில் மிக்குமோர் தேவு முளதே * 3022/4 மால் தனில் – மாறனில். மாறுக 2603/3 ஒரைவரையே...*. எதிராக. மாறுடி நினைப்பர் (?) மாற்றி நினைப்பர். 1/அவ. " ஸ்வஸ்வாமி பாவத்தை ... *, மாற்றி.

மாறுத மலர்க் கமலம்* 1235/3 இடைவிடாத மலரையுடைய கமலம். மாறுய தானவன் * 2399/1 எதிரியான ராக்ஷஸன். மாறுளன் 3308/4 ... கவராத *. ஆண்பிள்ளை, பெரு மிடுக்கன், சாத்ரவ நிர்வாஹகன். மாறுன் 2408/1 ... புகுந்த மால் தான்*.

மாறு கொண்டு 1151/1 ... உடன்று *. கான், மாறு – சத்ரு — என்று சொல்லிக் கொண்டு. மாறு செய்த 867/1 ... வாளரக்கன் *. எதிரிட்டுக் கொண்ட. மாறுசேர் படை * 3410/1 எதிரியாய் வந்து சேர்ந்த படை.

மாறு நிறைத்து 3600/1 ... இரைக்கும் சரங்கள்*. எதிராக நிறைத்து – வந்து குவிந்து. மாறும் பல் யாக்கை * 2130/1 மாறி மாறி வருகிற பல் யாக்கை. மாறென் றில்லா வாசம் * 1516/3 ஒரு மாறில்லாத பரிமளம். ஒப்பற்ற பரிமளம்,

மான் கொண்ட தோல் * 1518/1 மான் தோல். மான் பிணை * 276/3 மானின் பேடு. மான்றேர் * 989/1 ஒலி மாந்தேர் பார்.

மானங்கள் 3644/2 துயரஞ் செய் ... *. அபிமாநம், துர்மாநம். மானம் வேண்டோம் * 1872/1 நாங்களும் ஆண் பிள்ளைகள் என்கிற துர்மாநத்தை வேண்டோம்.

மான மணி 1728/2 மைம்...*. பெரு விலையுள்ள மணி. மானம் – பெருமை. அது பெரு விலையாயிருக்கை.

மானமரு மென்னோக்கி * 322/1 மானை விட்டு, இங்கே அமரும்படியாயிற்றே கண்ணழகு தான் இருப்பது. மானமிலாப் பன்றி * 614/2 மான அவமானம் தெரியாத பன்றி. மானவர் 1048/2 மாதவ ...*.

மநுஷ்யர்கள். **மான வெண் குடை** * 1277/4 பரப்பை யுடைத்தான வெண் கொற்றக் குடை. **மானவேல்*** 1372/1 இலை யகன்ற வேல்.

**மானுங்காரம்*** 3967/4 மஹத்து அஹங்காரம். ... த்தில்வ பத்து* 3967/4 மஹதஹங்காராதி ரூபமான பிரக்ருதி, அதைப் போக்குகைக் காகச் சொன்ன பத்துப் பாட்டு.

**மானு(நா)விச் சோலை** 3982/2 மஹா நவ மிக்கு அலங்கரிக்கும் சோலை. தந்நகரம் றன்னகரம் இரண்டும் வருவது காண்க.

**மானிட சாதியர்** 363/3 நாவிற் கொண்டமையாத ... *. பெறு தற்கரிதான மநுஷ்ய ஜாதியிலே பிறந்தவர்கள்.

**மானுகர் சாரல்** 1824/4 ... மாலிருஞ் சோலை*. மான்கள் தேனை நுகரும் சாரல். **மானுரியதள்*** 1935/1 மானில் உரித் தோல் - மான் தோல். அன்றிக்கே மா - மஹாநன ஆனை. அதில் உரித்த தோல்.

**மானை நோக்கி** * 3883/1 மான் னையும் படியான நோக்கை யுடையவள். மான் நாணும்படியாய்த்து இவள் நோக்கு இருப்பது. னை – னையும் என்றதில் கடைக் குறைத்தல். **மானோக்கம்** * 2772/2 விலக்ஷணமான பார்வை. மான்போன்ற பார்வை.

**மிக்க சீர்த் தொண்டர்*** 1960/2 அநந்ய ப்ரயோஜநரான ஸ்ரீ வைஷ்ணவர்கள். **மிக்க சுற்றம்*** 1409/2 அளவிறந்த ஜ்ஞாதி வர்க் கம். **மிக்க தாடாளன்*** 1539/3 ஏற்றத்தை யுடைய திருவடிகளையுடை யவன். **மிக்கவன்** 3517/3 வளம் ... *. பரிபூர்ணன்.

**மிக்கவாதிப் பிரான்** * 3337/4 தன்னுடைய ஐசுவர்யாதிகளால் ஸம்ருத்தனும் ஜகத் காரணமான ஈசுவரன். **மிக்க வுலகுகள்** 3361/1 ...தோறும்*. விஸ்த்ருதமான, ஸம்ருத்தமான லோகங்கள். **மிக்க வேதி யர்** * 945/1 வேதியர் – பூர்வபாக நிஷ்டர். மிக்க வேதியர் – உத்தர பாக நிஷ்டர், அநேக சாகாத்யாயநம் பண்ணினவர். **மிக்கனன்** 3520/1 குணம் ... *. மிக்கவன்.

**மிக்கார்** 3106/3 ... வேத விமலர்*. அதிசயிதமான ஸ்வபாவர் கள். **மிக்குள்ள பிள்ளைகள்*** 481/2 எஞ்சின, அவசிஷ்டரான பிள்ளைகள்.

**மிகப் பல வசுரர்கள்** * 3921/3 மிகவும் பல அஸுரர்கள். **மிக வெல்லை** * 3277/1 முடிந்த எல்லை. **மிகுத்திருக்கும்** 1984/அரு. அவ. அதிகமாயிருக்கும். **மிகுத்தாலும்** 3042/ப்ர. (12) "விரோதி ...", அதிகமானாலும், வலுத்தாலும்.

**மிகுந்தேவு** * 3024/2 ஈசுவரனோடே மசக்குப் பரவிடும் படியான தேவ ஜாதி. ஆட்டத்தில் மயக்கமுண்டாம்படி பரவிடுகையால் வந்த சொல் மசக்குப் பரவிடுதல். **மிகுநரை யிலனே** * 2900/4 மிக்காரை யில்லாதவன். மிகுநர் – மிக்கார். **மிகு மதத் தேன்** * 2351/2 மிக்க மத கரமான தேன்.

**மிகை** 434/4 ஓர் புள்ளி ... *. அதிகம். "சொன்ன ... யெல்லாம் பொறுக்கும்". ஏற்றம். 3187/ப்ர.

**மிச்சில்** 713/3 அடிசிலின் ... *. மிச்சம். **மிசை** 1194/3 மலரின் ... *. 1846/1 மலர் மிசை ... *. 3493/1 மண் ... *. மேலே.

**மிடற்றுக் கழலை** 2901/4 அடை அரு. "... போலே ஸர்வதா அநுவர்த்திக்கும்"; கழுத்துப் புண்.

**மிடறு** 239/1 ... மெழு மெழுத்து *. கழுத்து. **மிடறு பிடி** (வா. மா. 16) "அவனுக்கு ... யாய்ப் போருவது". மென்னைப் பிடி, கழுத்துப் பிடி. **மிடா** (வா. மா. 190) "தேனமுதையும் ... வோடே ஸமர்ப்பித்து." தடா, அண்டா, கொப்பரை,

**மிடி** பட்டார் – கிலேசப் பட்டார். **மிடியற** – கிலேச மற. **மிடியில்லை** 3488/4 எனக்கு இனி யொரு ... ". கிலேச மில்லை. **மிடியன்** ஸ்ரீ வ. பூ. 339. **மிடுக்கு** * 21/4 சக்தி.

**மிடைந்த சொல் தொடை** * 2975/3 நெருங்கின. **மிடைந்தது** 2809/2 ... பாரத வெம் போர் *. **மிடைந்த மாவி** * 779/3 கோபித்த மாவி. **மிடைந்திட்டு** * 1904/3 நெருக்கிக் கொண்டு. **மிடைப் பட்டது** – சிரமப் பட்டது, மிடிபட்டது. **மிடைந்தவை** 2140/2 ... மீண்டொழிய *. நெருங்கினவை, ஸம்மந்தப் பட்டவை.

**மிடையா வந்த** * 1514/1 ... வேல் மன்னர் *. திரண்டு வந்த. **மிடைவது** * 3803/3 நெருக்கப் பண்ணுவது, சிந்திப்பது, மிடைகை – நெருக்க மாதல், விசார மாதல்.

**மிண்டர்** * 885/4 மூர்க்கர். விழுக்கா டறியாதவர்கள், முன்னும் பின்னும் விஷய மறியாதவர்கள், நன்றி கெட்டவர்கள். **மிண்டிப் புகுந்து** * 17/4 நெருக்கிப் புகுந்து, முற்பட்டு மேல் விழுந்து.

**மிதப்பு** 3418/ப்ர. தெப்பம். "ஒரு ... ப் பெற்று தரிக்குமாப் போலே". **மிதி** 2056/1 ஒண் ... யில் *. அடி. **மிதியடி** 3419/2 "... யாம் படி ஸ்ரீ சடகோபனுக்கு." பாத ரக்ஷை.

**மிலேக்க** 2571/3 ஊரா ... *. கலேக்க. **மிழற்ற** 379/1 குமிழிக் கண்கள் ... *. நிரம்பா மென் சொல்லாலே ஆளத்தி லவக்க. **மிளிர் கண்ணர்** 929/2 அழ. நா. "குருடர்க்கு வைத்த அறச் சாலேயிலே ... புகுரலாமோ". **மிளிர் தந்து** 2525/1 ... ஆங்கே *, மிளிர்ந்து.

**மிளிர்ந்த கண்** 2542/4 ... ஞ யெம்மை*. **மிளிர்ந்தால்*** 2479/1 கயல் ... *. புரண்டால். மிளிருகை சலிக்கை. **மிளிர்ந்தவை** 2401/1 உயிர் மேல் ... யோ *. புரிந்தவை, திருப்பினவை. **மிளிர்ந்து** 472/1 ... மின்னும்*. ஒளி விட்டு. **மிளே முயல்** 1710/3 முயல் துளர் ... ...*. மிளே - சிறு தூறு, சிறு புதர். அதிலுள்ள முயல்.

**மிறுக்கி** யோஜிக்கிறுர் 3426/4, 3428/4 ச. அரு. (?). **மிறுக்கு** 3062/4 கோலே, பிரயாஸம். 3483/4 "இதில் கோலே யில்லே. ஒரு மிறுக்கில்லே". அநுபபத்தி. 3612/1 "... கின் கார்யம்." துக்கம். பீடை. **மிறுக்குகள்** 3612/1 "தேவ ஜாதி கிடந்த இடத்தில் கிடவாதபடி பல ... ளேப் பண்ணி." 3469/1 "கிட்டி நின்று இவர்களே சில ... ளேப் பண்ணப் புக்கான்". நிஷ்டுரோக்திகளே.

**மிறுக்குப் பட்டு** 3217/4 "... நிற்கும்". இலேசப் பட்டு. "... ப் படா நின்றேம்." 1270/3 பீடை படா நின்றேம்.

**மீறுங்கன்** (?). "சொல் ... ஞை திருவடியும்". அநுபந்தம் பார். **மிறை** 3612/2 பல செய் ... *. பீடை. செய் மிறை - செய்யப் பட்ட பீடை. 1002/2 கொடு ... க் கஞ்சி *. ஹிம்ஸை. **மிறைத்து** 263/1 விரும்பித் தொழ ... *. ஆதரித்து.

**மின் குலா மருங்குல் *** 1146/3 மின் போலே வளேயா நின்றுள்ள இடை. **மின்கொள் சேர் புரி நூல் *** 3461/1 மின்னே வென்று திரு மார்வுக்குச் சேர்ந்திருந்துள்ள யஜ்ஞோபவீதம். **மின் கொள் நேமி *** 770/3 மின்னு நின்றுள்ள நேமி.

**மின்மினி** பறவா நின்றது 3190/3 வெறி யோடுகிறது. கண் வெறித்துப் போகிறது. மின் மினி - மின் மினிப் பூச்சி. கண் பூச்சி பறக்கிறது. நன்ருகத் தெரியாததால் பூச்சி பறப்பது போலுள்ளது என்று பொருள்.

**மின்னியல் மேகம் *** 97/3 மின்னே இயலாக ஸ்வபாவமாக உடைய மேகம். **மின்னே யிரு சுடரை** 2866/1 மின் - பெரிய பிராட்டியார். இரு சுடர் - திருவாழி திருச் சங்கு.

**மினுக்கம்** 1474/1 (?) மேன்மை (?). **மினுங்க** 638/4 வன மாலை ... *. விளங்கும்படி. ... 3523/3 (24) "ஐசுவர்யம் ... அவன் கிடந்த தேசம்." பிரகாசிக்க. **மின்னொளி** 3232/3 வெம் ... வெயில் *. பேய்த் தேர், மிருக திருஷ்ணிகா.

**மீட்சி** 3340/4 ... யின்றி வைகுந்தம்*. திரும்புதல். **மீட்டு** 404/1 உயிர் ... *. **மீட்டும்** 357/2 ... மதுண் டுமிழ்ந்து *. பின்னையும், மறுபடியும், திரியவும், திரியட்டும். **மீண்டேயும்** 692/3 எறி கடல் வாய் ... *. மீண்டும் ஏயும் – வர்த்திக்கிற.

**மீதளிப்ப** 494/1 எதிர் பொங்கி ... *. மேலே வழிய/யும் படி. **மீதிட்டு** 2578/8 ... ப் பச்சை மேனி *. ஸ்பர்த்தித்து. போட்டி போட்டுக் கொண்டு. **மீதியன்** 3020/2 எண்ணின் ... *. மேற்பட்டவன். **மீதினில்** 2672/3 இரு சுடர் ... இயங்கா *. மேலே.

**மீதூர்ந்து** 3264/ப்ர. "ஆற்றுமை ...". மேலிட்டு. **மீதூர** 2035/4 வேட்கை ... *. அதிசயிக்க. 3009/3 நோயும் பயலைமையும் ... *. **மீபாரம்** 1525/1 மண்ணின் ... *. மேல் பாரம். **மீபால்** 3706/3 ... நின்ற வெம் பெருமான் *. மேலைத் திக்கில்.

**மீமிசை** 1266/2 உந்தி மாமலர் ... *. மேலே. **மீமிசை யண்டம்*** 1050/3 பரமபதம். மேலுலகம். **மீமீது** 638/1 ... ஆடா வுலகத்து*. மேன்மைக்கு மேல். மீ மீது இரண்டுக்கும் மேலே என்று பொருள்.

**மீள்வில்லை** * 3238/3 மீட்சி யில்லை. **மீள்விலாத போகம்** * 863/4 மீட்சி யில்லாத, இடையூறில்லாத, பின்வாங்காத கைங்கர்ய போகம். மீள்வு – மீட்சி. **மீள** 65/2 ... அவன் மகனை *. மீண்டும்.

**மீளாத் துயர்** * 691/3 நித்ய துக்கம். **மீளா வடிமைப் பணி** * 3861/2 இடையறாத கைங்கர்யம்.

**மீளி** 3624/2 ஆண் திறல் ...*. ஸிம்ஹம், மிருத்யு. **மீளியம்புள்*** 3623/3 மீளி யென்று ஒரு சொல்லாய் வலியுடைய பெரிய திருவடி. மீளி அம் புள் – பிரதிகூலர்க்கு மிருத்யு போலேயாய் அம் அழகான புள். மீளி வலியும் மிருத்யுவும்.

**மீன்படு குட்டம்** 3050/ப்ர. "ஸமுத்ரம் தன்னை ... மாக அறிகிறதில்லை". மீன் உண்டாகும் குழி. படுதல் உண்டாதல், குட்டம் – குழி. ஸமுத்ரத்தை மீன் குழியாக அவமதித்துச் சொல்லும் சொல்.

மீனேக்கு நீள் வயல்* 690/1 கடல் வற்றினும் நமக்குப் புகலிடம் இதுவே என்று மீன் நோக்கி யிருக்கும் பெரிய வயல்.

முக்க 3084/4 "புறம் போய் மண்ணை ... வே." தின்ன. முக்கணம்பி * 1063/3 முக் கண்ணனுக்கும் நம்பி – அந்தர்யாமி. முக்கணன் * 804/1 முக் கண்ணன். முக்காலைக்கும் 1474/3 அரு. இறப்பெதிர் நிகழ் மூன்றிலும்.

முக்கி 2653/2 முகம் சிதைவராமன்றே ...*. வருந்தி, சிரமப்பட்டு. முக்கியம் 279/1 ... த்தை முடிப்பான் *. 3448/2 முடித்துக் கொண்ட ... மும் *. வேண்டப் பாடு, பெருமை. முக்குணம் * 2672/17 ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணம். முக்குவார் 967/1 "கர்ப்ப கேதத்தாலே ... ரைப் போலே."

முக்கைசு 1648/1 பைதல் பார். கைசு பார். மூன்று சிறுங்கை. முக்கோட்டை 3276/3 "பாடுவித்த ... இருக்கும்படி" எல்லார்க்கும் கவி தோற்றுவிக்கும் விநாயக ஸ்தலம் (மலையாளத்தில்). 3961/4 பாடுவித்த ... யிறே. மூகாம்பிகா க்ஷேத்ரம். மூக்கோட்டை பார்.

முகக் கமலம் * 1183/3 முகத் தாமரை. முகக் கொள்ள 3423/4 "... வொண்ணாத" பரிச்சேதித்து க்ரஹிக்க.

முகங் காத்த மலை 271/2 நாரணன் முன் ...*. வர்ஷ முகத்தைத் தகைந்த மலை. முகச்சுளிப்பு 1740/4 அரு. "அவனுக்கு ... வாராதோ" அஸம்மதி. முகச் சோதி 3121/1 ... யாய் மலர்ந்ததுவோ *. முகக் காந்தி. முகஞ் சிதைவர் 2653/2 ... ராமன்றே *. முகம் கீழ்ப் படுவர். சிதைந்த முகமாயிருப்பர். முகஞ் செய்கை (?). அரு. தேஜஸ்ஸ ஒரு முகமாயிருக்கை.

முகட்டுச்சி 982/3 சேய் ... *. சிகரத்தின் மேல் பாகம். முகடு – உச்சி. 2327/1 மலை ...*. முதுகு பாகம். முகடுருவ வளர்ந்தது. 968/3 "ஆகாசத்திலே ... ததால்". ஸாந்த்ரமாக – நெருக்கமாக.

முகத்தலை 3768/1 "... யறிந்து உடுத்துதல்" தலைப்பு அல்லது கரை. வேஷ்டி புடவைகளில் முகதலை என்றிரும். முகத்தன 518/4 ... கண்க ளல்லவே *. முகத்திலுள்ளவை.

முகந்து கொடு 477/2 ... ஆர்த் தேறி *. கிரஸித்துக் கொண்டு, மொண்டு கொண்டு. முகந்து கொண்டருளிச் செய்யும்படி 3521/4

மண்டி அநுபவித்துக் கொண்டு பேசுகை. "எம்பார் அருளிச் செய்யும் போது ... கேட்டறிகை யில்லையே".

**முகந் தெழு பானை** 3406/4 "... யான மிரவதிக ஸம்பத்து". ஏற்றப் பானை, ஏற்றச் சால்: உத்தரோத்தரம் அபிவிருத்தமாய் வருகிற ஸம்பத்து.

**முகப்படாம்** (?) முக மூடி. "கொல்லு மானைக்கு ...". முகப் பட்டம். (முக படாம்) 588/3 முகத்தை மறைக்கும் சோடு. **முகப்படாய்** 3573/2 முன் செய்த வினையே ... *. முகம் தோற்ற வில்லாய். **முகப் பழக்கம்** 3451/1 ப்ர. (?). **முகப்பு** 3798/4 கண் ... பே*. எதிர், முன் பாகம். 1/அவ. "முகப்பிலுண்டான ஸௌசுந்த்ர்யம்." **முகப்பே** 3721/2 ... கூவி *. கண் வட்டத்திலே. முன் புறத்தில்.

**முகம் பண்ண வேணுமோ** 3042/3 அலங்கரிக்க வேணுமோ. நரஸிம்ஹ முகமாய் வரவேணுமோ என்று பொருள்.

**முகம் பழகின** 3462/ப்ர. 3959/3 (?). **முகம் பனி படைக்கும்** 1183/4 முகம் துக்கத்தை யடையும். பனி கண்ணீராய் துக்கம். **முகம் பெறுகை** 3169/2 (?) "பாரியை பக்கல் ... க்காக.

**முக மாளிகை** 1183/3 துங்க ... *. முகத்தை யுடைய மாளிகை, முன்புறம். **முக வொளி** * 3470/4 ... திகழ.

**முகவணைக் கல்** 2703/1 "... ஏற்றுவாரைப் போலே". போதிக் கல், தூண் மேலுள்ளது. **முகவரை** 1/4 "எல்லாப் பாட்டுக்கும் இது தான் ...". நாயகக் கல் போலே பிரகாசமா யிருக்கும்.

**முகவுரை** 1/4 "எல்லாப் பாட்டுக்களுக்கும் ... ...". வருஷம் மாஸம் எழுதுவது. பத்திரிகைகளில் முன் சொல்லும் மங்களம்.

**முகில் கணம்*** 710/2 மேக ஸமூஹம். **முகிலின் பவளம்** 3795/4 பனிங்கு நீர் ... *. மேகம் பூத்த பவளம். நீலமேக மூர்த்தியின் சிவந்த உதடு. **முகில் கன்று** 185/3 ... போலே *. சிறு மேகம். **முகிழ்தர** 3715/2 சோதிச் செவ்வாய் ... *. முகுளமாக, மொட்டிக்க. **முகிழ் நகை** 28/4 ... யீர் *. மந்த ஸ்மிதம். **முகிழ் நிலா** 2772/1 ... வந்தரும்ப *. இள நிலா. **முகிழ் முலை** 26/4 ... யீர் *. குவிந்த முலை.

**முகை** 1722/3 ... யோடும் *. கரு முகைப் பூ. **முசிக்கை** 9/1 "திருவரையிலே ...யாலும்" நலங்கப் பண்ணுகை, கசங்கப் பண்ணுகை,

கசக்குகை. முசித்தேன் 1034/4 (?) கிலேசித்தேன். முசிந்த ஆடை 500/5 " அவனுடுத்து ... ". கசங்கின ஆடை. முசிப்பு 3548/4 (6) " ... பாலே அந்தோ என்கிறார்."அத்ருப்தி. முசியாத 3092/2 " ... அத்விதீய காரணம்." சோம்பாத.

முசு 1543/1 ... வும் படையா*. முசுக்கணங்கள்* 272/3 கோலாங்கூலம், மாட்டு வால் போன்ற வாலுள்ள குரங்கு. கொண்ட முசுரு. மலைக் குரங்குகள்.

முசுகு 3127/2 " ... வாலெடுத்தாப் போலே." கிளர்ந்து. முசு, கொண்ட முசுரு.

முட்குத்து நிலம் 3171/2 கோல் குத்து நிலம், ஊசி குத்து நிலம். முட்கோல் 3171/2 தாற்றுக் கோல், தாற் குச்சி. " ... லாலே சாடி" " அம்பும் தாற்றுக் கோலும் ".

முட்டப் போக மாட்டாதே 3429/ப்ர. ... ச் சொல்ல மாட்டார். முட்டாணி ( வா. மா. 442) (?) " அவிவேகம் ... யாகவும்."

முட்டி 971/2 " நம்மில் ... ". தாக்கி. 3466/3 வார்த்தை ... நிருத்தரனா யிருந்தான்." 2562/1 " இருளோடு ... ". இட்டி முட்டில் பல் போகம் * 3222/1 நித்யமான போகம். முட்டிலன் 3221/4 யானொரு ... னே *. விலக்கிலன். தடையிலன். முட்டு – தடை.

முட்டுப் படக் கடவது 3222/1 "'தட்டுப் பட ..." தடைப் பட ... முட்டுக் கட்டை என்பது போல.

முட்டுப் பொருது 3333/1 " அர்த்தம் ... ". முட்டுப் பொறுக்கும் 2583/4 " ஆசிரயிக்கைக்கு ... ம் அத்விதீய பர தேவதை இவனல்ல தில்லை". " ... த்து நின்ற ருத்ரன்" 3332/2. ஸமர்த்ததவேந நின்ற சிவன். முட்டை 1938/4 கோழி வெண் ...*. முட்டைக் கோட்டை* 3326/2 ஜக தண்டமாகிற கோட்டை.

முடக்கி 709/2 ... ச் சேவடி *. மடக்கி. முடிக் கடவுள் * 1819/2 கிரீடாதிபதியான பகவான். முடிக் கோலம் * 2996/2 அழகான முடி. முடி கூடிற்றில * 287/1 முடியும்படி சேரவில்லை. முடிச் சோதி * 3121/1 முடித்து 3120/4 அணைவிக்கும் ... தே *. போக்கி. முடிந்த அதிகாரிகள் 433/ " ... பிராட்டியும் நித்ய ஸூரிகளு மிறே": ஸர்வோத்தரமான அதிகாரிகள்.

முடிபாத மெழ * 3594/3 முடியும் பாதமும் ஒக்க எழ. முடி புல்கு நெடு வயல்* 1715/3 காத்து முடிகளையுடைய பரந்த வயல்.

முடியன் * 176/4 முடியை கிரீடத்தை யுடையான். முடியான் * 2328/3. முடியினன் * 3126/3. முடி யொன்றி * 312/1 திரு முடி சூடி. முடி வட்டம் * 2294/2 நீண்ட ... *. கிரீடம். முடிவது 2383/4 அருள் ... ". பெறுவது.

முடிவில்லது 935/3 ... தோ ரெழில் *. அவதி காண வொண்ணு தது. முடிவிலி/லீ * 3998/4 அபரிச்சேத்யனானவன்.

முடுக்குத் தெரு 538/2 குறுந் தெரு. ஸ்ரீரங்கத்தில் மேல முடுக் குத் தெரு கீழ முடுக்குத் தெரு உண்டு. " மாலாகாரருக்கு ... வி லே யிறே அகம்."

முடுகிக் கொடு நிற்கையாலே 2545/அவ. " அது ...". 2558/அவ. " இருளும் போய் ... ". 3665/2 " சிசுபாலன் ஸ்வயம் வரத்துக்கு ... கின தசையிலே". 3314/1 " சிறுக்கன் மேலே அவன் ... கின வாறே". துணிந்தவாறே. 3634/அவ. " சத்ருக்கள் வந்து ... வாறே". கிறைந்த வாறே என்னலாம். முடுகுதலும் 265/3 இளஞ்சியம் தொடர்ந்து ...*. கிட்டப் புகுந்த வளவிலும்.

முடை 1528/3 ... யடர்த்த சிரம் *. துர்க் கந்தம். முடைக் கலம் 2563/2 ... த் தூண் *. துர்க் கந்தியான கபாலம். ... நாற்றம் 3628/3 " வெண்ணெயிலே ... ". சிக்கு நாற்றம் முதலியவை.

முண்டத்துக் காற்று 105/2 ... முகில் வண்ணுவோ*. கையிலுள்ள கபாலத்துக்குப் போருகிற தில்லை. மூண்டம் தலையோடு:

முண்டர் 879/1 சமணர் ... *. சைவர். தலை மொட்டை யடித்துக் கொண்டிருப்பவர். முண்டன் 822/3 ... வீறன்*. ருத்ரன். ஜடாதாரியா யிருக்கையில் முண்டன் எப்படி? முண்டியான் 2050/2 ... சாபம் தீர்த்த*. தாபஸ வேஷத்தையுடைய ருத்ரன். தாபஸ வேஷம் ஜடா தார ணம். இங்கே முண்டியான் என்பது எப்படி?

முத்தக் காசு 2954/4 " ஸ்ரீ வராஹ நாயனார்க்கு ... ". கோரைக் கிழங்கு. முத்தப்பன் 3481/2 பொன்னப்பன் ... *. முத்துப் போலே போக்யன், உபகாரகன்.

முத்தம் தா 245/4 குட்டனே ...*. முத்தம் அதரம், உதடு. முத்தன்ன வெண்முறுவல் * 550/2 பல். முத்தனார் 660/3 ... முகந் தனார் *. முத்தார் கொங்கை * 232/2.

முத்தாறு 1547/1 மணி ...*. முத்துக்களையுடைய ஆறு. முத்தி 330/4 ... னற்றலாகுமே *. பகவல்லாபம். ... 1919/2 உச்சியில் ...* மோந்து, முத்தமிட்டு. முத்தி(தீ) மறை * 2277/2 ... யானவன் *. மோக்ஷத்தைச் சொல்லும் வேதம். முத்தீ யென்று பாடமாகில் மூன்று அக்நியைச் சொல்லும் வேதம்.

முத்திறத்து மூரி நீர் * 833/2 மூன்று விதமான நீருக்கு இடமான கடல். மூன்று விதமாவது - ஆறு, ஊற்று, மழை - இவை. முத்திறத்து வாணியம் * 819/1 மூன்று விதமான வாணியம். ராஜஸ தாமஸ ஸாத்விக ரூபமான தேவதைகளை ஆராதித்துப் பெறும் பலன். வாணியம் - பலன். முத்திறம் 481/2 நந்தகோபர்க்கு ... உண்டே." ஆட்டுத் திறம், மாட்டுத் திறம், எருமைத் திறம் மூன்று விதமான மந்தை.

முத்தின் குப்பாயம் * 640/3 முத்துச் சட்டை. முத்தின் பவளமும் 77/1 முத்தும் இனிய பவளமும். முத்தின் இள முறுவல் * 688/2 முத்துத் தோன்றும்படி இனிதான இள முறுவல் - மந்தஸ்மிதம். முத்தீ 2672/13 மூன்று அக்நி. கார்ஹபத்ய ஆஹவநீய தக்ஷிணாக்நிகள். முத்தீயர் * 1221/3 ... நால் வேதர் *. மூன்று அக்நிகளையு முடையவர்.

முத்துக் குவை * 1638/2 முத்துக் குவியல். முத்துடைத் தாமம் * 581/2. முத்துத் தாமம் * 935/3 முத்துமாலை, முத்துவடம். முத்துப் பட்டது 2953/4 முத்து உண்டாயிற்றது.

முத்துப் பந்தல் 919/2 ... விரித்தாற் போலே". முத்தாலான மேற் கட்டி. முத்துலை யிட்டு 2348/4 "... க் கொண்டு". இவ்வ ளவினர் நின்றான். முத்துலையிடுகை - மூன்றை மூன்றாகப் பெருக்கிச் சொல்லுகை.

முத்து வடம் 269/3 ... பிறழ *. முத்து மாலை. முத்தாணி (பெ. மா. 827) "..., ணிட்டுக் கறக்கிலும் பசுவுக்குப் பாலன்றோ வேண்டு வது". முத்தாணியாவது மூக்காணி. அதன் மேல் பாத்திரம் வைத்துக் கறக்கை. முத்தொளி மரதகம் * 2041/3 முத்தின் வெளுத்தியும் மர தகத்தின் ஸ்யாமளத்தையு முடையவன்.

முதல் கெடல் 2923/2 அமைவுடை ...*. ஸ்ருஷ்டியும் ஸம்ஹார மும். முதல் சாய்த்து * 3370/2 வேரோடே பறித்து.

**முதல் தனி** 3998/2 ... புன்னை *. பிரதாநமாய் ஒப்பில்லாதது. **முதல் தனி வித்து*** 162/1 த்ரிவித காரணமானவன். 3997/4 ப்ரதம ஸ்ருஷ்டம். 3998/1 காரணம். **முதல் பத்தர்** 3651/3 தா ... *. பிரதாந பக்தர்கள். **முதல் முன்னம்** 3036/4 அடைந்தேன் ... *. முதலுக்கும் முன்பே. 532/4 "எங்கள் பரியட்டத்தை ... தா". முந்துற முன்னம், முதலில், **முதல் மூர்த்தி*** 1829/2 பிரதாந மூர்த்தி. **முதல் வித்து*** 3776/2 பிரதாநமாயுள்ள உபாதாந காரணம்.

**முதல் விரல்** 1048/1 "திவ்யாயுதங்கள் ஆபரணங்களுக்கும் அழகுக்கும் ... லாயிற் றிருப்பது." முத லெண்ணு மிருக்கை.

**முதலடி** 2899/அவ. முழுச் சொல்லு. காரியத்துக்கு முதலடி. ஸாதந தசை. **முதலடி யிடாத லௌகிகர்** 3123/அவ. "நம் பக்கல் ...". பழக்க மில்லாத என்று சொல்லத் தகும். **முதலப்பன்** 3651/3 வாய் ... *. ப்ரதாந பந்து, காரண பூதனான உபகாரகன். **முதலரிய வல்லார்** * 1097/4, 2081/4 ஸவாஸநமாகப் போக்க வல்லார்.

**முதலாம்** 3088/3 வீடு ... *. ஹேதுவாகும். **முதலா முற்றும்** 2941/1 உயிர் ... *. முதலான எல்லாம். **முதலாய நல்லான்*** 2096/2 காரண பூதனான அறவன். **முதலாயோர்** 1102/1 சமண் குண்டர் ... *. முதலானோர். **முதலார்கள்** 1453/3 ... ளூமறிவருநிலை *. பிரதாநர்கள். **முதலாளி** 1142/அரு "... பட்டபடி". **முதலிகள்.** "திருவாசல் காக்கும் ...". அதிகாரிகள், ஸ்வாமிகள்.

**முதலிட்டு** 2999/அவ. "... நடுவிட்டு, முடியிட்டு". முதலில், நடுவில், முடிவில் என்று பொருள். **முதலியார்** (?) அடிகள், ஸ்வாமிகள் **முதலித் தனம்** 3467/4 பெருந்தனம்.

**முதலில கேடில** * 2922/2 முதலுமில்லை, முடிவுமில்லை. **முதலுறவு** 3145/2 "... பண்ணும் கண்", 3627/1. **முதலொரு வீடு** 1989/1 ... மறியாதே *. முதலும் முடிவும்.

**முதிர் சுவை** 3037/1 யாழ் நரம்பின் ... *, பண் பட்ட ரஸம். **முதிர் மாலை** 2550/2 சுர ... *. முதிர்ந்த மாலையான ராத்ரி. **முதிராத இன் சொல்** * 1225/3 மழலைச் சொல்.

**முதுகம்** 364/1 ஆமை ... *. முதுகு. **முது கயம்** 1693/1 ... திப்பட *. கடல். **முதுகிற் பெய்து** 272/3 ... தம்முடைக் குட்டன்களை *. முதுகிலே கட்டிக் கொண்டு.

முதுகிட்டார் 3249/2 முதுகு காட்டி ஓடினார். முதுகிடே இடப்பட்டார். முதுகுன்று* 1165/1 பழைய மலை. முதுகெடேபோம் 3165/ப்ர. நீங்கு வரும். முதுபுணர்ப்பு 2435/2 பிரதானமான விஷ்ணு மூலவராய் நின்ற பார். முது பெண் * 308/3 குளிகையில் முதிர்ந்த தாடகை.

முது மணற் குன்று * 115/1 உயர்ந்த மணற்குன்று. முது மதிள்* 2046/1 வலிய மதிள். முதுமை 3477/2 இளமை ... *. வார்த்தகம். கிழத்தன்மை.

முந்தி 1336/3 ... நிற்றிர் *. 1582/2 ... ச் சென்று. முன்னே. முந்திரிகை நிலம் 3231/1 அல்ப்பம் நிலம். முந்திரி மாகாணி என்பது. முந்திரிகைப் பழம் 3917/4 திராக்ஷைப் பழம். முந்து நூல் * 1494/1 முன்பே பழசாய் அபௌருஷேயமாய்ப் போருகிற வேதம். முந்துற்ற நெஞ்சம்* 2585/1 முற்பட்ட நெஞ்சு. முந்துற முன்னம் 3697/4 (?) முதல் முதலாக.

முழுந்தை 710/1 ... நன்முறை *. தொன்று தொட்டு வருகிற. முந்தைத் தாய் தந்தை* 3413/2 முதலிலுண்டான மாதா பிதாக்கள். முந்தையர் 2300/4 ... ராய் நிற்பர் *. முற்பாடர். முந்தை யாயிரம்* 3505/3 பழையதான ஆயிரம்.

முந்நீர் 1488/1 ... கடைந்தும் *. ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர். முநீர் 1816/3 ... அமுது தந்த *. முந்நீர்.

முப்பத்து மூவரமரர்* 493/1 முப்பத்து முக்கோடி .... அஷ்ட வசுக்கள் 8, ஏகாதச ருத்ரர் 11, துவாதசாதித்யர் 12, அசுவிநி தேவர்கள் 2 ஆக 33. முப்பதாறு 755/1 மூன்று ... நிரேடு*. முப்பத்தாறு. முப்பதுவட்டமும்(?) "...வரவேணும்". முப்பது நாழிகைக் கோடு வட்டம்

மும்மதப் புனல் 86/2 படு ... *. கன்னம், தலை, லிங்கம் - மூன்று இடங்களில் ஒழுகும் மத ஜலம். மும் மதிள் 2672/3 ... இலங்கை*. காட்டரண், நீரரண், மலையரண் என்று மூன்று விதமான மதிள்.

மும்மை 1985/4 பெரு நீரின் ... *. மும் மடங்கு. முயங்க 3755/2 ... மொய்த்து *. கட்டிக் கொள்ள. முயங்கமர் 2089/2 ... ருள் *. தனி யிடமல்லாமல் ஜநங்கள் நெருங்கி யிருக்கும் யுத்த பூமி. முயங்கிய 1150/3 சண்பகம் ... முல்லை*. தழுவின், கட்டிக் கொண்ட. முயங்கும் 2381/2 ... கார் *. ஸம்ச்லேஷிக்கும்.

**முயல்** 3114/2, 3346/4 ... லாழி*. முயலுகை - யத்நம் பண்ணுகையும் உத்ஸாஹிக்கையும். ஸர்வேசுவரனிலும் ஆசிரித ரக்ஷணத்திலே முயலாநின்றுள்ள திருவாழி.

**முயல்கிற்பார்** * 2130/2 யத்நம் பண்ணுவார். **முயல்மினே** * 2272/2 முயலுங்கள். **முயலாதேன்** * 2933/4 கோலாத நான். ப்ரவ்ருத்தி செய்யாத நான். முயலுகை - ஒருப்படுகை.

**முயலாலு மிளமதி** * 1205/3 முயல் ஆலுகிற சந்திரன். சந்திரனுடைய இளமையிலும் முயல் ஆலாநிற்கக் குறையில்லை. ஆலுகை- துள்ளுகை. **முயலின்** 3291/4 அணிய ... *. முயன்றிடில்.

**முயற்றி சுமந்து** * 2585/1 முயற்றி - உத்ஸாஹம். அதை சுமந்து- வஹித்து, ஏற்று. **முயற்றிய வாய்** * 2669/1 முயற்சியுடையனவாய்க் கொண்டு.

**முரசங்கள்** * 3233/2. **முரசு** * 917/3. முரசம். அம் சாரியை. **முரட்டு வடிவு** 1076/4 "ஹிரண்யனுடைய ...". முருட்டு என்றும் உண்டு. "முருட்டுடல் ...". 3955/2 ஹிரண்யன் விஷயமாகவே இத் தொடர். வல்லினமும் காண்க. அரக்கர் அனைவரிலும் அவனொருவனே தடியன், பரியன்.

**முரண்** 2140/3 ... அழிய *. மிடுக்கு. 2116/4 படைத்த ... *. ப்ராதிகூல்யம். **முரணையவுன்** 1901/1 ... னையுகிரால் *. மிடுக்கன். **முரணைவலி** 117/1 ... தொலைதற்கு *. விபரீதமான பலம் - முரண வலி என்றும் பாடம். முரண்பட்ட பலம், தகாத பலம். அதாவது, அஹங்கார மமகாரங்கள்.

**முரல்** 3209/3 வண்டு ... திருவேங்கடம் *. **முரல்வன** 499/3 கடுங்க ... *. சப்திக்கின்ற.

**முரன்** 67/3 தேனுகனும் ... னும் *. முர ராக்ஷஸன். **முரன்று** 1146/3 இன்னிசை ... *. முரலி. **முரனுள்** 2359/2 ... வலம் சுழிந்த *. முராஸுரனுடைய நாள் - ஆயுஸ்ஸு.

**முரி** 1471/1 அணை. "... க்குக் கிழக்குப் பட்ட நீர்". **முரி திரை** 1116/2 ... மா கடல் *. அசைகிற அலை. **முரிந்த சிலை** * 2489/1 வளைந்த சிலை. **முரியேறு** * 2330/3 உலாவுகின்ற ஏறு.

**முருக்கமலர்** * 506/1 பலாச புஷ்பம். பலாசம் - அரசு. **முருக்கிதழ் வாய்** * 1937/3 அரசம் பூப் போன்ற உதடு. **முருக்கிலங்கு கனித் துவர்வாய்** * 1505/1.

முருக நின்று 687/அவ. "... நலிந்தலை சொல்லி". முருகும்படி நின்று. முருக நின்று என்றே பொருள். முருகன் 1607/1 திறல் ...* ஸுப்ரமண்யன். அழகன். முருகு - அழகு. முருகு 1372/4 தேனின் வாய் மலர் ... *. தேன். முருகு வண்டு * 1769/2 தேனைப் பருகும் வண்டு. முருகு 3473/ப்ர. (?) "... கொளுந்தினபடி". நாற்றம் கொளுத்துகிறது — என்பது போல. முருகு, வரை முருகு வறுத்த வஸ்துவின் மணம். தோசை வடை முருகச் செய்தல், முருகியிருத்தல்.

முருங்கையில் தேன் * 1933/4 குச்சிபோல் நீளமான காயுள்ள மரம். அதில் தேனுண்டு போலும்! முருக்கு - பலாசம், அரசு, மூன்றில் முருங்கை என்கையாலே வீட்டின் முற்றத்தில் வளரும் முருங்கை வேறு. முருக்கு மரம், பலாசம் வேறு.

முருடு 3084/4 "முருட்டுடம்பு" முரடு முருடு இரண்டும் ஒரே பொருள். கரடு முரடு என்னுமது. 3809/2.

முல்லைப் பிராட்டி * 600/1 அம்மா முல்லைக் கொடியே! முல்லைப் பிள்ளை * 1364/3 பிள்ளை பெண் பிள்ளையாய், அது போன்ற கொடி. முல்லைக் கொடி.

முலை 2673/1 "... யாவது காந்தன் படுகாடு கிடக்கு மிடம்". 2756/1. முலைக் கடுப்பு 2899/2 ஸ்தந பீடை. முலைக் கால் விட முண்ட வேந்தன் * 2433/2 கால்-வழி. முலைக் குவடு 2099/3 முலையாகிற மலை. ஸ்தம்பம் என்றும் வியாக்யாநம். ஸ்தம்பம் போலே பிடிக்கையாலே. முலைத் தடம் * 1504/1 முலைப் பிரதேசம்.

முலைத் தலை * 164/1 முலைக் காம்பு. முலை நோக்கம் 1865/2 ... ஒழிந்து *. முலை பேணுதல், விரும்புதல். முலைப் பாவைமார் * 1810/1. முலை போந்திலாதோம்* 519/1 ஸ்தநம் உண்டாகப் பெற்றிலோம். போக யோக்யதை உண்டாகப் பெற்றிலோம். முலை மடவார் * 1147/3. முலை மடவாள் * 1281/1.

முழக்கு 3982/3 அலை கடல் ... *. முழக்கம். முழங்கழலெரியம்பு 1698/1 முழங்குவதாய் நெருப்பு எரிவதாயுமுள்ள அம்பு.

முழங்கைத் தண்ணீர் 2478/2 "ஈசுவரனும் ஒரு ... கும் என்று இருந்த காலம்". அவசிய மில்லாமையைக் காட்டுகிறது. 2081/4. 3648/4 ஒருவன் தண்ணீர் குடிக்கையில் அவன் முழங்கையில் வழியும் தண்ணீர் நிஷ்ப்ரயோஜனம்,

**முழங்கொளி முகில்** * 2041/3 இடியும் மின்னலுமாயுள்ள மேகம். **முழஞ்சி** 449/2 முழை. **முழஞ்ச** 296/2 குழல் ...*. துவாரம். குழல் முழஞ்சு பார். முழைஞ்சு வேறு.

**முழந்தாள்** 26/4 ... இருந்தவா *. முழங்கால். **முழவ** 269/2 அந்தர — *. முழங்க. முழவம் அதனுடைய செயல் முழக்கம். **முழவம்** 925/1 பாழ் குழல் ...*. பெரு வாயன், பெரிய மத்தளம், மத்தளி. முழவம் ஓசை யென்றநஞ்சியர் வியா. **முழவு** 3294/2 ... வின்கொழ்*. முழாவுகிற ஆபுதாபரணங்கள். (அர்ச்சி. 3) முழங்குகிற.

**முழுக்க** 516/2 "எங்களை ... ப் பார்க்க வல்லீ". முடிக்க. முழுத்துதல் ஆழத்தில் அழுத்துதல். 3957/பர. (12) "திருமேனி ...". முழுதும். **முழுக்காட்ட** 493/8 "... வேணும்." பூர்ணமாக ஸ்நாநம் பண்ணி வைக்க வேணும் முழுக்கூட்ட வேணும் — என்றிருப்பது பிழையாகும்.

**முழுக் காயாக** 959/1 "... செத்துக் கிடந்தது". 496/4 "... அவிந்து கிடந்தது". எல்லாருமாக. 3315/4 மெத்திட்ட காயாக.

**முழுசா** 1880/4 "... முகத்தைப் பாரா." முழுமனுக. **முழுசாதே** 735/2 தழுவாதே ... *. தழுவுதலும் முழுசுதலும் ஒன்றே. **முழுசி** 631/1 தழுவி ... *. 3365/2 "... ன வாறே". முட்டினவாறே.

**முழுதகலும்** 1447/4 கொடு வினைகள் ... *. ஸவாஸநமாகப் போகும். **முழுதியன்றாய்/ன்** * 3128/2 எல்லாவற்றையும் நிர்வஹித்தான். **முழுதுடன் மாள** * 3706/2 எல்லாம் போம்படி.

**முழு நோக்கு** 495/7 "... ப் பொறுக்குமவள்". **முழு மனுக** 496/4 முழுக் காயாக என்பதன் பொருள். எல்லாருமாக. பருமன் தடிமன் போல் முழுமன் - முழுதும், எல்லாம்.

**முழு முதல்** 2973/1 ... ஆகிய ஆதியை *. எல்லாவற்றுக்கும் ஹேது. **முழு முதலான்** * 2972/4. **முழு முற்றும்** 2537/1 போந்திலர் * பூர்ணமாக. மீமிசையால் மிகுதியைக் காட்டுகிறது. **முழுமுற்றுறு வாழ் பாழாய்** * 3998/3 முழுதிலும் எங்கும் உறுகிற வியாபிக்கிற வாழ் பாழ்.

**முழு மூவுலகு** * 3998/1 ... முழு என்பது மேலே எல்லாம் என்பதோடு சேரும். முழுவெல்லாம் ஒன்றொழியாமலெல்லாம். **முழுவினை** * 2933/3 பூர்ண பாபம்.

முழை 449/2 ... யில் புக்கிட்டு *. பாழி, முழைஞ்சி, யோகி. 965/1 வரை ... *. முழைஞ்சு.

முள் பற்றை 1998/3 முள் கற்றை. முள் முளரி* 2833/2 முள்ளுள்ள தாமரை. முள்ளு மில்லாச் சுள்ளி * 505/2 இள விறகு, சிறு குச்சி. முள்ளெயிறு * 1666/1 தந்தாங்குரம், பல் முளை.

முளரி 2560/2 ... க் குரம்பை *. முள், தாமரை. முளரிக் குரம்பை – தாமரை இலையால் செய்த கூடு. ... க் கூட்டகம்* 1957/3 தாமரைப் பூவால் செய்த கூடு.

முளை 72/2 ... போல் சில பல் *. முளைக் கதிர்* 2065/1 உதய ஸூர்யன் போலுள்ள திவ்ய மங்கள விக்ரஹம். முளைப்பித்த 3776/2 உலகமூன்றும்...*. உண்டாக்கின. முளையட்டி* 252/2 திருமுளை சாத்தி

முற்கலன் 883/1 நமனும் ... னும் *. மூத்கலன். முற்குழை 631/3 "...கடைக் குழை," கும்பல் (?). முற்கூற்று (முமு). முதல்பாகம். முற் கொழுந்து 3869/ப்ர. "பசுக்களின் ... வந்து". இளங் கன்று (?).

முற்கோலிக் கொண்டு 917/அவ. முந்திக் கொண்டு. பிற்காலியாதே என்பதன் எதிரிடை. முற்தூசி 2058/2 "பாண யுத்தத்திலே பிரதானனாய் ... யிலே நின்றான்." தூசித்தலே. முற்பட 3378/4 முதலில். பிற்படவுக்கு எதிரிடை. முற் பாடனாக 8/2 "... ப் பெருமையாலே". முந்திக் கொண்டவனாக.

முற்றக் கரந்து 3997/4 ... ஒளித்தாய்*. எங்கும், முழுதும் வியாபித்து. முற்றம் 13/4 கண்ணன் ... *, வீட்டின் முன்புறம்.

முற்றல் முரியேறு * 2330/3 திண்ணிதாய் உலாவுகிற ஏறு. முற்றல் மூங்கில்* 803/3 முற்றின மூங்கில். முற்றல் யானை* 803/1.

முற்றலாகும் 830/4 முத்தி ... மே*. உண்டாகாது: முற்று அல்ப்பம். ஆகும் என்பது ஸ்வரம். ஆகுமோ என்றபடி; அலப்பமாவது ஆகுமோ என்றால் சிறிதும் உண்டாகாது என்று பொருள். முற்றல் = பக்வம். பக்வமாகாது, பலிக்காது என்றுமாம்.

முற்ற வருவது 68/3 ... தன் மூக்*. பூர்ணமாக வருவது. முற்றவும் மூவுலகும் 3636/3, 3997/3 த்ரைலோக்ய மெல்லாம். முற்ற விட்டு 2692/1 மற்றவன் பாசங்கள் ... * எல்லாம் விட்டு, முழுதும் விட்டு. முற்றவும் நின்றவன் * 2915/2 எல்லாமாயிருந்தவன்.

**முற்று விளையார்** * 1225/2 விளையாட்டுக் கவ்வருகு காரியம் கொள்ள வொண்ணுதபடி பருவத்தை யுடையவர்கள். யௌவநம் ஊசலாடாத பருவம். **முற்றில்** 41/4 ... லும் தூதையும் *. சிறு சுளகு, முறம். 286/1. முச்சில் என்று அரு. அதுவும் சுளகு தான். **முற்றில்** 2915/4 அவன் ... அடங்கே *. கைங்கர்யம், ஸகலம்.

**முற்றூட்டாக** 3976/2 ஏக போகமாக, பூர்ண ப்ரயோஜநமாக. 3451/3 " முறுவலே எனக்கு ... க்கினவன்."

**முறி** 349/3 ... யாழியும் காகம் *. துண்டு, முறிந்து ஒடிந்த பாகம். முறியாழி-முறிந்த மோதிரம். 2590/2 கருமா ... மேனி *. தளிர். முறி மேனி – தளிர் போன்ற மேனி. **மு றி ந் து** 630/2 தளர்ந்தும் ... ம்*. மயங்கி.

**முறுக்கடி** 3572/ப்ர. "விச்லேஷத்தினுடைய ... யாலே". முதிர்ச்சி. 3506/ப்ர. (9). "வ்யஸநம் ... யிடுகையாலே." முதிருகையாலே.

**முறுக்கி** 397/1 வேழத்தை ... *. கொன்று. **முறுக்ச் சொன்னது** 3379/4 " இப்படி... ". உறுதியாகச் சொன்னது.

**முறுகி** 1441/1 ... யெதிர் பொருதும் *. மிகைத்துக் கொண்டு. **முறுகின பாட்டு** 1375/4 " ... ப் பாடா நின்று கொண்டு ". பரி பக்வமான பாட்டு.

**முறுகு** பொருந்தினபடி 2565/1 திருடமாகப் பற்றுகை. வயிரம் பற்றினபடி. வயிரத்தில் தீப் பற்றினல் அணைக்கப் போகாது. **முறுவலிக்கும்** 1511/4 முல்லை ... *. சிரிக்கும்.

**முறை** 1695/1 ... கெட *. மரியாதை. **முறை நின்று** * 2280/2 வரிசையாக நின்று. **முறைப்பட்ட** 222/2 "நல்லார்கள் தாம் வந்து ...". முறையிட்ட. **முறைப் பட மாட்டி கோளோ** 530/1 (?) முறையிடமாட்டிகோளோ.

**முறை முறை** 2582/4 வானவர் ... *. முறையைச் சொல்லும் சாஸ்திரம். ... ... **யாக்கை** * 3346/2 மாறி மாறி வரும் சரீரம். ... ... **யா** 135/4 இரு முலையும் ... ... *. மாறி மாறி.

**முறைமை** 554/2 நலியு ... *. நியாயம், முறை. ... **யேன்லேன்** * 1968/1 காமன் தனக்கு ... *. ப்ராப்தி யுடையே னல்லேன்.

**முன்தானை** 3008/1 " ... யிலே முடிந்து, " தலைப்பு. முந்தாணி என்னுமது. **முன் தோன்றல்** * 2802/2 முன்னே பிறந்தவன்.

**முன்றில்** 2560/1 ... பெண்ணை *. முற்றத்தில். முன்னைக் கன்று (?) கடைக் குட்டிக்கு முற்பட்டது.

**முன்னம் முன்னம்** * 489/7 முதலில். **முன்ன(னை)மாயம்** * 3568/2 அநாதியான ஸம்ஸாரம். **முன்னகமும்** 68/3 ... த் தனியார் * முகத்துக்கு மேலே யுள்ள நெற்றி. **முன்னமே** 612/1 ... கைக் கொண்டார் *. , முன்பு ஒரு காலத்தில்.

**முன்னல்** 90/1 ... ஓர் வெள்ளிப் பெருமலைக் குட்டன் *, முன்னே. முன் நல் — என்றும் பிரிக்கலாம். **முன்னல் யாழ்** 3037/1 ... பயில் நூல் *. ஒற்றைப் போக்கி, முனல் என்றுக்கி முரலும் யாழ் என்பாருமுண்டு. அன்றிக்கே, முன்னல் உன்னல் நினைத்தலாய் வாய் புலற்றும் வீணை. முன்னே நல் யாழ் என்றுமாம்.

**முன்னம்** 2878/1 வானவர் தம் ... *. **முன்னு** 1122/4 ஏதலர் ... *. முன்பே. **முன்னக** 377/2 பின் ... *.

**முன்னிய தொண்டை** * 2828/2 அவயவங்களில் முன்னே ருடி வருகிற தொண்டை, உதடு. **முன்னல்** 2272/2 ... வணங்க முயல்மினோ *. முற்பட.

**முன்னாள்** 504/1 மாசி ...*. முற் கூறு. பூர்வ பக்ஷம், வளர்பிறை. முதல் பதினைந்து. **முன்னுளாய்/ன்** 2061/4 இமையோர்க் கென்றும்...*. பிரத்யக்ஷமா யிருக்கிறவன்.

**முன்னி** 2897/2 ... முனைத் தெழுந்து *. 3504/3 ... வந்தவன் *. முற்கோலி, முந்தி. **முன்னிமை** 2049/1 ... யைக் கூட்டி *. மேல்இமை. **முன்னிய விருத்தன்** * 1644/4 பிரதாந நாயகன்.

**முன்னிய பெண்ணை** * 2833/2 முன்னே நிற்கிற பெண்ணை - பனை. **முன்னிய மூவுலகு** * 3645/3 பழையதான மூவுலகு. **முன்னியவன்** 3587/4 ... வந்து *. முன்னி - முற்கோலி, அவன் வந்து.

**முன்னிலாங் காலம்** 3205/3 சென்று செல்லாதன ... *. முன்னிலாம், முன்னே நிற்கிற, வர்த்தமாந காலம், நிகழ் காலம்.

**முன்னிலை** 3052/2 ... போலத் தோற்றும் *. அபரோக்ஷம், ப்ரத்யக்ஷம். **முன்னி வந்தவன்** * 3504/3 முற் கோலி முற் பாடனாய் வந்தவன். **முன்னிற் பாட்டுக்களும்** 3033/அவ. " ... பின்னிற் பாட்டுக்களும், ப்ரீதியோடே நடவா நிற்க." முன்னுள்ள பாட்டுக்கள்.

**முன்னும்** 1727/1 ... இராமனும் *. முன்பும். **முன்னுரு** 2052/1 மின்னுருவாய் ... வில் *. முன்னுள்ள வஸ்துக்கள். பிரத்யக்ஷத்தி லுள்ள பதார்த்தங்கள்.

**முன்னுருக் கொண்டாள்** * 1658/2 " தன் மகள் படியை ... ". அநுபந்தம் பார். **முன்னுரை** 2802/2 ... யில் கேட்டறிவது *. புரா தந நூல்கள். **முன்னெலாம்** * 815/2 முன் காலத்தில். **முன்னெற்றி** 273/3 ... நரைத்தன போல் *.

**முன்னே** 1935/3 ... நின்று போகாய் *. எதிரில். **முன்னே யொரு கால்** * 1136/1 முன் பொருகால்.

**முன்னைத் தீவினைகள்*** 3069/2 ... ப் படிக் கோலம் * 2261/4 முன் – ஸ்வாபாவிகமான ஒப்பனை. முன்னை – முன்பு. **முன்னை யமரர்** * 2972/4 பூர்வரான நித்ய ஸூரிகள். **முன்னைய வண்ணம்** 104/2 ...மே*. முன் போலவே, முன்பிருந்த வடிவிலேயே. **முன்னை வல்வினைகள்** * 3706/2.

**முன்னோட்டுக்** கொடுத்த கங்குல் * 2570/1 ஏலக் கோலி ஓடிப் போன கங்குல். **முன்னோட்டுக் கொடுத்தவன்** 507/4 " பதினாறுமாயிரம் பெண்களுக்கும் ... வேணுமாய்த்து இவர்களுக்கு." தோற்கடித் தவன். "... க் கொடுத்த வாமனன்" 3638/1 முன் பே எண்ணிக் கொண்ட, ஸங்கல்ப்பித்துக்கொண்ட. "...கொண்டு" 3255/1 அறிந்து கொண்டு, கடாக்ஷித்துக் கொண்டு. 1701/2 "அவன் பண்ணின க்ரௌர்யத்தைத் திருவுள்ளத்தாலே ... ".

**முன்னோடி** 174/3 குழல்களை நீங்க ... *. முன்னேயோடி. **முன்னோர்நாள்** *. 824/1 முன்னொரு நாள். **முன்னோன்** 3751/1 யவர்க்கும் ... *. காரணமானவன்.

**முனநாள்** 3187/1 ... ளில் *. முன்னாள், முற்காலம். **முனம்** 3116/2 நில ... மிடந்தார் *. முன்பு, முற்காலத்தில்.

**முனாள்** 1080/2 பொறைதீர் ... *. முன்பு. **முனிக்கரையன்** 1083/3 முனிக்த ... *. முனி ராஜா, பரசுராமன். **முனித் தலைவன்** * 2005/3 ஸத்வஸ்தரான ஸர்வேசுவரன்.

**முனிதிர்** 3387/1 அன்னையரும் ... *. பொடியா நின்றிகோள், வைியா நின்றிகோள், முனியா நின்றிகோள். கோபித்தீர்கள்.

முனிந்தீந்த வெங்கடம் * 1475/1 உலர்ந்து எரிந்துபோன வெங்கானம். கடம் – காடு. முனிந்து தியந்து – முனிந்தியந்து. கடைக் குறைத்தல். முனிமாப் பிரம முதல் வித்து * 3776/2 முனிகிற லயிக்கிற பிரம்மமாகிற முதல் வித்து – பரம காரணம்.

முனியாளர் 1445/1 ... திருவார் பண் *. 1506/1 ... ஏத்த நின்ற * முனிகள். முனி வஞ்சப் பேய்ச்சி * 2481/3 முனிந்து வஞ்சனத்தை யுடைய பேய்ச்சி. முனிவு 1695/1 முனிவனும் ... வெறுத்து *. அப்ரீதி.

முனே 1079/1 ... மூண்டார் *. முன்பே. முனைகள் 3944/2 ... வெருவிப்போம் *. முயற்சி.

முனைத்த சீற்றம் 1014/1 ... விண் சுடப் போய் *. மிக்க சீற்றம். முனை முகம் 1301/1 ... த் தரக்கன் *. பூசல் வெற்றி.

முனையார் சீயம் * 1489/1 பூசலென்றால் பிணக்கும் சிம்மம். முனையில் 1129/3 தென்னவனை ... *. துரசித்தலே. போர் முனை. 1308/2 கண்ணார் ... வென்றி *. யுத்தம். முனைவன் 1829/2 அரங்க நகருள் ... வனை *. 3763/4 திருப் புலியூர் ... *. ப்ரதானன்.

மூக்கத்தவன் 2265/2 (மூர்க்கத்தவன்) உரங் கருதி ... *. மேனு ணரிப்புடையவன். மூக்கறைச்சி 3921/2 சூர்ப்பணகி. மூக்கறுந்தவள். மூக்கின்று 2841/1 முன்னிருந்து ... *. பாதிக்கிறது.

மூக்கு வலி 3239/4 மூச்சு பலம். மூக் கோட்டை 1746/4 மலையாளத்தில் ... என்கிற ஊர். அதை நினைத்தால் கவிகளுக்கு பாட்டுக் கிளம்பும். முக்கோட்டை பார்.

மூங்கில் 803/3 முற்றல் ... *. மூசி 1330/2 ... வண்டு முரலும் *. மொய்த்து. மூட்ட 1524/1 தீ ... *. மூடம் 3475/1 ஞானமும் ... மூமாய் *. அஞ்ஞானம்.

மூண்டார் 1079/2 ... அழலுண்ண *. எதிரிட்டவர்கள், சத்ருக்கள். மூண்டு 1079/2 ... ஆரழலுண்ண *. மேல் விழுந்து.

மூத்த 115/1 ... வை காண *. மூத்தன். கடைக் குறைத்தல் மூத்தவை வ்ருத்த ஜன ஸபை. மூத்த நம்பி 1063/3 தேவர்க் கெல்லாம் ... *. முன்னே பிறந்தவன்.

மூத்தப்பன் 6/1 தந்தைதன் ... *. பாட்டனார். பெரிய பாட்டனார். மூத்தவன் 1304/1 ... ற் கரசு *. முதல்வன், ஜ்யேஷ்டன். மூத்தவை மூத்த பார். மூத்தன் 1063/3 ... நம்பி *. முன்னே பிறந்தவன்.

**மூத்தார்** - இளையார் 3793/1 மூத்தவர் - பெரியவர். **மூத்திடுகின்றன** 1796/3 ... என் கொங்கை *. செவ்வி யழியாநின்றன. முதிர்கின்றன. **மூத்திரப் பிள்ளை*** 389/2 மூத்திரக் குழியில் பிறந்த பிள்ளை.

**மூத்து** 968/1 முற்ற ... *. கிழத்தன மடைந்து. **மூதறியு மம்மனைமார்** 2691/1 ஆராலும் ... *. **மூதறிவாட்டிகள்** 2530/ அவ. 2558/அவ. பழைய மர்யாதைகளெல்லாம் அறிந்தவர்கள்.

**மூதறிவாளர்** 444/3 ... முதல்வன் *. நித்ய ஸூரிகள். **மூதுரை** 289/4 ... யுமிலளே *. பழமொழி. **மூதுவர்** 2479/3 ... ராம் *. பழையவர். **மூதூர்** 3786/3 மல்லை ... *. பழைய ஊர்.

**மூப்பிறப்பு** 3325/3 நோயே ... *. மூப்பும் இறப்பும். **மூப்பு** 2156/3 ... ன்னைச் சிந்திப்பார் *. கைவல்யம், ஷட்பாவ விகாரம். **மூப்புக்குச் சோறிடுகை** (வா. மா. 221) பகவத் விஷயம். (?)

**மூர்க்கத்தவன்** 2265/2 ... னை நரங்கலந்த*. துரபிமானத்தை யுடையவன். **மூர்க்கனேன்*** 903/3 மூர்க்கனான நான். **மூர்த்தியர்** 2157/2 வழுவா மொழிகின்ற ... ரே*. வடிவை யுடையவர்.

**மூரிச் சுரியேறு சங்கு*** 2330/4 மிடுக்கும் துளையு முடைய சங்கு. மூரி - மிடுக்கு, சுரி - துளை. **மூரித்தாள் கோமின்*** 2168/2 பெரிய தாளைப் போடுங்கள். **மூரி நிமிர்ந்து *** 496/4 ... ... நீண்டு நிமிர்ந்து. "மூரி நிமிர்வது கொட்டாவி கொள்வது." 1883/4. **மூரிநீர்** 833/3. முத்திறத்து ... *. நீராகிற மூரி. பரம்பின கடல். 2096/2. 2334/1 ... வேலை *. உலாவா நின்ற நீர்.

**மூரிப் பெருங் களிறு*** 1475/1 ஸஞ்சரிக்கிற பெருங் களிறு. **மூரியேறு*** 2330/3 ஸஞ்சரிக்கின்ற ஏறு. முரியேறு என்று குறிலாயிருந்தாலும் இதுவே பொருள்.

**மூலமாகிய வொற்றை யெழுத்து *** 374/3 ஸகல வேதத்துக்கும் காரணமாகிய அகாரம், அல்லது ப்ரணவம். **மூலை யடியாக்கினன்** 1000/2 (?) " ஊரை ... ". நாலு மூலைச் சதுரமான கோட்டையா யுள்ளதை இடித்து த்வம்ஸம் பண்ணி மூலையும் முடுக்குமாக்கினன்—என்று பொருள். **மூலையடியே திரிந்த** 1000/2 நடுத் தெருவில் வராமல் மூலைப்புறமாக மறைந்து திரிந்த. 636/1 " ... நடந்து." 3970/4 " ... வழி உண்டாவதே!" குறுக்கு வழி.

மூவர் 2194/2 ... தம்முள்ளு மறி *. பிரம்ம ருத்ரேந்திரர்கள். மூவராகிய ஒருவன் * 1157/1 எல்லாருடைய சரீரத்துக்கும் ஆத்மாவுக்கும் மேற்பட மூன்றுமவனாக வுள்ள அந்தர்யாமி. மூவராய் நிற்கும் முது புணர்ப்பு * 2435/2 மும்மூர்த்திகளில் முதுபுணர்ப்பு – முதல் அவதாரமான விஷ்ணு.

மூவாத் தனிமுதல் * 3092/2 முசியாத அத்விதீய காரணம். முத்துச் சோம்பி விடாத ஸஹாயாந்தர நிரபேக்ஷ காரண பூதன். நிஷ்பலமென்று கைவிடாத காரணம்.

மூவாத மாக்கதி* 2176/3 மீளாத மஹாகதி. புநராவ்ருத்தி யில்லாத மோக்ஷம். மூவாத வரை நெடுந் தோள் * 1282/2 முற்றிப் போகாத இளகிப் பதிக்கிற மலை போன்ற நெடுந்தோள். மூவா முதல்வன் * 3018/4 நசியாத ஸர்வகாரண பூதன். மூவாமை 1920/2 ... நல்கி *. முடியாதபடி. ... க் காப்பது * 2841/1 முடியாதபடி காப்பது.

மூவாயிரவர்* 742/4 மூவாயிரம் பேர். மூவாவுரு 1588/3 மழை பொழியும் ... *. ஸதைக ரூபமான விக்ரஹம்.

மூவிலை வேல் 2820/1 ... கூத்தன் *. மூன்று இலைபோலுள்ள வேல். த்ரி சூலம். மூவுரு 2053/4 ... வும் கண்ட போது * மூன்று தத்வம். மூவுலகாளி 3763/4 ... யப்பன்*. த்ரிலோக நாதன். மூவெழுகால் 1368/1 ... கொன்ற *. இருபத் தொரு படிகால்.

மூழ்காது 3118/1 வல்வினை ... *. மூழ்காமல். மூழ்த்த நாள் * 1519/1 பிரளயம் கொண்ட காலம். மூழ்த்த நீர்* 3127/2 பிரளய ஜலம் மூழை யுப் பறியாது* 289/4 கரண்டி ரஸ மறியாது.

மூளவு மொட்டாத 948/1 பொருந்த மாட்டாத. மூள வெரி சிந்தி* 1442/1 புகையும்படி. நெருப்பைச் சிந்தி. மூள, மூளும்படி, மூட்டும்படி. மூளையார் சிரம்* 1265/2 மூளை – எலும்பு, சிரம் – தலை. எலும்புத்தலை, மண்டை யோடு. மூன்றனல்* 896/1 முத்தீ.

மூன்று தண்டர் ஒன்றினர் * 808/3 த்ரி தண்டம் தரித்து பகவத் விஷயத்தில் ஒன்றினவர், பொருந்தினவர். திரி தண்டர், வைஷ்ணவ ஸந்யாஸிகள். ஏக தண்டர் – அத்வைத ஸந்யாஸிகள்.

மூன்று முப்பதாறு * 755/1 முப்பத் தொன்பது. மூன்று மூன்று மூன்று மூன்றுமாய் * 755/2 பன்னிரண்டு.

**மூன்றெழுத்து*** 400/1 பிரணவம். ... துடைய பேர் * 875/1 கோவிந்தன் என்கிற பெயர். **மூன்றேழு** 2858/3 ... என்றெண்ணி னான் *. பத்து.

**மெச்சூது சங்கம்** 118/1 ... இடத்தான் *. மெச்சும்படி ஊதுகிற சங்கம். **மெத்திட்ட் காயாக** 3315/4 முழுக் காயாக என்பதன் பொருள். எல்லாருமாக என்று பொருள் சொல்லி, பிறகு மெத்திட்ட என்றும் அரும்பதம் பொருள் சொல்லுவதென்னோ!

**மெத்தென்ன** பஞ்ச சயனம் * 492/2 மிருதுவான பஞ்சுப் படுக்கை. **மெத்தை** 439/1 ... யாக விரித்து *. படுக்கை. மிருதுவான படுக்கை.

**மெய்க் கன்று** – தோற் கன்று (?). **மெய்க் காட்டுக் கொள்ள** 923/அவ. "தேவ ஜாதியை ...". நேரில் வருவிக்க. காட்டிக் கொள்ள என்று டியாகவும் பல இடங்கள். "... ...டுக் கொண்ட" 3395/1 "நம்பியினுடைய அழகை ... இப்பத்து." விசதமாக அறிவித்த. மெய் யாகக் காட்டின, எடுத்துச் சொன்ன, 3387/3 "மெய்க் காட்டுண்டு காணும்", கணக்கு உண்டு. ... டுப் பட்டோலை 1581/1 "ஆனை குதிரை காலாளுக்கு அவதி யில்லாமையாலே தேருக்கே யாய்த்து ...லை கொள்வது." கணக்கு எழுதுவது.

**மெய்குந்தமாக** விரும்புவர் * 2460/3 சரீரமே நோயாக. குந்தம் - நோய். **மெய்கொள்ளக் காண** * 3201/4 மெய்யாகக் காண.

**மெய் சிலைக் கருமேகம்*** 662/3 உடம்பிலே வில்லையுடைய மேகம். **மெய் செயாத வண்ணம்** * 837/4 மெய் செய்கை – மெய் போலே தோற்றச் செய்கை. **மெய் செயாது** 846/3 விடக் கருதி ... *. ஆரம் பித்ததை முடிய நடத்தாதே விபரீதமாகச் செய்யும் மித்யா வ்யாபாரம்.

**மெய்ஞானச் சோதி*** 3138/4 விசதமான ஞானம். **மெய்ஞானம்*** 2452/4 தத்வ ஞானம். **மெய்ஞான வேதியன்** * 3131/1 யதா பூத வாதியான வேத ப்ரதிபாத்யன். **மெய்த் தவம்*** 2267/3 உடம்பு நோவப் பண்ணின தபஸ். **மெய்த்தன் வல்லை** * 836/3 மெய்யே வல்லை. **மெய் தகுவரைச்** சாரல்* 1150/2 மெய் மென்மை, தக்கிருக் கை. மென்மையுடைத்தா யிருக்கை. இதர விஸ ஜாதியமா யிருந்துள்ள மலையின் பர்யந்தம்.

**மெய் தெளிந்தார்** * 2474/4 மெய்யாக அறிந்தார். **மெய்ந்நின்ற பாவம்** * 2021/1 பிரகிருதியிலே அநுபவிக்கக் கடவதாய் நின்ற பாபம். **மெய்ந் நின்ற வித்தகன்** * 1406/2 தன் ஸ்வரூபாதிகளை உள்ளபடியே காட்டிக் கொடுக்கும் ஆச்சர்ய பூதன்.

மெய்ந் நீர்மை* 3014/4 உடம்பின்ஒளி. மெய்ந் நூல் * 1089/1 வைதிக சாஸ்திரம். மெய்ப் பகை * 770/4 ஸஹஜ சத்ரு, இயற்கை விரோதி. மெய்ப் படியால் * 2571/2 மெய்யாக. மெய்ப் படுவன் * 2692/1 வெளிப்படுவன்.

மெய்ப் பாடு 2054/4 ஸத்யம். மெய்ப் பால்* 227/3 முலைப்பால். மெய்ப் பிணக்கு * 522/3 கலவி. மெய்ப் பொருள் * 612/4 ஆத்மா. 2894/3 அவ்ய வஹித ஸாதகம்.

மெய்ம் மலர்* 2357/3 அகங்யப் ப்ரயோஜநமான புஷ்பம். மெய்ம் மால்* 3347/4 மெய்யான மால். பாரமார்த்திகமான பிரேமம். மெய்ம்மை * 594/3 உண்மை. மெய்மை நின்று * 1941/1 பாரதந்த்ர் யத்திலே நிலை நின்று. மெய்மைப் பெரு வார்த்தை* 616/2 யதார்த் தமும், சீரியதும் சுலபமுமான வார்த்தை.

மெய் யடியேன் 324/1 ... விண்ணப்பம் *. புரையற்ற சேஷ பூத னான நான். மெய்யம் * 2016/3 திரு மெய்யம். மெய்ய மணாளர் * 1260/1 திரு மெய்யம் என்னும் திவ்ய தேசத்துக்கு நிர்வாஹகர். மெய்யமர் காதல்* 3529/4 உடலோ டுடலான கலவியிலுள்ள ஆசை, ஸத்யமான காதல். மெய்ய மலை* 2016/2 திரு மெய்யம். மெய்யர் 886/1 ... க்கே மெய்யனாகும் *. அத்வேஷத்தை யுடையவர். மெய்யறி வன் நானே * 699/4 நான் உண்மையாக அறிவேன்.

மெய்யன் 886/1 மெய்யர்க்கே ... *. 3886/1 ஸ்த்ய சீலன். மெய் யான் * 2016/4 ... னை மெய்ய மலையானை *. வடிவுடையான். மெய் யிட* 8/3 உடம்பில் பூச.

மெய்யில் வாழ்க்கை * 668/1 மெய் – பிரகிருதி. அதிலுண்டான பிராகிருத போகம். மெய்யுற்றல் 2660/2 உன்னை ... *. ஸாக்ஷாத் கரித்தால். மெய்வந்து நின்று* 3381/2 புத்தி பூர்வமாக வந்து நின்று. மெய் வாசகம் 3014/4 ... கேட்டு *. விபரீத லக்ஷணையால் பெரும் பொய். மெய்வினை * 2415/3 சரீரமடியாக வந்த கருமம்.

மெல்கி 3871/1 " ... க் கிடந்தபடி." மிருதுவாய், மெல்லடி 3801/3 நில மகள் பிடிக்கும் ...*. மிருதுவான அடி. மெல்லாம்பல் * 2553/4 அல்பமான ஆம்பல். மெல்லாவி 2657/3 ... மெய்மிகவே * மிருதுவான மநஸ்ஸு. 2560/3 ... யும் நைவும்*. மெலிந்த பிராணன். ஹ்ருதயத்திலுண்டான தளர்த்தி.

மெல்லியல் 3764/4 ... செவ்விதழே *. மெல்லிய இயல், ஸ்வபா வம். ... லாக்கை* 2525/1. மெல்லிலை 3765/1 ... ச் செல்வ வண்

கொடி *. மிருதுவான இலை, வெற்றிலை. வெள்ளிலை என்பது மெல்லிலையின் திரிபாகலாம். **மெலிகின சரீரம் 3171/4** மிருதுவான சரீரம். **மெலிதும் 2493/3** யாம் ... *. மெலியா நின்றோம்.

**மெழுக்குவாசி 3345/4** "... யிலே பிரமிக்கப் பண்ணும்" பூச்சு வாசி. **மெழு கூட்டின 2910/4** "... வோ பாதி" மெழுக் கூட்டின என்றால் மெழுகுகை, பூசுகை. **மெழு மெழுத்து 239/1** மிடறு ... ஓட*. அநாயாஸமாக, வருத்த மற.

**மென் கலை* 1358/3** மிருதுவான பரியட்டம். **மென்கால் கமலம்* 2519/2** காற்றுகூடப் படப் பெறாத மெல்லிய தாளையுடைய கமலம். **மென்கிளி 2066/4** ... போல் *. இளங் கிளி.

**மென்குழல் * 229/1** மிருதுவான துவனியையுடைய மூங்கில். செவியைப் பற்றி வாங்கும்படி மிருதுவான துவனி. செவி வழியே புக்கு நெஞ்சை ஆகர்ஷிக்கும் துவனி. காதைப் பிடித்து இழுக்கும் துவனி என்று ரஸோக்தி. **மென்குழ லாய்ச்சியர் * 1225/1** மெல்லிய கூந்தலை யுடைய ... ... .

**மென் கூழை * 1905/1** மிருதுவான மயிர் முடி. **மென் மழலை 1288/4** ... பயிற்றும் நாங்கூர் *. மிருதுவான மழலைச் சொல்.

**மென்ற பேழ்வாய் * 1012/1** சீற்றத்தாலே மடித்த பெரிய வாய். **மென்று 2508/1** நன்னீரற ... *. தின்று.

**மேகக் கன்று 641/3** பெருங் கார் ... *. சிறு மேகம். **மேக நியாயன் * 3506/2** மேக ஸ்வபாவன். அதாவது பிரயோஜந நிரபேக்ஷமாகக் கொடுக்கையும் கொடுக்கப் பெறாத போது உடம்பு வெளுக்கையும்.

**மேகமெனக் களிறு * 3535/4** மேக மென்னலாம் படியான ஆனை. **மேகர் 3891/4** "... நீர் விடுமாப் போலே". மார்க்க சோதகர். **577/1** **மேகின்றான் 3073/4** தண் வேங்கடம் ... ய்/ன் *. மேவி நின்றவன். மேவுகை - வர்த்திக்கையும், ப்ரகாசிக்கையும்.

**மேட்டிள மேதிகள் * 920/1** மேடு - ஓக்கம். உயரமாய் வளர்ந்த இளம் கன்றுகள். மேதி - எருமை. **மேட்டு மடை 3187/ப்ர. (?)** பள்ள மடைக்கு எதிர்த் தட்டு. மேட்டு இடம். மேடு என்று பொருள்.

**மேதக வஸ்து 8/3** "... வை யிட்டு மர்த்தித்துத் தா." கஸ்தூரி முதலிய கூட்டுச் சரக்கு. **மேதகு** பல்கலன்* **2578/7** மேனிக்குத் தகுந்த பல் கலன். மே என்பது மேனி, அல்லது மேம்பாடு.

**மேதகு மைம் பெரும் பூதம்*** 2672/3 மேதகும் – மேவித் தக்கிருக்கும். மேவி - பொருந்தி, தகுதியா யிருக்கும்.

**மேதி** 920/1 மேட்டிள ... *. எருமை. **மேம் பட்டன** 2760/2 நன்னெறி ... *. பொருந்தப்பட்டன. **மேம் பொருள்** 909/1 ... போக விட்டு *. மேலெழுந்த பொருள். மேவின பொருள். பிரிக்க வொண்ணுத மேம் பாட்டை விளக்கும் பொருள். மேவின – பொருந்தின.

**மேய்க்கிய போய** 3917/1 பகல் கிரை ... கண்ணு *. மேய்க்கப் போன. **மேய்க்கின்று** 3919/4 உகந்தவை ... *. மேய்க்கிற விடத்தில். அமரர்கோ னர்ச்சிக்கின்று போல.

**மேய்த்தி** 791/2 ஆனை ... *. மேய்த்தாய். **மேய்ந்த புல்*** 283/3 கவ்வின புல். **மேய் நிரை*** 3603/1 மேய்கிற பசுக்கள். **மேய் புலம்*** 250/2 மேய்கிற இடம். **மேயவன்** 1453/4 திருவிண்ணகர் ... *. பொருந்தினவன்.

**மேயார்** 2615/4 தடங் கடலை ... *. 2665/4 செழும் பரவை ...*. பொருந்தினவர். **மேயான்** 2087/4 திருவரங்க ... *. 3940/1 ... வேங்கடம் *. பொருந்தி வர்த்திக்கிறவன்.

**மேரு** 2565/1 உருவொக்கும் ... *. மேரு மலை. **மேல் சாத்து** 464/2 ... ம் பரியட்டமும் *. மேல் பூச்சு. வாசனைப் பொருள். கலையா மேல் சாத்து — என்று பெரியாழ்வார் திருமொழி வியாக்யொனத்தில் வருகிறது. கலையாத மேல் வேஷ்டி என்று பொருள், மேல் சாத்து உள் சாத்து என்று இரண்டு.

**மேல் தரம்** 3253/1 மேலான தரமுள்ளது. கீழ்த் தரத்துக்கு எதிரிடை. **மேல் தோன்றிப் பூ *** 598/1 காந்தள் பூ. **மேல் பால் திசைப் பெண் *** 2512/2 மேலைத் திக்கான பெண். **மேல் மிடறு** 374/1 ...ந்றினை *. நெஞ்சு.

**மேல் வரும் பெரும் பாழ் காலம் *** 2581/4 மேல் – பண்டு. வரும் என்பது போன, கடந்துபோன பெரும் பாழ் காலம். மேல் என்பது பண்டானதால், வரும் என்பது போன என்ருக வேண்டிற்று.

**மேல் விதானம் *** 769/3. **மேல் விரி** 3621/4. **மேல் விழப் பண்ணும்** 3009/ப்ர. பாரித்து ஈடுபடச் செய்யும். **மேல் வினை** 3148/1 வேங்கடங்கள் ... *. உத்தராகம். இனிமேல் செய்யும் பாபம். ஆசிரயித்த பிறகு செய்வது.

**வாழ்க்கை 668/1** மெய்யில் ... *. **வாழ் கண்டாய் * 3931/4** வாழப் பார். **வாழ்ச்சி 3135/4** ... யான் சேரும் வகை *. வாழ்வு. **வாழ்ச்சியீடன் 897/2** " ... ஞக நறுக்கறப் பேச வல்லேன்." வாய்ச்சி யீட்டு வெட்டினுற் போலே. வாழ்ச்சி வாச்சி வா:ச்யா. தச்சன் சிவும் வாச்சி. நறுக்கற – மூளியில்லாமல், குறைவில்லாமல், பூர்ணமாக. நறுக்கு – மூளி, துண்டு. வாய்ச்சியே வாழ்ச்சி.

**வாழ்த்தே வலி * 2624/4** வாழ்த்துகையே நமக்கு பலம். **வாழ் துணை 3788/3** ... யா வட மதுரை *. வாழ்ச்சிக்கு உபாயம், **வாழ் தொல்புகழ் * 3423/3** வாழ்ச்சியாலே ஸ்வபாவிகமான புகழை யுடையவர்கள்.

**வாழ்ந்து கழிவார் 2204/2** ... ரை *. காலம் போக்குவார். **வாழ் பாழ் 3998/3** ப்ரக்ருதி தத்வத்துக்கு ஆத்மா.

**வாழ் முதல் 1527/1** வசுதேவர் ... லே *. ஸத்தைக்கு வாழ்சிக்குக் காரணம். **வாழ்வினிதா னல்லே* 2640/1** பலம் போக்யம்தான் இதில் என்னே ஆச்சரியம். **வாழ்வு 665/4** தொண்டர் ... *. **வாழகில்லேன் 132/2** வாழ்க்கைக்கு இல்லேன். ஸமர்த்தை யல்லேன்.

**வாழ வுறுதியேல் 62/4** வாழ விரும்புவாயாகில். **வாழ வொட்டான் 204/4.** **வாழாட் பட்டு நின் றீர் * 3/1** ... ருள்ளீரேல் *. ஸுக ரூபமான கைங்கர்ய லாபத்தைப் பெற்றவர்களே. **வாழா வகை வலிதல் நின் வலியே 2595/2** வாழா வ்கையை நினைக்கை உனக்கு ஒரு மிடுக்கோ.

**வாழிகேசனே * 812/4** கேசவனே வாழ்வாயாக. **வாழியம் 3013/3** ... வானமே *. வாழ்வுடையோமானோம், **வாழியரோ 2479/2** அலமருகின்றன ... *. வாழ்ந்திடுக.

**வாழைத் திங்கனி * 1291/3** இனிய கனி. ... **யீன் கனி *. 3765/2** வாழை ஈன்ற கனி.

**வாள் கலியன் *** வாளை ஆயுதமாக உடைய கலியன். **வாள் கொண்டை * 3926/3** ஒளியுடைய மீன்.

**வாளமர் 1080/2** ... ரில் பல மன்னர்*. ஒளியுடைய மதிப்புடைய பூசல். **வாளாவாகிலும் 230/1** ... காணகில்லார்*. வெறுமனேயாவது. **வாளா கிடந்தருளும்* 2416/2** அசையாமல் கிடக்கும்,

**வாளிகள்** 73/3 ... ளும் சுட்டியும் *. காது மடல்மேல் சாத்தின வாளி. தொங்கட்டான்.

**வாளி மழை** 3553/2 ... ... பொழிந்த சிலையா *. சர வர்ஷம். **வாளேய் தடங்கண்** * 3861/4 வாள் - ஒளியும் வேலும்.

**வாளேறு**(காண)பாயத் தாளேறுமாயும் 2483/அவ. (பரகால. ஜீ.) 3319/ப்ர. " ... ந்து அத்தைக் கண்டவாறே தம் இழவை மறந்தார்." தேள் கொட்டியவனுக்கு அரிவாள் வெட்டு உண்டானால் தேள் கொட்டின நெரி நின்று போகும். பெரிய துக்கத்தில் சிறிய துக்கம் மறைந்து போகும் — என்று கருத்து. **வாளை** 1265/4 ... பாய் தடம் *. மீன்.

**வான் கடந்தான்** 2199/4 ... செய்த வழக்கு *. நித்ய ஸூரிகளுக்கு அவ்வருகானவன். திரிவிக்கிரமன் என்னுமாம்.

**வான்கமுகு** * 1265/3 ஓங்கின கமுகு. **வான் கயிறு** * 2880/1 நீளிய கயிறு. **வான் கலந்த** வண்ணன் * 2256/4 மேக சியாமளன். **வான்கலன்** 1643/1 சுடர் ...*. பெருவிலையுடையிருந்துள்ள ஆபரணம். 2257/1 ... னும் பட்டும் *.

**வான் கவி** * 3211/3 அரணியவான கவி, சொற்செறிவையுடைய கவி. **வான் கன்று*** 3401/2 பெரிய கன்று. **வான்குடை*** 2646/2 ஆகாசமாகிற குடை. **வான்கொடு முதலை*** 2159/2 ப்ரபலமாய் க்ரூரமான முதலை. **வான் கோலம்** * 3128/3 ஸமக்ரமான அப்ராக்ருதமான பூஷணங்கள்.

**வான் சங்கம்** * 2291/3 வெண் சங்கம். **வான் சுவர்கங்கள்** 3226/2 சிரியதான ஸ்வர்க்க ப்ரதேசங்கள். **வான் செலுத்தி** * 718/1 வீர ஸ்வர்கத்தில் பொகட்டு. **வான் பகை**: தீர்க்க வைரம். (தனி சுலோ. த்வ மப்ரமேய:).

**வான் பட்டாடை** * 3254/2 பெரு விலையுடைய திருப் பரியட்டம். **வான் பணையம்** 412/1 மஹா விசுவாஸ ஹேதுவான பணயம். வான்- பெருமையாதல் வலியாதல்.

**வான்புல னிறந்தது** * 3676/4 புலனிறந்த வான். அதீந்திரியமான பரம பதம். **வான் பெரும்** பாழ் * 3897/1 வலிதாய் பெரிதாயுள்ள பாழ். **வான் முகடு** * 2208/2 அண்ட பித்தி.

**வானக் கோன்** * 3283/4 ஸ்ரீ வைகுண்ட நாதன். **வானகச் சோலை** * 1824/3 ஓங்கின சோலை. **வானகம்** * 3984/3 ஸ்வர்க்காதி பதம். **வானகம் படியில்** * 278/4 வானிலும் பூமியிலும், படி-பூமி.

**வானத் தணி** யமரர் * 2183/2 பரமபதத்துக்கு ஆபரணமான நித்ய ஸூரிகள். **வான மாமலை** 3412/4 ஆகாசத்திலே கிட்டும்படி ஓங்கின மலை. வியாக்யானம் இப்படி. ஆனால், அது சிறிய மலைதான். அதனுடைய பெருமை வானத்தில் ஓங்கலாகும்.

**வானமுதம்** * 2314/3 மிடுக்கான அம்ருதம். பலமூட்டும் அம்ருதம். **வானரம்** 325/2 ... க் கோன் *. **வானவர் கண்ணன்** * 3008/1 பரமபத வாஸிகளுக்கு நிர்வாஹகன். ... கொழுந்து * 3413/1 நித்ய ஸூரிகள் தலைவன். ... முற்றும் * 3160/2 அவர்களுடைய ஸர்வஸ்வம். எல்லாம்.

**வானிளம்** படியர் * 277/3. வானத்திலுள்ள இளம்படியர், போக யோக்யமான சரீரமுடைய பெண்கள். படி – சரீரம்.

**வானிளவரசு** * 277/1 நித்ய ஸூரிகளுக்கு இளவரசான ஸர்வேசுவரன். அவர்கள் இவனை இளவரசாக நினைக்கிறார்கள்.

**வானிறம்** 774/1 ... த்தோர் சீயம் *. வால் – வெளுப்பு. **வானோரினம்** 2609/1 ... த்தலைவன் *. நித்ய ஸூரிகள்.

**விக்கி** 2062/3 மட்டு...*. விடாயால் விக்கல் எடுத்து. "...வார்த்தை சொல்ல மாட்டாதே யிருந்தாள்." 557/1.

**விக்கிரமம்** 468/1 ... ஒன்றொழியாமல் *. பராக்கிரமம். **விக்கின திருப்பவளம்** 3457/3 "சொல்லப்புக்கு ..." விக்கின வாய். சொல்ல மாட்டாமல் தத்துகிற வாய்.

**விகற்பு** 2520/2 மதி ... *. பேதம், வேறுபாடு, **விகாரம்** 3375/2 மா ... *. வேறுபாடு.

**விகிர்தமாதர்** 1182/2 தாளிணைவீர் ... *. விலக்ஷணமான பெண்கள். **விகிர்தன்** 1226/1 தோள் நயந்த ... *. விசேஷமான செயலுடையவன். **விகிருதஞ் செய்து** 3228/2 மாயங்களால் ... * விகாரங்கள் பண்ணி.

**விச்சாதரர்** 923/3 ... நூக்க *. வித்யாதரர்கள், **விச்சைக்கிறை** *, 1102/2 வித்யா தெய்வம். விச்சை-வித்யை,

**விசயன்** 1113/. ... மணித்திண்டேர் *. விஜயன், அர்ஜுநன். **விசாதி** 2488/1 ... பேற்று *. வியாதி.

**விசாய்த்த** (?) "பாகனை ... ஆனை, கச்சு ... மூலே." உதறித் தள்ளின, சாயச் செய்த.

**விசாய்ந்து** வார்த்தை சொல்லாதே கொள் 3465/4, மேலிட்டு. **விசாரப்படுகிறாய்** 1949/1 அரு. "திருமேனி ஆற்றாமையை வருவிக்குமென்று ..." துக்கப்படுகிறாய்.

**விசித்திரப்பட** 518/1 சிற்றில் ... *. ஆச்சரியப்படும்படி. **விசித்திரம்** 2779/1 பன்னு ... மா *. நாநாவர்ணம்.

**விசிறி** 1213/4 ... ப்பெடையன்னம் *, விசி. **விசிறும்** 394/2 நாந்தகம் ... *. வீசும்.

**விசும்பரசு** * 2557/3. **விசும்பாளி** * 3622/4. **விசும்பிலார்** * 2160/3 விசும்பிலுள்ளார். விசும்பு – ஆகாசம். **விசும்பொளி*** 3708/3 ஆதித்தியாதி தேஜஸுகள்.

**விசை** 2488/ (?) "ஒரு ... போகா நிற்க", தடவை. 3136/அவ. "ஒரு ... பதினோராயிரமாண்டு இருந்தோம். ஒரு ... நூறாண்டு இருந்தோம்."

**விசைக் கொம்பு** 3173/ (?) "அவன் ...; நமக்கு எட்டப்போகாது" பிடித்து விட்ட கொம்பு. பிடித்து இழுத்த போது தாழ்ந்து, விட்டவாறே எட்டாமல் உயரப் போகை. ஸுலபனைப் போலேயிருந்து துர்லபனுமாயிருக்கை.

**விசைத்த** 1763/3 கால் ... *. உதைத்த. **விசைத்தான்** 1600/2 விறலாழி ... னை *. விதிர்த்தான், அசைத்தான். **விசைத்து** 3225/4 "... வேறுயிராதே." மிகுத்து, அதிகமாகி.

**விசையுரு** 1403/3 ... வை யசைவித்த *. விசையுள்ள வடிவு. விசை-பெரு வேகம்.

**விஞ்சை வானவர்** 1070/3 ...சாரணர் *. வித்யாதரர். தேவ ஜாதியிலொரு வகை. விச்சாதரர்.

**விட்டகுறை** 972/2 "... யிலே சொல்லத் தொடங்கும்." முழுதும் சொல்லாமல் விட்டதாலே. விட்ட குறை தொட்ட குறை என்ற வழக்கச் சொல் காண்க.

**விட்டடித்தவர்** 1876/3ல் "கச்சாநுஜாநாமி என்று ... ருடைய ஆஜ்ஞை." போக விட்டவர். போக அநுமதித்தவர். விட்டடித்தான் - ஓடிப் போனான் என்று இப்போதைய பேச்சு.

**விட்டடிப்பவர்கள்** 1733/3" பலத்தை அநுபவிப்பித்து பின்னை..." போகச் செய்பவர்கள். **விட்டவாசல்** 1658/2 "... லாலே புறப்பட்டு." நிறுத்தின வாசல்.

**விட்டிட்டு** 532/3 ஆறுடை ...*. விட்டு விட்டு, விட்டு. **விட்டிருக்க** (வாமா 366). "எதிர்க் கரையிலே பிணம் தின்னிப் பையல் ராவணன்..."- சேனையைத் திரட்டி யிருக்கையில்.

**விட்டிருந்தாப் போலே** 689/2 "பிராட்டி ஸ்வயம் வரத்துக்கு ஸ்ரீ மிதிலையில் புறச் சோலையிலே..." சேனையை நிறுத்தி யிருந்தாப் போலே.

**விட்டிலங்கு** செஞ்சோதி * 3079/1 விட்டு விளங்கும் ... **விட்டு சித்தர்.** ... த்தன் 473/1 * 606/3 பெரியாழ்வார். விஷ்ணுவை சித்தத்திலே யுடையவர். விஷ்ணுவின் சித்தத்திலே யிருப்பவர்.

**விடக்கு** 875/4 "ஒரு ... கைப் பற்றி". சவம், பிணம். காய்ந்து உலர்ந்த பொருள்.

**விடத்து வாய்** 769/1 ... யொராயிரம் * விஷமுள்ள வாய். **விடத்தேள்** * 827/2 **விடமங்கள்** 3640/4 இவை யென்ன ... ளே * வைஷம்யங்கள், விபரீதங்கள்.

**விடலில்** சக்கரம் 3109/1 ... த்தண்ணல் *. கை விடாதேயிருக்கும் திருவாழி. ... **வேத வொலி*** 3454/2 விடாத வேத கோஷம். **விடலொன்று மின்றி** * 3632/4 விடாமல்.

**விடலை** 1852/4 ... யைச் சென்று காண்மின் *. ஸமர்த்தன், பாலைநிலத் தலை மகன்.

**விட வெல்** கொடி * 1133/3 விஷத்தையும் வெற்றியையு முடைய கொடி, பாம்புக் கொடி. விஷடயாகில், இளம்பாம்பு. விறலான போது மிடுக்கு. மிடுக்கையும் வெற்றியையு முடைய கொடி.

**விடவே** செய்து 2969/4 ... விழிக்கும் *. **விடவு** - துஷ்டத்தனம். விடருடைய செயல், அத்தைச் செய்து. **விடற்கு** 2393/4 ...இரண்டும்*. விடுகைக்கு.

விடா 1124/ (?) "அவரை ... இவரைக் கொண்டாடுகிற படி" விட்டு. விடாய்ப் பட்டார் 3048/3 (?) விடாய்த்தவர். விடாயர் 3049/1 "... கர்ப்பூர நிகரம் (கர்ப்பூர உருண்டை) வாயிலிடுமாப் போலே;"

விடா விட்டது 3949/3 விடாமலிருந்தது. விடாவிட்டால் என்பது போல. விடிகாற்று 918/3 அவ. "... வந்தது." விடிகாலைக் காற்று. விடி பகலிரவு 1345/4 ... என்று *. விடிகாலம், பகல் காலம், இரவு காலம்.

விடியா வெந்நரகம் *. 3070/4 யமன் தண்டல் கர்மக்ஷயம் பிறந்த வாறே விடியும், நீங்கும். இது (ஸம்ஸாரம்) விடியாத வெந் நரகம், தீராதது. விடிவது 1955/4 அரு. "எனக்கு... எப்போதோ". விடி விளக்கு 1756/3 "... வைத்து, உறங்காதே அநுபவிக்கக் கோலினேன்." வெடி விளக்கு கொச்சை. விடியுந்தனையும் இரவில் வைத்திருக்கும், எரியும் விளக்கு. விடிவு 1967/ (?) "... க்குப் பிராப்தமான இருள். "விடிய வேண்டிய, நீங்க வேண்டிய இருள்.

விடிவை சங்கு * 3459/2 விடிகாலையில் ஊதும் சங்கு. விடிவோரை (றை)க் காற்று 919/3 விடிகாலைக் காற்று. இடையினம் வல்லினம் இரண்டும் காண்கிறது. இடையினமாகில் ஓரை-வேளை. வல்லினமாகில் பொருளறிய வேண்டும்.

விடுக்கும் 2353/3 மதி கோள் ... *. போக்கும். விடுகாது 1922/1 "... அழகியர் என்று சொல்லுகிற க்ஷேப வசனம் பொறுக்க மாட்டாமையாலே பின்பு காணும் காது குத்தப் புக்கது." குத்தாத காது. '... தானும் தோடிட்ட காது என்று தெரியுங்காண்" 3891/3 தோடு இல்லாத காது.

விடுகேன் 3067/2 உன்னை யெங்ஙனம் *. விடுவேன். விடு சாபம் 2412/1 அரனையிட்ட ... *. விடுவிக்க வேண்டிய சாபம், போக்க வல்ல சாபம்

விடுத்த திசைக் கருமம் * 9/3 ஏவின இடத்திலுள்ள காரியம். விடுத்த திருவருள்* 2533/1 வரவிட்ட, அனுப்பின திருவருள். விடுத்து மிலேன் * 3139/1 போக்கிற்றிலேன்.

விடு தடுமாறல் *. 1818/1 தடுமாற்றத்தை விடு. விடு தந்தான்* 44/3 பிரமன் ... *. வர விட்டான், அனுப்பினான். விடு தூது * 586/2 3850/1 விட்ட தூது, விடுகிற தூது.

விடு நகம் 1205/3 "... மும் சம்மட்டியு மிட்டு நலியா நிற்க. விரல் கிட்டி. 2528/2 "மந்தரத்தை நட்டு உலக்கையாலே ... கட்டி

கற் சிலை வாங்கிக் கொண்டவன். " 3561/3 " ... கட்டி நலிவாரைப் போலே". வடுக விடு நகம்.

விடு பூ 2072/பட் விடுபிப் பூ விடு பேச்சு 2915/அரு, விடுதிப் பேச்சு. " ... ச்சை தீர்த்து," விடு ஸரங்கள் 1985/1 (?) தனித் தனியான ஸர மாலைகள். த்வி ஸரம் த்ரி ஸரம் என்பவை.

விடைக் குலங்கள் 848/1 ... ஏழு *. எருதுகள். விடை கொள்வார் * 2107/1 கைவல் யார்த்திகள் ஸர்வேசுவரனிடம் மீளுவதைக்குக் கூட ப்ராப்தி இல்லாத கைவல்யத்துக்குப் போவதாக உத்தரவு பெறுகிற வர்கள்.

விடைத் திறல் வல்லவன் *. 1135/3 ருஷபம் போன்ற திறலுடை யனாய் வல்லனா யிருக்கை. விடை மணி *. 1694/3 காளையின் கழுத் தில் கட்டியிருக்கும் மணி.

விடையர் * 922/1, ... யன் * 426/1, ... யான் * 1720/2 ருத்ரன், ருஷபவாஹநன். விடையேற்றான் * 2439/3 விடைமேல் ஏறுகிறவன். விடையை ஏற்றுக்கொண்டவன், ருஷப வாஹநன்.

விடைவெல் கொடி *. 1133/3 விடை, விடம், விறல் - என்று மூன்று விதமான பாடம். விடம் - ஸர்ப்பம், விறல் - மிடுக்கு. வெல் விடைக் கொடி என்றாக்கி வெற்றிக்கு ஸூசகமான விடை முதலியவை.

விண்களகம் 1537/4 ...த்திமையவர் *. பரமபதம். விண் சுரபி*. 2550/2 விண்ணிலுண்டான ஸுரபி, காமதேநு.

விண்ட நிசாசரர் * 1508/1. பகவத் கைங்கர்யத்தில் பொருந்தாமல் விண்டு போன, பிரிந்து போன, நிசாசரர் - ராக்ஷஸர்கள்.

விண்டலர் தூளி * 1879/3 விட்டு அலரா நின்றுள்ள தூளி, சுண் ணம், பொடி. விண்டலரும்* 3878/1 வாய் விட்டு அலரும், கூம்பிடும். விண்டலையில் 3099/4 ... விற்றிருந்து *. பரமபதத்தின் மேலே.

விண்டவர் 1712/3...பட மதிளிலங்கை*. பொருந்ாதவர். ...இண் டைக் குழாம் *. 1181/3 சத்துருக்கள். விண்டேர் 2789/3 ... திரிந்து *. கானல், பேய்த் தேர்.

விண்ணப்பம் செய்வார் 3074/1 பெருமாளுக்குப் பாசுரங்கள் விண் ணப்பம் செய்யும் அரையர்கள்.

விண்ணவர் கருமாணிக்கம் *. 3185/1 நித்ய ஸூரிகளுக்கு போக்யமாயிருப்பவன். விண்ணாட்டுக்கு உச்சமதாம் வீடு *. 2681/1 பிரம்மாதி லோகங்களுக்கு மேற்பட்ட பரமபதம். விண்ணோளி 1571/3 நித்ய விபூதிநாதன். விண்ணாறு * 2371/1 ஆகாச கங்கை.

விண்ணிநாதன் *. 838/1 விண்ணிலுள்ளார் விண்ணிகள். அவர்களுக்கு நாதன், இந்திரன். விண்ணியேற்ற கழல் மன்னர்*. 1500/3 விண்ணி - யுத்தம். அதில் ஏற்ற எதிர்ப்பவராய். வீரக் கழல்களை யணிந்த அரசர்கள், விண்ணில மேலாப்பு *. 577/1 விண்ணுகிற சீல மேலாப்பு, மேல் விரிப்பு.

விண்ணூர் *. 2524/2 பரமபதம். விண்ணோர் முதல் 3577/3. விண்ணோர் தலைவன். ... வெற்பு *. 2978/3 திருவேங்கட மலை. அது நித்ய ஸூரிகளின் ஸ்தாநம்.

விண்வாயழைத்து *. 2529/2 விண் வாய் - விண்ணிலே, அங்கு நின்று அழைத்து. வித்த 2370/2 பைங்கிளைகள் ... *. விதைக்க. வித்தகத்தான் 3640/2 ... ய் நிற்றி *. ... பிள்ளை *. 525/3. வித்தகம் 3449/2 ... செய்து போன *. அதிசயம். வித்தகன் *. 3826/3. வித்தராவர் 3220/1 ஈடுபடுபவர்.

வித்தி 2462/3 கற்றமிழை ... *. விதைத்து. வித்துப் போய் 2017/3 விற்றுப் போய். "பூ வெல்லாம்..." வித்துமிட வேண்டும் *. 2404/1 விதையும் விதைக்க வேண்டும்.

வித்துவக் கோட்டம்மான் *. 693/1 வித்துவக் கோடு என்ற திவ்ய தேசத்து எம்பெருமான். வித்தை: வேதாந்தத்தில் சொல்லுகிற அந்தராதித்ய தஹராதி வித்தைகள்.

விதலைத் தலை 1219/2 ...ச் சென்றதற்கே *. விதலை - விதனம். வியஸநப் படுகிற வளவிலே. விதானம் 499/7 கொடியே ... மே *. மேல் கட்டி.

விதிக்கிற்றியே 504/4 என்னை ... *. சேர்த்துவிட வல்லையோ! விதியில் சாக்கியர்கள் 879/1 விதி - பாக்கியம். பகவானுடைய பெருமையை அறிந்து அநுபவிக்க விதியில்லாத சாக்கியர், பௌத்தர்.

விதியினம் 2933/4 அகல்வதுவே ... மே *. பாவியோம். விதி இனம், விதி இன்மை, விதி யிலம்.

விதிர்த்தான் 3050/2. "கையில் திருவாழியை ..." சலிப்பித்தான். 1600/2 "திருவாழிய ... இத்தண" விசைத்தான்.

விதிர்த்து 969/2 விதிர் ...*. தண் சுழன்று, நடுங்கி. விதிர் விதிர்த்து* 374/2 நடு நடுங்கி. விதிர் விதிரா 2693/2 வேரா ... *. நடு நடுங்கி, பதை பதைத்து.

விதி வகை 3988/1 ... புகுந்தனர் *. பாக்கியத்தின் பயன். விதி வழி 2603/4 ... அடைய நின்றனரே *. விதித்து வைத்த ப்ரகாரங்கள்.

விதிவாய்க்கின்று 3341/8 ... காப்பாரார் *. விதி - பகவத்க்ருபை. அது, வாய்க்கின்று-கிட்டுகையில். விதை 2462/2 ... யாக நற்றமிழை*. வித்தம் 2058/5 ... மேய கற்புடை மடக் கன்னி*. வித்திய மலை.

விபரீதம் 3464/2 ... இந்நாள் *. வேறுபாடு, பாதகம். விபீடண நம்பி *. 180/3.

விம்ம 136/3 ... அங்கமரர்க்கு*. நிரம்ப. 1904/3 ... கடலையுடைத் திட்டவன்*. நிரம்பும்படியாக. 3607/1 "... வளர்ந்து கொடுத்து" அதிகமாக. விம்மல் பொருமல் 3381/ அவ, (?). "நெஞ்சு ... லாயிரா நிற்கும்". ஆற்றாமையால் வந்த மநோ விகாரம். "... ஸ்தப்தையாயிருக்க". 3559/4 தலை மீறி.

விம்மி யழுதாள் 1511/2 ஆப்புண்டு ... *. விம்மிவிம்மி*. 227/3. பொருமிப் பொருமி. விம்மிற்று 3446/1 பருத்தது. விமலர் *. 3106/3 நிர்மலர். விமலன் * 347/2 சுத்தன்.

வியக்க 3921/2 ... இன்புறுவதும்*. ஆச்சரியப் படும்படி. வியந்த 2026/2 ... இக்கிலைமை *. வேறுபட்ட.

வியந் தமிழ் 442/3 வியந்த தமிழ் - வியன் தமிழ் என்று பாடபேதம். வியத்தல் கொடுத்த. ஆழ்வார் கொடுத்த தமிழ். வியன் - ஆச்சரியமான தமிழ்.

வியப்பாய வியப்பில்லா *. 3131/1 வியப்பும் அதல்லாததும். வியப்பு - ஆச்சரியம்.

வியமுடைவிடை 1708/8 வியம் - ஒக்கம். பெரிய வடிவுடைய எருது. வியர்க்கும் 3213/2 ... மறைக் கண் *. வேர்க்கும்.

வியலிடம் 2583/1, 3272/1 ... உண்ட *. விஸ்தாரமான இடம்.

வியவிரு ஞாலம் *. 2229/1 ஆச்சரியமாய் விசாலமான பூமி. வியல் - ஆச்சரியம். வியவாய் 3640/3 உலப்பில்லனவாய் ...*. ஒவ்வாதன வாய், வேறுபட்டிருப்பனவாய். 3641/2 அநித்யம். நசிக்கக் கடவது.

வியவேன் 2145/2 ... திருமாலை யல்லது *. ஆச்சரியப்படேன். வியன் கலை யெண்டோளினள் *. 1143/3 ஆச்சரியமான கலை. கலை மானை வாஹனமா யுடையளாய் எட்டுத் தோளு முடையவள், துர்க்கை.

வியன் கானம் * 732/2 ஆச்சரியமான, பயங்கரமான காடு. வியன் துதி செய்ய * 1070/3 விஸ்மிதராய் துதி செய்ய.

வியன்ற 2842/1 அளவு ... ஏழுல கத்தவர்*. வியந்த என்பதில் த வுக்கு ற. வியத்தல் கடத்தலாய் அளவு கடந்த என்றபடி.

வியாழம்/ன் 486/4 ... உறங்கிற்று *. பிருஹஸ்பதி நக்ஷத்திரம். வியூகம் 1495/1 விறல் ...*. ஸேநா ஸமூஹம்.

விரகம் 2682/2 (?) "... நின்ற வடிவு". காதலர்களின் பிரிவு. விரகர் 2952/ (?) " ... கெடுஞ்சுவர் தள்ளுமாப்போலே." உபாயம் அறிந்தவர்கள், ஸமர்த்தர்கள். தமிழ் விரகர்-தமிழ் வல்லுநர்கள். விரகு 710/ (?) "தரிக்க ... உண்டோ!" வழி, உபாயம்.

விரதம் 348/2 ... கொண்டேத்தும் *. ஸங்கல்ப்பம், உறுதி. 2572/3 யாதாலும் பற்றி நீங்கும் ... *.

விரல்கவ்வி 435/4 "மயிரை முடித்து அலங்கரித்து ...". ப்ரணமம் பண்ணி. பெருவிரலைத் திருப் பவளத்தாலே (வாயாலே) ஸ்பர்சித்து என்றபடி. வேண்டிக் கொண்டு என்றதாயிற்று.

விரல்(ற்)சரடு 3550/ப்ர. விரலிலே கட்டும் சரடு. வில்லைப் பிடிக்கும் விரல் புண்ணாகாதிருக்கும்படி கட்டும் சரடு, கயிறு.

விரல் முடக்கி யிருக்கு மத்தனை 2918/4 "ப்ராப்தி கை புகுந்த தெப்போதோ என்று அதுக்கு ...". காத்திருப்பது. விரலாள் 1061/1 மெல் ... *. விரலி 491/6 பந்தார் ... *. விரலை யுடையவள்.

விரவாத 672/1 " திண்மையொடு ... நல் வழி ", கலசாத, கலவாத, சேராத. "பகல் ... ராத்ரி" 965/1, 3374/2.

**விரவி** 45/2 இடை ... க் கோத்த *. கலந்து. 3878/1 “ ஒன்ருக ... வெழும்படி ” கூடி. 1384/4 “ இவை தன்னிலே ... க் கொண்டு ”. பரவிக் கொண்டு. **விரவிய வேலை** 66/3 ... தனுள் *. கலந்த நேரத்தில். **விரவும்** 1669/1 அரி ... முகில் கணம் *. கலக்கும்.

**விராதன்** * 1088/2 **விராது** 745/1 வரை நெடுந்தோள் ... தை *. விராதன் என்னும் அரக்கன். **விராய் மலர்** 2970/2 ... த் துழாய் *. விரை - பரிமளம். விராய் என்று நீட்டிக் கிடக்கிறது. பரிமள முள்ள மலர்.

**விரிகதிர்** 2034/3 ... இரிய நின்ற *, விரிந்த கிரணத்தை யுடைய சூரியன். **விரிகின்ற** வெஞ்சுடர் * 1736/3 உதய சூரியன்.

**விரிதோட்ட** சேவடி * 2090/2 விரிந்த தோடு = இதழ்களை யுடைய, தாமரை போன்ற திருவடி. **விரிந்த சீர் வெண் கோடு** * 2826/2 பரந்த சோபையையுடைய வெண் கொம்பு, வெள்ளை தந்தம். **விரி நீர்** 1160/1 ... முது வெள்ளம் *. கடல். ... க் கடல் *. 3720/3.

**விரிவு சொல்லீர்** 2559/4 ... இதுவோ *. புகலிடம் சொல்லீர். விரிவை - பரம்புகை. அத்தாலே போய்ப் புகுகையாய் புகலிடம் என்கிறது. **விருத்தம்** பெரிது 643/4 ... தாய் வருவர்ன் *. விருத்தம் - பிருந்தம், கூட்டம். **விருத்தன்** 3819/3 ... நா விளங்கும் *. பெரியவன். **விருந்தாவனம்** 637/4 ... த்தே கண்டோமே *.

**விரைக் கோட்டை** 904/2 “ ... க்கு எட்டுப் புரியும் கட்டினேன் ”. அது விற்பதற்காக உள்ள நெல் கட்டு. விரை கட்டுமவன் (வா. மா. 249) எம்பெருமான் பக்கலிலே உஜ்ஜீவநத்துக்கு ... ”. யத்தனம் பண்ணுகிறவன். விரை கட்டுவது-விரைக் கோட்டை கட்டுவது. விதை தெளித்துப் பயிரிடும் ப்ரயத்தினத்தைக் காட்டுகிறது.

**விரை கண்டாய்** * 3820/4 விரைய வேணும். த்வரிக்க வேண்டும். விரைதல் - விசைதல். **விரைதல் கெட்டிருக்கிருன்** 3407/ப்ர.(9) ப்ரயத்தின மில்லாதிருக்கிருன்.

**விரைய வுறங்கிடும்** * 164/2 விரைவில் - கடுக உறங்கிவிடுவான். **விரைவா ரிசை மறை** * 3767/2 விரைந்து - பரம்பி, ஆர்ந்து - மிக்குள்ள, இசை - ஸ்வரத்தை யுடைய, மறை - ஸாம வேதம். விரை - பரிமளம், போக்யம், வார் - மிகுதியான இசை மறை.

**வில் பூட்டு** 3389/4 சீ. அரு. விற்பூட்டு பார். **வில்லிட்டு ஸஞ்சரிப்பதொரு மேகம்** 2401/3 மின்னுகிற மேகம். **வில் வீசும்** 1650/2 மணி மகர குண்டலங்கள் ... *. பிரகாசிக்கும்.

**விலக்கடி** 2917/4 "ஸம்ஸாரத்துக் கொரு ... தேடிக் கொண்டு". ப்ராப்ய ப்ராபகாந்தரங்கள்; " ... களில் போகாதே". 878/அவ. தடை 3819/4, 3291/ப்ர. அடி - திருவடி, விலக்கடி - துர்மார்க்கம்.

**விலங்க** 318/3 அருந் தவத்தோனிடை ... *. விலக்க. "விலங்கப் பார்ப்பது". 3402/3 (?) ஏற்றம் பார்ப்பது.

**விலங்கல் பாய்ந்து** * 1502/2 மலையை முறித்து. விலங்கல் - மலை. **விலங்கிக் கிடக்கிற ஆறு** 2673/2 பிரிந்து கிடக்கிற, ஒன்றோ டொன்று சேராமல் கிடக்கிற, குறுக்கிடுகிற ஆறு.

**விலங்கி நில்லாது** 262/4 ... எதிர் நின்று *. விலகி நில்லாது. **விலங்கிப் போனது** 2986/1 "ஸம்ஸாரிகள் ... தனக்கு வழியாம்படி". விலகிப் போனது.

**விலங்கில்** 1691/4 இயங்கு மாருதம் ... *. மீனில். **விலங்கு** 1419/1 ... மந்தகடம் *. ஞானத்தில் விலங்குதலை யிட்டு விலங்கு என்று மிருகத்துக்குப் பேராயிற்று.

**விலங்கு நூலர்** 807/3 ... வேத நாவர் *. விலங்குதல் - குறுக்கா யிருத்தல். மார்பில் குறுக்கா யிருக்கும் பூணூலை யுடைய பிராமணர். **விலங்கும் கயலும்** 1482/1 ... வேலும் *. மானும் மீனும். விலங்கு - மிருகமான மான்.

**விலங்கு மால் வரை** * 812/2 வழியில் விலங்கி தடையா யுள்ள பெரிய மலை. **விலங்கு வாலி** * 2409/2 மிருகமான வாலி.

**விலவறச் சிரித்திட்டேன்** * 905/4 விலவு, விலா, விலா எலும்புகள் முறியும்படி சிரித்தேன்.

**விலைக் காட்படுவர்** * 2438/1 காசுக்கு அடிமைப் படுவர். **விலை செல்லுகிறது** 6/(?). "ப்ராம்மண்யம் ... வேதாத் யயநாதி களாலே," விலைப்பது, ப்ரகாசிப்பது. செல்லுபடியாவது.

**விலை செல்லுமிறே** 3459/1 "அது ஸத்தை யுள்ளதனையும் ...". **விலையாள்/ளா வடியேனை** * 1389/2 கிரய விக்கிரயார்ஹன். விலைப் படுத்தத் தக்கவன்.

**விழல்** 786/2 ... லுடுத்து *. தர்ப்பம். விசுவாமித்ரம் என்ற புல். வைதிக காரியங்களுக்கு உபயோகிப்பது. **விழவு** 6/2 திருவோணத் திரு ... *. உத்ஸவம். அமைத்த ... வை* 341/1 இழவுக்கு எதிரிடை. இழவு வேறு. விழவு வேறு.

**விழவேடு எடுக்கை** 1655/3 "அவ்வூரில் ... எடுத்துக் கொண் டறிதல், புஸ்தகம் பார்த்தறிதல் செய்வாரில்லை". புஸ்தகம் திருடு வது, கிரந்தாபஹாரம் பண்ணுகை. ஏட்டைக் கீழே விழச் செய்து எடுப்பது. அல்லது, விழுந்த-கை தவறின, ஏடு-புஸ்தகத்தை எடுக்கை-அபஹரிக்கை.

**விழா** 366/1 ... ச் செய்து *. உத்ஸவம். **விழா வளம்** 1178/4 ... மும் சிறக்கும் *. உத்ஸவத்தால் வந்த அழகு.

**விழி கண்ணர்** 929/3 மிளிர் கண்ணர் என்று முண்டு. நல்ல கண் பார்வை யுள்ளவர்.

**விழுக் காட்டில்** 3607/1 "இருவருக்கும் பலம் ஒத்திருக்கக் கட வது." "பர்யவஸாககத்யா 3147/1 "... ட்டாலே தொழுத தாயிற்று". அர்த்தாத். கோல் விழுக் காடு என்றும் உண்டு. தன்னடைவே என்று பொருள்.

**விழுக்கா டறியாதார்** 3524/1 "இப்படி ... உண்டோ". மேல் வருவது. **விழுக்காடு** 3455/1 "... ட்டிலுணரப் பெருமை கெட்டோம்" மேல் வருவது. ஸந்தர்ப்பத்துக் கேற்ப பல பொருள்கள் உண்டு.

**விழுக்கையாளன்** * 421/2 சீர்மை யுடையவன், நீர்மை யுடைய வன் என்றுமாம். சத்துருக்களை ஓடச் செய்பவன் என்கை.

**விழுது** 993/1 தயிரும் ... முடனுண்ட *. ... ண்ட *. 2808/2 வெண்ணெய் அல்லது நெய்.

**விழுந்தான் கிடக்கை** 3605/3 விழுந்த இடத்திலேயே யாரும் பொருட்படுத்தாமல் கிடப்பது. ஒரு அநாதை. கெடுஞ் சாண் கிடக்கை போல விழுந்தான் கிடக்கை. அப்ரஸித்தமாகக் கிடக்கை.

விழ் நிதி * 3321/1 சிரேஷ்டமான நிதி. விழுப் புகழ் 3280/1 கேடில் ... *. விழுப் பொருள் 859/3 வேதாந்த ... *. சீரிய அர்த்தம்.

விழுமிய முனிவர் * 1069/1 சிலாக்கியமான முனிவர். ... வம ரர் * 3182/3 ஆக்கரான பிரம்மாதி தேவரல்லாத நித்ய ஸூரிகள். விழுமிய விசை * 1717/3 ... யிஞெலி *. அமகான இசை.

வின்கை விள்ளாமை * 2958/3 விட்டுப் போகை, விடாமலிருக்கை வின்விலாத காதல் * 853/1 நீங்காத, விள்ளாத காதல்.

விள்ள 2660/2 விண்ணப் படலம் ... *. முடிந்துபோம்படி. விள்ளும் 1628/1 கள்ளம் மனம் ... *. பிரியும்.

விளக்கம் 755/3 துளக்க மில் ... *. பிரகாசம். 3157/2 தவி வில் சீர் ... *. பிரகாசம், தேஜஸ். விளக்கம் செய்த 478/4 தாயைக் குடல் ... *. பிரகாசிப்பித்த.

விளக்கு 2182/3 ஞானச் சுடர் ... *. அந்தி ... *. 200/4. விளக் குடையார் 917/1 "... ரோபாதி கிஞ்சித் கரியா திரான்". கை விளக் குள்ளவர் பிறருக்கு வெளிச்சம் காட்டாம லிரார்.

விளக்குப் பிணம் 3410/1 "... போலே காண வொண்ணாதபடி". இருட்டு. விளக்குப் பொன் (பர. ரஹ. த்வ.) "... போலே நடுவே நின்று இரண்டு தலையையும் சேர்க்கக் கடவளா யிருக்கிற பிராட்டி." விளக்குச் சூட்டிலே ஓட்டவைக்கும் அத்தனை மிருதுவான, சுத்தமான தங்கம். விளக்கொளி 2065/3 ... யை *. விளக்கொளி யெம்பெரு மான். காஞ்சிபுரம் வட வெல்லையி லுள்ள பச்சை வண்ணப் பெருமாள்.

விளங்கனி 228/2 ... வீழ *. விளாம்பழம். விளங்காய் 250/3 ... எறிந்தாய் *. விளாங்காய். விளங்கிழை 1433/1 ... பொருட்டு *. விளங்கும் ஆபரண முடையவள்.

விளங்குஞ் சுடர்ச் சோதி * 1644/2 அஸாதாரண திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையவன். 3819/3 நிரவதிக தேஜோ ரூபியாக பரம பதத்தில் இருக்கிற அத்விதீயன்.

விளங்கு ஞான மூர்த்தி * 778/1 ஸ்வயம் பிரகாசமாய் ஞான சப்த வாச்யமான ஆத்ம ஸ்வரூபத்தை சரீரமாக வுடையது.

**விளங்கொலி நீர்** * 2320/2 தெளிந்து விளங்கி ஒலித்தும் பாய்கிற நீர், திருமலையில். **விளப்புற்ற கிளி மொழியாள்** * 3312/1 விளம்புகை - சொல்லுகை. எல்லாரும் பிரஸித்தமாகக் கொண்டாடும் ஸீதா பிராட்டி.

**விளம்புதிர்/ரே** * 3337/4 பேசுகிறீர்களே! **விளம்பு மாறு சமயம்** * 3328/1 எல்லாராலும் விளம்பப்படுகிற ஆறு சமயம். புற மதங்கள் ஆறு. ஆறு சமயம் பார்.

**விளரிக் குரல்** 2560/1 ... அன்றில் *. விளரி - உச்சமான த்வநி. ஷட்ஜாதி ஸ்வரத்தில் ஆருவதான தைவதத்துக்கு விளரி என்று தமிழ்ப் பெயர். அது ஒரு பண் என்று வாதிகேஸரி.

**விளரியது** 2559/4 வையமுற்றும் ... தே *. கூப்பிடுகிறது. **விளவின் காய்*** 67/2 விளாங்காய். **விளாக் குலை** 3205/3 (?) "... ... கொண்ட". வியாபித்த. 3276/ (?) "பூமியை ... கொள்ள". குலை-கரையை விளாக் கொள்ளுகை - வியாபிக்கை, கபளீகரிக்கை. உடை குலைப்படுதல் - குலை உடை படுதல் என்பது போல. விளாக் கொலை பிழை. **விளாக் கொண்ட** 906/1 தலை ... எந்தாய் *. (எல்லார் தலையிலும்) வியாபித்த, திருவடியை வைத்த.

**விளாசினாற் போல** (அர்ச்சி. 3) "கனகத்ரியை உருக்கிக் கடலிலே ... காலு விளாசு விளாசினான் என்பது போல. அடித்தான் என்று பொருள். இங்கு விளாசுகை வீசுகை, வேகமாகப் போடுகை.

**விளாவ** 3020/ப்ர. "கடல் வெதும்பினால் ... நீரில்லை." வெந்நீரை விளாவுதல், சூடாற்றுதல்.

**விளிசங்கு** 334/1 வெள்ளை ... *. விளிக்கிற, முழங்குகிற சங்கு. 479/2. **விளிந்தீந்த** 1475/2 ... மாமரம் *. விளிந்து ஈந்த - தள்ளுண்டு வீழ்ந்த, அல்லது உலர்ந்து தேய்ந்த.

**விளிம்பு** 2776/1 பளிங்கு ... படுத்த *. குறடு. **விளியா** 1511/2 ... வார்க்க *. சீறி. **விளிவன்** 901/2 தீவினை ... வாளா *. கூப்பிடுவேன், கதறுவேன்.

**விளைச் செந்நெல்** * 3436/2 முதிர விளைந்து அறுக்கைக்கு பக்குவமான செந்நெல். **விளைந்த வேள்** 1503/3 வேலேந்து ... *. வேள் என்ற குறும்பன். வேள் என்று ஒரு அரசன்.

**விளைநீர்** 545/4 "... அடைத்து". விளையுமளவுக்குத் தேவையான நீரை ஒரு காலே கட்டி. 3462/1 (?) "துக்க மெல்லாம் தீர ... கொள்ளுகிறபடியைக் கண்டு". 3836/ப்ர. "காம குணங்களை ... ராகக் கொண்டேன்." 3627/3 பூர்ணமாக அநுபவித்துக் கொண்டு என்றபடி. **விளைநீராக** 3030/1 "அதுவே ... வளர்ந்து".

**விளையாட்டம்*** 716/3. விளையாட்டு முறை 3468/3 (24). பஞ்சலக்ஷம் குடியிற் பெண்களிலும் எனக்கு ... ... இல்லாதாருண்டோ". விளையாடும் உறவு, பாத்தியம், ஸம்பந்தம்.

**விளையாடல்** * 3521/1. விளையாடு சூழல்* 3465/3 விளையாடுகிற முனற் குன்று. விளையாடுதி 3468/2 எம்மை நீ ...". விளையாடு புழுதி * 152/1. விளையாடு வில் 172/2 ... லேற்றி *. விளையாட்டுக்காக உள்ள வில், விளையாடுவோங்கள் * 213/1 விளையாடுகிற நாங்கள்.

**விற்பிடி மாணிக்கம்** 1/அவ. வில் - தேஜஸ். பிடியளவும் நீண்ட மாணிக்கம். விற்பிடி போன்ற மாணிக்கம். விற்பிடி - ராஜாவாய், ராஜார்ஹமான மாணிக்கம் 939/3.

**விற்புருவக் கொடி** * 3511/4 வில் போன்ற புருவக் கொடி. விற்பூட்டு 3430/4 சி. அரு. அடியும் நுனியும் கூடியிருக்கிறதுக்கு விற்பூட்டு என்று தமிழ் இலக்கணம். விற் பெரு விழவு * 1068/1 வில் விசும் பெரிய உத்ஸவம்.

**விளதை சிறுவன்** * 639/3 விநதையின் மகனான கருடன். **வினவப் பெறுவாரலர்*** 1902/3 ஆராயக் கடவரல்லர். **வினவ வந்தவர்கள்** 3264/1 அவ. விசாரிக்க வந்தவர்கள்.

**வினா** 2499/4 வம்பார் ...*. கேள்வி. **வினை** 3207/1 (?) "... செய்யாதே". யுத்தம். **வினைகள் தவிர வுரையின்** * 1546/4 பாபங்கள் நிரும்படி சொல்லப் பாருங்கோள்.

**வினைகொள் சீர்** * 3837/2 துக்கங்களைப் போக்கக் கடவதான கல்யாண குணம். **வினைச் சுடர்*** 2107/3 பாபாக்நி.

**வினைத் தலை** 3286/3 "... யிலே வந்தவாறே". யுத்த பூமி. "... படை பொருக்கும்" 3586/1 யுத்தபூமியில் எதிர்த்த சேனையைத் தன் வசமாக்கிக் கொள்ளும். **வினைத்துயர்** * 818/4 பாப பலமான துக்கம்,

**வினை தீர் மருந்து** * 2948/1, 3564/4 பாபம் தீர்க்கும் மருந்து. ஸர்வேசுவரன். **வினை நோய்கள் கரிய** 3279/4 ... வே*. பாபங்களும் நோய்களும் கரிந்து (எரிந்து) போயின.

**வினைப் படலம்** * 2660/1 ... வினை *. பாப ஸமூஹம். படலம் என்பது படலத்தின் திரிபாகலாம்.

**வினை முடுகினல்** 3161/1 "... எதிரிகளினுடைய ஆயுதந் தன்னையே கொண்டு அவரை வெல்லுவர்களிறே". காரியம் கிட்டி வந்தால் என்று பொருள்.

**வினைமேல் பிரிவு** 1202/1 ஒரு காரியமாக காதலியை விட்டுப் பிரிவது. பொருள் மேல் பிரிவும் உண்டு.

**வினையர்** 911/3 சுட்டிய ... ரேலும் *. பாபிகள். 2136/1 எவ் ... யராகிலும் *. தொழிலர். **வினையற்றது** * 2940/3 ... என் செய்வதோ *. பாக்கியமற்றது. **வினையற்ற பின்பு** 882/3 காரியம் முடிந்த பின்பு. (சி. அரு.)

**வினையாட்டியேன்** * 2484/4 பாபியான நான். **வினையாயின பாற்றே** * 1312/4 பாபங்களை சிதற அடி – பாறிப் போம்படி செய்.

**வினையார்** 2629/1 ... தர முயலும் *. பிரிவு. **வினையார்** என்பது பாப காரியமான முடிவு.

**வினையியல் பிறப்பு** * 3138/2 பாபங்களில் மூட்டக் கடவதான ஜந்மம். **வினையிரண்டு** * 2248/3 புண்ய பாபங்கள். **வினையின் மிக்க பயன்** * 3159/3 மிக்க வினையின் பயன். எல்லாப் புண்யங்களின் பயன்.

**வினையுடை யாட்டியேன்** * 3266/3 பாபத்தை யுடைய நான். உடையாட்டி – உடையவள். **வினையேன் கண்ணன்** * 3720/1 பாபியான எனக்குக் கண் போன்றவன்.

**வினையேனுடைய வேதியன்** * 3562/4 பாபியான எனக்குக் காணவொண்ணாமல் வேதைக ஸமதிகம்யனா யிருக்கிறவன். வேதத்தால் அறியப்படுமவன்.

**வீக்கம் திர அநுபவிப்பது** 3867/4 (?) "முலைகளின் ... ... எப்போதோ?" ஆசை தீர. **வீக்கி** 2682/1 வாரார ... *, கட்டி.

வீகம் 2616/ ப்ர.‘‘இப்போது நீ இருந்தாயாகில் ... ஏன்.’’ தவரை· வீங் கருவி 2321/3 ... வேங்கடத்தான் *. பெரிய அருவி. வீங்கிருள்* 2526/1 பெரிய இருள். வீங்கிளந்தாள் கமுகு * 3765/1 வீங்கு-புஷ்டமாய், இளகிப் பதித்த தாள். அடி யுரமைத்தயுடைய கமுகு. வீங்கு நீர்* 1574/3 ஸம்ருத்தமான, நிறைந்த ஜலம். வீங்கோதம் *. 2104/4 அலை யெறிகிற கடல்.

வீசம் 974/1 ‘‘கையில் ... மும் போய்.’’ மாகாணிப் பணம். 16 ல் ஒரு பாகம் வீசம். வீசி வில்லிட்டு 496/1 ‘‘... எழுப்பினும்.’’ வில் விட்டு வீசி, வில்லால் வீசி. வில்லை வீசிட்டு.

வீசு கடுங்கால் * 1159/1 வீசின, சுடு - வெட்டிய, உஷ்ணமான, கால் – காற்று. வீசு கோல் 3371/3 (?) ‘‘... பிடிக்கும்,’’ வீசும் கோல் எறியும் கோல், வீசி எறியும் கோல்.

வீட்டா விடினும் 693/3 வெந்துயர்...*. மெய்த் துயர் ... * 694/3 போக்கா விடினும். வீட்டிற்று 2555/1 நரகனை ... *. விழ்த்தியது வீட்டின்பம் 3035/2 கனிவார் ... மே *. மோக்ஷ ஸுகம்.

வீட 1081/1 அவுணன் றனை ... *. முடியும்படி. வீடதான போகம் * 859/3 மோக்ஷமாகிற ஸுகம். வீடவைத்த வெய்ய கொங்கை * 787/3 அழியும்படியாக வைத்த. வீடறுகை 882/3 ‘‘ஸம்ஸாரிகளை...’’ விடுவிக்கை. வீடன் 837/4 நாளுமுள்ளினுல் ... *. விடுவிக்கிறவன். மோக்ஷ ப்ரதன்.

வீடாக்கி நிற்கின்றேன் * 2421/1 மோக்ஷத்தை உண்டாக்கிக் கொண்டு நிற்கின்றேன். வீடாக்கும் பெற்றி * 2394/1 மோக்ஷம் அளிக்கும் உபாயம். ... மெய்ப் பொருள் * 2394/2 மோக்ஷத்தை யுண்டாக்கும் உண்மையான ஸாதகம். அவ்யபிசரித ஸாதகம்.

வீடாடி வீற்றிருத்தல் * 2940/3 பிரிவிலே தனியாக வீற்றிருத்தல். வீடாம் தெளிதரு நிலைமை * 2922/2 மோக்ஷமாகிற தெளிவு.

வீடில்சீர் * 3331/1 விநாசமில்லாத ஸம்பத்து. வீடில போகம் * 3164/4 விச்சேதமில்லாத கைங்கர்ய போகம். வீடின வாசற் கதவு * 2481/4 வாங்கிப் போகட்ட, பிடுங்கிப் போகட்ட, விடுபட்ட கதவு.

வீடுடையான் * 2910/3 பரமபத நிலயன். வீடும் வணங்கள் * 3449/2 விடுவிக்கும் பிரகாரங்கள். வீடுமின் முற்றவும் * 2910/1 எல்லாவற்றையும் ஸவாஸநமாக விடுங்கோள். வீடு முதலாம் * 3088/3 மோக்ஷத்துக் காரணமாம்.

வீடுயிர் * 2914/2 உற்றது விடுயிர் பார். 2941/1 ... முதலா * சரீரத்திலுள்ள ஆத்மா. விடு - சரீரம்.

வீடைப் பண்ணி * 3756/3 மோக்ஷத்தை கல்பித்து. வீணாண் * 2625/1 வீழ் நாண். வீழ்ந்திருக்கிற தாழ்ந்திருகிற நாண், அரை நாண்.

வீமவை * 2902/3 நசிப்பவை. வீயும் * 3151/2 ... மாறு செய் வான் *. நசிக்கும்.

வீரச் சோறு 1873/2 "... ண்டு போந்தவர்." வீர புருஷராய் வாழ்ந்தவர். வீரணி 390/2 ... தோள் புகழ் *. வீரப் பாடகிற ஆபரணம், வீரமே ஆபரணம். வீரம் 309/3 ... சிதைய * வீரப் பாடு. 3042/ ப்ர (12) "வெந்து விழப்பண்ணும் ...". வீரம்.

வீரவாசி 552/1 "... யிலும் காட்டில் கிடீர் பிரணயித்வத்தில் கீலே" வீர கார்யம். வீரப் பாடு - வீரம் பார். வீரத் தனம். 2064/2 "... தொண்டாட வந்தோம்." 3553/3 "... யறியும் குடியிலே பிறந்த வனிறே." வீரவாசி - வீரனுயிருக்கும் வாசி - விசேஷம்.

வீரனூர் 867/2 வென்றி கொள் ...*. வீவன் 3915/1 ... நின் பசு கிலை *. முடிவேன். வீவில் காலம் * 3277/3 முடிவில்லாத காலம். ... சீர் *. 3275/1 அவிச்சிந்தமான கல்யாண குணம். ... சீரன் * 3287/2 ... வின்பம் * 3277/4. வீவு விச்சேதம், விநாசம்.

வீழ்கனி 2761/2 ...யுமுழிலேயும்*. தானே வீழ்ந்து பசையற்ற கனி. வீழ்ச்சி 583/2 அடி ... விண்ணப்பம் * விழுகை. வீழ் துணை 3788/4 ... யாப் போம் *. ஆசைப்படும் துணை. வீழ் - ஆசை. தாம் வீழ்வார் என்ற குறள் காண்க.

வீழ் பொருள் 951/1 ... ட்கிரங்கி *. வீழ்கையே ஸ்வபாவமா யுள்ள தகடு. வீழ்வு 457/2... ஒழியா *, விழுகை. வீழசுரர் * 2559/3 விழுந்து முடிந்து போகிற அசுரர்.

வீன்விலாத தொடர்ச்சி * 855/4 இடையறுத தொடர்ச்சி. வின்விலாத போகம் * 769/2, 834/2.

வீற்றிருக்குமிடம் * 2706/4 விஸ்தாரமாக இருக்குமிடம். வீற்றிருத்தல் 2664/1 விஸ்தாரமா யிருத்தல். வீற்றிருந்தாய்/ன் * 3072/4. மேன்மை யோடிருந்தாய்/ன்,

வெஃகணை * 814/4. வெஃகா * 2158/1 இரண்டும் திருவெஃகா என்ற திவ்ய தேசம், வெக்காயம் 2493/2 "பரமபதத்திலே யிருப்பார்க்கு 'ஸம்ஸார...தட்டாது". உஷ்ணம், தாபம். 2062/ அவ் அந்த ...த்தோடு ஆண் பெண்ணாய்." பாபம், "வேரிலே... தட்டினால் கொழுந்தன்றோ முற்பட வாடுவது." 490/1 (?)

வெக்கை 1788/1 "ஆழ இறியில்...தட்டும்." வெகுண்டு 65/2 மிக்கு ... வர * கோபித்து. வெகுளாது 1463/1 ... மனக்கொள் * சீறுமல். வெகுளியாய் நின்று * 712/3 சீற்றத்தோடே நின்று.

வெகுளியன் * 2708/2 தீரா ...*. வெகுளுமேல் * 60/3 கோபிக்குமேல், வெங்கட்டிண் களிறு * 692/1. வெய்ய நெஞ்சத்தையும் திண்ணிய கண்ணையுமுடைய களிறு. வெங்கட்புள் * 3522/2. வெங்கடம் 1475/1 முனிந்திந்த ... ர்து *. வெவ்விதான காடு. வெங்கணை 928/3 ...க் காகுந்தன் *. வெவ்விதான அம்பு, வெங்கதிர் * 392/1 வெம்மையுடைய சூரியன். ... ரிள மதி * 1694/9 காதலர்களைப் பிரிவில் சுடுகிற கிரணங்களையுடைய பால சந்திரன்.

வெங்கலி 401/2 ... நலியா *. விபரீதமான, விபரீதஞ்ஞானஜநகமான கலியுகம். வெங்களம் 2554/3 ... செய்த *. கொடிய களம்-இடம். மயானம்.

வெங்கான் 240/3 ... னதரிடை *. உஷ்ணமான காடு. 345/1. 2799/1. வெங்கூற்றம் * 2639/4 க்ரூரமான ம்ருத்யு. ...கூற்று * 3711/3. ... கொங்கை * 2355/3 விஷமுலை, பூதனைக்கு.

வெங்கோவியல் நாகம் * 2710/1 வெவ்விய நெருங்கோ * யமன் அவனுடைய இயலையுடைய நாகம்.

**வெஞ்சமம்** * 804/2 கொடிய யுத்தம். சிறைதல் சமரம் வெஞ் சமம் - என்னக் கடவது சமரம் - யுத்தம். வட மொழியில் ஸமரம். அது கடைக் குறைத்தலாய் சமம் ஆகிறது.

**வெஞ்சிலை** * 670/1 கொடிய வில். ... வாண்முகம் * 2552/2 புருவமாகிற சிலையையுடையதாய், ஒளி விஞ்சின முகம். **வெஞ்சிறைப் புள்** * 2932/2 **வெஞ்சினக்களிறு** * 1274/1. **வெஞ்சொலாளர்கள்** 1421/3 ... கமன் தமர், *

**வெட்டித்து** 2072/ பட். "சிறுமையாலே ... உபேக்ஷித்திருக்கும்." கோபித்து (?). **வெட்டிதா யிருக்கும்** 578/1 "எரிச்சு ..." எரிச்சு- எரிந்து, பிரகாசித்து. வெட்டிது - உறைப்பு, காரம். **வெட்டிப் போட் டாப் போலே இருந்தான்** 2967/ (கம்). செயலற்றிருந்தான்.

**வெட்டிய காற்று** 1159/(?) உஷ்ணமான காற்று. **வெட்டிமை** 488/3 "... யெல்லாம் சொல்ல." நிஷ்டூரம், கடுமை. ... சொல் 1002/3 கடுஞ் சொல். ... நாய் 3231/3 கரு நாய். கோபங் கொண்ட நாய். குலைக்கிற நாயை வெட்டு வெட்டு என்கிறோம். ... வார்த்தை 1495/1 (ம்). கோபமான சொல். வெட்டி வார்த்தை - வீண் வார்த்தை.

**வெட்டுவாள்** (வா. மா. 447) "...ளிலும் சிரமன் வாள் கனத் திருக்கும்" சிரமன் வாள் - சிரமப்பட்டு உழைக்கிறவனுடைய வாள். அது வைமாயிருக்கும்.

**வெட்டென்றிருந்தான்** 1434/2 "குறுங்கயிற்றால் கட்ட....". வெறு மனே இருந்தான், இசைந்திருந்தான், சம்மதித்திருந்தான். **வெடிப்பு** 3918/4 ... வின் பசு நிரை *. அஸஹ்யம், அவமானம்.

**வெண்கலப் பத்திரம்** 112/1 ... கட்டி *. வெண்கலப் பிடியுள்ள கத்தி. அல்லது, வெண்கலக் கத்தி. குழந்தைகளுக்கு அறுத்துக் காய மாக்காதபடி வெண்கலத்திலானது.

**வெண்டரளங்கள்** * 1045/2 வெண் முத்துக்கள். **வெண்டலை** * 864/1 வெள்ளையான தலை மண்டையோடு.

**வெண்டு** 1475/1 அரு. குழல், மூங்கில். "வாகை ... என்றிருப் போலே சொல்லுகிற சிறு மரங்கள்." **வெண்ணகை** * 664/1 வெண்

முறுவல். ... யாள் 1282/1 கதிர் முத்த ...*. வெளுப்பான பல்வரிசை யுடையவள்.

வெண்ணாடு 1791/4 ... அணைந்து *. படுபாடரல்லாத நாடு. படு பாடர் பார். வெண்ணாடு என்று வெளுப்பைச் சொல்லி, அது சுத்த ஸ்வ பாவமாய், மேலே தோன்றின தொழிய உள் கருத்தை யறியாதது.

வெண் பகடு * 2004/2 வெள்ளையான ஆண் யானை. பகடு-ஆண். வெண்பல் தவத்தவர் * 487/3 பல்லை வெளுப்பாய் விளக்குவதை மட்டுமே தவமாகக் கொண்டவர்கள். பல் தேய்ப்பது தவிர வேறு ஸதா சாரம் இல்லாதவர்கள் என்று பரிஹாஸம்.

வெண் மின் 3631/1 ... ஒக் கொல் *. வெளுப்பான மின்னல். வெணெய் 1711/1 அளை ...*. வெண்ணெய்.

வெதிருதிர் முத்து * 1755/3 மூங்கிலிலிருந்து உதிரும் முத்து. வெதிர் – மூங்கில். தெலுங்கில் மூங்கிலுக்கு வெதுரு என்று பெயர். வெதும்ப 1721/2 விண் ... *. அஞ்ச. வெதும்பி 247/4 அடி யும் ... *. கொழித்து.

வெந்தது கொத்தையாக 2921/3 கொத்தை வேகாதது. வெந்த தும் வேகாததுமாக. " ... வாயிலிடுமாப் போலே " பாதி வெந்ததும் பாதி வேகாததுமாக.

வெந்திறல் சாபம் * 985/3 மிகக் குரூரமான சாபம். வெந்நரகம் * 2146/1 குரூரமான ஸம்ஸாரம், பிரபஞ்சம். வெந்நாள் 3182/3 ...கோய் விய *. பாப ஹேதுவான நாள்.

வெப்பதும் வவ்வவிடுவதும் 2535/2 சுட்டதும் குளிர்ந்ததும். வெப்பம் 493/4 ... கொடுக்கும் *. கடுக்கம், துக்கம். வெப்பு 822/3 மக்கள் ... *. ஜ்வரம்.

வெம்பசி நோய் * 734/2 வெவ்விய பசியாகிற நோய். வெம்பரல் * 27991/1 வெவ்விய பரல். வெம்பியெரி கானகம் * 1443/2 மிக்க உஷ்ணமாக எரியும் காடு. வெம்புசினம் * 113/3 ... ந்தால் *. மிக்க சினம்.

வெம்மா 1501/2 ... வுய்த்த *. கடுங் குதிரை, வெம்மாற்றம்

3559/4 (?) வெவ்விய வார்த்தை. வெம்மின்னொளி 3232/3 ... வெய்யில் கானகம் *. வெவ்விதாய், பார்த்தவர்கள் வெறியோடும் மின்னொளி, வெம்மை 1935/2 ...மிக்க வரி *. கொடுமை.

வெய்ய கதை * 2317/2 குரூரமான கௌமோதகி யென்னும் கதை, தடி. ... கலிப்பாகி * 52/3 வெவ்விதான கலிக்கு - மாறனுக்கு, பாகி - ஸாரதி. அத்தை வாஹநமாக நடத்துகிறவள். ... கொங்கை*. 787/3 கொடிய கொங்கை, பூதனைக்கு. ... விழு நிதி வண்ணம் * 1658/2 காய்ச்சின நல்ல பொன் போன்ற ஸ்வபாவம்.

வெய்யோன் * 2286/3 ஸூரியன். வெயில் 789/3 மேலால் பரந்த ... *. வெரீஇ 3046/1 இராப் பசல் ... *. வெருவி, வெருக் கொள் 953/2 அம்பினலர்க்கர் ... *. அஞ்சும்படி. வெருட்டா 338/1 அலம்பா ... *. வெருட்டி வெருவப் பண்ணி; வெருட்டி 3082/ (?) "அழகாலே காட்டை ...த் திரிகிற காமன்." பிரமிப்பித்து. வெருவ நோக்கி* 1501/1 அஞ்சும்படி நோக்கி. வெருவர 961/1 ... ஒருவனது *. அஞ்ச, வெருவரும் 865/4 எரியன ... *. அஞ்சா நிற்கும்.

வெருவாதாள் 1388/1 ... வாய் வெருவி *. அஞ்சாதாள். வெருவிப் போம் * 3344/2 பயந்தோடும். வெருவியர் 3286/3 "தாங்கள் துவராய் ...தின்றவன்று." அல்ப்ப ஸஹாயராய், துணை யில்லாதாராய்.

வெருவிலும் விம்மிலும் * 3271/4 அஞ்சின போதும், மோஹித்த போதும். வெருவுற 911/3 ...க் கொன்று * நடுங்கும்படியாக.

வெல்கிற்பன் 3567/2 என்று யான் ... *. வெல்ல வல்லேன் ... கொடி * 334/3 வெற்றிக் கொடி. ... பகை * 3478/2. வெல்லப்படும் பகை. வெல் போராழி 3685/4 ... வல்லன்*. போரிலே வெல்லும் திருவாழி.

வெல்ல நெடியான் * 2652/3 மிக்க நெடியான் - உயர்ந்தவன். நெடியானில்லை யென்னும்படி நெடியான். வெல்ல - மிகவும். வெல்வான் 2546/1 ... போரேற்றெதிர்ந்து *. வெல்லுகைக்காக.

வெவ்வரி நற்சிலை * 743/2 வெம்மையையும் வரிகளையுமுடைய நற்சிலை. வெவ்வாடை * 3872/3 நெருப்புக் காற்று. வெவ்வாய

மா *1182/2 வெவ்விய வாயையுடைய மா – குதிரை, குதிரை வடிவில் வந்த கேசி ராக்ஷஸன். வெவ்வாயேன் 781/1 ... வெவ்வுரை *. அசு லாஸ்யன். தியுமிழ் வாயன், கடுஞ் சொலாளன்.

வெவ்வினை தீர்த்து * 2439/3 மஹா பாபத்தைப் போக்கி. வெவ் வுயிர்க்கும் 3045/3 மலங்க ... * வெவ்விதாக உஷ்ணமாக மூக்சு விடும். ... ர்க் கொள்ளும் * 3273/2 வெம்மை தோற்ற நெடு மூச்செறியும். வெவ்வுரை 781/1 வெவ்வாயேன் ... *. கடுஞ் சொல்.

வெள்கி 278 3 ... மயங்கி*. வெட்கி, லஜ்ஜை கொண்டு. வெள் வரைப்பு * 305/1 கிழக்கு வெளுக்கை. வரைப்பு-கோடு. கீழ்த் திசை யில் ஆகாசத்தில் காணும் வெள்ளைக் கோடு. அது தெரிவது காலை நேரத்திலே.

வெள்ளக் குளம்* 1308/3 திவ்ய தேசம். ... ள (ளை) ச் சுகமவன் * 3583/3 சுக வெள்ளம் - இன்ப வெள்ளத்தைக் கொடுத்தவன். வெள்ளை யென்றபோது மருவற்ற ஸுகம். வெள்ளத்தரவு 479/5 ...வில் துயில் *' ஸமுத்ரத்திலுள்ள ஆதிசேஷன், வெள்ளத் தருவி 2320/3 பிறை வாய்ந்த ... *.

வெள்ளத்தான் 2001/3 ... வேங்கடத்தான் *. கடலிலுள்ளான் ... த் திளங் கோயில் * 2235/3 திருப்பாற் கடல் பரமபத மென்னும் திரு நாட்டுக்கு மாற்றிடமா யிருப்பதால் இளங் கோயிலாகிறது.

வெள்ளம் கோத்து 489/3 "படுக்கைக் கீழே ... தைப் போலே.', 882/1 "திருவடிகளளவும் வந்து ... த தாயிற்று" கோத்தது புகுந்தது.

வெள்ளம் 3443/3 "பிரமாணம் ஒரு ..." "... மிட்டப்படி." (?) "மேலும் கீழும் ... படி." (?) அதிகம்.

வெள்ளமே புரை – நின் புகழ் 3067/2 கடலோடொத்த உன் கல்யாண குணம் அதிகமான என்றபடி.

வெள்ளரிப் பழம் வீரித்தாற்ப் போலே (?) வெள்ளறை 192/3 திரு வெள்ளறை திவ்ய தேசம். வெள்ளாட்டி (வாமன 211) "சிதன ....' வேலைக்காரி, வெள்ளாவி (ராதிச) துணிகளை வெளுப்பதற்காக வண்ணான் வைக்கும் ஆவி. வெள்ளி 486/4 ... யெழுந்து*, சுக்ரன்,

வெள்ளித்தளை 27/3 இணைக் காலில் ...*. வெள்ளிக் காப்பு. வெள்ளிச் சங்கிலி. ஆபரணம் முழுவதும் தங்கமானாலும் காலுக்கு இடுவது மட்டும் வெள்ளி.

வெள்ளிப் பெருமலைக் குட்டன்* 90/1 வெள்ளி மலை போல் வெளுப்பான சிறுவன், பலராமன்.

வெள்ளிமுளை 72/2 கோமள ...* வெள்ளியரும்பு. வெள்ளியங்குடி* 1338/4 திவ்ய தேசம். வெள்ளியார் 1344/4 ... வணங்க*. சுத்த ஸ்வபாவர்கள். அல்லது சுக்ரன் ருத்ரன் முதலானோர். வெள்ளியான்* 1019/3, 1840/1 வெளுத்த நிறத்தையுடைய பகவான், கிருதயுகத்தில். ... யேய்ந்த மதிள்* 3881/3 சுக்ர நக்ஷத்திரம் வரை ஓங்கின மதிள். அல்லது வெள்ளியாலே செய்ததாகப் பிரேமாதிசயத்தாலே சொல்லலாம்.

வெள்ளிலை 2932/4 "... யிடாத போது மாக்குவர்கள்" ராஜ புத்திரர்கள் ப்ராப்த காலங்களிலே ..." வெற்றிலை. மாந்துவர் இலை சிப்பார். வளை ...* 1208/2 பொன்னையும் மாணிக்கத்தையும் அழிய மாறி வெள்ளி வளையை யாயிற்று இடைச்சிகள் இடுவது. வெள்ளிறவு 1798/4 ... உண்ணும்* ஒரு வகை மீன். வெள்ளிறு வென்று நீட்டியிருப்பது முண்டு.

வெள்ளுயிர் 8/3 ... ராக்க வல்ல*. சுத்த ஸ்வபாவன். வென்ளென்று 481/1 கீழ் வானம் ...* வெளுத்தது. வெள்ளை (?)"... யுங் கூட காற் கட்டுகிறதிறே மண்பாடு." விரக்தனுக்கும் சங்குக்கும் வெள்ளை யென்று பெயர். இங்கே விரக்தனைச் சொல்லுகிறது.

வெள்ளைச் சுகம் வெள்ளச்சுகம் பார். வெள்ளைப் பளிங்கு* 3081/1 சுத்த ஸ்படிகம். ...மூர்த்தி* 3419/1 சுத்த ஸ்வபாவன். ... யனை 647/2 உயர் *... யால வட்டம்(?) வெள்ளைத் துணியை வெண் பட்டை அகலத்தில் கொசுவிப் பிடித்து இடக் கையில் வைத்துக் கொண்டு வலக் கையால் ஒரு தலைப்பைப் பிடித்து வீசினால் மயில் தோகை போல் விரிந்து படர்ந்து காட்டும். ஸ்ரீரங்கம் ஜேஷ்டாபிஷேகத்தில் யானை மேல் தங்கக் குடம் வைத்து வரும் திருமஞ்சனத்துக்கு இப்படி ராஜோபசாரம் சாத்தாதவர்கள் செய்வதுண்டு. வெள்ளைத் துணியை ஆல வட்டம் சுற்றுவதை வெளியாலவட்டம் என்று கோயிலில் இப்போது மாற்றிச் சொல்லுகிறார்கள்.

**வெள்ளை வட்டம்** (வா.மா 456) "... இரு பக்கமும் எறட்ட". வெள்ளைச் சாமரம்: வெண் சாமரம். ... வெள்ளம் 439/1 ...த்தின் மேல்* திருப்பாற் கடல். வெள்ளை வேலை * 839/1 வெளுத்த கடல்.

**வெள்ளோசை** 3434/2 "த்வனியில் ... யாய்க் கழி யுண்பதில்லை." அஸாரம். வெற்று (வெத்து) ஓசை. வெண்கல த்வனிபோல கணீரென்றில்லாமல் சொத்துச் சொத்தென்றிருப்பது.

**வெளி கொடு வெளியே** 2921/3 "நெருக்கிக் கடைந்து ... தேவர்களுக்கு அம்ருதத்தைக் கொடுத்து விட்ட மஹோபகாரகர்" ஸமந்தாத்பஹி: வெளியில் சுற்றுப் புறம் முழுதும். வெளியே எல்லா இடத்திலும்.

**வெளிச் சிறப்பு** 3313/2 "... பைப் பண்ணி." ஜ்ஞாந வைசத்யம் ஞானத் தெளிவு. 3395/1 "அவன் ...ப்பித்தது." ஜ்ஞாநவைசத்யத்தை பண்ணிக் கொடுத்தது. 3649/ ப்ர. ஞானப் பிரகாசம்.

**வெளிச் செறிப்பு** 968/ அ.வ. (?) "...ப் பிறந்த வகந்தரம் லஜ்ஜித்துக் கை வாங்க வேண்டுவதையிறே நெடுநாள் ஆதரித்துப் போந்தது." 994/4 வெளிச் சிறப்பு – கௌரவம் என்ற பொருளாகும்.

**வெளிது** 2387/1 நிறம் ...*. வெளுப்பு. வெளிப்பட்ட ஒலி* 3598/3 ஸ்தோத்ர கோஷம். வெளிய சங்கு 644/1 ... ஒன்றுடை யானை *. வெள்ளைச் சங்கு.

**வெளி நாடு காண** 872/3 "...ப் புறப்பட விட்ட ஜகத்காரணபூதன்." 3494/4. பிரளயத்தில் ஸர்வேச்வரன் ஜீவாத்மாக்களைத் தன் வயிற்றில் அடக்கி வைத்து ஸ்ருஷ்டி காலத்தில் கை கால்களைக் கொடுத்து வெளியே விடுவதை இப்படிச் சொல்லுகிறது.

**வெளி நிலம்** 1789/1 "காற்றுக்கு இருபாதே அது வரும் ...தேடி." திறந்த வெளி. 3165/1 "... மாகில் ஆனையே வெல்லுமிறே" அபபாத்பட்ட இடம், புற நிலம். தன்னிலத்துக்கு எதிர். ஆனைக்கு வெளி நிலம் நீர் மடு, தன்னிலம் தரை. முதலைக்கு வெளி நிலம் தரை, தன்னிலம் நீர் மடு.

**வெளியது** 937/1 "... *தாய்க் கழியும்.*" அஸாரம். **வெளிய நீறு** 3280/1 ... *சிறிதே யிடும்* *. அஞ்ஜந சூர்ணம். அஞ்சனத்தின் நீற ணிந்து என்னக் கடவதிறே. **வெளியழகியான்** (?) ஸ்ரீரங்கம் கோயில் மணல் வெளி. அழகான வெளி.

**வெளிறு** 3517/4 "...*ம் காழ்ப்புமாக.*" அஸாரமும் ஸாரமும். "...*கழிந்த தர்மம்*" 548/4 ஆத்மா. **வெளுமை** 3477/1 *கருமை* ... *. வெளுப்பு.

**வெற்பகம்** 816/1 *நிற்பது மோர்* ... *த்து* *. மலை. **வெற்பு** அகம். **வெற்பன்** 2978/4 *விண்ணோர்* ... *னே* *. மலையன், மலையப்பன்.

**வெற்ற வெறிது** 633/2 ... *தே* *. அல்ப்ப ப்ரயோஜநமும் இல்லா தது. **வெற்றி** 633/1 ...*க் கருளக் கொடி* *. ஜயம்.

**வெற்றிக் காட்டி வளை தடி** 259/1 "...*யெறிந்து கொண்டு*" ஜயத்தை யறிவிக்கும் ஜய ஸ்தம்பம் அல்லது தடி. **வெற்றித் தழும்பு** 3451/1 "... *சுமந்த ஹநுமான்.*" வெற்றிக் குறி. **வெற்றிப் பணிலம்** * 2331/4 வெற்றி விளக்கும் திருச் சங்கு. ...*ப் போரிந்திரன்* * 1655/2 வெற்றிப் போர் - வெறும் போர், வெற்றுப் போர். கேவல யுத்தமே நிருபமாக வுடைய இந்திரன். யுத்தம் தவிர வேறு பணியில்லாத இந்திரன்.

**வெற்றிமைப் பட்டு** 2072/ பட். "... *முதுகும் தலையும்.*" வெறுமைப் பட்டு (?). **வெற்றிலை** 3517/1 *தின்னும்* ... *. "...*க் கால்*" 1156/3 "... *கொடி வளரும் தோள் கொம்பு.*" ...*லைச் செருக்கு* 3183/4 "...*லை ராஜ்யத்தைத் தந்தேன்.*" வெற்றிலை தின்ற ஆநந்தம். செருக்கு, கர்வம், மத மதப்பு.

**வெற்றிலை பிடித்தவர்கள்** 3232/4 சீ. அரு. "*முக்காற் கூறும்...கொள்கிறார்கள்.*" **வெற்றிலை யிட்டருளீர்** 3232/3 "*எங்களுக்கு...*" ஆஜ்ஞை, அனுப்புத் தாம்பூலம் கொடுங்கள்.

**வெற்றுக்கால்** 2056/1 தனிக் கால், ஒற்றைக் கால். "... *லால் தங்கள் தலையைத் துளைத்ததாக நினைத்திருக்கும்.*" உபயோகமில்லாத வெறுங் கால், பொய்க் கால்.

**வெறி** 3830/3 ... *கமழ் சோலை* *. பரிமளம். ...*கொள் சோதி மூர்த்தி* 3546,2 கண் வெறியோடும் மிக்க தேஜஸ்ஸை யுடைய மூர்த்தி. ... *கொள் வேலை* * 884/1 தனியாக ஒரு கந்தத்தை யுடைய கடல்.

வெறிச்சென்று கிடக்கிறது. (?) வெறிதே 688/2 வெற்ற வெறிதே பார். ... முலை சுமந்து * 717/3 வீணாக. ...யருள் செய்வர் * 3744/2 நிர்ஹேதுகமாக, காரணமின்றியே, வெறுமனே.

வெறிய வவர் * 1441/8. வெறுவிய அவர். பயத்தாலே கண் வெளிச் செறித்தவர். வெறியாட்டம் 2497/ அவ. கம் (?). வெறியாட்டு 3286/ ப்ர. (12). " கட்டு விச்சி வார்த்தை கேட்டு ... டாலே பரிஹரிக்கத் தொடங்கின செவிலி."

வெறியாடல் 2497/ அவ. (வாதி). வெறியாய மாயவன் * 2387/2 ஆசிரித வியாமோஹமுள்ள (வெறி – விருப்பம்.) ஆச்சர்யபூதன்.

வெறியோடிற்றாலோ 297/3 இல்லம் ...*. வெறிபாய்ந்து விட்டது. வெறி தோன்றுகின்றது. வெறிச் சென்று இருந்தது. ஜநஸஞ்சாரமற்று வெறும் வெளியாய்க் கிடந்தது.

வெறி விலக்கு 2497/ அவ. தமிழ் இலக்கியத்தில் ஒரு துறை. வெறி – தேவதாந்தர பஜநம். துர்தேவதையைக் கும்பிடுகை (அரு.) 3286/ ப்ர. (சி. அரு.) ஒரு துறை.

வெறுங்கலம் 202/1 ...த்தை *. வெறும் பாத்திரம். காலியாயுள்ளது. வெறுந் தரை 2933/1 "... யாயிருக்கிற எனக்கு." 3842/3 "என்னை ... யாக்கின ஆச்சர்ய பூதன்" ஒன்றுமில்லாமல் செய்த (?),

வெறுநாள் சொல்லுவார் 1821/3 "...நில்லாத ஊர்." வருஷம் முழுவதும் திருநாளாயிருக்கிற ஊர்.

வெறுப்பு 3359/4 ... பின்றி ஞாலத்து *. விஷாதம், மனக்குறைவு 3189/4 "தங்களில் ... உண்டாய்" மனக் குறைவு.

வெறும் புடவை (வா. மா. 128) "... தோயாமல் கெடும். பட்டுப் புடவை தோய்க்கக் கெடும்." நூல் புடவை. நூல் வஸ்திரம்.

வெறும் புறம் 858/1 அங்கை பார். 3341/1 ஒன்றுமில்லாத இடம் 3864/1. காரணமில்லாமலே.

வெறுமவன்படி 2964/4 "...யையோ காண்பது" ஒன்றுமில்லாதவன். வெறுமன் 3337/2 "... போயிற்றதாக வொண்ணாது." 'வெறுமனே, விருதாவாக, வீணாக. ... மனன்று 2937/2 "இது ... வெறுமனாக

மாட்டாது. ... வெறுமனே யிருந்தாலும் 3217/1 "... ஆகர்ஷகமான வடிவழகு. வெறுமி 1795/1 "...க்கடலோசையினளவேயன்று," (?)

வெறுமை 877/1 மறுமைக்கே ... பூண்டு *. தாரித்ர்யம், ஏழ்மை. இம்மைக்கு வெறுமை உடலளவுர், மறுமைக்கே வெறுமையானது, மறு ஜன்மத்திலும் இருக்கை. 3330/1 "...யே பச்சையாகரக்ஷிப்பார்" 3223/1 , தன் ... யை முன்னிட்டு.' ஆகிஞ்சந்யர், ஒன்று மில்லாமை.

வெறுவியர் 3215/1 "சத்ருஞ்ஜானுக்குக்கொடுத்து ...ராய் நிற்கிற,, ஒன்று மில்லாதவராய். ...வியன் 1481/3 "...ளைவாறே புறம்பே தள்ளிக் கதவடைப்பார்கள்." தரித்திரன்.

வென்றி 3116/ அவ. (9) "அநுபவிக்கையே ...." ஜயம். ...கொண்ட வீரனர் * 867/2 ...த்தவமாமுனி * 1162/2 பரசுராமாழ் வான். வென்றி தரும் பத்து * 3604/4 ...பாளன் * 1875/2 ...யான் * 2381/1.

வேகத்தொழில் * 2367/1 வேகத்தையுடைய தொழில். வேகவதி* 2801/2 ஒரு கந்தர்வப் பெண்.

வேகினாய் 2576/ அவ "ஏன் நீ...ய்" போறு போக்கினாய். வேங்கடங்கள் மெய் 3148/1 கடங்கள் வேம் என்பது மெய், மெய்யே. கடம், கடன், பாபம். வெம் கடநி நாசயநி - நசிக்கச் செய்யும்.

வேங்கைகள் * 271/4 புலிகள். ... மலர் * 25/3 வேப்பம்பூ. "வேட்க வருகிறீரல்லர்" (?) விரும்பி.

வேட்கை 636/3 ...பற்று *. விருப்பம். ... நோய் 3842/3: விருப்ப மாகிற நோய்.

வேட்டகம் 2072/ பட். வேட்டாம் என்று பிராம்மணர் சொல்லு வது. மாமியார் மாமனார் வீடு. மனைவியின் பிறந்தகம்.

வேட்டப்பாடு 481/1 (?). வேண்டப்(ற்)பாடு. விருப்பம், பெருமை. வேட்ட பொழுது (?) விரும்பின போது.

வேட்டார்க்குதவாத தண்ணீர் 3299/4 விரும்பினவர், விடாய்த் தவர். வேட்டையாடி 345/4...வருவானே *...கொண்டாட்டு * 2499/1

**வேட்பர்** 2216/3 நின் பெருமை...*. ஆசைப்படுவர். **வேட்பன** 2147/2 மேலைத் தலைமறை ...வும் *. ஆசைப்படுவன.

**வேடம்** 244/3 ... த்தை வந்து காணீர் *. 3443/3 கள்ள ...*. வேஷம். **வேடர் மறக் குலம்** * 302/1 கள்ளர் பள்ளிகள் என்னுமா போலே வேடர் மறவர் என்று தண்ணிய ஜாதியில் அவாந்தர பேதம். பர்வத சாரிகளும் வந சாரிகளும்.

**வேடார் திருவேங்கடம்** * 1312/1 குடிப் பழியாயிருக்கும் வேடுவர் நிறைந்த திருமலை. குடிப்பழி – ஸ்திரவாஸம், பழியான குடி. வன்பழி நங்தடிக்கு என்பது போலல்ல. குடியிருப்பையே பழியாக நிரூபகமா யுள்ளவர்கள். **வேடு** வேடுவச் சாதி. **வேடுவளைக்க** 2427/3 ...க் குறவர் *.வேடர் சூழ.

**வேண்டடிசில்** 622/3 ... ஆய்த்து *. வேண்டின சோறும் வேண்டி யிட்ட சோறும். **வேண்டற்பாடு** 481/1 "கிருஷ்ணனாலே... உடையா ளொருத்தி." 3045/1 பெருமை. வேண்டப்பாடு கொச்சை.

**வேண்டிடத்து** 2775/1 விளையாடி ...* விரும்பினபடி, விருப்பம் போல. **வேண்டிற்றுச் செய்து** * 302/1 வேண்டினபடி செய்து. ...ற்றே பட்டோம் * 1861/3 வேண்டின படியே அனர்த்தப் பட்டோம்.

**வேண்டுதியோ** வேண்டாயோ * 1389/2 **வேண்டுரு** 3490/2 ...க் கொண்டு *. **வேண்டுருவம்** * 3921/3 விரும்பின உருவம். இச் சாக்ருஹீதமான விக்ரஹம். **வேண்டுவம் என்னி னிபார்.** ...* 3691/2 அவரவர் உகந்த உருவம்.

**வேதக் கடல்** 259/2 நால்...லமுதே *. **வேதகப் பொன்** 910/2 "அல்லாத பொன்னிற் காட்டில் ... னுக்கு ஏற்றமுண்டிறே. தன் னோட்டை ஸ்பர்சத்தாலே இரும்பையும் பொனாக்கும்" வேதகம் (?) அநுபந்தம் பார்.

**வேத நல் வாயவர்** * 3983/4 வேதோச்சாரணத்தாலே விலக்ஷண மான முகமுடையவர்கள். **வேத நல்விளக்கு** * 1275/2 வேதைக ஸமதி கம்யனுய் ஸ்வயம் பிரகாசமான ஸ்வரூபத்தையுடையவன். **வேத நான் மலர்** * 438/3 வேதங்களாகிற செவ்விப் பூ.

**வேத நீதியாகி நின்ற நின்மலன்** * 854/2 வேதத்தில் பிரதி பாதிக்

கப்படுகையே ஸ்வபாவமாகவுடையவன். நீதி - பிரதி பாதிக்கப்படுகை, விளக்கப்படுகை. வேத நீரன் * 2995/4 வேதத்தில் சொல்லப்படும் நீர்மையை யுடையவன். வேத நூல் பிராயம் நூறு * 874/1 வேத சாஸ்திரத்தில் சொன்ன பிராயம் – வயது, நூறு வருஷம்.

வேதப் பிரானார் 443/3 ... கிடந்தார் *. வேதத்தைக் கொடுத்த ஸர்வேசுவரன். வேதத்திலே கேட்டுப் போகிற தன்னை கண்ணாலே கண்டு அநுபவிக்கலாம்படி உபகரித்தவன். பிரம்மாதிகளுக்கு வேதத்தைக் கொடுத்தவன்; நமக்கு வேத ப்ரதிபாத்யனான தன்னைக் கொடுத்தவன்.

வேத மாமுனியாளர் * 1196/3 வேதத்தில் மந்திரங்களைக் காணக்கடவரா யிருப்பார்கள்.

வேதர் 1221/3 நால் ... * வேதம் கற்றவர்கள். வேத விளக்கு * 3306/3 வேதமாகிற தீபத்தாலே கண்டிருக்குமவன். வேதன் 1466/4 மனத் திருந்த ... *.

வேதாந்த விழுப் பொருள் * 359/3. பிரணவம். ஓங்காரம். வேதியர்கள்* 1232/4 பிராம்மணர்கள். வேதியன் 3562/4 மெய்ஞான ...யனைக் *. வேதைக ஸமதிகம்யன். வேதத்தால் மட்டுமே அறியப்படுமவன். வேதம் அறிந்தவன் என்னுமாம். வேதியா நிற்கும் ஐவர் * 3569/1 கவியா நிற்கும்.

வேது கொண்டாள் 3168/2 "திருமுலைத் தடத்தாலே ..." சூடாக, வெது வெது வென்று, கத கத வென்று ஒத்தினாள். 3053/ "புண் வாயை வேது கொண்டு:" சுதி உஷ்ணமாக்கி.

வேந்தர் * 329/4. வேந்து 2463/4 ஏத்தமாட்டாத ... *. வேப்பங்குடி நீர் 3001/4 வேப்பஞ் சாறு. 3742/3 கஷாயம். விபரீதலக்ஷணயா சில இடங்களில் போக்யதையைச் சொல்லும்.

வேம் 3148/1 ... கடங்கள் *. வெந்து போம். 2912/1. 3919/1 ... எமதுயிர்கள் *. 2912/1 "காக்கு ...." வேம்பு 2028/1 ...பின் புழு*. 2475/4. ...பும் கறியாகும் *. 633/2 ... பேயாக வளர்த்தான் *.

வேய்குரம்பை 271/2 ... தவமாமுனிவர் *. வேய்ந்த குடிசை வேய்ங்கழை * 2370/3 மூங்கிலின் நுனி. ...ங் குழல் * 920/1.

வேய்த்தகம் வேயகம் பார். வேய்ந்த அகம். வேய்த்தடந்தோள் * 143/4 பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் மூங்கில் போலே யாய் பெருத்திருந்துள்ள தோள்களையுடைய பெண்கள். பசுமை - புதுமை. சுற்றுடைமை - வர்த்துளம். உருளையாயிருக்கை. செவ்வை - மழ மழப்பு. வேய் பெண்களின் தோளுக்கே உவமை, ஆணுக்கல்ல. தோள் - முழங்கை வரையுள்ள புஜம்.

வேய்த்து 3200/3 "...திரே களவு கண்டது." வேவு பார்த்து. வேய்ந்த 2970/2 துழாய் ... முடியன் *. சூழ்ந்த. ஏய்ந்த வாகில் சேர்ந்த. வேய் மருதோள் * 3913/1 வேய் போன்ற தோள்.

வேயகம் 2538/3 ... மாயினும் * மூங்கில் குத்தளவு இடம். கோல் குத்து நிலம். குழல் குத்து என்று வாதி கோஸரி. ...பால் வெண்ணெய் * 3200/3 படலடைத்த சிறு குரம்பை. படல்களால் கட்டின குடிசை, வீடு.

வேய தோள் 792/1 ... விரும்பினாய் *. வேய் போன்ற தோள். வேயர் 96,3 ... புகழ் விட்டு சித்தன் *, குடிப் பெயர். வேயர் குலம். ... புகழ் வில்லி புத்தூர் * 432/3 ...யன தோள் 1212/3 ...*. விசிறி. வேய் போன்ற தோள். வேயினன்ன தோள் * 1058/3.

வேர் 167/3 ...அறுத்தான *. வேர்த்து 622/3 ...ப் பசித்து *. வேர்வை விட்டு. வேர்ப்பது விருவது 1768/2 "நவோடையான ஸ்த்ரீக்கு பர்த்தாவினுடைய கர ஸ்பர்சம் உண்டானால் ... தாமாப் போலே." 3844/2 வேர்ப்பதும் அது விருவது - தணிவதும்.

வேர்ப்பற்று 3089/4 "...திலே கோவு பட்டால்." பற்று - இடம். வேர் உள்ள இடம். சதைப் பற்று போல. 3152/1 "எல்லார்க்கும் ...ருன பெருமான்." மூல காரணம், ஆதாரம்.

வேர் விழுந்த 2670/1 "திருக்கையிலே ... திருவாழி." ஊன்றின ... விழுவது 875/1 "செருப்பிலே கால் பாவுமாப் போலே பாபங்களிலே ...தே." ஊன்றியிருப்பது.

வேரறிவார் விறகறிவார் 3286/ ப்ர. வேர் - மூலிகை. விறகு - காய்ந்த கட்டை. அல்லது பட்டை. பச்சை வேரும் காய்ந்த பட்டையும் அறிந்தவர்கள்.

வேரா விதிர் விதிரா * 2693/2 வேர்த்து நடு நடுங்கி. விறு விறுத்து என்கிறோம். அதில் பொருளில்லை. வேராறுதல் 2702/2 மடவாள் *. வேர்த்த நெற்றி. வியர்வை சரியல்ல. வேர்வை தான்.

வேரித் துழாய் * 2528/3 பரிமளிதமான துழாய். வேரி-பரிமளம். வேரி மயிர் * 496/3 வேரி - மணம். ஒருவிதமான மணமுள்ள மயிர்.

வேரும் விறகும் 374/3 "... தேடிப் பரிஹரித்து" மூலிகையும் காய்ந்த பட்டையும்.

வேல் கண் * 1911/1 வேல் போன்ற கண். வேல் கணாள் * 1988/2 வேல் படை * 1133/3 வேலாகிற படை. வேலாயுதம். வேல் விழிக்கின்றன 2534/2 ... கண்ணன் *. வேலை யிட்டு மறுபாடுருவக் குத்தினாற் போலே யாயிற்று நோக்குகள். நீ விழித்து போல வேல் விழித்து, வேல் விழிக்கின்றன.

வேலியா யிருக்கிறது 3737/ ப்ர. "இப்பேற்றுக்கு..." விருத்தி செய்வதாய் ஸகஷகமாயிருக்கிறது. வேலி தடை என்று கூட ஸ்தலாந்தரத்தில் பொருளாகும்.

வேலை 66/3 விரவிய ...தனுள் *. வேளை. விரவிய - கலசின வளவில். வேலை - அளவும் பொழுதும் எல்லையும் செயலும். வேலை 861/2 ... நீர்ப் பாயல்*. கடல்.

வேழப் போதகம் * 708/2 ஆனைக் கன்று. ஆனைக் குட்டி. வியாக்கியானங்களில் ஆனைக் கன்று என்றே காணும்.

வேள் கணை * 2491/2 மன்மத பாணம். வேள் தாதை * 3778/3 காமன் தாதை. காமனை உண்டாக்கினவன். வேள் மங்கை * 1187/2 ஐ.

வேள்வியைந்து * 368/1 பஞ்ச மஹா யஜ்ஞம். தேவ ரிஷி பித்ரு பூத ...களுக்கு செய்ய வேண்டிய பூஜை.

வேள்வும் விழாவும் * 1485/4 பூஜையும் உத்ஸவமும். வேளாது 2216/3 காம னீர் ... *. விரும்பாமல். வேளுக்கை நீணகர் * 2315/3 திருவேளுக்கை யென்னும் திவ்ய தேசம், ...ப் பாடி * 2307/3 பாடி - ஊர்.

வேற்காரர் 2940/ அவ. "ராஜாக்கள் ...ரை வர விடுமாப்போலே" ஆயுதவான்கள். படையாட்கள். வேல் - ஆயுதம்.

வேற்று நிலம் 1076/3 பிற நிலம். "ஆனைக்குத் தன் னிலம் முதலைக்கு ... மாயிற்று." வேற்றுருவம் * 224/3 மாற்றுருவம்.

வேற்று வாய் 2073/ ப்ர. பிறர் வாய். வேற்றோர் வகை * 3065/8 சத்துருக்களின் படி.

வேறலாமை 3443/4 நின்னிடை ... . வேறல்லாதபடி. வேறவன் 3598/1 செய்கையும்... *. வேறாக வுடையவன்.

வேறு 1464/1 ... யானிரங்கேன் வேறாக. வேறாக ஏத்தியிருப் பார் * 2399/2 விலக்ஷணமாக ஏத்தியிருப்பார். வேறாக நல்லான். 1522/1 ...ன ளாடி *. விசேஷித்து ஸங்கத்தைப் பண்ணினவன்.

வேறு கொண்டு 3459/4 திறங் கூறுமின் ...டே *. ஏகாந்தத்திலே அடக்கிக் கொண்டு. தனியாக வைத்து மறைத்துக் கொண்டு. வேறு நிற்றி 763/3 ... யாதலால் *: தனியாக இருத்தி. வேறு வேறு ஞானம்* 753/3. பாஹ்ய குத்ருஷ்டிகளும், ஆகமங்களும்.

வேனிலஞ் செல்வன்* 2503/2 வேனில் - உஷ்ணகிரணங்களான. அஞ் செல்வன் - அழகான செல்வத்தையுடைய சூரியன். வேனில் - உஷ்ணம்.

வை 1180/1 ...யனைத்த நுதி*. கூர்மை, வைகி 3785/2 ...மற் றொன்று *. போன வாறே, குன்றின வாறே. வைகுலை - கழிகை. வைகிய 1150/1 ஆலிலை ...மாயவன் *. கண் வளர்ந்த. காலம் கழிந்த.

வைகிற்று (?) "போது ..." போது கழிந்தது என்று பிரயோகம் காண்க. வைகின பின்பும் 483/1 "... எழுந்திராமையாலே." விடிந்த பின்பும். போதான பின்பும். வைகினாய் 2576/ அவ. நம். போது போக்கினாய்.

வைகு தாமரை 1420/1 ... வாங்கிய வேழம் *. தங்கியுள்ள தாமரை. வைகுந்தக் குட்டன் * 277/1 வைகுந்தத்தி லுள்ளளார்க்கு சிறு குழந்தை. குழைச் சரக்கு. ஸ்வ ரக்ஷணாக்ஷமன்.

வைகுந்தச் செல்வனார் * 2456/3 பரமபதத்தில் ஐச்வர்யமுள்ளவர், வைகுந்த மன்னாள் * 2532/3 அவ் விபூதியோ டொத்திருக்கிறவள்,

10

வைகுந்தமாகும் தம்மூரெல்லாம் * 3373/4 தாங்கள் உள்ள ஊரே தங்களுக்குத் திரு நாடாகும்.

வைகுந்தர் 3981/4 வழியது ...க்கு *. வைகுந்தம் போமவர்கள், வைகுந்த விண்ணகரம் * 1228/4. திவ்ய தேசம். வைகுந்தன் பூதங்கள் * 3356/2 ஸ்ரீவைஷ்ணவர்கள். வைகுந்தன் 3064/1 ...தா மணி வண்ணனே *. வைகுண்டத்தை வாஸஸ்தாநமாக வுடையவன். வைகும் வைகல் 3064/2 ... தோறும் *. கழிக்கிற காலம்.

வைட்டணவன் * 435/4 வைஷ்ணவன். வைத்த நாள் 3152/1 ...வரை *. ஈசுவரன் நியமித்த ஆயுஸ். வைத்த மாநிதி * 3527/1 ஆபத்துக்கு வைப்பாக வைத்த மஹாநிதி. வைத்த வாக்கை * 868/2. ஆதாரமான சரீரம். வைத்தி 763/1 உள்ளொடுக்கி...* வையா நிற்றி, வைப்புதி.

வைத்து அஞ்சலென்ற கையும் (முழு). அஞ்ச லென்று வைத்துக் காட்டும் கை. வைத்துக் கொண்டு (முழு). "இம்மூன்றிலும் ..." வார்த்தைப் பாடு. தனியாகப் பொருளில்லை. வைத்தும் 1164/2 சிந்தையுள் ...*. வைத்துக் கொள்வோம்.

வைது 862/1 நின்னை ...*. திட்டி, பருஷித்து. வைதேவி * 327/1 வைதேஹி. விதேஹ ராஜன் மகள். ஸீதா பிராட்டி.

வைந் நுதி 3129/1 ...ய சக்கரம் * கூரான நுனி. வைப்பு 2966/1 ...பாம் மருந்தாம் *. நிதி. சேம வைப்பு. 1463/1 "இன்னும் உனக்கு ...பானவற்றைச் சொல்லுகிறேன். செவி தாழ்த்துக் கேட்டுக் காண்."

வைப்புண்டால் 2032/4 ... என் செய்யுமோ *. இசைந்திருந்தால். வைம்மின் 3179/1 நும் மனத்து வைத்து...*. வைபுங்கோள். வையகம் 1998/4 ... முன் னுண் டுமிழ்ந்தான் *. உலகம். வையம் அகம்.

வையகு சொல்லு 2504/2 ...ம் மெய்யே *. உலகச் சொல்லு. பழமொழி. வையணைந்த நுதி * 1180/1 கூரான நுனி. வையம்; உலகம்.

# தேசிகர் தமிழ்

[ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளிய தமிழ் நூல்களில் பாடலாயுள்ளவை தேசிகப் பிரபந்தம் என்றும், வசன நடையாயுள்ளவை ரஹஸ்யங்கள் என்றும் பெயர்படும். சுமார் முப்பது வருஷத்துக்கு முன் பெரிய தமிழ் அகராதி தொகுத்த சென்னை யூனிவர்ஸிடி லெக்ஸிகன் ஆசிரியர்கள் தேசிகப் பிரபந்தத்தை மட்டும் எடுத்துக் கொண்டு ரஹஸ்யங்களை விட்டிட்டார்கள்.

பாடல்களை விட வசன நடையான ரஹஸ்யங்களில் மட்டுமே வழக்கச் சொற்கள் அதிகமாகக் கிடைப்பதால் தேசிகரின் அருந் தமிழ் இங்கு தனியாக தொகுத்திருக்கிறது.

தேசிகரின் ரஹஸ்யங்கள் உள்ளே தமிழ் வசனமாயிருந்தாலும் முதலிலும் முடிவிலும் ஸம்ஸ்கிருத சுலோகம் தமிழ் பாடல் கலந்தவை. அந்தப் பாடல்களையும் விட்டு வசன நடைச் சொற்கள் மட்டுமே இந்த அகராதியில் சேர்ந்துள்ளன.

மற்றைய பழைய பதிப்புகளோடு புதுக்கோட்டை காலேஜ் ஆசிரியர் ஸ்ரீநிவாஸ ராகவன் அவர்களுடைய பதிப்பையும் அநுஸரித்த தொகுப்பு இந்த தேசிகர் தமிழ்.

தேசிகர் அருளிய ரஹஸ்யங்கள் சுமார் 32. ஒவ்வொன்றுக்கும் சுருக்கமான பெயர் கொடுக்க மாட்டாமையால் வாக்கியங்களுக்காவது ரஹஸ்யங்களுக்காவது எண்ணிக்கையும் கொடுக்க மாட்டாமையால் தேசிகர் தமிழிலுள்ள இந்தச் சொற்களுக்கு யாதொரு குறிப்பும் அடையாளமும் கொடுக்க முடியாதது பற்றி வருந்துகிறோம்.

தேசிகருடைய தமிழுக்கு இது ஒரு மாதிரியாக மட்டுமே. அதிலுள்ள விசேஷங்கள் பல பல. —ஆசிரியர்.]

1 அஞ்சுருவாணி : தேர் வண்டிகளின் அச்சு.

2 அடிச் சூடு : அடிக் கொதிப்பு.

3 அடி தப்பாதே கருவி வைக்கை : சதுரங்கம் ஆடுதல். அடி - ஸ்தாகம், இடம், கட்டான். கருவி - ஆனை குதிரை என்று பெயருள்ள செப்புகள்.

4 அடிமைத் திட்டு : அடிமை யோலை : விடு திட்டு போல.

5 அடை கோட்டைப்பட்ட வளவில் : அடை மதிள் படுகை என்று மற்றவர்கள். கோட்டை அடைபட்ட வளவில், முற்றுகைப்பட்ட வளவில்.

6 அணியிடாத அநுஷ்டானம் : புகழ வேண்டாதபடி உண்மை யானது.

7 அழகுக்குக் கீற்றெடுக்கலாம் படியிருக்கிற திருப் புருவம் : பொன்னை மாற்றறிவதற்காக உரை கல்லில் உரைப்பது போல, அழகுக்கு அடையாளமாகக் கீறின கோடு என்று பொருளாகும்.

8 அழுக்குச் சிறை : அழுக்குப் பிடித்த சிறைக் கூடம். அழுஞ் சிறை : அழ வேண்டியது, அழ வைப்பது. அழி சிறை அழு சிறை யென்று மற்றவர்கள்.

9 அளவுகளைத் தெளிந்து : வரம்பு, எல்லை, அளவுடையார் என்று மற்றவர்களின் பிரயோகமும் காண்க.

10 ஆகிடு : ஆகட்டும் ஆகிவிடும் என்பதன் கொச்சை. "நானே நான் ஆயிடுக" என்பதையும் காண்க.

11 ஆடம்பரம் : வாத்திய கோஷம்.

12 படை : இட்ட படை கற்படை. அஸ்திவாரம்.

13 இடையிட்டும் இடையிடாதேயும் : தானே நேரடியாகவும், பிறர் மூலமாகவும், இடையிட்டு, இடையில் வேறொருவரை யிட்டு.

14 இளந்தலை . நுனி. "...சுமக்கு மவனுக்குப் பிரபலன் பெருந் தலை சுமக்குமாப் போலே." பெருந் தலை – அடிப் புறம்,

15 இரு காலு மிட்டு . இரு காலிட்டு, இரண்டாந்தரமாக, இரு கால் மட்டு என்று மற்றவர்கள்.

16 இருப்புதல் : இருப்பு. தல் விகுதி அதிகப்படி

17 இரை கொண்ட தேவதைகள் : யாகத்தில் ஹவிர்ப் பாகம் பெறுபவர்கள். இந்திராதிகள்.

18 இறைக் குடி மகன் : வரி செலுத்துமவன்,

19 இன்னடப்பு : இனிய நடப்பு.

20 உடம்பு தின்னூர் : சரீரமே ஆத்மா என்று இருப்பவர்கள். உடம்பு வளர்ப்பதற்காக தின்பது தவிர, ஆத்மாவைப் பற்றி ஒன்றும் அறியாதார். ஆத்ம விசாரம் இல்லாதார்.

21 எடுத்தார் கையிற் பிள்ளையாய் ஏதேனும் ஒரு குறிச்செயல் வளர : எடுப்பார் கைப் பிள்ளை, தாய் தந்தை யில்லாத குழந்தை.

22 எழுதா மறை : ஏட்டில் எழுதாமல் வாயால் சொல்லிச் சொல்லி வாதகம் செய்யப்படும் வேதம். எழுதாக் கிளவி.

23 ஏற்றச் சுருக்கம் : ஏற்றத் தாழ்வு.

24 ஒவ்வோர் குழி : குழி - பேதமும் தத்வமும். ஒவ்வோக் குழி வேறு. அகராதியில் பார்.

25 ஒழுகு சங்கிலி - நீண்ட சங்கிலி.

26 ஒட்டத்துக்கு அப்பம் தின்பார் : "பசித்து உண்பார்... பசி" யாமே ஒட்டத்துக்காக (பந்தயத்துக்காக) பத்து அப்பம் தின்பேன் என்று தின்பவர்கள்.

27 ஒன்றேறி ஒன்றுயர்ந்தார் வாசலில் திரிந்து : காளாஸ்ரன் விஷயம் இது. ஏறுவது வாஹநம், உயர்வது கொடி. ஹம்ஸ ருஷபங் களை வாஹநமும் த்வஜமுமாக உடைய பிரம்மாவும் ருத்ரனும். இவர்களு டைய வாசலில் திரிந்து, ஒன்றி ஒன்றிக் கவித்தார் என்று பாடாந்தரம். ஒன்ற ஒன்ற, அடைய அடைய, கவித்தார் - விலக்கினர் மற்றைத் தேவர்கள்.

28 கடப்படா தொழியும் : ஸாத்ய மாகாமற் போகும்.

29 கரிய நாழிகை - கொடிய நாழிகை.

30 காம்பற விட்ட உபாயந்தரம். ஸவாஸநமாகப் போக்குகை. காம்பு - பிடி, ஸம்பந்தம். அது அறும்படி விடுகை.

31 கிடையாத போது அழியும் : கிடைக்காத போது. கிடையாது - இல்லாதது. கிடைக்காது - கிட்டாது.

32 குமரிராதபடி : வியர்த்த மாகாதபடி.

33 கெடு மரக் கலம் : வழி தப்பிப் போகும் ஓடம்.

34 கைக் கூலி : அப்போதே பெறும் கூலி.

35 சங்கிலித் துவக்கு : சங்கிலித் தொடர்.

36 சந்தனக் கழுவோ டொத்த லோக பாலாதி பதங்கள். பொன் னூசி போலே அபாயம். சந்தன மரத்தாலான கழுவானாலும் சாகிறவ னுக்கு ஸுகமாயிராது. லோக பாலாதி பதம் அபாயமே.

37 சன்ன வீரம் : முகப்பு வைத்த முத்து மாலை.

38 சாவேறாக வந்தான் : இன்று போய் நாளை வா என்று விடப் பட்ட ராவணன் சாகத் துணிந்து சாவை ஏற்றுக் கொண்டு வந்தான்.

39 சிகை யறுகிறது : ஏக தேசம் (ஒரு சிறு பாகம்) போகிறது

40 சில்வான பிரயோஜனம் : அல்ப்பமான சிறு பிரயோஜனம்.

41 சுருணை சோர்ந்த கணக்கன் : கணக்குச் சுருணையால் சோர் வடைந்த கணக்கன். 42 சூறாவளிக் காற்று.

43 செட்டை விடுவாரையும் கிடையாது. செட்டு - ஸாமர்த்தியம் செட்டுக் குடித்தனம். அதை விடுவாரில்லை.

44 சேவகப்பிச் சேறி நின்ற ராவணன் : வீரன் என்று இறுமாந்த ராவணன்.

45 சொருகி நிற்கை - உள்ளடக்கி நிற்கை.

46 தட்டித் தாவற்று - தட்டுதல் - காரியம் தடங்கல் படுகை. தாவற்று - அவலம்பந மற்று. தாவு - இடம். ஒக தாவு - ஒரு இடம் என்று தெலுங்கில் சொல்லுவது ஸஹஜம்.

47 தட்டு மாறி - ஸ்தாந பேதம் செய்து. ஸாரதி ரதியாயும். ரதி ஸாரதியாயும் மாறுகை. தட்டு - ஸ்தாநம்.

48 தலையாடி : பிரதாந வாக்கியம்.

49 தவிசுச் சீட்டு - கடன் சீட்டு.

50 திருமுகப் பாசுரம் - ஆரம்ப வாக்கியம்,

51 திருவாணை யனைத்துக் கூப்பிடுகை : திரு - பெரிய பிராட்டி, அவள் மேல் ஆணையிட்டுச் சொல்லுகை, சபத மிடுகை.

52 துரவு தத்துவார் : துரவு - கிணறு, தோட்டம் துரவு. தத்து வார் - தாண்டுவார்.

53 நிலக்கிடை - நிலம். 54 நீக்கியுள்ளார் - மறுபவர்கள்.

55 நீர்க்கடை நிலக்கடை: நீரும் நிலமும்.

56 நேர்கள் - ஸ்தானங்கள்.

57 படியெடுத்தது: "இறந்த காலத்துக்கு" சமமாகக் கொடுத்தது. படி - சமம். நகல் எழுதுவதற்கு படி என்று சொல்லுவதுண்டு.

58 பவிசை - வட்டி. 59 பழந்திருவிடையாட்டம்: பழைய பூமிகள். பிராசீன க்ஷேத்ரம். புதிதாகச் சேர்ந்ததல்லாமல் நெடுநாள் பாத்யமாயிருப்பது. இடையாட்டம் - திருவிடையாட்டம் என்று பெரியவர்களின் பிரயோகம் காண்க.

60 பாதிப்புதல் - பாதித்தல், வருத்துதல்.

61 புல்வாயும் புலியும்: புல்வாய் - புல் தின்னும் பிராணி.

62 புறஞ்செயல்: பூர்வாங்கமான காரியம். ராமாவதாரத்துக்கு முன்னுதவியாக வானரர்கள் பிறந்தது புறஞ்செயல்.

63 பெருங்காயம் வைத்த மரம்: பசி போவதற்கு மருந்தாக பெருங்காயம் வைப்பது.

64 பொன்னும் இரும்புமான விலங்கு: புண்ய பாபங்கள். புண்யம் பொன் போல விரும்பத்தக்கதாயினும் மோக்ஷ விரோதி. பாபம் இரும்பு விலங்கு.

65 போக்கறும் பொழுது உள்ளொதுங்க பசையில்லாத நாகம்: போக்கறுதி - போக்கு, போக்கிடம். இந்த வாக்கியம் சரியாகப் பொருள்படவில்லை.

66 மட்டு மாத்திரம். தரியாதவனைக் கொண்டு.

67 மட்டுக்களிலே - "சாஸ்திரம் சொன்ன ..." சாஸ்திரம் சொன்ன வரையில். அந்த மட்டிலே என்பது போல.

68 மடிப்பிச்சை: மடியிலே ஏற்கும் பிச்சை. பிச்சை வாங்கக் கூட பாத்திரமில்லாமல மடியிலே ஏற்கை.

69 மிகுதி குறைவு - ஏற்றத் தாழ்வு.

70 மிடியன் - தரித்திரன். மிடி கஷ்டம் (மிடிப்பட்டார் - சங்கடப்பட்டார்) 71 முழுக்க - முழுதும்.

72 முற்பாடு பிற்பாடு : முன் பின்.

73 வகுப்புகள் - பேதங்கள். "பிரம்மாதி ஸ்தம்பங்களான..."

74 வயிறு தாரிகள் : கன்ருகத் தின்பவர்கள். தின்று தாங்க முடியாமல் வயிற்றைச் சுமப்பவர்கள். வேஷ தாரி போல வயிறு தாரி.

75 வரையிட்டுப் பார்ப்பவர்கள் - ஆலோசித்துப் பார்ப்பவர்கள்.

76 வல்ல குறி - அநுகூலமான அடையாளம். "... கண்டால கைவிடான்."

77 விடுதீட்டு - விடுதலைச் சீட்டு. தொடரா மொழி. கடன் கொடுத்தவன் பணம் சேர்ந்ததாக எழுதிக் கொடுக்கும் சீட்டு.

78 விரல் கவ்வும்படி - விரல் சூப்பும்படி. ஒன்றும் செய்யமாட்டாமல் திகைத்து நிற்கை. மண்ணுண்ணும்படி போல.

79 விழி கண் குருடன் : விழித்துக் கொண்டே குருடன் போலிருப்பவர்.



# கோயில் தமிழ்

[திவ்யப் பிரபந்த அகராதியின் கடைசியில் தேசிகர் தமிழுக்கு அடுத்தபடியாக கோயில் தமிழ் சேர்க்கப்படுகிறது. ஸ்ரீரங்கம் கோயிலில் வழங்கும் தமிழ்ச் சொற்களை இங்கே காணலாம். ஒவ்வொரு கோயிலிலும் அருமையான பல தமிழ்ச் சொற்கள் வழங்குகின்றன. அவை எல்லாவற்றையும் தொகுத்து புஸ்தகமாக்குவது எளிதல்ல. அதற்கு மாதிரியாக கோயில் (ஸ்ரீரங்கம்) தமிழ் இங்கே காண்க. வஸ்து இடம் வேலை முதலானவற்றுக்கு ஸங்கேதமாயும் பரிபாஷையாயும் பல பெயர்கள் சொற்கள் அமைந்துள்ளன. அவற்றை இங்கே காட்டுகிறோம்.]

அங்கி: பெருமாள் நாச்சியார் முதலானவருக்கு சாத்தும் கவசம்.

அணை: படுக்கை யென்று பொதுவான பொருளானாலும் பெருமாளுக்குப் பின்னுள்ள திண்டு. அமுஞ்சி: கூலி இல்லாத வேலை.

அரிவாணம்: தாம்பூலத் தட்டு. மாலை பிரஸாதம் கொண்டு போகும் தட்டு.

அருமாலி: அரிவாள் என்பதன் கொச்சை. ஏகாந்தத்தில் பெருமாளுக்கு மாலை சாத்தும் போது நார் கத்தரிப்பதற்காக உபயோகிக்கும் சிறு கத்தி. தொண்டரடிப் பொடியாழ்வார் பெருமாளுக்கு மாலை கட்டும் போது உபயோகித்த கத்திக்கு வைத்த பெயர் அருள்மாரி. அதனுடைய கொச்சை அருமாலி என்றும் சொல்லுவதுண்டு.

அலங்காரம்: மேள தாளத்தோடு சாமான் வருவதற்குப் பெயர். எண்ணெய் அலங்காரம், கதிர் அலங்காரம், சாளி அலங்காரம், அலங்காரத் தளிகை என்பவை.

அளவுக் காரன்: கொட்டாரத்தில் நெல் அளப்பவன். இவனுக்கு அருளப்பாடு காரளப்பான் என்று மரியாதைச் சொல்லால் பெருமாளின் அழைப்பு உண்டு.

அனுப்பா: கோயில் கணக்கில் முன் பக்கத்து தொகையை மறு

பக்கத்தில் கூட்டி மொத்தம் காட்டுவது.

ஆண்டான் : வாஹநத்தில் பெருமாளை எழுந்தருளச் செய்கையில் வஸ்திரங்களை ஒன்றோடொன்று சேர்ப்பதற்காக உபயோகிக்கும் குண்டூசி உள்ளே குண்டூசி என்று சொன்னால் வெளியே கேட்பார்க்கு விபரீதமாய் படுமாகையால் அதற்கு இந்த சமயத்தில் மட்டும் ஸங்கேதமாக இப்படிச் சொல்லுவது.

இராமானுசன் : தீபாராதநத் தட்டுக்கு வைத்த பெயர். இராமானுசன் பிடித்தான் — என்ற தீபத்தை ஏற்றிக் கொடுப்பதற்கு அருளப்பாடு.

இராமானுச னுடையார் : கோஷ்டியிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவருக்கும் சேர்ந்த விநியோகத்தின் போது அருளப்பாடு.

இரை(றை)யாயிரங் கொண்டான் : கொட்டாரத்திலுள்ள நெல் களஞ்சியம். ரகர றகரங்களின் வேற்றுமைக்குத் தக்கபடி பொருள் காண்க. இது இப்போதைய வழக்கில் இல்லை. பெரியோர் சொல்லக் கேட்டதுண்டு.

இளகல் உபயம் : பெருமாள் வெளி மண்டபத்துக்கு எழுந்தருளும் போது பல்லாக்குடன் கீழே இறங்கி பிரஸாதம் பணியாரம் அமுது செய்வது. சாதாரணமாக ஏற்பட்ட பானகம் வடைப் பருப்பு உபயமாயிருந்தால் வழி நடை உபயம் என்ற பெயர். உபயம் என்று தனியாகச் சொன்னாலும் இளகல் உபயம் என்பதற்குப் பொருந்தும்.

உப்புச் சாறு : ராத்திரியில் நாச்சியார் அமுது செய்யும் மிளகுக் குழம்பு. உபயம் : ஸேவார்த்திகள் தங்கள் செலவில் ஸமர்ப்பிக்கும் வஸ்து உபசாரம் முதலியவை.

உருப்படி : மார்கழி திருவாய் மொழி சாத்து முறையில் அமுது செய்யும் ஒரு விதமான பணியாரம். கல்லுப் போல கெட்டியாயிருக்கும். ஸ்ரீ ஜயந்தி பன்றும் இந்தப் பணியாரம் உண்டு. அப்போது கேளிச் சீடை என்ற பெயர்.

உலாப் பாட்டு : பெருமாள் வீதி எழுந்தருளும் போது பாடும் பாட்டு.

உள் சாத்து : பெருமாளுக்கு சாத்தும் சிறு வஸ்திரம்.

ஊழியம் : கைங்கர்யம், வேலை. திருப்பதியார் ஊழியம், உள்ளூரார் ஊழியம், பாலூழியம், திருமஞ்சன ஊழியம்—என்று சில வேலைகளுக்குப் பெயர். எரி துரும்பு : விறகு. எரி கரும்பு பிழை.

ஏகாந்தம் : பெருமாள் வெளியாரில்லாமல் அந்தரங்க பரிஜனத்தோடு மட்டு முள்ள தனி யிருப்பு.

ஏகாந்தக் கட்டி : பெருமாளுக்கு ஜேஷ்டாபிஷேகத்தில் சாத்தின பச்சைக் கர்ப்பூர உள் காப்பு மறு வருஷத்தில் உலர்ந்து கட்டியா யிருப்பது.

ஏகாந்த உருண்டை : பெருமாள் தாம்பூலத்தோடு உபயோகிக்கும் பச்சைக் கர்ப்பூர உருண்டை.

ஏடும் பிடித்தான் : தூபக்கால் எடுத்துக்கொடுக்க அருளப்பாடு. புகைவைக்கால் திருப்பை (திருப்புகை) என்று தூபக்காலுக்குப் பெயர். வேத வியாஸ பட்டரின் பெயரால் வேதாசார்யம் பிடித்தான் என்று இந்த கைங்கர்யத்துக்கு அருளப்பாடு இருந்தது. இப்போதைய வழக்கில் இல்லை. புஸ்தகத்தில் காண்கிறது.

ஒற்றை வெளியாடை : பெருமாளுக்கு வெய்யில் படாமல் பிடிக்கும் மறைவு.

ஒட்டாணி : பெருமாளுக்கு கவசங்களை முன்னும் பின்னுமாக சேர்த்து இணைக்கும் ஆணி.

கங்காணம் : காவல் வேலை. (கண் காணிப்பு)

கட்டுக் காணிக்கை : மூல புருஷனுக்கு கட்ட வேண்டிய செலுத்த வேண்டிய காணிக்கை.

கணை : குறுக்குத் தடி: குறுக்குக் கழி. சந்நிதியில் உள்ளேயும் வெளியிலும் உள்ள குறுக்குத் தடி.

குப்பாய் : பெருமாளுடைய சட்டை. குப்பாயம் என்பதன் திரிபு.

கபால் : ஸ்ரீ கபால் பார்.

கரிச்சோறு : பானையில் பிடித்துக் காந்தின சோறு. இதை சுரண்டி எடுத்து விற்கும் வழக்கம் இருந்தது.

**காளாஞ்சி** : வழியில் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கும் அர்க்கிய தீர்த்தத்தை ஏற்கும் சின்னத் திருப் படிக்கம், பாத்திரம்.

**கருகூலம்** : தங்கம் வெள்ளி சாமான்கள் வைக்குமிடம். கருவுகலம் கருவூலம் என்றும் சொல்வதுண்டு.

**கலசப்பானை** : அர்க்கியம் ஸமர்ப்பிக்கும் கெண்டி.

**கலயம்** : கலசம், மண் செம்பு

**கலிக்கத் துராய்** : தேன் கொடுக்குப் போல உயரத் தூக்கின நுனியை யுடைய ஒரு வகைத் திருவாபரணம். இதன் நுனிக்கு துராய் என்று பெயர்.

**கஸ்தூரி திருமண் காப்பு** : கஸ்தூரி திலகம்.

**காப்பக்தம்** : வெண்கலத்தில் செய்த சிறு பந்தம்.

**காரி சாதம்** : காரியம் செய்கிறவர் காரி, அர்ச்சகர். அவருக்கு ஏற்பட்ட சுதந்திரமான பிரஸாதம். அவருக்கு காரிபோம் என்ற அருளப்பாடு.

**கின்னாக்கு** : திவ்யப் பிரபந்த அகராதி பார்.

**கிளி மாலை** : கிளிகள் வைத்துக் கட்டின மாலை.

**கிஸ்தி கபால்** : கௌரவ புருஷர்களின் வரவேற்புக்காக அடிக்கும் மேள தாளம்.

**கூட்டு வெளியாடை** : பெருமாள் மேல் மழை வெயில் பனி படாமல் மறைக்க கொட்டகை போல விரித்துப் பிடிக்கும் மறைவு.

**கைலி** : திருமஞ்சன காலத்தில் பெருமாளுக்கு சாத்தும் கட்டான் துணி, சிவப்புக் கட்டான் வேஷ்டி.

**கொண்டைத் தாவடம்,** : கொண்டைப்பட்டை, கொண்டை மீசு, சிரஸ்ஸில் அலங்காரமாகச் சாத்தும் புஷ்பம்.

**கொத்து** : கைங்கர்யம், வேலை.

**கொத்தொழுக்கை** : பிரஸாத விநியோகத்தில் ஒரு வேலைக்குப் பெயர்.

**கோயில் மஹா ஜநம்** : பெருமாள் எழுந்தருளும்போது ஸேவார்த்தி

செல்வர் : சின்னப் பெருமாள். பலி ஸ்நாகம் சபநம் முதலியவற்றுக்காக ஏற்பட்ட மூர்த்திகள். கர்ப்பகிருஹ ஸிம்ஹாஸநத்திலுள்ள வெள்ளிப் பெருமாள். செல்வரப்பம் : மார்கழித் திருநாளில் அமுது செய்யும் ஒரு விதமான பணியாரம்.

சேமம் சர்க்கரைப் பொங்கல் : சேமம் தளிகை, தை ஸங்க்ராந்தியன்று ஏற்பட்ட தளிகை. சேர்வைகாரன் மேளகாரன்.

சேணக் கால் : மங்களாலத்திக் குடம் வைக்கும் பீடத்துப் பெயர்.

சொட்டை மெத்தை : பெருமாளை வாஹநம் கேடயம் முதலியவற்றில் வைத்துக் கட்டும் இரும்புக் கம்பியும் பட்டுக் கயிறும்.

சொணு பிரம் கொண்டான் : திருமஞ்சன காலத்தில் உபயோகிக்கும் ஸஹஸ்ர தாரை (சல்லடை) த் தட்டு.

டவர் : வாஹநத்தில் பெருமாளுக்கு சாத்தும் பாவாடை. டவர்பூ அந்தப் பாவாடையில் பின் புறமாக சாத்தியிருக்கும் புஷ்ப சரம்.

தட்டி : விளக்குத் தட்டு. மங்களாலத்திக்காக திரி ஏற்றி வரும் தட்டு. தருவடி சாதம் : நைவேத்தியத்தில் ஒரு பாகத்துக்குப் பெயர்.

தழையிடுவார்/ன் : ஸ்தாநீகர். தாழையிடுவார் கொத்து என்று பெயர்.

தாஸ நம்பி பந்தம் : பெருமாளுக்கு அருகில் பிடிக்கும் பெரிய திவட்டி. தாஸ நம்பி என்று சாத்தாதவர்களுக்குப் பெயர். அவர்கள் பிடிக்க வேண்டிய பந்தம், தாஸநம்பி பந்தம்.

திருக்கரகக் கையேல் : திருமஞ்சநத்தில் எடுத்துக் கொடுக்க வேண்டிய இண்டிக்கு அருளப்பாடு.

திருக்காப்பு : ஸந்நிதிக் கதவு. நெல்லிக் காப்பு, பழக் காப்பு, புழுகு காப்பு, மஞ்சக் காப்பு என்பதில் காப்பு உபசாரார்த்தம்.

திருக்கோ மண்டலம் : திருமஞ்சநத்தில் பெருமாளுக்கு சிரஸ்ஸில் சாத்தவேண்டிய புஷ்ப ஸரம். திருக் கோலம் அலங்காரம்.

திருச்சி : பெருமாள் உபய நாச்சியார் மூவரும் எழுந்தருளும்

பெரிய கேடயம், திருச்சேர்த்தி என்பதன் திரிபு.

திருச் சின்னம் : ஊதும் வாத்தியம். இரண்டாக வைத்து ஊதுவது.

திருச் சுற்று : பிராகாரம். திருச் சுற்றுக்காரன். பிராகாரத்தை சுத்தம் செய்கிறவன். திருப்படிக்கம் : காளாஞ்சி சுந்தர பாண்டியன் பார்.

திருப்பள்(ளி)யோடம் : தெப்பம்.

திருமணித் தாவடம் : துளசி மணி தாம்பிரமணி கோத்த மாலையை தொப்புள் வரை தாழ்ந்த வடமாக தரிப்பது.

திருமுத்துக் குடை : பெருமாளுடைய திருமுகத்துக்கு அழகாகப் பிடிக்கும் குடை. திருவலக நாயகம் : ஸ்தாநீகம். திருவோலக்க நாயகம் என்பதன் திரிபு.

திருவூறல் திருநாள். ஊற்றுப் பறித்து அதில் முதலையாக ஒரு கட்டையைப் போட்டு அருகில் யானையை நிறுத்தி நடத்தும் கஜேந்திர மோக்ஷ உத்ஸவம்.

தீவட்டி சலாம் : பெரிய பந்தம் பிடித்து ஸாயங்காலம் அக்ராக்க வைபவத்திய காலத்தில் உபசரிப்பது. தோளுக்கினியான் : கேடயம்.

நம்பர்டுவான் : நமக்குப் பாடுகிறவன். அரையருக்கும் கைசிக புராண கதா காயகனுக்கும் பொது. நாயனம் நாதஸ்வர வாத்தியம்.

நாயிந்தே : அருளப் பாட்டின் பேரில் பெருமாளுக்கு சாமான் எடுத்துக் கொடுக்கிறவன் நான் இதோ என்று சொல்லுவதன் திரிபு. விஸ்தாரம் முதலியவை விண்ணப்பிக்கையிலும் இச் சொல் வரும்.

நாழி கேட்டான் வாசல் : துவஜஸ்தம்பத்துக்கு அப்பால் வடக்கில் உள்ள வாசல். இங்கிருந்து பெருமாளுடைய சமயம் கேட்பது.

நிலையங்கி : பட்டர் அரையர் அமுதனார் மூவரும் ப்ரம்ம ரத காலத்தில் தரிக்கும் பெரிய சட்டை. பாதம் வரை தொங்குவது.

நிசான் : துணியில் தைத்த கொடி. நேரிசம் : வாகனத்தில் வைத்தில் வைத்துக் கட்டும் சட்டி.

பத்தியுலறை : பெருமாள் அமுது செய்யும் ஊதுகாப் வைக்கு மிடம்.

**பச்சை வடம்** : அகராதி பார். **பட்டர்** : பராசர பட்டர், வேத வியாஸ பட்டர் முதலியோர், அர்ச்சகர்களும்.

**பட்டான்** : திருமஞ்சன காலத்தில் வியாஸ பராசர பட்டர்களுக்கு அருளப்பாடு. "பட்டான் அருளப்பாடு சேவி" — என்று.

**படி** : சந்தனம். சாத்துப்படி என்று சந்தனத்துக்குள்ள பெயரின் குறைவு.

**பணிப் போர்** : செய்த சாமானில் வேலைக்குக் கூலியாக ஒரு பாகம். பணியாரம் பண்ணினால் அதில் நூற்றுக்கு இத்தனை, சந்தனம் கலந்தால் பிடிக்கு இத்தனை என்று பாகக் கணக்கு.

**பலகை மாதலம்** : சமையல்காரர் கூலியில் ஒரு பாகம். பிரஸாதம் சேர்த்த பலகையை அலம்புகிறவருக்கு பிரஸாதத்தில் கூலி உண்டு. அதற்குப் பெயராகும் மாதலம் என்பது.

**பன்னங்கு** : பல்லாக்கின் மேல் விரிப்பு. **பாங்கா** : ஒரு வாத்தியம்.

**பாரா, பாராக் காரன்** : காவல், காவல்காரன். **பாரீ** : இராப் பூஜை முடிந்து கோயிலைப் பூட்டின பிறகு, பாராவாக ஊரைச் சுற்றி வரும் மேள தாளம்.

**பாரி பத்தியம்** : ஒரு அதிகாரம். சிந்துப் பாரி பத்தியம், சீமைப் பாரி பத்தியம், செங்கோல் பாரி பத்தியம் என்ற பெயரால் இன்னும் சில மரியாதைகளும் வருமானங்களும் கொடுபடுகின்றன.

**பாரி பல்லாக்கு** : பாரமான பெரிய பல்லாக்கு.

**பின்னை மெத்தை** : பெருமாளை வாஹனம் முதலியவற்றில் எழுந்தருளுவிக்கும் போது கட்டுவதற்கு உபயோகிக்கும் பட்டுக் கயிறு. **பின்னையன்** . உத்தம நம்பி வம்சியர்களில் ஒருவர்,

**பீக முத்திரை** : பீகம் - பூட்டு. தெலுங்கு, பூட்டி முத்திரை வைப்பது. **புலி வெட்டு** : பொலி பூட்டு பார். **பூமாங்குத்தி** : யானை வாஹனத்தில் அர்ச்சகர் தரிக்கும் புஷ்பாங்குசம், பூவால் செய்த சிறு ஈட்டி. (**மாங்குத்தி** : மிருகங்களைக் குத்தும் ஈட்டி.)

பொலியூட்டு : வட்டி வருமானத்தைக் கொண்டு நடக்கும்படி செய்த சாசுவத கைங்கர்யம். பொலிவைக் கொண்டு ஊட்டும் கைங்கர்யம். பொலிவு - வருமானம்.

போர்ப்படி : சந்தனம் கலந்ததற்குக் கூலியாக சந்தனத்திலேயே ஒரு சிறு பாகம்,

மணியம் : உள்துறை அதிகாரம். மணியக்காரர், மணியாரர்: மணியம் பார்க்கிறவர். மணியறை : நெல்லு அரிசி வைத்திருக்கும் அறை, களஞ்சியம். "மணி நெல்லு, மணி அரிசி கூட இல்லை" என்று சொல்வது முண்டு.

மல்லாரி நடை, மல்லாரி வாத்தியம் : இராப்பத்துத் திருநாளில் பெருமாள் கொட்டகையைச் சுற்றி வேகமாக வரும் நடையும் அப்போதுள்ள வாத்திய கோஷமும்.

மாதலம் : பலகை மாதலம் பார், மாராயம் : இராக்காலத்தில் பெருமாள் கைங்கர்யத்துக்காக தாஸியை அழைத்து வரும் வேலை. மாராயக் காரன் : மாராயம் வேலை செய்கிறவன்.

மிலாக்காய் : சந்தனக் கட்டை. கொட்டாரம் கணக்கில் இன்னும் இப்படியே எழுதுகிறார்கள். முட்டி : மண் கிண்ணி.

வகைச்சல் : சின்ன மாலை. பெரிய மாலையோடு சேர்த்து தரிக்க வேண்டிய சிறு மாலை.

வட்டம் : முதல் வட்டம், இரண்டாம் வட்டம் மூன்றாம் வட்டம் நாலாம் வட்டம் என்று — பெருமாள் எழுந்தருளியிருக்கும் கேடயம். தோளுக்கினியான், வாஹனங்களின் கால் ஓரங்களுக்குப் பெயர். இங்கு வட்டம் என்பது சரியான சொல் அல்ல. இது அட்டம் என்பதன் திரிபாகும்.

வண்டுலூர்ச் சப்பரம் : சித்திரை விருப்பன் எட்டாம் திருநாள் காலையில் வெள்ளிக் குதிரை வாஹனம் வருகிற சப்பரம். புஷ்ப விமானம் போல அலங்கரித்திருக்கும்.

வாரை : பல்லாக்கு வாஹனம் சப்பரம் தூக்க உபயோகிக்கும் பெரிய மூங்கில்.

**விட்டம்** : பிரஸாதம் பணியாரம் விநியோகம் செய்கையில், உபயக்காரர் விட்டம் ஆழ்வார் விட்டம் என்று ஏற்பட்ட ஒரு பாகம்.

**விட்ட விழுக்காடு** : கைங்கர்யம் செய்து வைத்த, ஏற்படுத்தி வைத்த மூல புருஷனுக்காக அவருடைய வீட்டுக்கு மேளதாளத்தோடு அனுப்பும் பிரஸாதம். விட்டவன் விழுக்காடு என்று புஸ்தகங்களில் காணுகிறது.

**விண்ணப்பம் செய்வார்** ; பாட்டுப்பாடும் அரையர்.

---

# அநுபந்தம்

அநுபக்தம் பார் — என்று சில சொற்களுக்கு இவ் வகராதி அச்சாகும் போது குறிப்பு எழுதினோம். அவற்றின் பொருள் இப்போதும் விளங்காமையால் இங்கு அநுபக்தத்தில் அவற்றை விட்டுட்டோம். விளங்காத சொற்கள் தவிர, மற்றும் பல சொற்கள் அச்சில் சேராமல் விடுபட்டுள்ளன. அவற்றையும் இங்கு சேர்த்தால் சுமார் 100பக்கம் ஆகும். அவை யாவும், சீக்கிரத்தில் வெளி வரவிருக்கும் ஒரு சிறு ஆராய்ச்சியில் சேர்க்கப்படும். அதிலே கண்டு கொள்ளலாம்.]

---

ஞானத் தமிழ் 2182/4 ...புரிந்த நான். *. ஞானத்தைக் கொடுக்கும் தமிழ். ஞானத் துறை 2570/3 ... படிந்தாடி. * ஞானத்துக்கு துறையான ஆசார்யன்.

ஞானத் தெளிதாக 2111/2 ... நன் குணர்வார் *. ஞானத்தாலே எளிதாக.

ஞான நல்லாவி 3155/3 ... வெல் கோ *. ஞானத்துக்கு ஸாதகமான சப்தம் - ஓசை, ஒலி. ஆவி யென்று லக்ஷணையாலே சரீரத்தைச் சொல்லுவதால் ஞான சரீரமென்று ஞான ஸாதநமான சரீரத்தைச் சொல்லுகிறது. குணவாசி சப்தத்தாலே குணியை நினைக்கிறது. நல்லாவி என்று இந்த்ரியங்களைக் கழிக்கிறது. ஞானத்தைப் போதித்து கொண்டிறே சப்தம் இருப்பது. இந்த்ரியாதிகளைப் போலே சப்தத்துக்கு ஸ்வதோ தோஷமில்லாமையாலே நல்லாவி என்கிறார்.

ஞான நற் சுடர் 827/2 ... கொளீஇ *. நல்ல ஞானப் ப்ரபை. ஞான நீசர் 851/2 ... *. ஸர்வஜ்ஞராகத் தங்களை அபிமாநித்திருக்கும் நீசர். "யாரும் வையகத் தோன்றி நின்று வாழ்தலின்மை கண்டு நீசர்" — கேவல நீசர். இவர்கள் ஞான நீசர். ஞான நீர் 2046/4 ... கொண்டாட்டுவன் *. ஞானமாகிற திருமஞ்சனம். திருமஞ்சனம் என்பது தீர்த்தமே. தீர்த்தம் வருவதை திருமஞ்சனம் வருவதாகச் சொல்லுமாப் போலே.

ஞானப் பிரான் 2576/4 ... னையல்லால் *. ஞானம் கொடுத்த ஸ்வாமி. ஸ்திதே மநஸி ... இத்யாதியாலே, (வராஹ சரம ச்லோகத்தாலே) உத்தாரக ஹேதுவான ஜ்ஞானத்தை உபதேசித்த ஸ்வாமி.

ஞானப் பெருமான் 2448/3 காரணனை நாபதியை ... னை .* ஞானத்துக்கு ஆச்ரயமாயிருக்கிறவன்.

ஞான மூர்த்தி 3469/2 சுடர் ... *. ஞானத்தை வடிவாகக் கொண்டவன், ஞான ஸ்வரூபன். ஞான சப்த வாச்யமான ஆத்ம ஸ்வரூபத்தை சரீரமாக வுடையது. 778/1

ஞான விதி 3360/2 ... பிழையாமே *. பக்தி ரூபாபக்க ஞான விதாநம் பண்ணுகிற சாஸ்திர மரியாதை. ஞான வின்பம் 3099/3 சுடர் ... *. ஞானானந்தம், ஞான வெள்ளம் 3065/3 ... ச்சுடர் விளக் காய் *. ஞான பூர்த்தி. ஞானி 3240/2 இறப் பென்னும் ... *. ஞான யோகி. ஞான நிஷ்டனான கேவலன். ஆத்ம ஞானியான கேவலன்.

---